டாக்டர் நா. மகாலிங்கம்

திருமூலர்



தாயுமானவர்



மெய்கண்டார்



# ஞானபரம்பரை

தொகுதி 6

வர்த்தமானன்

அருட்செல்வர்

டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள்

வழங்கும்

# ஞான பரம்பரை

அருளாளப் பெருமக்களின்

## வாழ்வு - வாக்கு - பணி

பற்றிய நூல் தொகுப்பு

## தொகுதி ஆறு

வர்த்தமானன் பதிப்பகம்

சென்னை - 17.

முதற் பதிப்பு : 2006
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

இரண்டாம் பதிப்பு : 2009
*(இராமானந்த அடிகளார் அறக்கட்டளை)*

மூன்றாம் பதிப்பு : 2014
*(வர்த்தமானன் பதிப்பகம்)*

பத்து தொகுதிகளும் சேர்த்து
**விலை ரூ. 2500/-**

*வெளியீடு :*
**வர்த்தமானன் பதிப்பகம்**
21, இராமகிருஷ்ணா தெரு, சென்னை -17.

*அச்சிடல் :*
அருணா கிராபிக்ஸ், சென்னை -17. போன் : 24345058
ஈஸ்வரி ஆப்செட், சென்னை -5. போன் : 28480481, 42157817

# அருட்செல்வர் முன்னுரை

ஞானம் என்றால் என்ன?

மெய்யுணர்வினை – செம்பொருளைக் கட்டிக்காப்பது ஞானம். ஞாத்தல் என்றால் கட்டுதல். ஞாண் கட்டும் கயிறு என்று பொருள்படுவதைக் காணலாம்.

ஐம்புலன்களைக் கட்டி உள்ளத்தை ஓரிடத்தே நிறுத்துவது ஞானம்.

திருவள்ளுவர்,

*''சென்ற இடத்தால் செலவிடா தீது ஒரீஇ*
*நன்றின்பால் உய்ப்பது அறிவு ''*

என்கிறார்.

புலன்களை அவை மேயும் பக்கமெல்லாம் அலையவிடாமல் தடுத்து, ஒரு நல்ல குறிக்கோளோடு பிணைப்பது அறிவு என்பது இத்திருக்குறளின் பொருள்.

ஆன்மிகவாதிகளின் குறிக்கோள் ''பிரமத்தில் - பரம்பொருளில் லயிப்பது - ஒன்றுவது''; அறிவியல்வாதிகளின் குறிக்கோள் ''ஒரு பௌதீகப் பொருளின் அல்லது நிகழ்வின் காரண காரியங்களை ஆராய்ந்து அவற்றை உறுதிசெய்து உலக நன்மைக்குப் பயன்படுத்துவது.''

ஆன்மிகம்கூட அறிவியலின் ஒரு பகுதியே என்பார்கள். களங்கள் வேறானாலும் நோக்கம், சமுதாய நன்மையாகவே முடியவேண்டும்.

பாரதியார் மிக அழகாகக் கூறினார்:

*''ஊருக்கு உழைத்திடல் யோகம் - நலம்*
*ஓங்கிடுமாறு வருந்துதல் யாகம்*
*போருக்கு நின்றிடும்போதும் - உளம்*
*பொங்கல் இலாத அமைதி மெய்ஞ்ஞானம். ''*

உள்ளுணர்வாகிய மெய்யுணர்வால் உலக ஈடேற்றத்தைப் பற்றிச் சிந்திப்பது ஞானம்.

அவ்வறிவால் காணப்படுவது செம்பொருள். ஆகையால், ஞானியருடைய உபதேச மொழிகளைச் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் என்பர்.

பாரதியார் கூறும் மெய்ஞ்ஞானம் வாய்க்கவேண்டுமானால் ஒருவன் தன் புலன்கள்மீது முழு அதிகாரம் செலுத்த வல்லவனாக வேண்டும்.

கண்ணபிரான் போர்க்களத்தில் பார்த்தனுக்குக் கீதையைப் போதித்தான். போர் தொடங்க ஆயத்தமாய் அணிவகுத்திருந்த போது 18 அத்தியாயம் கொண்ட முழு நூலைப் போதிப்பது சாத்தியமா எனில், சாத்தியமே! சீடனோ புலன்களை வென்ற புண்ணியன். ஆசிரியனோ கடவுளின் அவதாரம். அருளாளர்களுக்குக் காலம் இடம் அவர் வசத்திற்கு உள்ளாகும். ஒரு நொடியில் மாணவன் உள்ளத்தில் எழுந்த கேள்வி களுக்கெல்லாம் விடையும் கிடைத்தது, விளக்கம் கிடைத்தது.

கல்லால மரத்தின்கீழ் மௌனத்திலேயே கைவிரல் காட்டிக் குறிப்பினால் விளங்கவைக்கும் உபதேசம் மாணவர்களுக்குக் கிடைத்தது. வள்ளற்பெருமான் தமக்கு ஒரு நொடிப்பொழுதிலே இறைவன் சாகாக்கலையை உணர்த்தினாரெனக் கூறுவார்.

ஆக, மெய்ஞ்ஞானிகள் ஐந்தவித்தவர் என்பதும் அருள் ஞான வித்தகர்கள் என்பதும் அவர்கள் காலத்தையும் இடத்தையும் கட்டியாள வல்லவர்கள் என்பதும் தம் அனுபவங்களைத் தம் மாணவப் பரம்பரை வாயிலாக இன்றுவரை உலகிற்கு வழங்கி வருகின்றனர் என்பதும் நாம் உணரலாம்.

இந்திய நாட்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று கேட்டால், பாரதியார் கூறிய உரை நம் நினைவில் நிற்க வேண்டும்:

*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு,*

*பன்னரும் உபநிட நூல் எங்கள் நூலே,*
*பார்மிசை ஏதொரு நூலிது போலே!*

*பூரண ஞானம் பொலிந்த நன்னாடு*
*புத்தர் பிரானருள் பொங்கிய நாடு.*
*பாரத நாடு பழம்பெரு நாடு.*
*பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே*

என்று போற்றுகிறார்.

இன்றைய நிலை என்ன?

*புத்தம் புதிய கலைகள் - பஞ்ச*
*பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்*
*மெத்த வளருது மேற்கே*
*அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை*

என்பது ஓரளவு உண்மைதான். அறிவியல் மேற்கே தோன்றி வாழ்க்கை நிலை மெத்தவும் உயர்ந்துவருகிறது. எங்கும் தொழில்கள் வளர்கின்றன. செல்வம் கொழிக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவிற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நம் இளைஞர்கள் தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, 'விமானமே வீடுபேற்றுக்குரிய தவம்' என்று காத்துள்ளனர்.

எல்லாமிருந்தும் அங்கே வழிகாட்டுவாரில்லை! வாழ்வில் எல்லாப் போகங்களையும் அனுபவிக்க அங்கே வசதி இருக்கிறது. அந்த இன்பங்கள் நிறைவளிக்காமல் மக்கள் மன இறுக்கத்தால் அவதிப்படுகிறார்கள். அதிகார போதை ஒரு புறம். மித மிஞ்சிய போகத்தால் குடும்ப வாழ்க்கை சீர்குலைந்து போவது ஒருபுறம். அன்புப் பிணைப்பு அறவே மாறி, வெற்று முகமன் வார்த்தைகளாக அவற்றின் முகவரி அமைந்துவிட்டது.

இதனால்தான் மகான்களைத் தேடி இந்தியா நோக்கி வருகிறார்கள் வெளி நாட்டவர்கள். அப்படியானால் இந்துமதம் என்று சொல்லப்படுகிற இந்தியப் பண்பாட்டினைக் காலங்காலமாகக் கட்டிக் காத்து வருகிறவர்கள் யார்? அதுதான் நமது ஞான பரம்பரை. 'ஞானம் என்ற சொல்லுக்கே கட்டிக்காத்தல் என்றுதான் பொருள்' என்று முன்பு சொன்னோம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சமய குரவர் என்கிறோம். குரவர் என்றால் முதல்நிலையில் பெற்றோர்கள் என்று பொருள்படும். இரு முதுகுரவர் என்றால் தாய் தந்தையர் என்று பொருள்.

அடுத்த நிலையில் ஆசிரியன் குரவனாகிறான். குரவன்தான் குரு. பெரியவன் என்று பொருள். அருமையாகக் கிடைப்பதுதான் பெருமை. ஆகையால் அருமையுடையன் ஆசிரியன் ஆகிறான். ஆசிரியன் = குரு.

இந்தியப் பண்பாடு குருவைப் போற்றுவது

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே*

என்று திருமந்திரம் கூறுகிறது.

அவ்வறிவால் காணப்படுவது செம்பொருள். ஆகையால், ஞானியருடைய உபதேச மொழிகளைச் செம்பொருள் கண்டார் வாய்ச்சொல் என்பர்.

பாரதியார் கூறும் மெய்ஞ்ஞானம் வாய்க்கவேண்டுமானால் ஒருவன் தன் புலன்கள்மீது முழு அதிகாரம் செலுத்த வல்லவனாக வேண்டும்.

கண்ணபிரான் போர்க்களத்தில் பார்த்தனுக்குக் கீதையைப் போதித்தான். போர் தொடங்க ஆயத்தமாய் அணிவகுத்திருந்த போது 18 அத்தியாயம் கொண்ட முழு நூலைப் போதிப்பது சாத்தியமா எனில், சாத்தியமே! சீடனோ புலன்களை வென்ற புண்ணியன். ஆசிரியனோ கடவுளின் அவதாரம். அருளாளர்களுக்குக் காலம் இடம் அவர் வசத்திற்கு உள்ளாகும். ஒரு நொடியில் மாணவன் உள்ளத்தில் எழுந்த கேள்வி களுக்கெல்லாம் விடையும் கிடைத்தது, விளக்கம் கிடைத்தது.

கல்லால மரத்தின்கீழ் மௌனத்திலேயே கைவிரல் காட்டிக் குறிப்பினால் விளங்கவைக்கும் உபதேசம் மாணவர்களுக்குக் கிடைத்தது. வள்ளற்பெருமான் தமக்கு ஒரு நொடிப்பொழுதிலே இறைவன் சாகாக்கலையை உணர்த்தினாரெனக் கூறுவார்.

ஆக, மெய்ஞ்ஞானிகள் ஐந்தவித்தவர் என்பதும் அருள் ஞான வித்தகர்கள் என்பதும் அவர்கள் காலத்தையும் இடத்தையும் கட்டியாள வல்லவர்கள் என்பதும் தம் அனுபவங்களைத் தம் மாணவப் பரம்பரை வாயிலாக இன்றுவரை உலகிற்கு வழங்கி வருகின்றனர் என்பதும் நாம் உணரலாம்.

இந்திய நாட்டில் அப்படி என்னதான் இருக்கிறது என்று கேட்டால், பாரதியார் கூறிய உரை நம் நினைவில் நிற்க வேண்டும்:

*பல்விதமாயின சாத்திரத்தின் மணம்*
*பாரெங்கும் வீசும் தமிழ்நாடு,*

*பன்னரும் உபநிட நூல் எங்கள் நூலே,*
*பார்மிசை ஏதொரு நூலிது போலே!*

*பூரண ஞானம் பொலிந்த நன்னாடு*
*புத்தர் பிரானருள் பொங்கிய நாடு.*
*பாரத நாடு பழம்பெரு நாடு.*
*பாடுவம் இஃதை எமக்கிலை ஈடே*

என்று போற்றுகிறார்.

இன்றைய நிலை என்ன?

*புத்தம் புதிய கலைகள் - பஞ்ச*
*பூதச் செயல்களின் நுட்பங்கள் கூறும்*
*மெத்த வளருது மேற்கே*
*அந்த மேன்மைக் கலைகள் தமிழினில் இல்லை*

என்பது ஓரளவு உண்மைதான். அறிவியல் மேற்கே தோன்றி வாழ்க்கை நிலை மெத்தவும் உயர்ந்துவருகிறது. எங்கும் தொழில்கள் வளர்கின்றன. செல்வம் கொழிக்கும் ஐரோப்பிய நாடுகளுக்கும் அமெரிக்காவிற்கும் ஆஸ்திரேலியாவுக்கும் நம் இளைஞர்கள் தங்கள் வாழ்க்கை முன்னேற்றத்தைக் கருத்தில் கொண்டு, 'விமானமே வீடுபேற்றுக்குரிய தவம்' என்று காத்துள்ளனர்.

எல்லாமிருந்தும் அங்கே வழிகாட்டுவாரில்லை! வாழ்வில் எல்லாப் போகங்களையும் அனுபவிக்க அங்கே வசதி இருக்கிறது. அந்த இன்பங்கள் நிறைவளிக்காமல் மக்கள் மன இறுக்கத்தால் அவதிப்படுகிறார்கள். அதிகார போதை ஒரு புறம். மித மிஞ்சிய போகத்தால் குடும்ப வாழ்க்கை சீர்குலைந்து போவது ஒருபுறம். அன்புப் பிணைப்பு அறவே மாறி, வெற்று முகமன் வார்த்தைகளாக அவற்றின் முகவரி அமைந்துவிட்டது.

இதனால்தான் மகான்களைத் தேடி இந்தியா நோக்கி வருகிறார்கள் வெளி நாட்டவர்கள். அப்படியானால் இந்துமதம் என்று சொல்லப்படுகிற இந்தியப் பண்பாட்டினைக் காலங்காலமாகக் கட்டிக் காத்து வருகிறவர்கள் யார்? அதுதான் நமது ஞான பரம்பரை. 'ஞானம் என்ற சொல்லுக்கே கட்டிக்காத்தல் என்றுதான் பொருள்' என்று முன்பு சொன்னோம்.

திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரைச் சமய குரவர் என்கிறோம். குரவர் என்றால் முதல்நிலையில் பெற்றோர்கள் என்று பொருள்படும். இரு முதுகுரவர் என்றால் தாய் தந்தையர் என்று பொருள்.

அடுத்த நிலையில் ஆசிரியன் குரவனாகிறான். குரவன்தான் குரு. பெரியவன் என்று பொருள். அருமையாகக் கிடைப்பதுதான் பெருமை. ஆகையால் அருமையுடையன் ஆசிரியன் ஆகிறான். ஆசிரியன் = குரு.

இந்தியப் பண்பாடு குருவைப் போற்றுவது

*தெளிவு குருவின் திருமேனி காண்டல்*
*தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்*
*தெளிவு குருவின் திருநாமம் செப்பல்*
*தெளிவு குருவுரு சிந்தித்தல் தானே*

என்று திருமந்திரம் கூறுகிறது.

தெளிவு என்பது அறிவு - தெள்ளிய அறிவு - குற்றங்களைந்து இதுவென்று அறிந்து குணம் கொள்ளும் அறிவு - அதாவது ஞானம். ஆசிரியன் ஞானத்தைத் தருகிறான். எழுத்தறிவித்தவன் இறைவன் என்று கூறுவார்கள்.

*கல்வி கொடுத்தவன் வித்தியா குரு*
*தீக்கை அளிப்பவன் தீட்சா குரு*
*ஞானம் அளிப்பவன் ஞான குரு*

தீட்சா குரு தனிப்பட்டவனுக்கு ஞானம் அளிப்பவன். ஞான குருமார் சந்ததிகளுக்கே ஞானம் அளிப்பவர்கள். அவர்கள் உலக குரு என்றே சொல்லப்படுபவர்கள். புத்த பெருமான், திருஞானசம்பந்தர், ஏசு பெருமான், நபிகள் நாயகம், வள்ளற் பெருமான் முதலியயாவரும் உலக குருக்கள்.

மெய்கண்டார் முதலியவர்களைச் சந்தான குரவர் என்கிறோம். சந்தானம் என்பது தொடர்ச்சி. நமது மரபு தொடர்வது பிள்ளைகளால்தானே! ஆகையால், பிள்ளைகளுக்குச் சந்தானம் என்று பெயர்.

சந்தான ஆசாரியார்கள் சைவ சமய குரவர்களின் கருத்துக்களைத் தந்தை > மகன் என்னும் உறவுவழியே பரப்புவதை மேற்கொண்டார்கள். ஆழ்வார்கள் கூறிய கருத்துக்களை ஆச்சாரியர்கள் மக்களிடையே பரப்பினார்கள்.

இந்த ஞானத்தை இறையருளால் பெற்ற சான்றோர்கள் தங்கள் மாணவர்களுக்குச் சொன்னார்கள். அவர்கள் ஞானத்தைப் பெறக் கடைப்பிடிக்க வேண்டிய நடைமுறைகளைப் பரம்பரையில் காப்பாற்றிவந்தார்கள். இந்தப் பரம்பரையில் வந்தவர்களில் சிலர் மடங்களை உருவாக்கினார்கள். வைணவர்களும், சைவர்களும் இவர்களில் அடங்குவார்கள்; நூல்களை இயற்றினார்கள். போதனைகள் செய்தார்கள். சமூதாயத் தொண்டுகள் செய்தார்கள். சிலர் இயக்கங்களையே உருவாக்கினார்கள். குரு நானக் சீக்கிய இயக்கம் தோன்றக் காரணமானார். குரு கோவிந்த சிங் முதலாக இந்த இயக்கம் ஒரு சமயமாகவே உருவாகிவிட்டது. வள்ளற்பெருமான் அவ்வாறு ஓர் இயக்கத்தை உருவாக்கியவர்தான்.

பகவான் ரமணர் முதலியவர்களின் கொள்கை உலகெங்கும் பரவினாலும் மடங்களாக - இயக்கங்களாக மாறாமலேயே ஆன்மிக நாட்டமுடையவர்களுக்கு வழிகாட்டி வருகின்றது.

எப்படியிருந்த போதிலும் பாரதப் பெரும் பண்பாடு என்னும் ஜீவ நதியில் தோய்ந்து நீராடித் திளைத்து மகிழும் துறைகளாக இந்த ஞான பரம்பரை விளங்குகிறது.

வள்ளற் பெருமான் 'வாழையடி வாழையென வந்த திருக்கூட்ட மரபினில் யான் ஒருவன் அன்றோ' என்று தம்மை அந்த ஞான பரம்பரையில் வந்தவராகக் காட்டிக்கொள்வதைக் காண்கின்றோம்.

பரம்பரையில் பெறுவதைத்தான் நாம் சிறப்பாக ஞானம் என்று கொள்கிறோம்.

பாரதியார் சொல்கிறார் : 'ஒரு தேசத்தின் நாகரிகத்துக்கு அந்தத் தேசத்தின் இலக்கியமே மேலான அடையாளம்.'

இந்திய நாட்டின் மிகப் பெரிய அறிவுக் கருவூலமாகப் பெரியோர்கள் செய்த இலக்கியங்கள் கொட்டிக் கிடக்கின்றன. வடமொழியிலும் தமிழிலும்தான் ஆயிரக்கணக்கான நூல்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வற்றாத அறிவூற்றாக விளங்கிவருகின்றன.

வேதம், உபநிடதம், அவைகளிலிருந்து பிறந்த அறிவாராய்ச்சி நூல்கள், மனித வாழ்க்கையின் படப்பிடிப்புக்களாகிய இலக்கியங்கள், தேவாரம், திவ்வியப்பிரபந்தம் முதலாகிய அருள் நூல்கள், தத்துவ சாத்திர நூல்கள், புராணங்கள், இதிகாசங்கள் என இந்நூல்கள் பல வகைப்படுகின்றன. பெரியவர்களின் வாக்குகள் அல்லாமல் அவர்கள் வாழ்க்கையும் இந்த இலக்கியங்களில் ஒரு பகுதியே. அவை பெரியபுராணம், பக்த விஜயம் முதலிய நூல்களாக அமைகின்றன.

இந்தியத் தத்துவ ஞானம் வேதங்களில் வேரூன்றி, உபநிடதமென்னும் மரமாய் வளர்ந்து, பல கிளைகளைப் பரப்பி, அரிய கனிகளை வழங்கிவந்துள்ளது. இந்த மரம் இன்னும் வேர்களையும் விழுதுகளையும் நெடுகப் பரப்பி இந்த நிலத்தின் பண்பாட்டைக் காப்பாற்றிவரும் என்பது உறுதி.

விவேகானந்தர் சிகாகோ மாநாட்டில் முழங்கினார்: ''ஒரு ஹிந்து நடந்து செல்கையில் அவன் தனியாக நடந்து செல்வதில்லை. அவனுக்குப் பின்னால் ஐந்தாயிரம் ஆண்டுக் கலாசாரம் அணிவகுத்துச் செல்கிறது'' என்றார்.

மாக்ஸ்முல்லர் கூறியதை இங்கு நாம் நினைவுகூர்வது நல்லது.

'மறுபிறப்பு என்று ஒன்று உண்டென்றால், நான் இந்தியாவில்தான் பிறக்க ஆசைப்படுகிறேன். அதுவும் ஒரு புழுவாகப் பிறந்தால் கூடப் போதும்.' தம் நண்பர்களிடம் இவ்வாறு எழுதிவைக்குமாறு அவர் கூறிச் சென்றார்.

இந்து மதம், மாணிக்கவாசகர் சொல்வதைப் போல், ''முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருள்; பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப்பெற்றியது;'' என்றுமிருப்பது. அதனுடைய உலகளாவிய பொருள் தன்மையால் யாவரையும் தன் வசமாக்கும் இயல்புடையது. சத்தியம் எந்தத் திசையிலிருந்து வந்தாலும் அதை வரவேற்கத் தன் கதவுகளை அகலத்திறந்து வைத்துள்ளது. ஆகவே, நம் ஞானிகள் இந்தியாவுக்கு மட்டுமல்ல. உலகத்துக்கே சொந்தமானவர்கள்.

''இந்து தேசத்திலுள்ள ஜீவனை யுகயுகாந்தரங்களாக அழியாதபடி பாதுகாத்து வருவோர் அந்த யோகிகளே. கடூரமான கலியில் உலகம் தலைகீழாகக் கவிழ்ந்துபோகும் சமயத்தில்கூட இந்துஸ்தானம் அழியாமல் தானும் பிழைத்து மற்றவர்களையும் காக்கக்கூடிய ஜீவசக்தி இந்நாட்டிற்கு இருப்பது அந்த யோகிகளின் தபோபலத்தாலன்றி வேறில்லை.''

— குள்ளச்சாமியார் என்னும் சித்தர் வாக்காக இவ்வாறு சொல்லிக் கொண்டேவரும் பாரதியார், ''மனவலிமையும் பொருள் வலிமையுமற்ற இந்திய அரசர்களாலோ, வேதமந்திரங்களைப் பொருள் தெரியாமல் திரும்பத் திரும்பத் சொல்லிக்கொண்டிருக்கும் பிராமணர்களாலோ, கொடைக்குணம் மறந்த வணிகர்களாலோ, மூடத்தன்மை மிக்க மற்றவர்களாலோ இந்தியாவுக்கு அமரத்தன்மை கிடைக்கவில்லை'' என்கிறார்.

இந்து தர்மத்தின் பெருமையைச் சொல்ல வந்த பாரதியார்,

''எல்லா உயிர்களிலும் நானே யிருக்கிறேன் என்றுரைத்தான் கண்ணபெருமான். எல்லாரும் அமரநிலை எய்தும் நன்முறையை இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் இந்தியா உலகிற்களிக்கும் - ஆம் ஆம் இந்தியா உலகிற்களிக்கும். வாழ்க'' என்று கூறினார்.

அமர கவியின் கண்களில் நமது ஞானபரம்பரை ஒன்றே சர்வ மத சமரசத்தைப் பேணிப் பாதுகாக்க வல்லது; அது ஒன்றே உலகிற்குத் தலைமை தாங்கி வழிகாட்டி உலகையே வாழ்விக்க வல்லது என்ற உண்மை தெரிகிறது.

அவரது வாக்குப் பொய்க்கவில்லை. பிற நாடுகளுக்கு நம் பெரியோர்கள் சென்றார்கள். சுவாமி விவேகானந்தர், சுவாமி இராமதீர்த்தர், பரஹம்ஸ யோகானந்த கிரி, இன்று மகேஷ் யோகி, முக்தானந்தர், பிரபுபாத பக்திவேதாந்த மகராஜ், சுவாமி சச்சிதானந்தர், பகவான் ரஜனீஷ், ரவிசங்கர், சின்மயாநந்தர், வேதாத்திரி மஹரிஷி ... என்று எத்தனை எத்தனை பேர்!

இவர்கள் சென்று ஆன்மிக ஒளியைப் பரப்பினார்கள். இங்கிருந்தவாறே தம் கதிரொளி பாய்ச்சியவர்களில் ரமண மகரிஷி, அரவிந்தர், சிவானந்தர், சத்திய சாயி இவர்களைக் குறிப்பிட்டுச் சொல்லலாம். எண்ணற்ற வெளிநாட்டவர்கள் தங்கள் ஒளியிழந்து, வாழ்க்கைக் களையிழந்து, மன இறுக்கத்தின் பிடியிலிருந்து விடுபட வேண்டுமானால் இந்தியாவே கதி என்று இங்கு வருகிறார்கள்.

சுவாமி சச்சிதானந்தர் இரண்டு லட்சத்திற்கு மேலான அமெரிக்கர்களின் வாழ்க்கைமுறையைச் செம்மைப்படுத்தி யிருக்கிறார்கள். வெளிநாட்டு உபதேசியார்கள் பொதுவாகக் கடைப்பிடிக்கும் மதமாற்ற வேலையை இவர்கள் செய்வதில்லை. ஒழுக்கம், இறையுண்மை, சமுதாயத் தொண்டுணர்வு என்பனவற்றில் மட்டும் அவர்களுடைய மனம் செல்லும் வண்ணம் மடை மாற்றினார்கள்.

ஞான பரம்பரையைக் காத்துவந்த நல்லாசிரியர்கள் வாழ்ந்த காலத்தைப் பலவாறு ஆராய்ந்து நிர்ணயித்துள்ளார்கள். புத்தர் முதல் சேக்கிழார்வரை இந்த நிலையே நீடிக்கிறது. பெரியோர்களின் வாழ்க்கை வரலாறு காலநெறிப்படி முறையாக எழுதப்படாத காரணமென்ன? இதற்கு முக்கியக் காரணம் ஒன்றைச் சொல்லலாம். மனிதர்கள் வாழ்வைக் காட்டிலும் மனிதர்களின் வாக்கு அல்லது அவர்கள் கடைப்பிடித்த நெறிகளே மேலானவையாக நம் முன்னோர்க்குத் தோன்றியிருக்க வேண்டும். புத்தருடைய வாழ்வைவிட அவர் போதனைகளே நாம் நினைவில் வைக்க வேண்டியவை. இராமானுஜர் செய்த அற்புதங்களைவிட அவர் தொண்டே நாம் போற்ற வேண்டியது. எனினும், பெரும்பாலும் உலகத்தின் ஏனைய பகுதிகளில் பெரியோர்களின் வாழ்க்கைகளைக் கால முறைப்படி நன்கு கணித்துப் பதிவு செய்திருக்கிறார்கள். நாம் அதுபோல நம் பெரியோர்களின் வரலாற்றைச் செம்மையாகப் பதிவு செய்து வைப்பது இன்றைய நிலையில் கட்டாயமானதுதான்.

இவர்களுடைய கால வரலாற்றின் பின்னணியில் நமது இதிகாச புராண வரலாறுகளின் காலங்கள் மறு ஆய்வு செய்யப்பட்டுள்ளன. இந்த மறு ஆய்வு அடிப்படையில் சங்க காலச் சான்றோர்கள், நாயன்மார்கள், ஆழ்வார்கள் காலங்களை வரையறுத்து நிறுவும் முயற்சியையும் நாம் இப்போது செய்துகொண்டுவருகிறோம் என்பதைத் தெரியப்படுத்திக்கொள்கிறேன்.

நம் பெரியோர்கள் வானத்தில் சப்தரிஷி நட்சத்திரங்களின் இயக்கத்தைக் கவனித்து, வைவஸ்தவ மனுகாலத்திலிருந்து கணக்கிட்டுவந்திருக்கிறார்கள்.

சப்தரிஷி மண்டலத்தின் இயக்கத்தை வைத்தே சப்தரிஷி சகாப்தம் என்பது வைவஸ்தவ மனுவின் காலத்தில் தொடங்கப்பட்டது. அது கி.மு. 15261 ஆகும்.

இதனடிப்படையில் வழக்கத்தில் உள்ள யுகக்கணக்கு முறையில் திருத்தம் காண முடிந்தது. இப்போது நடைபெறுவதாக நாம் சொல்லும் கலியுகம் என்றோ முடிந்துவிட்டது. கிருதயுகம் முடிந்து, உண்மையில் இப்போது திரேதாயுகம்தான் நடைபெறுகிறது.

சென்னையில் நாம் அமைத்துள்ள அனைத்துலகத் தொன்மை வரலாற்று ஆய்வுக் கழகத்தின்மூலம் இந்த ஆய்வுகள் செய்யப் பட்டுவருகின்றன. அதன்மூலம் பழைய ஆய்வு முடிவுகள் திருத்தம் பெற்றன.

ஆதிசங்கரருடைய காலம் கி.மு. 509 என்றும், ஒரு சதுர்யுகம் 12160 ஆண்டுகள் கொண்டது என்றும் நிர்ணயிக்கப்பட்டுள்ளது.

ஆழ்வார்களில் ஐந்து பேர் கிருஷ்ண பரமாத்மாவுக்கு முந்தியவர் என்று தெரிகிறது. சப்தரிஷி மண்டலம் (Great Bear) பற்றி இதுவரை வான நூலுள் விரிவான ஆய்வு செய்யப்படவில்லை. நாம் இப்போது அந்த ஆய்வுக்கு ஏற்பாடு செய்துள்ளோம். கூடிய விரைவில் சரியான கணக்குகள் நிர்ணயம் செய்யப்படும்.

பொள்ளாச்சி நல்லமுத்துக் கவுண்டர் மகாலிங்கம் கல்லூரி வாயிலாக நூல் வெளியீட்டுப் பணி மிகச் சிறப்பாக நடந்துவருகிறது.

மாணவர்களுக்கு நமது இந்தியப் பண்பாடு நாகரிகம் குறித்த பாடத் திட்டத்தைப் பத்து ஆண்டுகளுக்குமுன் நடைமுறைப்படுத்தி, அதற்கான சிறுசிறு நூல்களைத் தக்கவர்களைக் கொண்டு அக்கல்லூரி வெளியிட்டது. அப்புத்தகங்கள் வேறு சில கல்லூரிகளுக்கு முன் மாதிரியாக அமைந்தன.

பழனியப்பா பிரதர்ஸ் நிறுவனத்தினர் நம்முடைய தேசியத் தலைவர்கள், விடுதலைப் போராட்ட வீரர்கள், பெரியோர்கள் வரலாறுகளைச் சிறுசிறு நூல்களாக வெளியிட்டார்கள்.

ஈரோடு திரு. ஸ்டாலின் குணசேகரன் அவர்கள் சுதந்திரப் போராட்ட வரலாற்று வீரர்களின் சரித்திரத்தை இரண்டு தொகுதிகளாக வெளியிட்டார்கள். அதுபோல் நமது இந்திய ஞான பரம்பரையைச் சேர்ந்த அருளாளர்கள் வரலாற்றைச் சிறு நூல்களாகக் கொண்டு வரவேண்டுமென்ற எனது விருப்பத்தைத் தமிழ்ச் சான்றோரும்

பேரறிஞருமாகிய டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களிடம் கூறி, நிறைவேற்றித் தருமாறு வேண்டினேன்.

என்னுடைய வேண்டுகோளை ஏற்று, முதறிஞர் ம.ரா.போ. குருசாமி அவர்கள் நமது ஞான பரம்பரையைச் சேர்ந்த 30 அருளாளர்கள் - காரைக்காலம்மையார் முதல் சித்பவானந்தர் வரை - வாழ்க்கை பற்றியும் அவர்களின் வாக்குகள் பற்றியும் பல நல்லறிஞர்களைக் கொண்டு எழுதுவித்து, அரிய முறையில் மேற்பார்த்துத் தொகுத்து நூல்கள் வெளிவரச் சிறந்த முறையில் உதவியிருக்கிறார்கள்.

டாக்டர் ம.ரா.போ. குருசாமி அவர்களுக்கு என்னுடைய நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். நூல்களை அரிய முறையில் எழுதியுதவிய அறிஞர் பெருமக்களைப் பாராட்டுகிறேன்.

இந்த வரலாறுகளை ஐந்து தொகுதிகளாக *அழகிய முறையில் முதல் பதிப்பாக வெளியிட்ட பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி முதல்வர் அவர்களுக்கும், பதிப்புத்துறையில் உதவிசெய்த ஏனையோர்களுக்கும் எனது நன்றி.

முதல் பதிப்பு வந்து சில மாதங்களிலேயே பிரதிகள் தீர்ந்து விட்டன. இப்போது இரண்டாம் பதிப்பு எனது தலைமையில் இயங்கும் இராமானந்த அடிகளார் அறக்கட்டளை ஆதரவாலும் அந்த அறக்கட்டளையின் மூலம் நடைபெறும் குமரகுரு பொறியியல் கல்லூரியின் உதவியாலும் வெளிவருகிறது.

நூல்களை அற்புதமாக அச்சிட்டு முடித்த ருக்மணி அச்சக மேலாளர் திரு. பாலசண்முகம் அவர்களுக்கும், வேண்டிய படங்களைப் பயன்படுத்திக்கொள்ள உதவிய பெரியோர் களுக்கும் உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தமிழ் உலகமும், இளைஞர் சமுதாயமும் இதனை வரவேற்றுப் பயனடைய வேண்டும் என்பது என் பேரவா.

நா. மகாலிங்கம்

*முதற் பதிப்பிற்கானது

# பதிப்புரை

முதற் பதிப்பிற்கானது

மாணவர்களின் முழுமையான ஆளுமை வளர்ச்சிக்கு வெறும் ஏட்டுக்கல்விமட்டும் போதாது. அதனுடன் விழுப்பொருள் உணர்வும் (sense for higher values) மாணவர்களிடையே பதிந்திட வேண்டும் என்பது எங்கள் நிர்வாகத்தின் லட்சியமாகும். இந்தக் குறிக்கோளை முன் நிறுத்தி அறவியல் மற்றும் சமயம் முதலான செவ்வியல் கருத்துக்களை மாணவர்களிடையே பரப்பி வருகிறோம்.

அந்தப் பணியின் வளர்நிலையில் தமிழ் ஞானிகள் முப்பதுபேர்பற்றி நூல்கள் வெளியிட வேண்டும் என்று அருட்செல்வரவர்கள் விரும்பினார்கள். எங்களை எல்லா வகையிலும் வழிநடத்துகின்ற அருட்செல்வரவர்களின் விருப்பத்தை முழுமனத்தோடு ஏற்று, இந்த நூல்வரிசையை வெளியிடுவதில் எம் அறக்கட்டளை பெருமை கொள்கிறது.

இந்தப் பணியில் உறுதுணையாக இருந்து பணியாற்றிய பேராசிரியர் ம.ரா.போ. குருசாமிக்கும், அவருக்கு உதவியாகப் பிழைதிருத்தம் முதலான பணிகளை உவப்போடு செய்த பேராசிரியர் இருசுப் பிள்ளை, புலவர்மணியன், பேராசிரியர் தரணி பாஸ்கர், முனைவர் மனோன்மணி ஆகியோர்க்கும் எம் நன்றி உரியது.

வெளியிட்டுள்ள நூல்களை இளைஞர் உலகம் ஏற்றுப் போற்ற வேண்டும் எனக் கேட்டுக்கொள்கிறோம்.

இராமானந்த அடிகளார் அறக்கட்டளை
கோயமுத்தூர்

## நுழையுமுன் ஒரு சொல்

நரை திரை இன்றி இளமை நலத்தோடு விளங்கிய முதியவர் பிசிராந்தையார்; அவர் தம் இளமைத் தோற்றத்துக்குப் பல காரணம் சொல்லியுள்ளார். அவற்றுள் ஒன்று: 'சான்றோர் பலர் யான் வாழும் ஊரே!' அதாவது, 'நான் வாழும் ஊரில் சான்றோர்கள் பலர் வாழ்கின்றனர்; அதனால் நரை திரை மூப்புத் தோன்றாமல் நான் வாழ்கிறேன்' என்கிறார். வாழும் முறையாலும் வழங்கும் மொழிகளாலும் மனநலம் காத்தவர்கள் அந்தச் சான்றோர்கள். அவர்களுடைய வாழ்க்கையைப் பார்த்தும் வாசகங்களைக் கேட்டும் பிசிர் என்ற ஊரில் இருந்தவர்கள் மனவளம் பெற்றிருந்தார்கள். மனவளம் பெற்றமையால் வாழ்க்கையில் நிறைவு இருந்தது. பொறாமை, பொய் போன்ற தீமைகள் சாராமல் அன்பு, அருள், அறம் போன்ற நல்லவற்றில் நாட்டம் கொண்டவர்களுக்கு முதுமை நோய் வாராது. இது பெரியோர் அனுபவ மொழி.

அத்தகைய சான்றோர்களின் வாக்கு, வாழ்வு, வழிகளைத் தெரிந்து போற்றினால், சமூக வாழ்வு சிறக்கும்; குறிப்பாக, இளைஞர்கள் நலம் பெற்று, நாட்டை நன்கு வளர்ப்பார்கள்.

இந்தக் குறிக்கோளை நெஞ்சில் நிறுத்தித் தமிழகத்துச் சான்றோர் சிலரைப் பற்றி நூல்கள் வெளியிடும் முயற்சியில் உருவானது இது.

நல்லிளைஞர் மனவளம் பெற்று - அறிவு, அறம், அன்பு, பண்பாடு ஆகியவற்றைப் பேணி, நாட்டுக்கு நலம் செய்வர் என்ற நம்பிக்கையோடு அருட்செல்வர் டாக்டர் நா. மகாலிங்கம் அவர்கள் இந்த நூல் வரிசை பற்றித் திட்ட மிட்டார். அவர் தந்த திட்டத்தின் பயன் மக்களைச் சென்று அடைய நூல்களை வெளியிடும் பொறுப்பைப் பொள்ளாச்சி என்.ஜி.எம். கல்லூரி* நிர்வாகம் ஏற்றுக் கொண்டது.

பயன் பெறுக! பயன் பெறுக!

ம.ரா.போ. குருசாமி
ஒருங்கிணைப்பாளர்

*முதற் பதிப்பிற்கான செய்தி

திருக்குறள் போலவே சொற்செட்டு; உபநிடதங்கள் போலவே தத்துவத் தெளிவு; சித்தாந்தமா, வேதாந்தமா, சமரச ஞானமா, சித்தர் தத்துவமா.... தொடாத துறை இல்லை; தொட்டுத் துலக்காத துறை இல்லை. தமிழுக்குப் பெருமை தரும் மிகச் சில நூல்களில் முதன்மை அரியாசனம்... இத்தனையும் **திருமூலரின்** திருமந்திரப் பெருமை.

பெருமை மிகுந்த - கருத்துச் செறிவும் குறிப்பு ஆழமும் நிறைந்த இந்தத் திருமந்திரத்தையும், மந்திரம் அருளிய திருமூலரையும் ஆழங்காற்பட்ட அனுபவப் புலமையோடு அறிமுகம் செய்பவர் **டாக்டர் அ. அறிவொளி** - மேடை நாயகர், பூசை நாயகர், தத்துவ நாயகர், வழித்துணை நாயகர், உலகமறிந்த புகழாளர்.

தமிழருக்கே உரிய தத்துவங்கள் இரண்டு. ஒன்று சித்தர் தத்துவம்; மற்றொன்று சைவ சித்தாந்தம். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கு என்பர்; தனக்கு முன் தோன்றிய நூல்களை விஞ்சியது / பின் தோன்றிய நூல்களைத் தன்வயப் படுத்தியது சிவஞான போதம். சொற்செட்டும் பொருட்செறிவும் கொண்ட இந்தத் தத்துவக் களஞ்சியத்தை வழங்கியருளியவர் **மெய்கண்டார்.**

மெய்கண்டாரையும் சிவஞான போதப் பொருளையும் தெளிவுற விளக்கி நூல் உதவியவர் சைவ சித்தாந்தக் கலைமணி யாகிய **பேராசிரியர் முனைவர் ந.இரா. சென்னியப்பனார்.** பேரூர்த் தமிழ்க் கல்லூரியில் பேராசிரியராகவும் முதல்வராகவும் பணியாற்றி ஓய்வு பெற்ற சென்னியப்பனாரின் தமிழ்த் தொண்டு ஓய்வறியாதது. தமிழ்வழிச் சடங்குகளை முறைப் படுத்தித் தமிழகமெங்கும் 'திக்கு விசயம்' செய்பவர் சென்னியப்பனார். இல்லங்களில் நடைபெறும் குடும்பச் சடங்குகளிலிருந்து திருக்கோயில் குடமுழுக்கு வரையில் எல்லாச் சடங்குகளையும் தனித்தமிழில் நடத்தும் ஒரு தொண்டர் கூட்டமே இவரால் உருவாகியிருக்கிறது.

''தாயுமானவரைப் போன்ற ஞானி ஒருவர் இங்கிலாந்தில் இருந்திருப்பாரானால், அவரைப் பற்றி அறியாத பாடசாலை மாணாக்கன் இருக்க மாட்டான். அவரது இனிய இசை நிரம்பிய அமுத கவிதைகளைக் கற்றேனும், அவரது சரித்திரம் முதலியவற்றையும் கேட்டேனும் அறியாத ஆயிரக்கணக்கான மூடர்கள் தம்மைக் கற்றவர்களென்றும் பட்டதாரிகளென்றும் கூறிக் கொண்டு திரிகிறார்கள்'' - இது மகாகவி சுப்பிரமணிய பாரதியார் தாயுமானவர் பற்றித் தந்த கணிப்புரை. தத்துவமும் பக்தியும் சமரச ஞானத்தோடு சேர்ந்து மானுட நேயத்தை வளர்த்த வரலாறு தாயுமானவரின் சிறப்புரிமை.

நமக்கு அந்த அருளாளரைப் பற்றி நூல் உருவாக்கித் தந்தவர் பேராசிரியர் டாக்டர் இ. சுந்தரமூர்த்தி ஆவார். வளமான தமிழ்ப் புலமையும் கூர்த்த அறிவின் கொள்கலமான ஆராய்ச்சி மாண்பும் முனைவர் சுந்தரமூர்த்தியை இனம் காட்டுவன. சென்னைப் பல்கலைக்கழகப் பேராசிரியராக நெடுங்காலம் பணியாற்றிய இவர், தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தராக உயர்ந்தவர். பேராசிரியராய்ப் பணியாற்றி ஆராய்ச்சியாளராய் வீறுயர்ந்த இவர், பதிப்புத் துறையின் நெறியாளராகவும் சிறப்பாகப் பணியாற்றியுள்ளார். இலக்கியத்தைப் போலவே இலக்கணத்திலும் வல்லுநர்; நூற்பதிப்பிலே மிகுதிறம் கொண்டவர்.



# தொகுதி ஆறு

## திருமூலர்

டாக்டர் அ. அறிவொளி

## மெய்கண்டார்

முனைவர் ந.இரா. சென்னியப்பன்

## தாயுமானவர்

முனைவர் இ.சுந்தரமூர்த்தி

# திருமூலர்

## பொருளடக்கம்

# திருமூலர்

## 1. திருமூலர் வரலாறு

சைவத் தோத்திரங்கள் பன்னிரு திருமுறைகளாக வகுக்கப் பெற்றன. கடவுளைப் புகழ்ந்து போற்றுவன தோத்திரம் எனப்படும். திருமந்திரம் பத்தாம் திருமுறையாகும். ஆனால், இது சாத்திர நூல்.

### திருமூலர் வரலாறு, காலம், நூல்

இவர் வரலாற்றைச் சேக்கிழார் பெரியபுராணத்தில் கூறியதே யாவரும் ஏற்கும் மரபு வரலாறாகும்.

" நம்பிரான் திருமூலன் அடியார்க்கும் அடியேன் "

என்று சுந்தரமூர்த்தி நாயனார் மிகவும் மதிப்போடு திருத்தொண்டத் தொகையில் குறித்துள்ளார்.

திருக்கைலை மலையில் நந்தி எம்பெருமானின் சீடர்களில் ஒரு சிவயோகியார் இருந்தார்.

அவர் சிவாகமங்களில் வல்லவர்; அட்டமாசித்தி எனும் எட்டுவித அரிய செயல் செய்யும் ஆற்றல் பெற்றிருந்தார்.

பொதிய மலையில் உள்ள அகத்தியரைக் கண்டு கலந்து பேச விரும்பித் தென்திசைக்கு வந்தார்.

பொதியமலைவரையில் நடுவில் உள்ள தலங்களை வழிபட்டுத் தீர்த்தம் ஆடிப் பல இடத்தும் மகிழ்ந்து வந்தார்.

திருவாவடுதுறைக்கு வந்து திரும்பும்போது காவிரிக் கரையில் சாத்தனூரில் மேய்ப்பவன் இறந்திடப் பசுக்கள் கூடிக் கண்ணீர் வடித்து நிற்பதைக் கண்டார்.

அவன் பசுமேய்க்கும் ஆயர் குலத்து மூலன் எனப்படுபவன். பசுக்களின் துன்பம் நீக்கக் கருணை கொண்ட யோகியார் அந்த மேய்ப்பான் எழாதபோது எதுவும் நடவாது என உணர்ந்தார்.

அட்டமாசித்தி பெற்ற அப்பெரியவர் தம் உடலை மறைவாக ஓரிடத்தில் வைத்து, சூக்குமவடிவில் இறந்த மூலனின் உடம்பில் புகுந்து உயிர்ப்பை உண்டாக்கினார்.

பசுக்கள் அவ்வாறு உயிர் பெற்ற மூலனை மோந்தன, நக்கின, புல் மேய்ந்தன. இப்படி யாவும் கவலை தீர்ந்தன. பசுக்கள் பின் சென்று சாத்தனூரில் அவ்வப் பசுக்கள் வீட்டினரிடம் விட்டார்.

நெடுநேரம் ஆகியும் வீடு திரும்பாத மூலனின் மனைவி யோகியாரால் உயிர்பெற்ற மூலனைக் கண்டு, அவனுடன் உரிமை கொண்டாடினாள்.

உள்ளிருந்த யோகியார் 'உடல்தான் உன் கணவனுடையது; நான் உனக்கு உரிமையில்லை; சிவனை வழிபட்டுத் துன்பம் தீர்க' என்று பேசினார்.

ஊர்ப் பெரியோர்களிடம் அப்பெண்மணி முறையிட்டாள். அவர்கள் தீரத் தேர்வு செய்து 'இவர் உன் கணவரல்ல' என்றும், 'இவர் சிவனிடம் மூழ்கிய யோகி' என்றும் தீர்ப்புக் கூறினார்.

மறைத்து வைத்த உடல் காணாது போனது. தம் ஞானத்தால் அதைப் பிறர் எரியூட்டினர் என உணர்ந்தார். திருவாவடுதுறையில் அரசமரத்தடியில் அமர்ந்து சிவயோகத்தில் செழித்தார்.

" சேர்ந்திருந் தேன்சிவ மங்கைதன் பங்கனைச்
சேர்ந்திருந் தேன்சிவன் ஆவடுதண் துறை
சேர்ந்திருந் தேன்சிவ போதியின் நீழலில்
சேர்ந்திருந் தேன்சிவ நாமங்கள் ஓதியே " (திருமந்திரம் 61)

என்று அவரே கூறும் திருமந்திரச் சான்றால் அறியலாம்.

மூவாயிரம் ஆண்டுகள் இவர் வாழ்ந்தார் என்றும் அதன் அடையாளமாக மூவாயிரம் பாடல் பாடினார் என்றும் மரபு வழியாகக் கூறுவர்.

இன்றைய அறிவியலார் நம் உடம்பில் உள்ள (ஜீன்ஸ்) மூலவிதை அணுக்களைச் செம்மை செய்து பழக்கினால் 1200 ஆண்டுகள் மனிதனை வாழச் செய்ய முடியும் என்றும் அதற்கான வாய்ப்புக்கள் உடம்பில் இருப்பதாகவும் கூறுகின்றனர்.

இதை யோகசித்தியால் பெற்றுத்தான் திருமூலர் வாழ்ந்திருக்க வேண்டும் எனலாம்.

" நந்தி அருளாலே நாதனாம் பேர் பெற்றேன்
நந்தி அருளாலே மூலனை நாடினேன்
நந்தி அருளா அதுஎன்செயும் நாட்டினில்
நந்தி வழிகாட்ட நான்இருந்தேனே " (திருமந்திரம் 51)

என்ற அகச் சான்றால் இவர் வரலாற்றை நாம் ஏற்க இயலும்.

## திருமூலர் காலம்

காலம் கணக்கிட அகச்சான்றுகள் இல்லை. பதஞ்சலி, வியாக்கிரபாதர் ஆகிய இவர்கள் இருவரும் நடராசப் பெருமானின் திருக்கூத்தை நேரில் வழிபட்டவர்கள்.

" மன்று தொழுத பதஞ்சலி வியாக்கிரன்
என்றுஇவர் என்னுடன் எண்மரும்ஆமே " (திருமந்திரம் 50)

எனும் பாடலால் நந்தியெம் பெருமானிடம் திருமூலருடன் எட்டுப் பேர் உபதேசம் கேட்டதாகவும் அவருள் பதஞ்சலியும், வியாக்கிரபாதரும் அடங்குவர் எனவும் அறியலாம்.

இவர்கள் காலம் 3000 ஆண்டுக்கு முற்பட்டது என்பதால், இவர் காலமும் அது என அறியலாம்.

தட்சிணாமூர்த்தியிடம் பாடம் கேட்ட சனகர், சனந்தனர், சனாதனர், சனற்குமாரர் ஆகிய நால்வரும், சிவயோக மாமுனி ஒருவரும், பதஞ்சலியும் வியாக்கிர பாதரும் தானும் என்று எட்டுப் பேர் என அறியலாம்.

இவர்கள் யாவரும் வரலாற்றுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்தவராதலின் இவர்களை வைத்தும், ஆராய முடியாது.

இவரின் மாணாக்கர்கள் மாலாங்கன், இந்திரன், சோமன், பிரமன், உருத்திரன், காலாங்கிநாதர், கஞ்சமலையான் ஆகிய எழுவரும் காலத்தால் வரையறுக்க முடியாதவராக உள்ளனர். இதற்கான அகச்சான்றும் (திருமந்திரம் 52) இவர் நூலில் உள்ளது.

எட்டாம் நூற்றாண்டில் வாழ்ந்த சுந்தரமூர்த்தி நாயனார்தான் இவர் பெயர் சொல்லிப் பாடியுள்ளார்.

அப்பரும் ஞானசம்பந்தரும் இவர் பெயர் கூறாவிட்டாலும் இவர் பாடிய பாடல்களின் சொல்லாட்சியைக் கையாண்டுள்ளனர்.

" பண்டிதராவார் பதினெட்டுப் பாடையும் "

(திருமந்திரம் 93)

என்று திருமூலர் குறிப்பதால் தென்னாடு பலவித மொழிவழக்கில் 18 ஆகப் பிரிந்திருந்த காலத்தில் இவர் இருந்ததாகவும் கொள்ளலாம்.

திருமந்திர மாலையில் 'தமிழ் மண்டலம் ஐந்து' என இவர் கூறியதாகக் கொண்டு சேர, சோழ, பாண்டி, தொண்டை, கொங்கு என்ற ஐந்து பகுதிகளும் தமிழகம் எனலாம்.

அப்படியானால் இது கி.பி. மூன்றாம் நூற்றாண்டைத் தழுவியதே ஆகும்.

இதற்கு முன்பும் இவர் இருந்திருக்கலாம். ஆனால், அதற்கான சான்றுகள் நம்மிடம் இல்லை என்பது வருந்துவதற்கு உரியதாகும்.

சங்க காலம், திருவள்ளுவர் காலம், சிலம்பு மணிமேகலை காலம் ஆகியவற்றிற்கும் அடுத்ததாகவும் - காரைக்கால் அம்மை யாருக்கு முந்தியதாகவும் திருமூலர் காலத்தைச் சொல்வதில் தவறு ஏதுமில்லை.

## திருமந்திரம் - அமைப்பு

மந்திரம் என்ற சொல்லிற்கு அதைச் சொல்பவனை அது காப்பாற்றும் என்பதே பொருளாகும்.

மந்திரம் என்பது சொற்கள் அமைப்பாக மட்டுமோ எழுத்தாக மட்டுமோ இருக்கும்; தொடராக - கருத்தாக இருக்க இயலாது.

இந்நூலை ஓதுகிறவனை இது காப்பாற்றும் என்ற சிறப்புப் பொருளில் மந்திரம் என்பது தெய்விக அடைமொழி 'திரு' என்பதும் இணைந்ததாகக் கொண்டு திருமந்திரம் எனப்படுகிறது.

இந்நூலின் பெயர் ஆசிரியரே வைத்தார் என்று சொல்ல இயலாது. பிறகு வந்தவர்களில் ஒருசிலரும் வைத்திருக்கலாம்.

திருத்தொண்டர் புராணம் என்ற முதற்பெயர் பெரிய புரணமானது போலவும், 'இராம காதை' என்று கம்பன் வைத்த பெயர் இராமாயணம் என்று மாறியது போலவும் ஆசிரியர் வைத்த பெயர் மாறி வழங்கியிருக்கலாம்.

" சுந்தர ஆகமஞ் சொல் மொழிந்தேனே "

(திருமந்திரம் 83)

என்றும்

" செப்பும் சதாசிவம் எனும் இப்பேர் பெற்றும் "

(திருமந்திரம் 65)

என்றும்

" அந்தி மதிபொதி அரனை அடி தொறும்
சிந்தை செய்து ஆகமம் செப்பல் உற்றேனே "

(திருமந்திரம் 64)

என்றும்

" சதாசிவன் தத்துவ முத்தமிழ் வேதம்
இதாசனியாதிருந்தேன் நின்ற காலம் "

(திருமந்திரம் 73)

என்றும் கூறும் அகச்சான்றுகளால் சதாசிவ ஆகமம் அல்லது முத்தமிழ் வேதம் என்ற பெயரிலும் இந்த நூலிற்கு ஆசிரியர் பெயர் வைத்திருக்கலாம். மந்திரமாலை (திருமந்திரம் = 86ல்) என்றும் தொடக்கத்தில் கூறுவதும் நோக்கத்தக்கது.

## ஆகம அமைப்பு

வேதம் கடவுள் சொல்ல மனிதர் கேட்டுச் செய்தது என்பர் - கடவுள் சில மனிதர்களுக்கு அருள் செய்து நூல் செய்யச் சொன்னது சிவாகமங்கள் என்றும் கூறுவர்.

பொதுவாகச் சிவாகமங்கள் தந்திரம், மந்திரம், உபதேசம் என மூன்று பிரிவுகளாகச் சொல்லப்படும்.

" தந்திரம் ஒன்பது சார்வு மூவாயிரம்
சுந்தர ஆகமஞ் சொல்மொழிந்தானே "

(திருமந்திரம் 83)

என்று கூறுவதில் ஆகமஉறுப்புகளைக் கொள்ளலாம்.

திருமந்திர நூலில் இறுதியில் இவர் மாணாக்கர் பாடியதாகக் கொள்ளப்படும் பாடல் உள்ளது. அதில்

" மூலன் உரை செய்த மூவாயிரம் தமிழ்
மூலன் உரை செய்த முந்நூறு மந்திரம்
மூலன் உரை செய்த முப்பது உபதேசம்
மூலன் உரை செய்த மூன்றும் ஒன்றாமே " (2997)

இப்பாடல் திருமூலர் தந்திரம் மந்திரம் உபதேசமாகக் கூறியதாய்க் கூறுகிறது.

மூவாயிரம் தந்திரம் என்றும் - முன்னூறு என்பது திருமந்திரமாலை என்றும் - உபதேசம் என்ற குறிப்பிட்ட பகுதி உபதேசம் என்றும் வலிந்து கூறுவர்.

ஒன்பது வகையான பகுதிகளைத் தந்திரம் என்றே பெயர் கூறியுள்ளார். அவை முதலாம் தந்திரம் முதல் ஒன்பதாம் தந்திரம் வரையும் ஆகும்.

இதில் அதிகாரம் (பகுதி) என்றே பொருளே வருகிறது. இதையே அவர் 'தந்திரம் ஒன்பது' (101) என்று கூறியுள்ளார்.

மூவாயிரம் பாடலும் மந்திரம் என்றே சொல்லியதாகக் கொள்ள வேண்டும்.

முந்நூறு பாடல்கள் கொண்ட திருமந்திர மாலை என்பதை இவர் எழுதியதாகக் கூறுவது முழுதும் நம்ப இயலாதது. இந்த நூலிற்குச் சிவப்பிரகாச தேசிகர் உரை எழுதி அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பதிப்பாக வந்துள்ளது. அது எட்டுவகையான மந்திரச் செய்கைகளை (அட்டகர்மம்)ச் சொல்வதே ஆகும். உபதேசம் என்பதில் தெளிவான விளக்கம் இல்லை.

எனவே, 3000 பாடல் கொண்ட திருமந்திரம் தனியான நூல் என்று கொள்ள வேண்டும்.

தந்திரம் என்பது பின்பற்றும் முறை (அனுட்டிக்கும் வழி) என்பதாகும்.

ஒன்பது வகையாகக் கூறிய பகுப்புக்கள் பின்பற்றத்தக்கன ஆதலால் தந்திரம் என்றார்.

" நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப "

(தொல்காப்பியம் 28)

அருளோடு வாழ்த்தினாலும் சாபமாகத் தந்தாலும் உடனே பலிக்கும் மொழியே நிறைமொழி எனப் பரிமேலழகர் உரை கூறுவார்.

இப்படிப்பட்ட 'நிறைமொழி' கொண்ட தவமுடைய பெரியோர் இறைவனின் அருளாகிய ஆணையில் தொடர்பு கொண்டு, பல பொருள்களையும் சில சொற்களில் மறையச் செய்து கூறும் சொல் மந்திரம் எனப்படும்.

இந்த வகையானதே 3000 திருமந்திரப் பாடலும் எனலாம். 3100 பாடல் இருப்பது கொண்டு சில பாடல் இடைச் செருகல் என்றும் கூறுவர்.

பொதுவாகப் பெரிய எண் கூறும்போது சில குறைந்தாலும் கூடினாலும் அதுபற்றிக் கவலைப்படாமல் சொல்வது யாவர்க்கும் மரபாகும்.

### நூல் எழுதக் காரணம்

பிறவிக்கு ஒரு பயனும் அடையாளமும் தேவை - ஆனால் முன்னாலேயே பலர் தவம் முயலாது போய்விட்டனர் - இறைவன் என்னைக் குறையில்லாது படைத்தான் - அதன் காரணம் அவனைப் பற்றித் தமிழில் நூல் செய்வதே என்று திருமூலர் கருதியே இதைப் பாடினார் என்பது கீழ்வரும் அவர் பாட்டால் தெரிகிறது.

" பின்னை நின்று என்னே பிறவி பெறுவது?
முன்னை நன்றாக முயல்தவம் செய்திலீர்
என்னை நன்றாக இறைவன் படைத்தனன்
தன்னை நன்றாகத் தமிழ் செய்யுமாறே "

(திருமந்திரம் 63)

இப்பாடல் யாவரும் தன்னம்பிக்கை கொள்ளுமாறும் இறைவன் படைப்பில் குறையில்லை என்று நம்புமாறும் அதனால் முயற்சி செய்யுமாறும் கூறுவதை அறியலாம்.

### இடைச்செருகல் உண்டா?

பழைய நூல்கள் எலலாவற்றிலும் இப்படிப்பட்ட ஐயங்கள் எழவே செய்கின்றன. இந்த நூல் அந்தாதி முறையில் செய்யப்பட்டதால் இது வடிவம் முழுதும் மாறாமல் ஓரளவு காக்க உதவும்.

" ஐந்து கரத்தனை ஆனை முகத்தனை " - என்னும் விநாயகர் காப்புப் பாடல் இடைச்செருகல் என்பது உறுதி.

சில சுவடிகளில் இப்பாடல் இல்லை. சில சுவடிகளில் இப்பாடலுக்கு வரிசை எண் போடப்படவில்லை. 'ஒன்றவன்தானே' எனும் கடவுள் வாழ்த்துப் பாடலுடன் தம் நூலைத் திருமூலர் பாடியதாகப் பெரிய புராணத்தில் (திருமூலர் புராணம் 26) சேக்கிழார் கூறுகிறார்.

ஆகவே, 'இது இடைச்செருகல்' என்று சிறந்த பதிப்பை வெளியிட்ட ஆய்வாளர் பேராசிரியர் சுப. அண்ணாமலை அவர்கள் கூறுகிறார்கள். அது உண்மையே ஆனாலும் அப்பாடல் மிகவும் அழகாகவும் இந்த நூலுக்கு அமைதியுடையதாகவும் கொண்டு பலரும் அப்பாடலைப் பாடிவருகின்றனர்.

## திருமூலர் காலத்தில் சமயநிலை

ஒரு காலத்தின் சமய நிலையை ஒரு சமய நூலை வைத்து முடிவு செய்ய முடியாது. சிலப்பதிகாரம், மணிமேகலை இரண்டும் சமயம் சார்ந்த ஆசிரியர்களால் இயற்றப்பட்டவை. அவைகளை மட்டும் படித்தால் தமிழகத்தில் சைவமே இல்லை என்று ஆகிவிடும்.

ஆட்சியிலிருந்த மன்னர்கள் செய்த செயல்களைக் கொண்டே சமயங்கள் நிலையை ஆராய முடியும். அவ்வகையில் சங்க காலத்திலும் திருக்குறளிலும் தமிழகத்தின் சைவ, வைணவ சமய வழக்குகள் உயிர் பெற்று இருந்ததையே காணுகிறோம்.

களப்பிரர்கள் எனும் ஓர் இனத்தினர் தமிழகத்தில் பல்லவர்களுக்கு முன்பு ஆட்சி செய்தனர். அவர்கள் தமிழ்ச் சங்கத்தையே நூல்கள் எரியுமாறு கொளுத்தினர். எனவே, இவர்கள் தமிழ்ப் பண்பாடு, சமயம் முதலியவற்றுக்கு முரண்பட்டவர்கள் என்று தெரிகிறது.

பல்லவர்கள் காலத்தில் நாயன்மார் பக்தி இயக்கம் வளர்வதற்கு முன்பு வேற்றுச் சமயங்கள் ஆட்சியில் இருந்தன. சங்க காலத்தை அடுத்ததும் களப்பிரர்காலத்துக்கு முந்தியதுமான காலத்தில்தான் வேற்றுச் சமயச் சுவடுகள் இல்லை.

திருமூலர் நூலிலும் வேற்றுச் சமயச் சுவடுகள் அதிகம் இல்லை. சைவ சமயத்துக்குள்ளேயே பல கருத்துக்களால் பிரிந்த சிறிய சமயங்கள் மட்டுமே வேற்றுச் சமயம் போல் விளங்கின.

தமிழ்ச்சமயம் தன் பெருமையில் குறையாமல் இருந்ததையும் வேதம் ஆகமங்களைக் கருத்தளவில் ஏற்றதையும் இந்த நூலில் காணுகிறோம். பொதுவாக, யோக வழியில் சமய நெறியை விளக்குவதையே இவர் முயற்சியாகக் கருத இடம் நிரம்பவுள்ளது.

## நூல் பயன்

தம் நூலைப் பயில்வோர் தம்மைப்போல் இன்பம் அடைவர் என்றும் - கடவுளைத் தம்மைப்போல் நேரில் கண்டு அனுபவிப்பர் என்றும் நூல் பயனை ஒரே இடத்தில் கூறினார். இதுபோல் மேலும் பல இடங்களிலும் கூறுகிறார்.

" நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லவும்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான் பற்றப் பற்றத் தலைப்படும்தானே "

(திருமந்திரம் 66)

தான் பெற்ற இன்பத்தை இந்த உலகம் முழுதும் பெறவேண்டும் என்று கூறுபவர், தாம் அந்த இன்பத்தைப் பெற்ற முறையை விளக்கிக் கீழ் மூன்றடிகளில் கூறுகிறார்.

| | | |
|---|---|---|
| மறைப்பொருள் | = | ஓம் என்னும் பிரணவம். |
| வான் பற்றி நிற்றல் | = | உடம்பில் வானமாகியதைப் பற்றி நிற்பது. |
| ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம் | = | ஓம் என்பதை முறைப்படி சொன்னால் உடம்பைப் பற்றிய உணர்வை எழுப்பும். |
| தான் பற்றப்பற்ற | = | ஒருவன் இந்த மந்திரத்தை விடாது தொடர்ந்து ஓதினால் |
| தலைப்படும் தானே | = | பரம்பொருள் தானாகவே வந்து தொடர்பு கொள்ளும் என்பதாகும். |

கடவுளைக் காணும் முயற்சியில் (ஈடுபடும் பயிற்சியில்) ஓர் உயிர் முழுதும் முன்நிற்குமானால் கடவுளே தாமாக வந்து அதற்கு வழிகாட்டித் துணை செய்வார் என்பது ஞானிகள் கருத்து. கண், பொருள்களைக் கண்டாலும் மனம் துணை செய்யாவிட்டால், கண்ணால் பார்த்த பொருளை உணர முடியாது. அது போல் உள்ளம் செய்யும் முயற்சியில் கடவுள் துணை செய்து வெற்றியாக்குவார் என்பதாகும்.

இதைச் சிவஞானபோதம் 11 ஆம் நூற்பா விளக்குகிறது.

" காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போல்
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்
அயரா அன்பின் அரன் கழல் செலுமே "

(சிவஞானபோதம் 11)

என்பது அந்த நூற்பா.



# 2. திருமந்திரத் திரட்டு

நமக்குள் வெளிப்பட்ட பிறகும் வெளிப்படாதது போல் கடவுள் இருப்பார். உற்றுப் பார்த்தால் அவர் வெளிப்பட்டது தெரியும். இதைக் கீழ்வரும் பாடல் கூறுகிறது.

" தாக்கியே தாக்காது நின்றதோர் தற்பரம்
நோக்கில் குழையும் என்று உந்தீபற
நோக்காமல் நோக்க என்று உந்தீபற "

(திரு உந்தியார் 11)

நம் உள்ளத்தில் கடவுள் முன்பே வெளிப்பட்டிருக்கிறான். அது மாயையால் நம் கண்ணிற்குத் தெரியாது உள்ளது.

ஓம் எனும் மந்திரத்தைத் தொடர்ந்து இடைவிடாது தொப்புளில் இருந்து புருவமத்தி வரை ஒரே நேர்கோட்டில் சிவப்பு ஒளியாகப் பாவித்து மனத்தால் ஓம் என்று சொல்லிச் சொல்லிப் பழகினால், நம் உடம்பில் உணர்வு மிகுதியாகும், உடல் மரத்துப் போகுமளவு அது மிகும். இப்படி அடிக்கடி செய்வதால் இறைவனை எதிர்ப்படலாம் என்பதே மேற்கூறிய (66) திருமந்திரப் பாட்டாகும்.

உடம்பில் வானப் பகுதியாக இருப்பது உச்சியாகிய புருவமத்தியாகும். இந்த வகையில் சொல்வதை விளக்க ஒரு உதாரணம் கூறுவார்கள். ஒரு பாத்திரத்திலிருந்து மறு பாத்திரத்தில் எண்ணெயைக் கொட்டினால் இடைவிடாது செல்லும் பாய்ச்சலைப் பார்க்கலாம். இதுவே ஓம் என்ற மந்திரமும் உத்தியாகப் பாய்வதற்குக் கூறும் உவமையாகும்.

### மரணமிலாப் பெருவாழ்வு

சாகாமல் இருப்பதே யோகச் சைவத்தின் பயன் என்பது திருமூலர் கொள்கை. ஒரே உடம்பில் இருப்பதும் ஒரே உணர்வில் பல யுகம் இருப்பதும் என இந்தக் கொள்கை இரு வகைப்படும்.

" இருக்கில் இருக்கும் எண் இலி கோடி
இருக்கின்ற மூலத்தில் அங்கே இருக்கும்
அருக்கனும் சோமனும் ஆரழல் வீச
உருக்கி உரோமம் ஒளிவிடும் தானே "

(திருமந்திரம் 58)

இப்பாடலில் கோடி என்பதால் 'கோடி' ஆண்டுகள் ஒரே உடம்பில் இருப்பது என்பது பொருளல்ல; இருக்க நினைக்கும் காலம்வரை ஒரே உடம்பில் இருப்பான் ஒரு யோகி என்பதை அளவிட முடியாது - கோடி என்ற பெரிய எண்ணால் எண்ணிக் கூறினார்.

மூலாதாரத்தில் தன் உணர்வை நிலையாக வைத்திருக்கும் துரியாதீதம் என்னும் சமாதி நிலை பெற்றவர்கள் இப்படி இருப்பர் என்றார். சூரிய சந்திரர் போலத் தாமாகவே ஒளிவிடும் உடம்பைப் பெறுவர்.

சூரியன் தானே ஒளிர்கிறது, சந்திரன் சூரிய ஒளியைப் பிரதிபலிக்கச் செய்கிறது. அது கண்ணாடி போன்றது என்க. இந்த ஒளியுடம்பில் உடல் உரோமம்கூட ஒளிவீசும் என்றார். இருந்த உடலிலேயே நீண்ட நாள் வாழலாம் என்பது இதன் கருத்து. கோடி என்பது காலக் கணக்கே, ஆண்டு கணக்கல்ல.

ஒளியுடம்பு பெற்றிருப்பதை வள்ளலார் கூறுவதாலும் அறியலாம்.

" இருந்தேன் இக்காயத்தே எண்ணிலி கோடி
இருந்தேன் இராப்பகல் அற்ற இடத்தே
இருந்தேன் இமையவர் ஏத்தும் பதத்தே
இருந்தேன் என் நந்தி இணையடிக் கீழே "

(திருமந்திரம் 62)

இந்த உடம்பிலேயே பல காலம் இருப்பதை இப்பாடல் கூறுகிறது. சமாதிநிலையில் இராப்பகல் இல்லை. தேவர்கள் அந்நிலை பெற்றோரை வழிபடுவர். சமாதி என்பது இறைவன் திருவடியில் பொருந்தி யிருப்பதே. நந்தி என்பது இங்குச் சிவனேயாம்.

" செப்பும் சதாசிவம் என்னும் இப்பேர் பெற்றும்
அப்படி நல்கும் அருள்நந்தி தாள் பெற்றும்
தப்பிலா மன்றில் தனிக்கூத்துக் கண்டபின்
ஒப்பில் எழுகோடி யுகம் இருந்தேனே "

(திருமந்திரம் 65)

இப்பாடல் ஒரே உடம்பில் இருக்கும் சாகாவரத்தைக் கூறவில்லை. தூல உடல் (பருவுடல்) அழிந்தபின் சூக்கும உடம்போடு பலயுகம் இருப்பதைக் கூறுகிறது.

கிரியா சத்தியும் ஞான சத்தியும் சமமாக இருக்கும் நிலைதான் சதாசிவம் என்பது ஆகும். அதையும் இறைவன் திருவடியையும், அவன் திருக்கூத்தையும் காணும் பேறு பெற்றவர் பல யுகம் இருப்பர்.

இவர்களுக்கு மறுபிறவி இல்லை. தூல உடம்பில் வாழும் ஆனந்தம் சூக்கும உடம்பிலும் இருக்கும் என்பதாகும்.

" நந்தி அருளாலே மூலனை நாடிப்பின்
நந்தி அருளாலே சதாசிவன் ஆயினேன்
நந்தி அருளால் மெய்ஞ்ஞானத்துள் நண்ணினேன்
நந்தி அருளாம் எனநான் இருந்தேனே "

(திருமந்திரம் 71)

சிவயோகியாக இருந்தவர் மூலன் உடம்பில் புகாவிட்டால் இப்படி மேலும் உயர்ந்து சதாசிவ நிலையை அடைய முடியாது என்பதை இப்பாடலால் கூறுகிறார்.

## தத்துவ நீக்கம்

தத்துவம் = 'அதன் இயல்பு' என்று பொருளாகும். கருவிகள் யாவும் தத்துவமே. உலகில் நாம் வாழ்வதற்குத் துணை செய்கின்ற நம் உடம்பு, உலகம், உள்உறுப்புக்கள், இவற்றால் வரும் இன்பம் யாவும் தத்துவங்களே.

கடவுளும் நம் ஆன்மாவும் தத்துவங்கள் அல்ல. எனவே, தத்துவங்களைக் கடந்தால் நம் ஆத்மாவும் கடவுளும் நேருக்கு நேராக இணையலாம். தத்துவங்கள் 36 ஆகும். இவற்றின் சிறிய இணைப் பகுதிகளை விரித்தால் 36+60=96 தத்துவம் என்பர்.

60-ம் தாத்விகங்கள் அதாவது தத்துவங்களில் அடங்கியவை எனப்படும்.

36 தத்துவங்கள் வருமாறு:

1. தன்மாத்திரைகள் - 5
(சுவை, ஒளி, ஊறு (தொடு உணர்வு)
ஓசை, நாற்றம் (வாசனை)
2. ஐம்பெரும் பூதங்கள் - 5
(நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம்)

3. ஐம்புலன்கள் (ஞானேந்திரியம்) - 5
(மெய், வாய், கண், மூக்கு, செவி)

4. கர்மேந்திரியம் (செயல் உறுப்புக்கள்) - 5
(கை, கால், நாக்கு, நீர்வாய், மலவாய்)

5. உள் உறுப்புக்கள் (அந்தக்கரணம்) - 4
(மனம், புத்தி, சித்தம், அகங்காரம்)

24

இவை உலகிற்கும் உடல்களுக்கும் துணை செய்யும் கருவிகள். ஆன்மா உடம்பில் வாழ இவை உதவுகின்றன. எனவே, ஆன்ம தத்துவம் என்று இவை அழைக்கப்பெறும்.

அறிவு வகையில் உயிர்கள் வாழத் துணை செய்யும் தத்துவங்கள் ஏழு. அவை யாவன:

1. காலம்
2. நியதி (வரிசை)
3. கலை (உணர்வால் வரும் ஒளி)
4. வித்தை (அறிவு)
5. அராகம் (விருப்பம்)
6. புருடன் (உடம்பிற்குள் ஏற்ப வாழும் உயிர்)
7. மாயை (பிரகிருதி மாயை)

கடவுள் படைப்பில் வெளிப்பட்டவை இவை. இவை எல்லாவற்றையும் கண்காணிக்கும் கடவுள் சக்திகள் 5. அவை சுத்த தத்துவம் எனப்படும்.

| | | |
|---|---|---|
| இச்சை | கிரியை | ஞானம் |
| (விருப்பம்) | (செயல்) | (அறிவு) |

என்ற மூன்றையும் உயிர்களுக்குத் தரும் தத்துவங்களே கடவுள் தத்துவமாம். அவை :

1. சிவம் - ஞானசக்தி மிகுதி; பிற குறைவு
2. சக்தி - கிரியா சக்தி மிகுதி; பிற குறைவு
3. சதாசிவம் - கிரியை ஞானம் சமம்
4. மகேஸ்வரம் - கிரியை மிகுதி
5. சுத்தவித்தை - ஞானம் மிகுதி

| | | |
|---|---|---|
| 1. | ஆன்ம தத்துவம் | 24 |
| 2. | வித்யா தத்துவம் | 7 |
| 3. | சிவதத்துவம் | 5 |
| | ஆக எல்லாம் சேர்ந்தவை | 36 |

இவை 36ம் நானல்ல என்று ஒவ்வொன்றாக மனத்தளவில் கூறித் தியானம் செய்ய வேண்டும்.

எடுத்துக்காட்டாக:

1. நான் தன்மாத்திரை ஐந்தும் அல்ல, ஆனால் நான் ஆத்மா
2. நான் பஞ்சபூதம் ஐந்தும் அல்ல, ஆனால் நான் ஆன்மா
3. நான் ஞானேந்திரியம் ஐந்துமல்ல, நான் ஆன்மா
4. நான் கர்மேந்திரியம் ஐந்துமல்ல, நான் ஆன்மா
5. நான் அந்தக்கரணம் நான்கல்ல. நான் ஆத்மாவே
6. நான் வித்யாதத்துவம் ஏழல்ல, நான் ஆன்மாவே
7. நான் சிவதத்துவம் ஐந்தல்ல, நான் ஆன்மாவே

என்று கூறுவதே 36 தத்துவங்களையும் முத்திக்குரிய ஏணிப் படிகளாக ஏறுவதாகும்.

இவை 36ம் நீக்கினால் நாமும் கடவுளுமே இங்கே எஞ்சியிருப்போம் என்பதாம்.

தத்துவ சோதனை, தசகாரியம், தத்துவ நிக்கிரகம் என்று பல வகையாக இதை அழைப்பார்கள்.

" முப்பதும் ஆறும் படிமுத்தி ஏணியா
ஒப்பிலா ஆனந்தத்து உள்ஒளிபுக்குச்
செப்பரிய சிவம்கண்டு தான் தெளிந்து
அப்பரிசாக அமர்ந்திருப்பாரே " (திருமந்திரம் 124)

முத்திக்குரிய 36 படிகளும் ஏறியபின் உள்ஒளி தெரியும். அதையே சிவம் என்று எண்ண, அதுவும் தெரியும்; பார்க்கும் ஆத்மாவும் தெரியும், பிறகு ஆத்மா சிவமாகவே அமர்ந்திருக்கும் என்ற இப்பாடலால் கூறினார் என்க.

சிவமாவதால் எல்லா இடத்திலும் தாம் இருப்பதை உணரலாம். சிவன் செயல் யாவையும் உணரலாம். முக்கால உணர்வும் உண்டாகும். இதனால் செய்கை ஏதுமின்றிச் சோம்பர் போலிருப்பர் என்பதாம்.

" இருந்தார் சிவமாகி எங்கும் தாம் ஆகி
இருந்தார் சிவன்செயல் யாவையும் நோக்கி
இருந்தார் முக்காலத்து இயல்பைக் குறித்து அங்கு
இருந்தார் இழவு வந்து எய்திய சோம்பே "

(திருமந்திரம் 125)

என்பதே அப்பாடலாகும்.

" தூங்கிக் கண்டார் சிவலோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவயோகமும் தம்முள்ளே
தூங்கிக் கண்டார் சிவபோகமும் தம்உள்ளே
தூங்கிக் கண்டார் நிலை சொல்வது எவ்வாறே "

(திருமந்திரம் 127)

என்ற பாடலில் தூங்குவது என்பது சமாதிநிலை அடைவதாகும். 'தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுவது எக்காலம்?' என்று தாயுமானவர் கூறுவதும் இதுவேயாம்.

## குருவின் சிறப்பு

கடவுள் எல்லாரிடத்தும் உள்ளார். தினமும் எப்போதும் கடவுளையே எண்ணியிருக்கும் பெரியோர்கள் நம்மை விடக் கடவுளிடம் மிகவும் நெருங்கி யுள்ளனர்.

காந்தத்தில் அடிக்கடி பட்ட ஊசியிலும் காந்தம் ஏறிவிடும் அதைக் கொண்டே இன்னொரு ஊசியையும் எடுக்கலாம்.

இதில் காந்தம் கடவுள், காந்தம் ஏறிய ஊசி குருநாதன், சாதா ஊசி பிற மனிதர்கள். இதனால் குருவை வணங்க வேண்டும். குருவிற்கு அடையாளம் கடவுள் நினைவாகவே எப்போதும் இருப்பவர் என்பதேயாம்.

கடவுள் பற்றிய எல்லா ஐயமும் நீங்கித் தெளிவும் உறுதியும் நம்பிக்கையும் முயற்சியும் தருவது குருபக்தி என்பதைக் கீழே கூறுகிறார்.

" தெளிவு குருவின் திருமேனி காண்டல்
தெளிவு குருவின் திருநாமம் செப்பல்
தெளிவு குருவின் திருவார்த்தை கேட்டல்
தெளிவு குருஉருச் சிந்தித்தல் தானே "

(திருமந்திரம் 137)

இதில் சிந்திப்பது என்பது நினைத்து மகிழ்வதையாம். குருவின் உருவம், அவர் பெயர், அவர் பேச்சு ஆகியவை உணர்வைச் சீடனுக்குள் எழுப்பிவிடும். இதனால் ஆர்வம் மிகும்.

ஒருவர்மீது கொண்ட நம்பிக்கையால், அவர் மீதான பெருமையால், உணர்வு மிகும். இதனால் ஆர்வம் உண்டாகும். இதேபோல்தான் சாத்திரங்கள்மீதும், தெய்வத்தின்மீதும், இதிகாச, புராண நிகழ்வுகள்மீதும் ஆர்வம் உண்டாகும்.

இதன் பயன் பற்று நெருக்கமாவதும் ஐயங்கள் நீங்குவதும் ஆகும். குருவும் தெய்வமும் ஒன்று என்பது இதனாலேயாம். இப்படிக் குருவிடம் நெருங்குவதன் பயனை அடுத்த பாடலிலேயே திருமூலர் கூறியுள்ளார்.

" தானே புலன்ஐந்தும் தன்வசம் ஆயிடும்
தானே புலன்ஐந்தும் தன்வசம் போயிடும்
தானே புலன்ஐந்தும் தன்னின் மடைமாறும்
தானே தனித்துஎம்பிரான் தனைச் சந்தித்தே "

(திருமந்திரம் 138)

புலன்கள் வசத்தில் நாம் இருந்த நிலை விடுபட்டு அப்புலன்கள் நம் வசத்தில் கட்டுப்படும். மேலும் உலகப்பற்றிற்கு மட்டும் எம்மை அழைத்துச் சென்ற புலன்கள் கடவுளிடம் திருப்பிவிடும்.

உள்ளம் பெரும் கோயில் என்னும் பாடலில் 'கள்ளப் புலன் ஐந்தும் காளமணி விளக்கே' - என்றுகூறுவதாலும் இதை உணரலாம்.

குருவிடம் நெருங்குவதே புலன் அடக்கத்திற்கும் துணை என்பது அனுபவமொழி யாகும்.

## புராணங்களின் உள்ளீடு

எளிய மனிதர்களுக்காகக் கதைப் போக்கில் புராணங்கள் செய்யப்பெற்று வழங்கிவருகின்றன.

எல்லாப் புராணங்களுக்கும் ஓர் உள் உறை கருத்தோ உணர்வோ நிகழ்ச்சியோ அடிப்படை யாகும்.

அதனால் சில புராணங்களை அவற்றின் உட்பொருள் விளக்கிக் கூறுகிறார் ஆசிரியர்.

பரமசிவன் பார்வதி திருமணம் கைலாயத்தில் நிகழ்ந்ததாகவும், இதனால் எல்லாரும் வடக்கே கூடினதாகவும், இதனால் சுமை தாங்காது வடக்குத் தாழ்ந்து தெற்கு உயர்ந்ததாகவும், சிவபெருமான் இதை அறிவித்த அகத்திய முனிவனையே தென் திசைசென்று சமம்

செய்யுமாறு கூறியதாகவும், தங்கள் திருமணக் காட்சியை அங்குச் செல்லும் எனக்குக் காட்டியருள வேண்டும் என்று அகத்திய முனிவர் வேண்டிக்கொண்டதாகவும், அதன்படி திருமணக் காட்சி அவருக்குக் காட்டப்பட்டதாகவும் கூறுவது ஒரு புராணமாகும்.

இதற்கான புது விளக்கத்திற்காக ஒரு பாடல் கீழ் வருகிறது.

" நடுவுநில்லாது இவ்வுலகம் சரிந்து
கெடுகின்றது எம்பெருமான் எனஈசன்
நடுஉளஅங்கி அகத்திய நீபோய்
முடுகிய வையத்துமுன் இரு" என்றானே

(திருமந்திரம் 141)

இப்பாட்டில் உலகம் என்பது மனித உடல்; நிலம் (வையம்) என்பது மூலாதாரம்; நடுவுள அங்கி என்பது உடல் நடுவே உள்ள சுழுமுனைநாடி; இதன் வழியே குண்டலினி சக்தி எனும் நெருப்புத் தலைப்பக்கம் ஏறும். இதையே இது குறிக்கிறது.

உடம்பின் கீழ்ப்பகுதி தென்திசை, தலைப்பகுதி வடக்கு, முன்பகுதி கிழக்கு, பின் பகுதி மேற்கு. மூலாதாரத்தில் பராசக்தி இருப்பதாகவும் தலையில் சிவன் இருப்பதாகவும் இருவரும் கூடுவதே யோக சாதனை முடிவாகும். இதுவே கைலாயத்தில் நடந்த திருமணம் என்க.

எல்லா நாடிகளின் உணர்வும் தலைநோக்கிப் போவது கைலாயத்தில் அனைவரும் கூடியது ஆகும். மீண்டும் மூலாதாரத்தில் நினைவு கொள்வது அகத்தியன் தென் திசையைச் சமப்படுத்தியதாகும்.

உடம்பில் யோக முயற்சியின்போது அளவுக்கு மீறிய சக்தி மேல் ஏறினால் உடம்பு சரியும் என்பதும் மீண்டும் கீழ்நோக்கிய முயற்சி மேற்கொள்ள வேண்டுமென்பதும் இந்தப் புராணக்கதையின் உள்ளீடு என்கிறார். எல்லார்க்கும் இது நடக்கும். ஆகவே, பொதுச் செய்தியாகப் புராணத்தில் கூறப்பட்டது.

அகத்தியான்பள்ளி முதலான அகத்தியர் தொடர்புடைய தலங்களில் பார்வதி பரமேச்வரன் திருமணத்தை அகத்தியர் கண்டு மகிழ்ந்ததாகத் தலபுராணம் கூறுவதும் இந்த யோகப் பயிற்சியில் அங்கு நிகழ்ந்ததை நினைவூட்டியதாகும்.

இனி அட்ட வீரட்டத் தல ,..கழ்வுகளைக் கூறுகிறார்.

## 1. அந்தகாசுர வதம்

அந்தகன் என்ற அசுரன் தன் வர பலத்தால் பிறருக்குத் தீமை செய்தான். தேவர்கள் இறைவனிடம் முறையிட்டார்கள்.

அவர்கள் வேண்டுகோளின்படி அந்தகனைச் சூலம் கொண்டு அழித்தார் என்பது வரலாறு. இது திருக்கோவலூரில் நடந்ததாகக் கூறுவர்.

சூலம் என்பது சுழுமுனை நாடியாகிய நடுநாடியைக் குறிக்கும். அந்தகன் = இருள் போன்றவன், யமன் என்ற பொருள் கொண்ட சொல்லுமாகும்.

சுழுமுனை நாடியில் சரியாக மூச்சுக்காற்று மூலம் பிராணன் இயங்காவிட்டால் இறப்பு வரும்.

அது வராமல் தடுப்பது பிராணாயாமத்தால் சுழுமுனை நாடியை இயக்குவதாம் :

" கருத்துறை அந்தகன் தன்போல் அசுரன்
வரத்தின் உலகத்து உயிர்களை யெல்லாம்
வருத்தம் செய்தான் என்று வானவர் வேண்டக்
குருத்துஉயர் சூலம் கைக்கொண்டு கொன்றானே "

(திருமந்திரம் 143)

என்ற இப்பாடலில் இக்கருத்து முதலடியில் 'போல்' என்ற உவமைச் சொல்லால் அறியலாம்.

## 2. தக்கன்

தக்(தட்சன்)கன் எனும் அசுரன் தானும் இறைவனாக வேண்டுமென்று தாருகாவனத்து முனிவர்கள் பேச்சைக் கேட்டுப் பெரிய யாகம் செய்தான்.

இறைவன் வீரபத்திரனை உருவாக்கித் தக்கனை அழிக்கக் கூறினார். அதனால் தட்சன் தலையை அறுத்து அதை நெருப்பில் வீசிவிட்டு ஆட்டுத்தலையை அவன் கழுத்தில் பொருத்தினார்.

இது திருப்பறியலூர் வீரட்டமாகச் சொல்லப்படுகிறது. விந்துவை அடக்கி மூலாதாரத்தில் அதை மாற்றிச் சக்தியாக்கிச் சுழுமுனையில் விடுவது குறிப்பு என்று கூறுவது மரபாகும்.

" கொலையின் பிழைத்த பிரசாபதியைத்
தலையைத் தடிந்திட்டுத் தான்அங்கியிட்டு
நிலைஉலகுக்கு இவன்வேண்டும் என்று எண்ணித்
தலையைப் பரிந்திட்டுச் சந்திசெய்தானே "

(திருமந்திரம் 144)

என்பது அப்பாடல்.

பிரஜாபதி என்பது குருவைக் குறிக்கும் (குரு = எனும் இரதம்). இது விந்துவைக் குறிக்கும்.

### 3. பிரமன் தலை எடுத்தல்

இது திருக்கண்டியூருக்குரிய வீரட்ட நிகழ்ச்சியாகும்.

மூலாதாரம் என்பது பிரமன். சுவாதிட்டானம் திருமால் ஆகும். தேவர்கள் நாடிகள்.

சிவனே பூமியைத் தாங்குகிறான்; எங்கும் நிறைந்தும் உள்ளான். இதைப் பிரமன் உணராதவன்போல் செருக்குடன் இருந்ததால் அவன் தலையைக் கொய்து அந்தக் கபாலத்தில் திருமாலின் இரத்தம் பச்சையாக வந்ததாக வீரட்ட வரலாறு உள்ளது.

மூலாதாரத்தி லிருந்து யோக முயற்சியை மணிபூரகத்திலிருந்து செய்வதாக மாற்றினால் தவறு இல்லை என்பதை இப்புராணக் குறிப்புச் சொல்கிறது என்க.

" எங்கும் பரந்தும் இருநிலம் தாங்கியும்
தங்கும் படித்து அவன்தாள் உணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்அற
அங்கு அச்சுதனை உதிரம் கொண்டானே "

(திருமந்திரம் 145)

என்பது அப்பாடல். (அச்சுதன் = திருமால்).

### 4. சலந்தரன் வீரட்ட முடிவு

இது விற்குடியில் நடந்த வீரட்டமாகும். சலந்திரன் என்ற அசுரன் சிவனுடன் போர் செய்யச் சென்றான். சிவன் தன் கால்கட்டை விரலால் ஒரு சக்கரம் கீறி (நிலத்தில் கீறி) அதைச் சலந்திரன் எடுக்கும்படி கூறினார். அதை அவன் பெயர்த்த போது அது உயிர் பெற்று அவனை அழித்தது. இது வரலாறு.

யோக ஆதாரம் யாவும் சக்கரம் ஆகும். யோகத்தால் அவை உயிர்ப்பு அடைந்தால் தலையில் உள்ள 1008 இதழ்த் தாமரை கவிழ்ந்த நிலைமாறி நிமிரும் என்பதாம்.

" எங்கும் கலந்து எனது உள்ளத்து எழுகின்ற
அங்க முதல்வன் அருமறை ஓதிபால்
பொங்கும் சலந்தரன் போர்செல்ல நீர்மையின்
அங்கு விரல் குறித்து ஆழிசெய்தானே "

(திருமந்திரம் 146)

என்பது அப்பாடல்.

கால்கட்டை விரல் உணர்வு தலையில் உள்ள தாமரையை உணர்வு எழுப்பும் என்பதும் அறிக.

## 5. முப்புரம் எரித்தது

மூவகை அசுரர்கள் பொன் வெள்ளி இரும்புகளால் கோட்டை கட்டி இருந்தனர். (புரம் = கோட்டை).

நல்ல தேவர்களையும் படைக் கருவிகள் பலவுமாக்கி, பூமித் தேரில் சிவன் சென்றார். எல்லாத் தேவர்களும் தங்கள் தங்கள் உதவியால்தான் சிவன் போரிடப் போவதாகக் கூறியதால் தாமே நெற்றிக்கண் திறந்து, மூன்று அசுரர் கோட்டைகளையும் எரித்தார் என்பதாம்.

" அப்பணி செஞ்சடை ஆதிப் பிரான் தன்னை
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரம் ஆவது மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார் அறிவாரே "

(திருமந்திரம் 147)

ஆணவம் கன்மம் மாயை என்னும் மூன்று மலங்களே முப்புரம் என்றும் அவை விடுபடுவதால் வீடுபேறு கிடைக்கும் என்பதும் இதன் பொருள்.

யோகத்தால் மும்மலம் அழியும் என்பர். மூன்றுவித முடிச்சுகள் நம் உடலில் உள்ளன. பிரம்மக்கிரந்தி, விஷ்ணுகிரந்தி, ருத்திரக் கிரந்தி என்று பெயர். (கிரந்தி = முடிச்சு)

இவை அவிழ்வதால் வீடுபேறு கிடைக்கும் என்பதும் கொள்க. உடம்பின் இடம் நோக்கி மும்மூர்த்தி பெயர்கள் முடிச்சுகளுக்கு வந்தன. இது திருவதிகை வீரட்டானத்தில் நடக்கும் செய்தியாகும்.

## 6. யானைத் தோலுரித்தது

இது வழுவூரில் நிகழ்ந்த வீரட்டமாகும். வேள்வி செய்து தாருகாவனத்து முனிவர்கள் சிவனை எதிர்த்துத் தாம் வாழ முயன்றனர்.

அப்படி மந்திர சக்தியால் யாகத்திலிருந்து ஒரு யானை வந்தது. சிவபெருமான் அதைத் தோல் உரித்து உடுத்திக்கொண்டான். இப்போது அவன் ஆடிய தாண்டவம் சிறப்பானதாகும்.

" முத்தீக் கொளுவி முழங்கு எரிவேள்வியுள்
அத்திஉரி அரன் ஆவது அறிகிலர்
சத்தி கருதியதுஆம் பல தேவரும்
அத்தீயினுள் எழுந்தன்று கொலையே "

(*திருமந்திரம் 148*)

என்பது அப்பாடல்.

யாகத்தீயாக இருப்பதே சிவனாகையால் அவனை அதனால் எதிர்க்க முடியாது என்பதாம். யானை உரித்தது ஆணவம் நீக்கியதாம். மணிபூரகத்தில் நெருப்பு எழுப்புவதே யாககுண்டம் என்பர். அந்த நெறியும் சிவமே என அறிக.

## 7. யமன் வதம்

இது திருக்கடவூரில் நிகழ்ந்த வீரட்டமாகும். மார்க்கண்டேய முனிவர் ஆயுள் முடிவதை அறிந்து சிவலிங்கத்தைத் தழுவி நின்றார். அவர் உயிரைப் பறிப்பதற்காக யமன் தன் கயிற்றை அவர் மீது வீச அது லிங்கத்திலும் சேர்ந்து வீழ்ந்தது.

இறைவன் லிங்கத்திலிருந்து வெளிப்பட்டு மார்பில் உதைத்துச் சூலத்தால் குத்தினான் என்பர்.

" மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்தின் மேல் உறநோக்கிமுற் -
கால்உற்று, காலனைக் காய்ந்து அங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமாய் இருந்ததே "

(*திருமந்திரம் 149*)

என்பது பாடல்.

மூலாதாரத்தில் உண்டாகும் குண்டலினி நெருப்பைப் பிராணாயாமம் செய்து மேல்எழுப்பித் தலை உச்சியை மனத்தால் உற்று நோக்கினால் அழிப்பில் நிலைவரை வரும் என்பதே இதில் கூறப்படும் கருத்து என்பர். இதை அங்கியோகம் என்பர்.

## 8. மன்மத வதம்

இது கொறுக்கை எனும் தலத்தில் நடப்பதாகக் கொள்வர்.

" இருந்த மனத்தை இசைய இருத்திப்
பொருந்திய லிங்கவெளி அதுபோக்கித்
திருந்திய, காமன் செயல் அது அழித்து அங்கு
அருந்தவ யோகம் கொறுக்கை அமர்ந்தே "

(*திருமந்திரம் 150*)

'மானுடர் யாக்கை சிவலிங்கம்' என்பார் திருமூலர். மனத்தை ஒருநிலைப்படுத்தி உடம்பின் நடுவே இருக்கும் வெளியில் அந்த மனத்தைச் செலுத்துவது காமத்தை அடக்கியதாகும்.

சிவன்யோகம் செய்தபோது தேவர் தூண்டலால் மன்மதன் அவருக்குக் காமம் உண்டாவதற்காக மலர் அம்பு எய்தான். அவர் சினந்து நெற்றி விழியால் அவனை அழித்தார் என்பது புராணம்.

அப்படி யோகப் பயிற்சியால் நாமும் காமத்தை அடக்கலாம் என்பதாகும். இவைபோல் மேலும் பல புராணங்களுக்கு யோகக் கருத்துக்கள் கூறுகிறார். புராணங்களுக்குப் புதுவிளக்கம் சொல்வதாகவும் இதைக் கொள்ளலாம்.

## இயமம், நியமம்

எட்டு வகையான அமைப்புடைய யோகத்தில் இயமம், நியமம் என்ற இரு பிரிவுகளில் அறச்செய்திகள், நல்லொழுக்கம் ஆகியவை பற்றிய பாடல்கள் உள்ளன.

திருக்குறள் நாலடியார் போலப் பொது அறச் செய்திகள் இந்தப் பகுதியில் இந்தக் காரணமாகவே திருமந்திரத்தில் உள்ளன.

" எட்டிபழுத்த, இருங்கனி வீழ்ந்தன,
ஒட்டிய நல்லறம் செய்யார் அவர் செல்வம்
வட்டி கொண்டு ஈட்டியே மண்ணின் முகந்திடும்
பட்டி பதகர் பயன் அறியாரே "

(திருமந்திரம் 427)

அறஞ்செய்யாதாரின் செல்வம் எட்டி பழுத்துக் கீழே விழுந்தது போன்றதாம். அச்செல்வத்தை வட்டிக்கு விடுவதும் அப்படியே என்பதாம்.

எட்டி என்பது நச்சுமரமாகும். அதன் கனியை யாரும் உண்ணாதது போல் என்றார் என்க.

## குண்டலினி சக்தி

குண்டலினி சக்தி என்பது ஒரு நெருப்பு. அதனாலே எல்லாம் செய்ய முடியும். இது இல்லாது எங்கும் எதுவும் நடக்காது.

இது இருவகைப்படும். அகக் குண்டலினி என்றும் புறக் குண்டலினி என்றும் கூறுவர்.

இதன் இயக்கம் பாம்பு ஊர்வது படம் எடுப்பதுபோல் இருப்பதால் குண்டலினியைப் பாம்பு வடிவமாகக் கூறினர்.

அகக் குண்டலினி என்பது மனிதர் மற்றும் விலங்கு உடம்புகளில் இருப்பது ஆகும். தாவரங்களிலும் அது உள்ளது.

ஆனால், மனித அறிவில்மட்டுமே குண்டலியைத் தெரிந்து கொள்ளவும் அதை வளர்க்கவும் அதனால் யோகப் பயன் பெறவும் முடியும்.

புறக் குண்டலினி என்பது எட்டுத் திசைகள் கொண்ட இவ்வுலகம் மட்டும் அல்லாது பிரபஞ்சம் முழுதும் அது இயங்கி எல்லாச் செய்கைகளுக்கும் துணையாக உள்ளது.

காளியின் (மாரியுமாம்) கையில் உள்ள உடுக்கையில் ஒரு கைப்பாம்பு சுற்றியிருக்கும். உலகத்தை ஒலியால் படைத்ததையும் அந்த ஒலியே 'ஓம்' என்ற பிரணவம் என்பதும் அதன் சக்தி இயக்கமாக உள்ளதே குண்டலி சக்தி (பாம்பு) என்பதும் தத்துவ வடிவமாக விளக்கப்படுகிறது.

உலகில் எங்கும் ஓம் எனும் பிரணவம் உள்ளது; நம் உடம்பிலும் உள்ளது. கடவுளுக்கு அடுத்ததாக எங்கும் நிரம்பியுள்ளது காந்த சக்தியே ஆகும்.

அதுவே அண்டங்கள் சுழல்வதற்கும் எங்கும் விழாமல் இருப்பதற்கும் காரணமாக உள்ளது.

இயற்கை செயற்கை ஆகிய எல்லாப் பொருள்களிலும் அந்தச் சக்தி உள்ளது.

மின்சாரம், எலக்ட்ரானிக்ஸ் எனப்படும் நுண்பொருள் எல்லாவற்றிலும் காந்தசக்தி உள்ளது.

ஒலியை ஒளியாக்கி அதையே படமும் ஆக்கும் எல்லாத் தொழில் நுட்பமும் இச்சகதியால்தான் செய்கின்றனர்.

இதை மூலாதாரத்தில் உள்ள குண்டலினி நெருப்பாக உணர்த்துவர்.

" கொண்டல் வரைநின்று இழிந்த குலக்கொடி
அண்டத்துள் ஊறி இருந்து எண்திசை ஆதி
ஒண்திண்பதம் செய்த ஓம் என்ற அப்புறக்
குண்டத்தின் மேல் அங்கி கோலிக் கொண்டாளே "

(திருமந்திரம் 233)

என்று கூறுகிறார்.

குண்டம் என்பது யாககுண்டம் போல நம் உடம்பில் உள்ள மூலாதாரத்தைக் குறித்தது.

" சிதக்னிகுண்ட சம்பூதா "

என்று லலிதா சகஸ்ரநாமம் குண்டலினியைப் பராசக்தியாக வர்ணிக்கிறது.

மேகம் முதல் உயர்ந்து கீழிருந்த சக்தி என்று இப்பாடல் மூலம் கூறுவது அறிக.

அண்டத்தின் உள்ளும் கீழும் ஊறி இருப்பதாகக் கூறுவது உடலுக்கும் அண்டங்களுக்கும் பொதுவாகும்.

மூன்றாவது அடியில் குண்டலினி 'ஓம்' என்று ஒன்றை உருவாக்குகிறது என்றார்.

ஓம் என்ற மந்திரத்தை உணர்வுடன் உடம்பிலும் அண்டத்திலும் இணைத்த பாவனையுடன் ஓதிடும்போது அகக் குண்டலினியையும் புறக் குண்டலினியையும் இணைத்து அதன்மேல் சமாதி நிலையை அடைகிறோம் என்பது யோக நூலின் கருத்தாகும்.

" நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லவும்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படும் தானே "

(திருமந்திரம் 66)

என்ற பாடலில் ஓம் என்னும் மந்திரத்தை எழுப்பியே இறைவனை அடையலாம் என்று கூறியது இதுவேயாம்.

## நமன் இல்லை

நீண்ட கால வாழ்வுக்கும் இறப்பின்றி வீடுபேறு பெறுவதற்கும் 'ஓம்' எனும் மந்திர ஒலி யோகத்தைக் கூறினார்.

நம் தலைக்குமேல் உச்சி நடுவில் மூன்றுவிரல் உயரம் நாதம் என்றும், அதன்மேல் மூன்று விரல் உயரம் நாதாந்தம் என்று கூறப்படும்.

உந்திச் சுழியிலிருந்து சுழுமுனை நாடியாகிய நடுநாடி வழியாக மவுனமாய் எழுப்பப்படும் ஓம் எனும் ஒலி, நாதம் எனும் பகுதியில் ஒளியாக வெளிப்படும்.

மெல்ல மெல்ல அந்த ஒளி தேயும் இடமே நாத முடிவாகிய நாதாந்தம் ஆகும். தேய்தல் என்பது திரள்வதே.

இப்பகுதியில் உடம்புக்கு மேலாக இருப்பதால் - ஆதாரமில்லாது இருப்பதால் நாதாந்தம் எனப்படும்.

அகல்விளக்கு ஒளிபோன்ற ஒளியே ஓம் ஒலியில் உண்டாகும். 'அ' என்பது சூரியஒளி - 'உ' என்பது நட்சத்திர ஒளி - 'ம்' என்பது நிலவு ஒளி. இவை மூன்றும் முச்சுடர் என்று வழங்கப்படும்.

" உச்சியில் ஓங்கி ஒளி திகழ் நாதத்தை
நச்சியே இன்பம் கொள்வார்க்கு நமன்இல்லை
விச்சும், விரிசுடர் மூன்றும், உலகுக்குத்
தச்சும் அவனே அமைக்க வல்லானே "

(திருமந்திரம் 251)

இப்பாடலில் உலகம் என்பது உடலையும் பிரபஞ்சத்தையும் குறித்தே. தச்சு = செய்து அமைப்பது. நமன் = எமன். விச்சு = விந்து (வினையாம்).

### கர்ப்பக் கிரியை

இப்பகுதி கருவுறுவதும் அதில் குழந்தைகள் பற்றிய செய்திகளும் கூறப்படுகின்றன.

இக்கால அறிவியல் முறையில் சொல்லப்பட்ட பல செய்திகள் இதில் உள்ளன என்கிறார்கள்.

மகப்பேறு மருத்துவத்தில் மிகவும் புகழ்பெற்ற திருச்சி ஜெயம் கண்ணன் எனும் மருத்துவர் மங்கையர்மலர் எனும் பத்திரிகையிலும், தொலைக் காட்சியிலும் திருமந்திரத்தில் இப்பகுதி ஆய்வை விளக்கியுள்ளார்.

### மூவகை உயிர்

மூவகை உயிர்கள்பற்றி இந்திய ஞானிகள் கருத்துச் சிறந்தது. ஆணவம், கன்மம், மாயை என்ற மூன்று மலங்கள் கொண்ட உயிர்களே பூவுலக வாழ்வில் இருப்பவர்.

இவர்கள் சகலர் எனப்படுவர். கலைகளாகிய மாயத் தத்துவம் முழுதும் நிரம்பியவர் சகலர் எனப்படுபவராவர்.

ஆணவம் மட்டும் கொண்டவர் விஞ்ஞானகலர் எனப் படுபவராவர்.

ஆணவம் கன்மம் இரண்டும் உடையவர் பிரளயாகலர் எனப்படுபவராவர்.

மூன்று தனித்தனிப்பொருள் கூடி யிருக்கும்போது அவை பிரிந்தும் இருக்க வாய்ப்புண்டு. அந்த வகையில் மூன்று பிரிவினராவர்.

விஞ்ஞானகலர் என்னும் தலைமைப் பிரிவினர் இந்தப் பூமியை விட்டுப் பிரிந்ததும் எட்டுவகை வித்தியேஸ்வரர் எனும் பதவியிலிருப்பர். இவர்கள் பிரபஞ்சம் முறையாக இயங்குவதைக் கவனிப்பர்.

பிரளயாகலர் என்னும் நடுப்பிரிவினர் பூமியை விட்டுப் பிரிந்தபின் 108 உருத்திரர்களாய்த் தொழில் செய்வர் என்பர். சகலர் என்போர் பூமியில் வாழ்வோர்.

பூமியை விட்டுப் போவது என்பது மரணத்தின் பின் சூக்கும உடல் இப்பதவிகளை பெறும் என்பர்.

ஆணவத்தை விட்டவர்கள்தான் மெய்ஞ்ஞானர் எனப் படுபவராம். மூவகை ஆருயிர் வர்க்கம் எனும் தலைப்பில் 300 ஆம் பாடல் முதல் 15 பாடல்களில் இவர்களை விளக்குகிறார்.

மனிதஉடல் 96 தத்துவங்களுடன் வாழ்கிறது. இறப்பு வரும்போது அவை அவை தனித்தனியே பிரிந்து ஒடுகின்றன.

" முப்பதும் முப்பதும் முப்பத்து அறுவரும்
செப்பும் மதிள் உடைக் கோயிலுள் வாழ்பவர்
செப்பும் மதிள் உடைக் கோயில் சிதைந்தபின்
ஒப்ப அனைவரும் ஓட்டெடுத்தாரே "

(திருமந்திரம் 327)

என்ற பாடலில் 96 தத்துவமும் பிரிந்து நம் மரணத்தில் விலகுவது கூறினார். சூக்கும உடம்பு இத்தத்துவங்களில் படாது. ஆகவே, வேறு பதவிகளில் சென்று உலகை நடத்துகிறது என்றனர் என்க.

## எளிய செய்கை

அரியவையான பல செய்கைகள் சொல்லும் திருமூலர், எல்லாரும் கைப்பற்றும் எளிய செய்கையையும் தம் நூலில் கூறியுள்ளார்.

இறைவனை வணங்க நினைப்பவர் செல்வமில்லை என்று இயலாமையை நினைத்துத் தயங்க வேண்டாம்.

ஒரு பச்சை இலையைப் பறித்துத்தம் அன்பின் அடையாளமாக அதைப் படைப்பதாகக் கருதினால் அதுவே பெரிய செலவில் செய்யும் பூசைக்கும் நிகராகுமாம்.

பிறருக்கு அருளால் உதவி செய்தும் உயிர்களிடம் அன்பு கொள்வதும் இந்த வணக்கத்தை ஒக்குமாம்.

அதாவது பசுவுக்கு அதன் வாய் கொள்ளுமளவு அருகம்புல் கொண்டு கொடுப்பதே அந்தச் செயலாம்.

தம்மைப் போல் மனிதனாய், பசித்தவனாய் இருப்பவனுக்கும் உதவி செய்வதற்காகத் தான் உண்ணும்போது அவனுக்கும் ஒரு கைப்பிடி உணவு தருவதும் அறவழியாகிய அன்பு வழிபாடே ஆகும் என்றார்.

இதுகூடச் செய்ய முடியாதவர் பிறரிடம் இனிய சொல்பேசி உதவுவதும் எளியதாய்ச் செய்யும் அறவழிபாடேயாம். இதைக் கீழ்வரும் பாடல் கூறுகிறது :

" யாவர்க்கும் ஆம் இறைவற்கொரு பச்சிலை
யாவர்க்கும் ஆம் பசுவுக்கு ஒரு வாயுறை
யாவர்க்கும் ஆம் உண்ணும் போது ஒருகைப்பிடி
யாவர்க்கும் ஆம் பிறர்க்கு இன்னுரை தானே "

(திருமந்திரம் 419)

## அன்பே அவனும் வழிபாடும்

பிறரிடம் அன்பு செலுத்துவதும் இறைவனிடம் அன்பு செலுத்துவதும் கலந்து சிவத்தை நமக்குக் காட்டும்.

எனவே, சிவம் வேறு அன்பு வேறு என்பதன்று.

அன்பு என்பது பயன் கருதியதாகமட்டு மல்லாது சுயநலமில்லாது தாழ்ந்த உயிர்களிடத்தும், மக்கள் சமூகத்தில் பரவியதாகவும் இருக்க வேண்டும்.

அன்பு என்ற நூலால் எல்லா உயிர்களையும் இணைத்துக் கடவுள் தம் கழுத்தில் மாலையாக அணிந்துள்ளார் என்று கருதவேண்டும்.

" அன்பு சிவம் இரண்டு என்பர் அறிவிலார்
அன்பே சிவம் ஆவது ஆரும் அறிகிலார்
அன்பே சிவம் ஆவது ஆரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந் தாரே "

(திருமந்திரம் 437)

" ஆர்வம் உடையவர் காண்பார் அரசன் தன்னை
ஈரம் உடையவர் காண்பார் இணை அடி."

(திருமந்திரம் 440)

இவற்றால் அன்பும் சிவமும் ஒன்று என்றும் அதனால் அவனை அடையலாம் என்றும் கூறினார்.

" அன்புறு சிந்தையின் மேல் எழும் அவ்ஒளி "

(திருமந்திரம் 449)

சிந்தையில் அன்பு கொண்டால் நம் உடலில் இருந்து ஓர் ஒளி தோன்றும். அந்த ஒளியே சிவத்தோடு சேரும் என்பது இதனால் தெரிகிறது.

" உற்றுநின்றா ரொடும் அத்தகுசோதியைச்
சித்தர்கள் என்றும் செறிந்து அறிவாரில்லை
பத்திமையாலே பணிந்து அடியார்தொழ
முத்திகொடுத்து அவர்முன்பு நின்றானே "

(திருமந்திரம் 451)

இப்பாடலில் அன்பினால் நமக்குள் தோன்றும் ஒளி சித்தர்கள் ஒளியுடன் சேர்ந்து சித்தர்களே ஆகிப் பின் சிவத்தோடு சேரும் என்பதைக் கூறினார்.

### அட்டாங்க யோகம் - இயமம், நியமம்

" கொல்லான் பொய் கூறான் களவு இலான் எக்குணத்தும்
நல்லான் அடக்கம் உடையான் நடுச்செய்ய
வல்லான் பகுத்து உண்பான் மாசுஇலான் கள் காமம்
இல்லான் இயமத்து இடையில் நின்றானே "

(திருமந்திரம் 547)

இப்பாடல் வெளிப்படை. இதில் உள்ள நல்வழிகளில் நிற்பதே இயமம் ஆகும். விலக்கத் தக்கன விலக்குவதாம்.

மூலக்கனலை முடிமீது ஏற்றுவதாகிய நியமத்துக்கு விரதங்களாக உள்ள பூசை, வைராக்கியம் பயன்படும் என்பதை 549, 550 பாடல்களில் கூறுகிறார்.

### அட்டாங்க யோகத்தில் ஆசனம்

பத்மாசனம், சுவஸ்திகம், பத்திராசனம், மயிலாசனம், கோழியாசனம், சிம்மாசனம், வீராசனம், சுகாசனம், கோமுகாசனம், முதலிய ஆசனங்களாம்.

இவற்றில் உடல் பாகங்கள் பலவிதமாக மடிந்தும் நிமிர்ந்தும் இயக்கப்படுவதால் அங்கெல்லாம் புதிய பிராணன் புகுந்து உடலில் சக்தியுண்டாகிறது.

இது உடலை நன்மை வயப்படுத்தும். இதனால் நீண்ட ஆயுள் கிட்டும். வாழ்க்கை நோயின்றி எளிதாகும் சுகமாம்.

மூச்சை அடக்காது இந்த ஆசனங்களைச் செய்ய வேண்டும். உடற்பயிற்சியில் மூச்சை அழுத்துவதால் முழுப்பிராணனும் புதிய பிராணன் சென்று உலவ வழியில்லை. ஆசனத்தின் பயன் யாவும் உடற்பயிற்சியில் விளைவதில்லை.

## அட்டாங்க யோகத்தில் பிராணாயாமம்

இது எட்டுவகை யோகத்தில் நான்காவது ஆகும். எட்டுவகையான யோகத்திற்கும் ஆதாரமாவது பிராணனை வசப்படுத்துவதுதான். ஆகவே இது சிறந்ததாகும்.

அதிலும் முழுதும் வசமாக்குவதுதான் பிராணாயாமம் என்ற பெயருடையது. நமக்குள் கடவுள் ஏறிவரும் குதிரையே பிராணன் தான் என்கிறார்.

" தலைமகன் உய்யக் கொண்டு ஏறும் புரவி மற்றுண்டு "

என்கிறது. (திருமந்திரம் 557)

" ஆரியன் நல்ல குதிரை இரண்டு உண்டு
வீசிப்பிடிக்கும் விரகு அறிவாரில்லை
கூரிய நாதன் குருவின் அருள் பெற்றால்
வாரிப்பிடிக்க வசப்படும் தானே "

(திருமந்திரம் 558)

ஆரியன் என்பது தூய கடவுள் என்பதாம். உள்போகும் மூச்சு வெளிவரும் மூச்சு இரண்டையும் இருகுதிரை என்றும் அதை எப்படிப் பயன்படுத்துவது என்றும் அறிந்தால் குருவின் அருளால் இறைவனை வசம் செய்யலாம் என்பதாம்.

பிராணாயாமமே மனத்தில் மகிழ்ச்சி தரும் என்கிறார் (559 பாடல்). பிராணன் எனும் சக்தி மனத்தோடு எப்போதும் பிரியாதிருக்கும். அதை வசம்செய்ய மவுனத்தோடு மூச்சுப் பயிற்சி செய்யவேண்டும் என்பதை 560 ஆம் பாடலில் கூறுகிறார்.

" ஏறுதல் பூரகம் ஈரெட்டு வாமத்தால்
ஆறுதல் கும்பகம் அறுபத்து நாலதில்
ஊறுதல் முப்பத்து இரண்டு அது ரேசகம்
மாறுதல் ஒன்றின்கண் வஞ்சக மாமே "

(திருமந்திரம் 561)

இப்பாடலில் பிராணாயாம அளவு கூறுகிறார்.

உள்ளே மூச்சை இழுப்பது 16 எண். அடக்குதல் 64 எண் வெளிவிடல் 32 எண் என்பதாம்.

| | | |
|---|---|---|
| பூரகம் | - | உள்ளிழுத்தல் |
| கும்பகம் | - | அடக்குதல் |
| ரேசகம் | - | வெளிவிடல் |

என்று மூச்சுத் தொழில் மூன்றாகக் கூறப்படும்.

" பளிங்கொத்த காயம் பழுக்கினும் பிஞ்சாம் "

(திருமந்திரம் 562)

என்பதால் முதுமையிலும் பிராணாயாமம் இளமை தரும் எனப் பெற்றது அறிக.

எண் எனப்பட்டது வினாடிகளாம். மனத்தில் ஓம் என்பதை ஒரு வினாடியாகக் கொண்டு மேற்கூறிய அளவுகளில் பயிற்சி செய்யலாம்.

திடீர் மரணம், அகால மரணம் இதனால் இல்லை என்பதை

" ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கு அறிவாரில்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கு அறிவாளர்க்குக்
கூற்றை உதைக்கும் குறியது வாமே "

(திருமந்திரம் 564)

என்ற பாடலில் கூறியுள்ளார்.

ஒரு மூக்கால் இழுக்கும்போது மறு மூக்கை அடைக்க வேண்டும்.

வெளியிடும்போது இழுத்த மூக்கிற்கு அடுத்த மூக்கால் வெளியிடவேண்டும்.

வெளியிடும் போது மறு மூக்கை அடைத்துக்கொள்ள வேண்டும்.

வலது மூக்கில் இழுத்தால் பிங்கள நாடியில் காற்று ஏறும், இடது மூக்கில் இழுத்தால் இடநாடியில் ஏறும். மூச்சை அடக்கும்போது சுழுமுனை நாடியில் காற்று ஏறும்.

இப்பழக்கத்தைத் தொடர்ந்து செய்வதால் 10 முதன்மையான நாடிகளிலும் காற்று ஏறும் என்பதைப் 'புட்டி படத்தச நாடியும் பூரித்து' - என்பதால் கூறுகிறார். (திருமந்திரம் 567)

## தச வாயுக்களாவன

பிராணன், அபானன், சமானன், உதானன், வியானன், நாகன், கூர்மன், கிரிகரன், தேவதத்தன், தனஞ்சயன் என்பனவாம்.

இவை உடலில் பல்வேறு பகுதியில் பற்பல செயல்களைச் செய்துவருகின்றன.

ஆக்ஸிஜன் எனும் காற்று உடம்பிற்குள் வந்ததும் பிராணன் தோன்றும். பிறகு ஒன்பதாகப் பிராணன் பிரியும் என்று அறிக.

ஆக்ஸிஜனும் பிராணனும் ஒன்றல்ல. உடம்பில் ஒன்றால் மற்றது விளைவதாகும்.

"புறப்பட்டுப் புக்குத் திரிகின்ற வாயுவை
நெறிப்பட உள்ளே நின்மல மாக்கினால்
உறுப்புச் சிவக்கும் உரோமம் கறுக்கும்
புறப்பட்டுப் போகான் புரிசடை யோனே"

(திருமந்திரம் 568)

பிராணாயாமத்தால் காற்றை உடம்பிற்குள் அடக்கிப் பழகினால் உடல் சிவக்கும், நரைவராமல் மயிர் கறுப்பாகும், இளமை வரும். உயிராகிய இறைவனும் உடம்பிலிருந்து வெளியேறமாட்டான் என்கிறார்.

மூச்சுக்குழாய் நீளம் 12 அங்குலம். அதன் பிறகு காற்று நுரையீரலுக்குப் போகுமென அறிக.

## அட்டாங்க யோகத்தில் பிரத்தியாகாரம்

இது ஐந்தாம் பகுதியாகும். உடம்பின் உள் பகுதியை ஆராய்ந்து உணர்தல் பிரத்தியாகாரம் எனப்படும்.

உபாதியை நீக்கி உள்நோக்குவது என்பது இதன் பொருள். உபாதி என்பது அப்போதைய வடிவம் எனப்படும்.

நீர் துளியாக இருப்பது அப்போதைய வடிவம். அதுவே பல துளி பெரு வெள்ளமாகலாம்.

நம் உடலும் அப்படி ஓர் உபாதியே. இதை நீக்கி இந்த உடலுக்குள் பேறாக உள்ளவற்றை நோக்குதலாம்.

" கண்டு கண்டு உள்ளே கருத்துற ஓங்கிடில்
கொண்டு கொண்டு உள்ளே குணம்பல காணலாம்
பண்டு உகந்து எங்கும் பழமறை தேடியை
இன்று கண்டு இங்கே இருக்கலும் ஆமே "

(திருமந்திரம் 571)

இப்பாடலில் முதல் இரண்டடிகிளில் மேல் சொன்னதுபோல் பிரத்தியாகாரப் பொருள் சொல்கிறார். பின் இரண்டடிகளில் வேதங்களாலும் தேட முடியாத கடவுளைக் கண்டு இங்கேயே அவரை இருக்கவைக்கலாம் என்று பயன் கூறுகிறார்.

உடம்பின் உள்ளே உறுபொருள் காணலாம் என்பதே இதுவாம்.

" ஒருக்கல் உபாதியை ஒண்சோதி தன்னை
பிரித்துணர் வந்த உபாதிப் பிரிவைக்
கரைத்து, உணர்வு உன்னல், கரைதல், உள் நோக்கல்
பிரத்தியாகாரப் பெருமையது ஆமே "

(திருமந்திரம் 578)

உபாதியை நீக்கி உள்நோக்கல் என்பதை வைத்தே பாடிப் பிரத்தியாகாரத்தை விளக்கியது அறிக.

உள்நோக்குவதில் சிறந்தது குண்டலினியை நோக்குவதே யாகும். மலவாய்க்கும்மேல் இருவிரல் உயரத்தில் இருப்பது மூலாதாரம்.

அதற்குமேல் இருவிரல் உயரத்தில் இருப்பது நீர்வாயாகிய சுவாதிட்டானம்.

உந்திக்கும் (நாபி) கீழே மூலாதாரம் 12 விரல் கீழே உள்ளதாகும்.

வட்ட வடிவில் சிவந்த ஒளியாகவும் சக்தியாகவும் இருக்கும். இது உந்திக்கும் கீழே நான்கு விரல் தொலைவிலேயே மனத்திற்குத் தென்படும். இதைக் கூறும் பாடல் வருமாறு:

" மூலத்து இருவிரல் மேலுக்கு முன்நின்ற
பாலித்த யோனிக்கு இருவிரல் கீழ் நின்ற
கோலித்த குண்டலி உள்எழு செஞ்சுடர்
ஞாலத்து நாபிக்கு நால்விரல் கீழதே "

(திருமந்திரம் 573)

என்பதே இனிது விளக்குவதாம்.

பிரத்தியாகாரத்தில் அதோமுக தரிசினம் கூறுகிறார். 'நாசிக்கு அதோ முகம் பன்னிரண்டு அங்குலம்' (574) என்பதே அது.

மூக்கு முனையிலிருந்து உட்பக்கமாக நினைத்துப் பின் மண்டையில் முடிப்பது இது. இதன் தொலைவு பன்னிரண்டு அங்குலம் அல்லது ஒரு சாண் என்பதாகும்.

மேல் உள்ள முகம் என்பதே அதோமுகமாம். இது சக்தி வாய்ந்த ஒரு பகுதியாகும். இதில் மனம் வைத்துப் பார்ப்பது பெரிய யோகம் என்றும் அப்பாடலில் (574) கூறுகிறார்.

### அட்டாங்க யோகத்தில் தாரணை

வெளிப் பொருளோடு ஒன்றி நிற்பது தாரணை. உதாரணமாகக் கயிலை மலையைத் தாரணையாகக் கருதி நிற்பதும் அது.

" அரித்த உடலை ஐம் பூதத்தில் வைத்துப்
பெருத்த ஐம்பூதம் சத்தாதியில் போந்து
தெரித்த மனாதி சித்தாதியில் செல்லத்
தரித்தது தாரணை தற்பரத் தோடே "

என்ற பாடலில் தாரணை கூறுகிறார். (திருமந்திரம் 590)

பஞ்ச பூதங்களால் ஆனது இந்த உடல். பஞ்ச பூதங்களுக்குக் காரணம் தன்மாத்திரை ஐந்தாகும். இப்பஞ்ச பூதங்களாலேயே நமக்கு ஐந்து புலன்கள் வந்தன. இதனால் ஐம்புலனை அவை வந்த வழியில் சேர்த்துவிட வேண்டும்.

மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பவற்றுக்கு அடிமூலமாக உள்ளது மூலப்பிரகிருதி எனும் ஒரு தொகைப் பொருள். அது சத் சித் ஆனந்தமாகிய இறைவன் குணத்திலிருந்து உருவானது.

எனவே, மனம் முதலியவற்றை அவை தோன்றிய மூலத்தில் ஒடுக்குவது. இப்படிச் செய்வது தசகாரியம் என்றும் கூறப்படும். இதையே தாரணை என்றார். விஞ்ஞான பைரவா எனும் நூல் 112 தாரணைகள் கூறுகிறது. அது உடம்பிற்கு வெளியே நம் நினைவைக் கொண்டு அடக்குவதால் தசகாரியம் போன்ற செயல் நமக்கு பயனாகக் கிடைக்கிறது என்பர்.

யோகக் களஞ்சியம் என்ற என் நூலிலும் (வர்த்தமான் வெளியீடு) ஓஷோ நூலிலும் விஞ்ஞான பைரவா நூல் விளக்கம் காணலாம். ஆறு ஆதார தேவதைகளை ஐக்கியப்படுத்தலும் இதுவே.

## அட்டாங்க யோகத்தில் தியானம்

யோக உறுப்புகளில் இது ஏழாம் நிலையாகும். வழிபடுகடவுள் உருவத்தையோ, குருவடிவத்தையோ மனத்திற்குள் பாவிப்பது தியானத்தின் முதல் படியாகும். இதில் நம் புத்தியும் நம் புலன்களும் பாவிக்கும் பொருளோடு ஒன்றியிருக்க வேண்டும்.

புலன் அறிவு பத்து வகை யாகும். ஞானேந்திரியம் கன்மேந்திரியம் ஆகியன பத்தாகும் - மனம் புத்தி சித்தம் அகங்காரம் என்பன நான்கு - ஆன்ம உணர்வு ஒன்று - பாவிக்கும் தெய்வ உணர்வு ஒன்று ஆகப் பதினாறும் ஒன்றுவது தியானம் என்றார்.

" வரும் ஆதி ஈரெட்டுள் வந்த தியானம்
பொருவாத புந்திபுலன் போகமேவல்;
உருவாய சத்திபரத் தியானம்; முன்னும்
குருஆர் சிவத்தியானம் யோகத்தில் கூறே "

(திருமந்திரம் 591)

என்ற பாடல் பொருளால் இதை அறியலாம்.

ஞானேந்திரியமாகிய கண், மூக்கு, செவி, வாய், தோல் ஆகியவற்றில் தொழிற்படும் சக்தி கடவுள் சக்தியே ஆகும். அதை உணர உள்நாக்கின் உள்ளே ஒரு சோதியைப் பாவித்துப் பழகுவது தேவை.

இதுவும் ஒருவகைத் தியானமே. இந்த உண்ணாக்கை 'இந்திர யோனி' என்று யோக நூலோர் கூறுவர். மேல் உலகிற்குப் போகும் வாயிலாகையால் இந்திர யோனி என்றார். (யோனி - வழி)

" கண்ணாக்கு மூக்குச் செவி ஞானக் கூட்டத்துள்
பண்ணாக்கி நின்ற பழம் பொருள் ஒன்றுண்டு
அண்ணாக்கி னுள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
பிண்ணாக்கி நம்மைப் பிழைப்பித்தவாறே "

(திருமந்திரம் 592)

என்ற பாடலில் இந்திர யோனியைத் தியானமாகக் கூறுகிறார்.

உள்ளே ஒளி காணலே தியானத்தின் முதிர்ந்த நிலை என்பதை

" உள்நாடி உள்ளே ஒளிபெற நோக்கினால் "

என்பதால் (596) கூறுகிறார்.

## அட்டாங்க யோகத்தில் சமாதி நிலை

இதுவே யோகத்தில் முடிவான நிலையாகும். இயமம் முதலிய யோக உறுப்புக்கள் ஏழையும் சரியாகப் பயின்றவர்களுக்கு மட்டுமே சமாதி நிலை கூடும். சமாதி அடைந்தவர்க்கு அட்டமா சித்தி என்ற செயல் திறம் கைகூடும்.

எல்லாப் பயனும் இந்த யோக உறுப்புகளில் பலநாள் (தங்கி) பயின்று உறைப்பு ஏறினால் சமாதியும் கைப்படும் என்று கூறும் பாடல் வருமாறு:

" சமாதி யமாதியில் தான் செல்லக் கூடும்
சமாதி யமாதியில் தான் எட்டும் சித்தி
சமாதி யமாதியில் தங்கினார்க்கு அன்றோ
சமாதி யமாதி தலைப்படும் தானே "

(திருமந்திரம் 611)

இயமம் ஆதி என்பதே 'யமாதி' என்று வந்துள்ளது. இயமம் முதலிய என்று இதற்குப் பொருள் வரும்.

விழிப்புணர்வுக்கு மேலான நிலை (சாக்ராதீதம்) என்பதில் சமாதி கூடும்.

தானும் கடவுளும் ஒன்றாகும் நிலை என்பதே இதுவாம்.

" கற்பனை அற்றுக் கனல்வழியே சென்று
சிற்பனை, எல்லாம் சிருட்டித்த பேரொளிப்
பொற்பினை நாடிப் புணர்மதியோடுற்றுத்
தற்பரமாகத் தகும் தண் சமாதியே "

(திருமந்திரம் 621)

என்ற பாடலால் சமாதியை விளக்குகிறார்.

வேறு எதையும் நினைவில் கொள்ளாது நடுநாடியில் ஏறும் குண்டலினி சோதியோடு உச்சியில் செல்வதே இந்த யோகம் என்று இப்பாடலில் கூறினார்.

தூக்கம் போன்று பிற உணர்வுகளைத் தவிர்த்தாலும் தான் யோகத்திலிருக்கும் உணர்வு பிரியாது இருப்பதால் இதைத் தூங்காத தூக்கம் என்றும் கூறுவர்.

" தூங்காமல் தூங்கிச் சுகம் பெறுதல் "

என்றும் இதைக் கூறுவது உண்டு.

" தாரியல் தற்பரம் சேர்தல் சமாதியே "

(திருமந்திரம் 632)

என்பதால் கடவுளைச் சார்தலாகிய முடிவான நிலையே சமாதி என்பதைக் காண்க.

ஞான உடம்புபெறல்

ஐம் பூதங்களாலும், வித்யாதத்துவத்தில் உள்ள காலம், நியதி, கலை, முதலியவைகளாலும் ஆனது, இந்த உடல். அவை நம்மை விட்டு அகன்றதாகக் கருதி - அறிவு மட்டும் தனியே இருப்பதை உணர்ந்து - இறைவனுடன் ஒன்றினால் மேலான ஞானஉடல் (பர+காயம்) உண்டாகும் என்ற பாடல் வருமாறு:

" காய ஆதி பூதம், கலை, காலம், மாயையில்
ஆயாது அகல, அறிவு ஒன்று; அநாதியே;
ஓயாப்பதி - அதன் உண்மையைக் கூடினால்
வீயாப் பரகாயம் மேவலும் ஆமே "

(திருமந்திரம் 636)

மனித உடம்பை மாயை என்றும் அழுக்கு என்றும் பொய் என்றும் துறவுக் கருத்துக்கள் கூறும். அதைக் கேட்டு உடம்பை முன்பு வெறுத்துப் பழகியதாகவும், ஆனால் உடம்பினுள் ஒளிவடிவமாகக் கடவுளைக் கண்டபிறகு உடம்பையே கடவுள் கோயிலாகக் கொண்டதை எண்ணி அதை யான் பாதுகாத்து வருகிறேன் என்றார்.

" உடம்பை முன்னம் அழுக்குஎன்று இருந்தேன்
உடம்பினுக்குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யான் இருந்து ஓம்புகின்றேனே "

(திருமந்திரம் 718)

என்று பாடல் காண்க.

தேவு உடம்பில் யோகம் முதலியன செய்து உயரமுடியாது மனித உடம்பால் மட்டுமே அவற்றைச் செய்ய முடியும். ஆகவே, உடம்பைக் காப்பாற்றி ஆன்மா (உயிர்)வையும் தக்கவைத்து மெய்ஞ்ஞானம் பெறவேண்டும். அப்படி உடம்பை வளர்க்கும் வழியும் (உபாயம்) இந்த யோக நெறியிலேயே உள்ளது என்றார்.

அதன்படி உடம்பை வளர்த்தேன் யாவும் சரி என்றார்.

" உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தேன்
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே "

(திருமந்திரம் 717)

என்ற பாடலில் தெளிவாகிறது.

**ஓசை ஒளியில் கடவுள்**

'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' - என்ற அப்பர் தேவாரத்தால் ஒளியும் சேர்த்துக் கூற இடமுள்ளது. பக்குவன் எழுப்பும் ஒலியாலும் அதனால் உண்டாகும் ஒளியாலும் இறைவனை ஒன்றலாம்.

" அவன் இவனாகும் பரிசு அறிவார் இல்லை
அவன் இவன் ஆகும் பரிசு அதுகேள் நீ
அவன் இவன் ஓசை ஒளியினில் ஒன்றிடும்
அவன் இவன் வட்டம தாகி நின்றானே "

என்ற பாடலால் அறியலாம். (திருமந்திரம் 760)

இதனைச் சைவ சித்தாந்தம் அத்துவா என்று கூறும்.

1. வன்னம் - எழுத்து
2. பதம் - சொல்
3. மந்திரம் - சொல்லைவிடப் பெரிய சக்தியான மந்திரம்
4. தத்துவம் - 96 தத்துவங்களை உணர்தல்
5. கலை - உடலில் உண்டாகும் உணர்வு வெளிச்சம்
6. புவனம் - உலகத் தொடர்பு உணர்வு

ஆகியவற்றால் உணர்வும் அது சக்தியாவதும் அது ஒளியாவதும் நிகழும்போது கடவுளிடம் தொடர்பு ஏற்படுகிறது என்பர்.

அதையே வட்டம் என்று இதில் கூறுகிறார். இந்த வட்டங்கள் ஆறும் ஆறு வட்டம். இறைவன் உணர்வு ஏழாவது வட்டம். இந்த ஏழும் ஆறு ஆதாரங்களும் சகஸ்ராரமும் ஆகிய ஏழும் இவற்றுடன் கலக்கும்.

" ஓசையும் ஈசனும் ஒக்கும் உணர்வின்கண்
ஓசை பிறந்தவர் ஈசனை உள்குவர்
ஓசை பிறந்தவர் நெஞ்சினுள் ஈசனும்
ஓசை உணர்ந்த உணர்வு இது ஆமே "

(திருமந்திரம் 764)

என்ற பாடலிலும் உணர்வுடன் எழுப்பப்படும். ஓசையால் இறைவனுடன் ஒன்றுபடலாம் என்று நிறுவியுள்ளார்.

## ஆகாயத் தொடர்பு

நுனி நாக்கை உட்புறமாக மடித்து மேல் அண்ணத்தின் நடுவே விசிறியபடி இருப்பதால் சீவன் சிவனையும் மும்மூர்த்திகளையும் முப்பத்து முக்கோடி தேவர்களையும் காணலாம் என்றார்.

இதனால் ஆகாயத் தொடர்பு வரும் என்பதாம். மரணமிலாப் பெருவாழ்வும் இதனால் வருமென்றார்.

" நாவின் நுனியை நடுவே விசிறிடில்
சீவனும் அங்கே சிவனும் உறைவிடம்
மூவரும் முப்பத்து மூவரும் தோன்றுவர்
சாவதும் இல்லை சதகோடி ஊனே "

(திருமந்திரம் 796)

இதில் கூறப்படும் பயிற்சியைப் பல காலமும் அடிக்கடி செய்து பழக வேண்டும்.

## இளமையைப் பெற மேலும் ஒரு யோகம்

மூக்கில் இழுக்கப்படும் காற்று மூச்சுக்குழலில் பாய்வதுதான் இயற்கை. அப்படிப் போகாமல் நடுமூக்கின் மேல்புறமாகத் தலைக்குப் பாய்வதாகப் பாவித்துப் பயில வேண்டும்.

இப்போது இரு மூக்கினாலும் காற்றை இழுத்து இப்படிச் செய்ய வேண்டும். இதனால் தலைக்கும் மேல் அண்ணத்துக்கும் இடையில் கதவு திறந்தது போல் வழிஉண்டாகும்.

இதனால் நரை திரை மாறிவிடும், இளமை வரும், மரணமும் தள்ளிப்போகும். இந்திரயோனியாகிய உள்நாக்குக் கதவும் திறக்குமென்றும் கொள்க.

" மேலை அணாவில் விரைந்து இரு கால் இடில்
காலனும் இல்லை, கதவும் திறந்திடும்;
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்;
பாலனும் ஆவான் பராநந்தி ஆணையே "

(திருமந்திரம் 798)

என்பது அப்பாடலாகும்.

## பரியங்க யோகம்

ஆண் பெண் கலவியில் நீண்ட நேரம் ஈடுபட்டு மகிழ்வதற்காக வழி கூறும் பகுதி இதுவாகும். 818 முதல் 20 பாடல்கள் கூறுகிறார்.

## அமுரி தாரணை

யோகத்தால் தலையில் அல்லது உடலில் ஊறும் அமுதமாகிய நீர் என்று இப்பகுதியின் 838, 843 ஆகிய பாடல்களைக் கொண்டு முனைவர் சுப. அண்ணாமலை கூறுகிறார்.

இவை இரண்டிற்கும் இடையில் உற்ற நான்கு பாடலும் மருத்துவர் யாரோ எழுதி இடையில் செருகியதாகவும் அவர் கூறுகிறார்.

இதில் உண்மை உள்ளதா என்பது நம்மால் தீர்க்கமாகக் கூறமுடியாது. இடையில் உள்ள நான்கு பாடலும் அவரவர் சிறுநீரை மருந்தாகக் குடித்து இளமை பெறுவது என்பதாகும்.

அறிவியல் மருத்துவப்படி சிறுநீரில் எந்தச் சத்தியும் இல்லை என்பர். ஆனால், நம் கருவிகளால் காண முடியாத பொருள்களும் நம் உடலில் உள்ளன.

சித்த மருத்துவத்தில் சிறுநீர் மருத்துவம் உண்டு. சுவாமி சிவானந்தா அவர்கள் சர்வரோக நிவாரணி என்று இதுபற்றி நூலே எழுதியுள்ளார். அவர் அறிவியல் மருத்துவம் அறிந்தவர்.

சித்தர்கள் பலர் இந்தப் பழக்கத்துடன் இருப்பதை நான் பார்த்திருக்கிறேன். (சேலம்) இராசிபுரத்தில் சிவானந்தா ஆசிரமத்தில் சிறுநீர் கொண்டு பல நோய்கள் தீர்க்கப்படுவது இன்றும் உண்டு.

சிறுநீர் உண்போரை நான் நிறையப்பார்த்துள்ளேன். மொரார்ஜி தேசாய் (இந்தியப் பிரதமர்) அவர் உடலில் இளமை நீடித்திருந்தது - தாம் சிறுநீர் சாப்பிடுவதால் உடல் நலத்தோடு இருப்பதாக வெளிப் படையாகவே கூறினார்.

உடல் உறுப்புக்கள் உருவான மூலப்பொருள் அணுவிலும் குறைவாகிக் கரைந்து அந்த நீரில் வருகிறதோ என்னவோ? தோல் நோய்களுக்குச் சிறுநீர் சிறந்த மருந்து என்றுதான் சித்த மருத்துவம் சொல்கிறது. அனுபவத்திலும் இது உண்மையே.

சிறுநீர் வரும்போது முதலும் கடைசியும் விட்டு இடைப்பட்டதை உள்ளங்கையில் மிளகு அளவு ஆழம் ஏற்றிக் குடிப்பதாம்.

தலையில் தேய்த்து முழுகிவர அங்கு மயிர் கருக்கும் என்கிறார். எட்டாண்டில் உடல் ஒளிபெறும் என்கிறார்.

இது கூடாது என்று சொல்பவரும் உள்ளனர் என்றும் திருமூலர் கூறியுள்ளார்.

" வீரமருந்து என்றும் விண்ணோர் மருந்துஎன்றும்
நாரிமருந்து என்றும் நந்தி அருள்செய்தான்
நாரி மருந்து என்று அறிவார் அகலிடம்
சேரா மருந்து இது சொல்ல ஒண்ணாதே "

(திருமந்திரம் 843)

என்று அமுரியைப் புகழ்ந்துள்ளார்.

பால்நோய் உடைய கணவனுக்குப் பிறந்த குழந்தைக்கு உடலில் சிறு படைகள் கருங்கிரந்தி, செங்கிரந்தி என்பன வரும். அதைக் கண்ட பாட்டிமார்கள் குழந்தைச் சிறுநீரைத் தடவி அதைப் போக்குவது நான் நேரில் கண்ட அனுபவமாகும்.

ஆகவே, இதை ஒரே அடியாகத் தவறு என்பதும் சரி என்பதும் முறையாகாது. அனுபவமுடைய ஆய்வுகள் தேவை.

### மந்திர வகை

மந்திரங்கள் ஏழாயிரம், இருபது, முப்பது, ஏழுகோடி எனப் பலவாகப் பிரியும். இவை யாவும் ஏழாகவும் இரண்டாகவும் முடியும் என்பர்.

ஒருசில ஆற்றல்களை வளர்ப்பன ஏழும் இரண்டுமாகும். இவை பல செயல்களுக்கும் மேலும் பல தெய்வங்களுக்கும் பயன்படும் போது ஆயிரம் கோடியாக வளரும் என்பதே இதன் உண்மையாம்.

நம
ஸ்வதா
ஸ்வாஹா
வஷட்
வௌஷட்
ஹூம்
ஹூம்பட்

இவை பல்லவங்கள் எனப்படும். பூசைச் சடங்கு நூல்களில் இவை விரிவாகக் கூறப்படும்.

இவை பொது மந்திரங்களாகும். எந்தத் தெய்வத்துக்கும் உரியன அல்லவாம்.

108 அல்லது 1008 நாமாவளிகளின் முடிவில் 'நம' என்று முடியும். இப்படிப் பல தெய்வங்களுக்கும் வரும்போது ஒரு மந்திரமே பல்லாயிரமாக விரிவதை அறியலாம்.

இரண்டு மந்திரம் என்பது ஸம், ஹம் என்பனவாம். இவையே ஓம் என்றும் (சிவப்பிரணவம்) ஹ்ரீம் என்றும் (சக்திப்பிரணவம்) வழங்கப்படும். வேறு சிலர் ஸ்ரீம், ஹ்ரீம் என்பனவே அந்த இரண்டும் என்பர். ஹம் ஸம் என்பன ஹம்ஸ மந்திரமாம்.

திருவம்பலச் சக்கரம் திரிமண்டலச் சக்கரம் ஆகியவை 900 முதல் 1004 வரையில் (பாடல்கள்) கூறியுள்ளார். அவை பற்றிய விளக்கம் யோகக் களஞ்சியம் என்னும் என்நூலில் வர்த்தமானன் வெளியீடு உள்ளன.

மேலும் முனைவர் சுப. அண்ணாமலை அவர்களின் திருமந்திரப்பதிப்பு முதல்பாகத்தில் உள்ளன.

மேலும் 1404 ஆம்பாடல் முடிய உள்ளவை திரிபுரைச் சக்கரம், ஆதிவயிரவி மந்திரம், நவகுண்டம், பூரணசத்தி, ஏரொளிச் சக்கரம், வயிரவச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதி சக்கரம், நவாக்கரி சக்கரம் ஆகியவையாம்.

இவை சக்தி வழிபாட்டை விவரிக்கும் பகுதியாகும். இவற்றில் சில சக்கரங்களையும் வர்த்தமானன் பதிப்பாகிய யோகக் களஞ்சியத்தில் முன்பே எழுதியுள்ளேன்; அங்குக் காணலாம்.

### சித்தாந்தம்

சுத்த சைவம் எனும் தலைப்பில் நான்குவகைச் சைவம் கூறுகிறார்.

1. சுத்த சைவம்
2. அசுத்த சைவம்
3. மார்க்க சைவம்
4. கடும் சுத்தசைவம்

என நான்கு நிலைகளும் கூறியதாகச் சில ஏடுகள் கூறுகின்றன. 1405 ஆம் பாடலில் 4 சைவர் கூறியதால் மேற்கூறிய வகையாகச் சிலர் கருதுகின்றனர்.

வேதாந்தம், சித்தாந்தம், நாதாந்தம், போதாந்தம் என்ற நான்கு என்றும் (1408 ஆம் பாடல்) சிலர் கூறுகின்றனர்.

சைவ சித்தாந்தம் என்ற சொல் முதன்முறையாகத் திருமந்திரத்தில் மட்டுமே வந்தது என்றும் அறிஞர் கூறுவர்.

பல்லவர் (பிற்காலம்) காலத்துக் கல்வெட்டில் சித்தாந்தம் என்ற சொல் உள்ளது. சீனர் குறிப்புப்படி கி.மு. விலேயே உண்டு.

1407-ஆம் பாடல்படி சிவயோகம் கற்றுச் சிவத்தை அனுபவிப்பவரே சைவ சித்தாந்திகள் என்று கூறுகிறார்.

" கற்பன கற்றுக் கலை மன்னும் மெய்யோகம்
முற்பத ஞானம் முறை முறை நண்ணியே
சொற்பதம் மேவித் துரிசற்று மேலான
தற்பரம் கண்டுளோர் சைவ சித்தாந்தரே "

என்பதே அப்பாடலாகும். (திருமந்திரம் 1407)

" வேதாந்தம் கண்டோர் பிரமவித்தியாதரர்
நாதாந்தம் கண்டோர் நடுக்கற்ற யோகிகள்
வேதாந்தம் இல்லாத சித்தாந்தம் கண்டுளோர்
சாதாரணம் அன்ன சைவர் உபாய மே "

(திருமந்திரம் 1421)

என்ற பாடலில் வேதாந்தம், நாதாந்தம், சிந்தாந்தம் என்ற மூன்றை விளக்கினார். இவை இல்லாதார் பூதாந்தம் கொண்டோர் என அறியலாம்.

பிரம்மமே தாம் என்னும் அறிவு உடையோர் பிரம்ம வித்தியாதரர் என்பதாம். நாதாந்தர் என்பது தலை உச்சியில் 6 விரல் உயரமளவும் யோக சிவாக்னியை உடம்பில் பாவிப்பவர் ஆவார்.

வேதாந்தமாகிய கருத்தை நீக்கியவர் சித்தாந்திகள் என்பதாம். இவர் சிவமும் ஆன்மாவும் மாணிக்கத்தைச் சேர்ந்த ஸ்படிகம் போல் உணர்பவர் ஆவர். 1423 ஆம் பாடலால் உணரலாம்.

## ஏகத்துவம்

கடவுள் நம் உள்ளத்தில் இருக்கிறார். இனி வரவேண்டிய நிலை இல்லை. உள்ளத்தில் உள்ள கடவுளைத் தீவிரமாக நினைக்கும் போதும் நினைப்பவரும் கடவுளும் ஒன்றுபடுகிறார்கள். அப்போது அவர்கள் இருவர் என்று அந்நியமாக இல்லை என்று கூறுகிறார்.

" ஏகன் அநேகன் இறைவனடி வாழ்க "

(சிவபுராணம் 5 திருவாசகம்)

என்று கூறுவதும் இதுவே ஆகும்.

மனத்தால் நினைக்கும் எந்தப் பொருளும் மனத்தோடு ஒருமித்து நிற்பது நம் மனத்தின் இயற்கையாகும்.

அதனால்தான் ஒருவரை வாழ்த்துவதும் வீழ்த்துவதும் (சாபம்) நினைத்தவுடன் நடக்கிறது என அறியலாம்.

மனத்தின் இந்த இயல்பினால்தான் கடவுளுடன் மனம் ஒன்றாகிறது. நினைப்பவனும் ஒன்றாகிறான் என்பதைக் கீழ்வரும் பாடல் காட்டுகிறது:

" நான் என்றும் தான் என்றும் நாடிநான் சாரவே
தான் என்றும் நான் என்றும் இரண்டிலாத் தத்பதம்
தான் என்று நான் என்ற தத்துவம் நல்கலால்
தான் என்றும் நான் என்றும் சாற்ற கிலேனே "

(திருமந்திரம் 1427)

இதன் பயனை அடுத்த பாடலில் கூறுகிறார்.

இப்படி ஏகனாகிய பாவனையில் மிகுந்த பயிற்சி உண்டாகும் போது ஐந்து புலன்கள் அடங்கும், ஞானம் உண்டாகும் சாயுச்சியமாகிய பெரிய நிலை கிடைக்கும் என்கிறார்.

" சாற்றரி தாகிய தத்துவம் சித்தித்தால்
ஆற்றரி தாகிய ஐந்தும் அடங்கிடும்
மேற்றிகழ் ஞானம் விளக்கொளி யாய்நிற்கும்
பாற்பர சாயுச்சியம் ஆகும் பதியே "

(திருமந்திரம் 1428)

பிறர் வணங்கும் இடங்களிலும் சடங்கு முறைக் கோயில் களிலும் உள்ள கடவுளைச் சென்று பலருடன் ஆடியும் பாடியும் வணங்கிவருவதால் கடவுள் நெஞ்சில் வெளிப்படுவது உறுதியாகும்.

உணர்வுச் செழுமை உண்டாகவே வெளியில் வணங்குமாறு கூறுகிறார் என அறிக.

" நாடும் நகரமும் நற்றிருக் கோயிலும்
தேடித் திரிந்து சிவபெருமான் என்று
பாடுமின் பாடிப் பணிமின் பணிந்த பின்
கூடிய நெஞ்சத்துக் கோயிலாக் கொள்வனே "

(திருமந்திரம் 1431)

என்பதால் யாத்திரை, தீர்த்தம், வழிபாடு முதலியன யாவரும் செய்யவே நெஞ்சக் கோயிலில் இறைவன் வெளிப்படுவான் என்பதாம்.

### நம்பிக்கை

நம்பிக்கை என்பது அனுபவத்தால் வருவதாகும். அந்த அனுபவம் இப்பிறவியிலும் சென்ற பிறவியிலும் உள்ள

அனுபவங்களே நம்பிக்கையை வளர்க்கும். நம்பிக்கை வளரச் 'சிரத்தை'யுடன் எதையும் செய்வதே மூலமாகும். சிரத்தை எனும் இந்த மன எழுச்சியை விருப்பத்தோடு ஒன்றைச் செய்தல் என்று திருமூலர் கூறுகிறார்.

இப்படிச் செய்தவரே தவம் செய்பவர் ஆவார் - விருப்புடன் சொல்லும் உரை மெய்யுரையாகும் - இப்படிச் செய்வதில் தெய்விகம் கலக்கும் என்கிறார்.

" விரும்பி நின்றே செயின் மெய்த்தவராகும்
விரும்பி நின்றே செயின் மெய்யுரையாகும்
விரும்பி நின்றே செயின் மெய்த்தவம் ஆகும்
விரும்பி நின்றே செயின் விண்ணவன் ஆகுமே "

என்பது அப்பாடல். (திருமந்திரம் 1447)

விரும்பிச் செய்யும் தாயின் சமையல் நன்றாக உள்ளது என இதனால் அறிக.

இந்த விருப்பத்தோடு கடவுள் நம் உள்ளத்திலும் வெளியுலகிலும் பரந்து உள்ளான் என்று நம்பினால் இரண்டு இடங்களிலும் அவர் இருப்பதை அறியலாம்.

அதில் நம்பிக்கை இல்லாதவர்களுக்கு இரண்டிலும் அவர் இல்லாதவரே ஆவார்.

" உள்ளத்தும் உள்ளன் புறத்துளன் என்பவர்க்கு
உள்ளத்தும் உள்ளன் புறத்துளன் எம்இறை
உள்ளத்தும் இல்லை புறத்து இல்லை என்பவர்க்கு
உள்ளத்தும் இல்லை புறத்து இல்லை தானே "

(திருமந்திரம் 1517)

### ஏகனாக்கும் சடங்கு

தான் என்று உணரும் ஆத்மாவும் அவன் என்ற கடவுளும் வேறு வேறாகத் தோன்றினும் இரண்டும் ஒன்றாக்குவதற்கான சடங்காகப் பூவை அர்ச்சனையாக இறைவன் திருவடியில் சொரிவது தகுதியாகும்.

வேறு ஒரு செடியில் உள்ள ஒரு பூவை அர்ச்சிக்கும் பக்தனின் ஆத்மாவாக எப்படி ஏற்க முடியும் என்பது இங்கு ஒரு வினாவும் தடையுமாகும்.

எல்லா ஆத்மாக்களும் ஒரே ஆத்மாவாக இருந்தே பிறகு அணு அணுவாகப் பிரிந்தன என்பதே சைவ சித்தாந்தக் கருத்தாகும்.

பக்தனும் ஓர் ஆத்மா, பூவும் ஓர் ஆத்மா. இரண்டும் ஓர் ஆத்மாவின் பகுதிகளே. அவை இரண்டில் ஒன்று மற்றதை நேசித்து நினைக்குமானால் இரண்டும் ஒன்றாகும்.

எனவே, பூச்சொரியும் சடங்கு இறைவனுடன் ஏகனாகும் உணர்வைத் தரும் என்பது உறுதியாகிறது.

" தான் என்று அவன் என்று இரண்டாகும் தத்துவம்
தான் என்ற அவன் என்ற இரண்டும் தனில் கண்டு
தான் என்ற பூவை அவனடிச் சாத்தினால்
நான் என்று அவன் என்கை நல்லதொன்று அன்றே "

(திருமந்திரம் 1591)

என்ற பாடலில் இதை விளக்குகிறாா.

இதையே 'இலை தொட்டு' எனும் 1624 ஆம் பாடலும் கூறுகிறது.

இறைவனுக்கென்று பூவைப் பறிக்கும்போது புலன்கள் அடங்கிப் போகும் உணர்வைப் பெறலாம் என்றும் கூறுகிறார்.

" இலை தொட்டுப் பூப்பறித்து எந்தைக்கு என்று எண்ணி
மலர் தொட்டுக் கண்டேன் வரும் புலன் காணேன்
தலைகொட்ட நூல்கண்டு தாழ்ந்தது என் உள்ளம்
தலை தொட்டுக் கண்டேன் தவம் கண்டவாறே "

(திருமந்திரம் 1624)

இப்பாடலில் இலையோ, பூவோ எதையாவது அர்ப்பணிக்கும் போது புலன் அடங்கும் என்பது; திருவமுது படைக்கும் போது பசித்து உண்ணத் தோணாது; பூசை முடிந்தபிறகே பசிதெரியும்.

சிவனடியார்க்கு என்று அர்ப்பணித்த சீராளனை மகன் என்று முத்தமிடவோ, கொஞ்சவோ புலன் உணர்வு மிகாமைக்கு இது காரணம் என அறிக. இது சிறுத்தொண்டர் அனுபவம்.

அர்ப்பணிப்பு எதுவாயினும் வைராக்கியமும் அதன் வழிப் புலனடக்கமும் கிட்டும் என அறிக.

முடிவளர்த்தல், உணவுண்ணாமை முதலியனவும் வைராக்கியம் உண்டாக்கவே பயன்படும் என்பதாம்.

இவர்களுக்குத் துன்பம் வராது இறையருள் காக்கும் என்றார்.

" படர்சடை மாதவம் பற்றிய பத்தர்க்கு
இடர் அடையாவண்ணம் ஈசன் அருளும் "

(திருமந்திரம் 1625)

இதனால் விரதங்களை இறைவன் காப்பது என்ற நம்பிக்கை அறிக. முன்பு புலி, யானை மிகுந்த சபரி மலைக்குப் போவோர் 40 நாள் விரதம் காத்தால் கடவுள் ஆபத்து வராது தடுப்பார் என்று நம்பிச் சென்றது உணர்க.

இதை உணராது உண்ணாவிரதம்கூட இருக்க இயலாது சோற்றுக்குத் திரிபவர் இந்த நுணுக்கம் (நூல்) அறியாதவர் என்றார்.

" நோற்றுத் தவம் செய்யார் நூலறியாதவர்
சோற்றுக்கு நின்று சுழல் கின்றவாறே "

(திருமந்திரம் 1626)

இறைவன் திருநாமங்களை (ஒன்று மட்டும்) உணர்வுடன் ஓதிப் பயில்பவர்க்கு அவன் தன் அருள் தருவான் என்றார்.

" உரைத்து அவன் நாமம் உணரவல்லார்க்குப்
புரைத்து எங்கும் போகான் புரிசடையோனே "

என்பதால் அதை அறிக. (திருமந்திரம் 1757)

### உடலே கோயிலாம்

மனித உடலையே இறைவன் கோயிலாக வழிபடத் திருமூலர் கூறுகிறார்.

" மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்
மானுடர் ஆக்கை வடிவு சிதம்பரம்
மானுடர் ஆக்கை வடிவு சதாசிவம்
மானுடர் ஆக்கை வடிவு திருக்கூத்தே "

(திருமந்திரம் 1709)

என்ற பாடலிலும் இக்கருத்தை விரிவாகக் கூறியுள்ளார்.

சிவலிங்கம், சிதம்பரம், சதாசிவம், திருக்கூத்து ஆக யாவும் நம் உடம்பின் வடிவமாகவே உள்ளன என்பது இப்பாடல் கருத்தாகும்.

" உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்
வள்ளல் பிரானுக்கு வாய்கோபுர வாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலனைந்தும் காளமணி விளக்கே "

(திருமந்திரம் 1804)

என்ற பாடலிலும் மேற்கூறிய கருத்து வலுவாக உள்ளது.

பெருங்கோயில் = கருவறை - காளமணி விளக்கு[1] = நஞ்சுடைய பாம்பே மணிவிளக்கானது. காரணம் அது குண்டலினி சக்தியாக ஒளியைக் குறிப்பதால் ஆகும். சீவன் = சீவாத்துமா

நம் முன்பு நடமாடும் அடியார்கள் உடலில் 'அவன்' இருப்பதால் அவர்களுக்கு ஒன்றை ஈகையாகத் தந்தால் அது அவனுக்குப் போய்ச் சேரும் என்பதாம்.

" படமாடக் கோயில் பரமற்கு ஒன்று ஈவர்
நடமாடு அக்கோயில் நம்பற்கு ஒன்று ஈவீர்
நடமாடு அக்கோயில் நம்பார்க்கு ஒன்று ஈயில்
படமாடக் கோயில் பரமற்கு அது ஆமே "

என்ற பாடலால் கூறுவதை அறிக. (திருமந்திரம் *1836*)

" தண்டறு சிந்தை தபோதனர் தாம் மகிழ்ந்து
உண்டது மூன்று புவனமும் உண்டது
கொண்டது மூன்று புவனமும் கொண்டது என்று
எண்டிசை நந்தி எடுத்துரைத்தானே "

(திருமந்திரம் *1837*)

என்ற பாடலில் அக்கருத்தை மேலும் விவரிக்கிறார்.

தவத்தில் சிறந்தவர் ஒன்றை உண்டால் மூன்றடுக்காகிய இப்பிரபஞ்சம் முழுதும் உள்ள கடவுள் உண்டதாம்.

அத் தவத்தினோர் ஏற்றுக்கொண்ட ஒரு பொருளும் மூவுலகிற்கும் உரிய கடவுள் ஏற்றதேயாம்.

அடுத்த பாடலும் *1838* அக்கருத்தே கூறுகிறது. இதனாலேயே தூய சிந்தை கொண்ட அந்தணர்க்கு ஒன்று கொடுக்கப் பிதுர்களுக்கு அது சேரும் என்று திதி தருவோர் நம்பினர் என்க.

பெரியோர்களுக்குத் தந்தது *3* மூர்த்திகளுக்கும் *21* குருநாதர்க்கும் தீர்த்தமாக ஒரு மாத்திரை (*1* நொடி) அளவில் சென்று சேரும் என்பதே *1838* ஆம் பாடலும்

" மாத்திரை ஒன்றினில் மன்னி ஆழ்ந்து உறை
ஆத்தனுக்கு ஈந்த அரும் பொருளானவை
மூர்த்திகள் மூவர்க்கும் மூவேழ் குரவர்க்கும்
தீர்த்தம் அது ஆம் அது தேர்ந்து கொள்ளீரே "

(திருமந்திரம் *1838*)

இதில் ஆத்தர் என்பது ஆப்தர் எனும் பெரியோர் என்க. பல பிறவிகளின் குருமார்களைக் குறிக்க மூவேழ்குரவர் என்றார்.

1. காள விளக்கு - திருவிழாப் போன்ற சிறப்பு நிகழ்ச்சிகளின் போது ஏற்றி வைக்கும் பெருவிளக்கு.

இதே நோக்கில் சிவனடியார் உண்டது மும்மூர்த்திகட்கு உரியதாவது போலச் சித்தம் தெளிந்தவர் உண்டதைப் பிற மனிதர் உண்டால் அதுவே அவர்க்கு முக்தி என்றார்.

" வித்தகமாகிய வேடத்தர் உண்டஊண்
அத்தன் அயன் மால் அருந்திய வண்ணமாம்
சித்தம் தெளிந்தவர் சேடம் பருகிடின்
முத்தியாம் என்று நம் மூலன் மொழிந்ததே "

(திருமந்திரம் 1845)

இப்பாடலில் ஆணையிட்டு உறுதிகூறும் உணர்வில் மூலன் கூறியது என்றும் எழுதியது காண்க.

### வியாபகப் பாவனை

பிரபஞ்சம் முழுதும் இறைவன் இருப்பதால் அந்த வியாபகத் தன்மையை மனத்தில் பரவவிட்டுப் பயின்றால் நாம் இறைவனை அடைந்துய்யலாம்.

" கொண்டகுழியும் குலவரை உச்சியும்
அண்டரும் கண்டத்து அமரரும் ஆதியும்
எண்டிசையோடும் வந்து என் கைத்தலத்தினுள்
உண்டு என நாம் இனி உய்ந்தொழிந்தோமே "

(திருமந்திரம் 1848)

இப்பாடலில் குழி என்பது கடல்கள், வரை உச்சி என்பது மலைகள், அண்டர் என்பது பல அண்டங்களின் உயிர்களும், அமரர் என்பது பல வகைத் தேவர்கள், ஆதி என்பது பிரமம், எண்திசை என்பது எல்லாத்திசைகளுமாகிய பிரபஞ்சம் - இவை வந்து என் கையில் இருப்பது போன்று எளிதாய்ப் பாவனை மனத்தளவில் செய்து பழகினால் நாம் உய்யலாம் என்பதாம்.

பிரபஞ்சத்தில் உள்ள எல்லாப் பொருள்களையும் குறிப்பிட்டு எண்ணியதால் இந்தப் பாவனை வெற்றியாகும் என்க.

*1849*-ஆம் பாடலிலும் பிரபஞ்சத்தின் உள்ளும் புறமுமான பரம் பொருள் 'கண்ட சிவனும் என் கண் அன்றி இல்லையே ' என்றார்.

இதே நிலையில்தான் அப்பர் சுவாமிகள்,

" கனலைக் காற்றைக் கனைகடலைக் குலவரையைக்
கலந்துநின்ற பெரியானை "

(தேவாரம் 6 ஆம் திருமுறை கோயில் 1)

என்கிறார்.

பஞ்ச பூதங்களால் இப்பிரபஞ்சம் ஆனதால் அதைக் கலந்து நின்ற பெரியவன் என்று இந்தப் பாவனையைச் செய்கிறார் என்க.

" வாழ்வற வாழ்வித்த மருந்தே
செம்பொருள் துணிவே " (534)

" கடவுளே கருணை மா கடலே
இடைவிடாது உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் " (535)

" இம்மையே உன்னைச் சிக்கெனப் பிடித்தேன் " (536)

" தெருளிடத்து அடியார் சிந்தையுள்
புகுந்த செல்வமே " (537)

" சிவபெருமானே யான் உனைத் தொடர்ந்து
சிக்கெனப் பிடித்தேன் எங்கு எழுந்து
அருளுவது இனியே " (543)

எனப் பிடித்த பத்து எனும் திருவாசகப் பகுதியில் சிக்கெனப் பிடித்தேன் என்று பலவிதமாகக் கூறியது பிரபஞ்ச பாவனையைப் பயில்வதே ஆகும்.

## கடவுள் ஒருவரே

இந்திய தத்துவ ஞானிகள் யாவரும் பிரபஞ்சம் முழுதும் ஒருவனால் படைத்துக் காத்து அழித்து வரும் ஒரு செயல் என்பதில் எங்கும் மாறாது உள்ளனர். அதையே திருமூலர் பல இடங்களில் வலியுறுத்தியுள்ளார்.

" ஒன்றே குலமும் ஒருவனே தேவனும் "

என்பதும் இதுவே, (திருமந்திரம் 2080)

" தானே உலகிற்குத் தத்துவனாய் நிற்கும்
தானே உலகிற்குத் தையலுமாய் நிற்கும்
தானே உலகிற்குச் சம்பவுமாய் நிற்கும்
தானே உலகிற்குத் தண் சுடராகுமே "

(திருமந்திரம் 1955)

இப்பாடலால் தத்துவங்களும், பராசக்தியும், (தையல்) சிவமும் (சம்பு) சூரிய சந்திரரும் (தண்சுடர்) ஆகிய எல்லாமாகத் தானே இருப்பான் என்பதால் ஒன்றே கடவுள் என்பதும் அதன் வியாபகமும் விளக்கப்பட்டன.

" தானே விரிசுடர் மூன்றும் ஒன்றாநிற்கும்
தானே அயன்மால் எனநின்று தாபிக்கும்
தானே உடல் உயிர்வேறு ஒன்ற நின்றுளன்
தானே வெளிஒளி தான் இருட்டு ஆகுமே "

(திருமந்திரம் 1980)

இப்பாடல் கடவுள் ஒன்றே பலவாய் இருக்கும் விரிவைக் காட்டுகிறது.

விரிசுடர் = சூரியன், சந்திரன், நட்சத்திரம்
அயன் மால் = பிரமன், திருமால்
வேறு ஒன்ற = வேறாகவும் ஒன்றாகவும்

தானே வெளியாய் விரிந்து அதில் வரும் ஒளியும் இருளும் தானாகவே இருக்கும் என்றும் அடைவாகக் கூறினார்.

கடவுளும் ஆன்மாவும் ஒருமித்த நிலையும் இதை ஒட்டிக் கூறுகிறார்.

" அணுவுள் அவனும் அவனுள் அணுவும்
கணுவறநின்ற கலப்பு - அது உணரார்
இணையிலி ஈசன் - அவன் எங்கும் ஆகித்
தணிவு அறநின்ற சராசரத்தானே "

(திருமந்திரம் 1987)

இப்பாடலில் அணுவாக உள்ள ஆன்மா சிவத்துக்குள்ளும் சிவம் ஆன்மாவிற்குள்ளும் அடங்கும் என்றார்.

இப்படிக் கலந்ததை யாவரும் உணரவில்லை. இப்படித்தான் கடவுள் (சரம்+அசரம் = சராசரம்) எங்குமாய் உள்ளார். அதாவது எல்லாமாய் எங்கும் உள்ளார் என்க.

சரம் = அசைவன; அசரம் = அசையாதன என்க.

## ஆன்ம வடிவம்

அணு என்ற ஆன்மாவை ஓரளவு வடிவ வகையில் கூறுகிறார். சீவன் = உயிர், இது உடலுடன் கூடிய ஆன்மா. ஆவி = உடல் தவிர்ந்த ஆன்மா.

" மேவிய சீவன் வடிவு அதுசொல்லிடின்
கோவின் மயிர் ஒன்று நூறு உடன்கூறு இட்டு
மேவிய கூறு அது ஆயிரம் ஆயினால்
ஆவியின் கூறு நூறாயிரத்து ஒன்றே "

(திருமந்திரம் 1988)

பசுவின் மயிரை நூறுகூறுகளாகச் செய்து, அந்த ஒரு கூற்றை ஆயிரமாகப் பகுத்தால் எதுவோ அதுவே சீவனின் வடிவம் என்றார். இதையே மயிரின் நூறாயிரத்தில் ஒன்று எனக் கூறினார்.

## ஆன்ம போதம்

தன் உடலையே ஆன்மா எனத் தவறாக உணர்வதுண்டு. மாயையால் ஆகிய தற்கால வடிவமே (உபாதி) உடல் ஆகும். மாயையால் இப்படி உணர்வதை குரு அருளால் தெளிவு பெற்று மாயா உபாதியைத் தானாக நினைப்பதை விட்டுப் பிரியும் ஆன்மா.

தானே உடம்பு அல்ல என்ற உணர்வு மிகுந்து அறிவும் தெளியும். இது துரிய நிலை எனப்படும்.

" மாயா உபாதி வசத்து ஆகும்; சேதனத்து
ஆயகுரு அருளாலே அதில் தூண்ட
ஓயும் உபாதியோடு ஒன்றாது உயிர்
ஆய துரியம் புகுந்து அறிவாகுமே "

(திருமந்திரம் 1990)

இப்பாடலில் 'உபாதிவசம் ஆகும்' என்பது எல்லாப் புலன் உணர்வும் சுகதுக்கமும் உடம்புவழியாகக் கிடைப்பதால் அதன்வசம் ஆன்மா வேறு வழியின்றிச் சேரும்.

இது உடன் பயின்ற பன்றியுடன் பசுங்கன்று நட்புக் கொண்டது போலவாம்.

புலன்கள் உணர்வுக்கு ஓர் எல்லை உள்ளது மனத்தில் விருப்ப எல்லை ஒன்று உள்ளது சிந்தித்து அறியும் எல்லை என்று உள்ளது. இந்த எல்லைகள் இயல்பாக நம் பிறவியோடும் நம்மிடம் வந்தவை.

சில காலமாவது அந்த எல்லைகளிலே ஆன்மா இயங்குவதைத் தடுக்க முடியாது. இவைகளின் எல்லைகளை அனுபவிக்கும் போதே மேய்ப்பவன் பசுவை விலக்கி ஓட்டுவது போலக் கடவுளும் எல்லையைக் கடக்குமாறு அருளுவார். அப்போதுமட்டுமே கொல்லைக்குப் போய்த் திரியும் பசுப்போன்ற மாயாவசம் உயிர்களுக்கு நீங்கும். பிறகு போகமாட்டா.

" கொல்லையில் மேயும் பசுக்களைச் செய்வது என்?
எல்லை கடப்பித்து இறைவன் அடி கூட்டி
வல்ல, செய்து ஆற்றமதித்தபின் அல்லது
கொல்லைசெய் நெஞ்சம் குறிப்பு அறியாதே "

(திருமந்திரம் 1992)

இப்பாடலில் பசுவும் ஆன்மாவும் உருவகம் செய்து கூறினார்.

இந்த நிலையில் சிவனடியை உணரும் பக்குவம் வந்த ஆன்மா வேறு, கடவுள் வேறு அல்ல. மாணிக்கத்தை நெருங்கிய ஸ்படிகம் போலச் சிவப்பாகிவிடுவர். அதாவது நிறமற்ற பளிங்கிற்கு மாணிக்கச் சிவப்பு வந்து ஏறும் என்றார்.

" சீவன் எனச் சிவனார் என்ன வேறு இல்லை
சீவனார் சிவனாரை அறிகிலர்
சீவனார் சிவனாரை அறிந்தபின்
சீவனார் சிவனாயிட்டு இருப்பரே "

(திருமந்திரம் 1993)

என்ற பாடலில் ஆன்மா சிவமாகும் நிலை கூறியதாகக் காண்க.

சிவனை அறிந்தவர் சிவன் ஆவதுபோலத் தத்துவம் முப்பத்தாறையும் அருளால் அறிந்தால் அவைகளுக்கு அப்பால் நம் மனமும் அறிவும் சென்று நம் ஆன்மா அவற்றுக்கு அப்பால் உளது என அறிய இயலும்.

" ஆறாறின் தன்மை அறியாது இருந்தேனுக்கு
ஆறாறின் தன்மை அறிவித்தான் பேர்நந்தி
ஆறாறின் தன்மை அருளால் அறிந்தபின்
ஆறாறுக்கு அப்புறம் ஆகி நின்றானே "

(திருமந்திரம் 1996)

இப்பாடலில் ஆறாறு என்பது 36 தத்துவம் ஆகும். நந்தி என்பது குருவைக் குறித்தது.

### புலனடக்கம்

புலனடக்கம் என்பது இயல்பாக இருக்க வேண்டும். பகுத்தறிவோடு இருக்க வேண்டும். வலிய அவற்றை அடக்கக் கூடாது. அடக்கினால் அவை விசை பெற்று மேலும் தவறு செய்ய வழிசெய்யும்.

" அஞ்சும் அடக்கு அடக்கு என்பர் அறிவிலார்
அஞ்சும் அடக்கில் அமரரும் அங்கில்லை
அஞ்சும் அடக்கில் அசேதனமாம் என்றிட்டு
அஞ்சும் அடக்கா அறிவு அறிந்தேனே "

(திருமந்திரம் 2009)

(அ + சேதனம் = அறியாமை) இப்பாடலில் ஐந்து புலனையும் வலிய அடக்கக் கூடாது என்று கூறியது அறிக.

இயல்பாக ஐம்புலனை அடக்கினால் அதன்பயன் உலகையே வெல்வதாகும், அரிய தவமும் ஆகும், இறைவன் திருவடி அடைதலும் ஆகும். அருள் உடையவரே ஐம்புலன் ஒடுங்கியவர் ஆவர்.

" ஐந்தில் ஒடுங்கில் அகல்இடம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அருந்தவம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அவன்பதம் ஆவது
ஐந்தில் ஒடுங்கில் அருள் உடையாரே "

(திருமந்திரம் 2011)

என்ற பாடலில் ஐம்புல ஒடுக்கத்தைக் கூறுகிறார்.

ஐம்புலன்களை ஆளுவது மனம்; மனத்தை ஆளுவது ஆன்மா; ஆன்மாவை ஆளுவது சிவம்.

ஆகவே, ஐம்புலனை அடக்கும் மனத்தை அதன் வழிச் செல்லவிடாது வேறு எல்லைகளில் செல்லுமாறு விடவேண்டும். அதனால் மனம் களைக்கும், பிறகு அடங்கும்.

" செல்லும் அளவும் செலுத்துமின் சிந்தையை
வல்ல பரிசால் உரைமின்கள் வாய்மையை
இல்லை எனினும் பெரிதுளன் எம்இறை
நல்ல அரன்நெறி நாடுமின் நீரே "

(திருமந்திரம் 2079)

பிரபஞ்ச எல்லையை, அத்துவா விரிவை, நாட்டு எல்லையை, தலங்களை, யாத்திரைகளை, தீர்த்தத்துறைகளை இப்படிப் பலவாகச் சிந்தையைச் செல்ல விடுங்கள் என்பதாம்.

எதையும் மேற்கொள்ள வேண்டும் என்ற விருப்பம் திண்ணியதாய் இருக்குமானால் அதுவே பயன் தரும் தவமும் அருள் தரும் திருவடியும் உரிய மெய்ந்நெறியும் ஆகும் என்றார்.

" மேற்கொள்ளல் ஆவதோர் மெய்த்தவம் ஒன்றுண்டு
மேற்கொள்ளல் ஆவதோர் மெய்த்தாளும் ஒன்றுண்டு
மேற்கொள்ளல் ஆவதோர் மெய்ந்நெறி ஒன்றுண்டு
மேற்கொள்ளலாம் வண்ணம் வேண்டி நின்றோர்க்கே "

(திருமந்திரம் 2088)

" எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் எண்ணியர்
திண்ணியர் ஆகப் பெறின் "

என்ற திருக்குறளும் இதுவே.

## உடலும் ஆன்மாவும்

உடலுக்குள் மனம் எது என்றே இன்னும் அறிவியல் இனம் கண்டு சொல்ல முடியவில்லை.

அதற்கும் உள்ளே இருக்கும் ஆன்மாவை அறிவது அறிவியலில் முடியாது.

இது உணர்வால் - நம்பிக்கையால் - உற்று உற்றுத் தேடும் யோக முயற்சியால் - பக்தி அனுபவத்தால்மட்டுமே ஆன்மா வேறு மனம் வேறு உடல் வேறு என அறிய முடியும்.

எண்ணம் அல்லது உணர்வு என்ற ஒரு சங்கிலியில் உடலும், புலன்களும், மனமும், அறிவும், ஆங்காரமும், ஆன்மாவும் தொடுத்துக் கட்டப்பட்டுள்ளதால் இவை தனித்தனி என நம்மால் உணர முடியவில்லை.

ஆன்மாவை நம் உடலும் பிற கருவிகளும் மறைத்துள்ளன. அது எப்படி என இரு பாட்டல்களில் கூறுகிறார். தங்கம் என்ற கட்டிப் பொன்னும் தங்கம் என்ற தனி உலோகமும் அதனால் செய்யப் பெற்ற நகையின் வடிவால் மறைந்தன.

நகையழகில் ஈடுபடாதபோது பொன் தன்மை தெரியவரும் - இப்படி ஆன்மாவை உடற்கருவிகள் மறைத்தன என உணரும்போது ஆன்மா வெளிப்படும் அவை ஆன்மாவில் மறையும்.

" பொன்னை மறைத்தது பொன் அணி பூடணம்
பொன்னின் மறைந்தது பொன் அணி பூடணம்
தன்னை மறைத்தது தன் கரணங்களாம்
தன்னின் மறைந்தது தன் கரணங்களே "

(திருமந்திரம் 2263)

மரத்தால் செய்த யானை அது மரம் என்பதையே மறைத்து விட்டது. அது மரம்தான் என்று எண்ணும்போது மதயானை என்பது மறைந்துவிட்டது - அப்படி உலகமும் பஞ்சபூதங்களும் பரம் பொருளை - மறைத்தன. ஆனால் பரம் பொருளை உணர்வால் எண்ணும்போது பிரபஞ்சம் பஞ்சபூதம் யாவும் மறைகின்றன என்பதாம்.

" மரத்தை மறைத்தது மாமத யானை
மரத்தின் மறைந்தது மாமதயானை
பரத்தை மறைத்தது பார்முதல் பூதம்
பரத்தில் மறைந்தது பார்முதல் பூதம் "

(திருமந்திரம் 2264)

என்ற பாடலில் அதை விளக்கினார்.

அருளுடன் உணர்வு மேல் எழும்போது மறைத்தது மறைந்து போவதை ஆன்மாவிலும் பரம்பொருளிலும் விளக்கிக் காட்டினார்.

ஆன்மாவை உணர்ந்த ஞானிகள் யோகம் முதலிய செய்ய எண்ணாது செயல் ஏதும் செய்யாது ஆன்மா உணர்விலேயே இருப்பர்.

இதைச் சும்மா இருத்தல் என்பர். இதுவே பெரிய பயனுடையது என்பர்.

" செயல் அற்று இருக்கச் சிவானந்தம் ஆகும்
செயல் அற்று இருப்பார் சிவயோகம் தேடார்
செயல் அற்று இருப்பார் செகத்தொடும் கூடார்
செயல் அற்று இருப்பார்க்கே செய்தியுண்டாமே "

(திருமந்திரம் 2293)

இப்பாடலில் செய்கையற்று ஆன்ம உணர்வில் இருக்கும்போதே உலக உணர்வு சேராது விலகும் என்றது காண்க.

சமாதிப் பயன்

யோகத்தின் உச்சமாகிய சமாதிநிலையை அடைவதால் வரும் பயன் கூறுகிறார்.

சென்ற பிறவிகளில் செய்த வினைகள் இந்தப் பிறவியில் அனுபவிப்பதற்காக ஒரு பகுதி நம்முடன் வரும். இது பிராரப்த வினை என்று சொல்லப்படும்.

நம்மோடு வந்த பழைய வினையின் ஒரு பகுதி போக, மிச்சம் உள்ளவை இனி வரும் பிறவிகளில் அனுபவிப்பதற்காகச் சேமித்து வைக்கப்பட்டிருக்கும்

இந்தச் சேமிப்பு வினைக்குச் சஞ்சித வினை என்று பெயர். அதாவது பழைய வினையின் பாக்கியாகும். இப்பிறவியில் நாம் செய்யும் பாவ புண்ணியங்களின்படி புதிய வினைகள் உண்டாகும்.

இவை நாம் இறக்கும்போது முன்புள்ள பழைய வினையில் போய்ச் சேர்ந்துகொள்ளும்.

இப்படி உள்ள புதிய வினைக்கு ஆகாமியம் எனப் பெயராகும். இவ்வினைகளுக்குக் காரணமானது ஆணவமலம் எனப்படும் சகஜமலமாகும்.

அடிப்படையான இது போனால் பிற மலங்களும் நீங்கும் - இதனால் அறியாமை கொண்டு தன் இயல்பை இழந்த ஆன்மாவின் பசுத் தன்மையும் நீங்கும்.

மேலும் இதனால் இந்த உடம்பும் அழியாது இருக்கும். எட்டுவகைக் குற்றங்களும் ஒழியும்.

சமாதி என்பது ஆன்மா பசுத்தன்மை நீங்கிச் சிவத்தன்மை பெறுவதேயாகும்.

" தான் அவனாகும் சமாதி கை கூடினால்
ஆனமலம் அறும் அப்பசுத்தன்மை போம்
ஈனமில் காயம் இருக்கும் இருநிலத்து
ஊனங்கள் எட்டும் ஒழித்து ஒன்றுவோர்க்கே "

(திருமந்திரம் 2294)

இப்பாடலில் எட்டு வகைக் குற்றம் என்றார். அவையாவன: உயிர்க்குற்றம் ஆறும் பசு, பாச ஞானங்களுமாம்.

உயிர்க்குற்றமாவன காமம், வெகுளி, கடும்பற்றுள்ளம் (கஞ்சத் தனம்), மோகம், மதம், பகைக்குணம் (மார்ச்சரியம்) ஆகும். இருநிலம் = பூவுலகம், ஈனம் = தாழ்வு; காயம் = உடல்; ஊனம் = குற்றம் என்க. புரியட்டகம் என்றும் கொள்க.

**தன்னை உணரும் பயன்**

" தன்னை அறியத் தனக்கு ஒரு கேடில்லை
தன்னை அறியாமல் தானே கெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தான் இருந்தானே "

(திருமந்திரம் 2328)

இப்பாடலில் தன்னை அறிதல் என்பது ஆன்மாவின் இயல்பை உள்ளவாறு அறிதல் ஆகும். தனக்குக் கேடில்லை என்பது ஆத்மாவிற்கு வரும் கேடு எதுவும் இல்லை என்க.

தன்னை அறியும் அறிவு என்பது பாசங்களில் மயங்கும் அறிவை விட்டுச் சிவனின் அறிவாகிய பதியறிவு ஆகும்.

தன்னை அர்ச்சிப்பதாவது தானே சிவமாவதால். உடல் அதன் உறுப்புக்கள் 36 தத்துவம் ஆகிய உபாதிகள் யாவும் நீங்கியதாக உணரும்போது ஆன்மாவை உணரலாம். அதுவே இது என்க.

ஆன்மா உருவமா?

ஆன்மா உருவமற்றது; ஆனால் உணரத்தக்கது. கடவுளைப் போலவே ஆன்மாவும் அறிவு வடிவமே ஆகும்.

அறிவு வடிவமே ஆன்மாவின் வடிவமாய் இருந்தும் நந்தி அருளால் அவர் இதை அறிவித்த பிறகே அறிந்தேன்.

அருள் இல்லையானால் அறிவு என்பதை என் அறிவாலும் அறியாதே இருந்திருப்பேன் என்றார்.

" அறிவு வடிவு என்று அறியாத என்னை
அறிவு வடிவு என்று அருள்செய்தான் நந்தி
அறிவு வடிவு என்று அருளால் அறிந்தும்
அறிவு வடிவு என்று அறிந்தும் இரேனே "

(திருமந்திரம் 2330)

இயற்கை அறிவு இறைவனுக்கு. அப்படி ஆன்மாவிற்கு இல்லை, அறிவித்தால் மட்டுமே அறியும் என்பதாம். அறிவு - அறியப்படும் பொருள் - அறிபவன் என்று மூன்று உள்ளன.

கண்ணன் மலையைக் கண்டான் என்பதில், கண்டவன் கண்ணன் என்பதும் - காணப்பட்டது மலை என்பதும் - காண்பது ஆகிய தொழில் என்பதும் ஆக மூன்று தனி நிலைகள் இருப்பதை உணரலாம்.

" அறிவுக்கு அழிவு இல்லை ஆக்கமும் இல்லை
அறிவுக்கு அறிவல்லது ஆதாரம் இல்லை
அறிவே அறிவை அறிகின்றது என்றிட்டு
அறைகின்றன மறையீறுகள் தாமே "

(திருமந்திரம் 2331)

இப்பாட்டில் அறிவு என்றும் அழியாத பொருளாக உள்ளது என்றார். காரணம், அது கடவுள் குணம். ஆகையால் கடவுள் போல் அறிவும் அழியாது.

அறிவுக்கு வளர்ச்சி என்பதும் இல்லை என்றார். வளர்ச்சி உண்டு என்றால் தேய்வும் உண்டு என்றாகிவிடும்.

"மலர்தலும் கூம்பலும் இல்லது அறிவு"

திருவள்ளுவரும் இதைக் கூறியுள்ளார்.

வளர்தல் தேய்தல் உண்டு என ஒத்துக்கொண்டால் அழிதலும் அதற்கு இருப்பதாகக் கொள்ள வேண்டும் ஆகவே, ஆக்கமில்லை என்றார்.

என்றும் அழியாத ஒரு பொருள் தனக்கு ஆதாரமாக எதையும் வைத்துக்கொள்ள முடியாது. ஆதாரம் உடைய ஒரு பொருளின் ஆதாரமும் ஒருநாள் இல்லாது போகும் என்பதால் அறிவுக்கு ஆதாரம் இல்லை என்றார்.

மறைகளின் ஈறாகிய உபநிஷதங்கள் எல்லாம் அறிவுதான் அறிவை அறிய முடியும் என்றும் கூறின.

கண்களாகிய அறிவில்லாத பொருள் காட்டும் ஒருவடிவத்தை அறிவு கொண்ட ஒருமனிதரால்தான் புரிந்துகொள்ள முடிகிறது.

கடவுளின் அறிவைப் பெற்றுக் கடவுளையே ஆன்மா அறிகின்றது என்று இப்பாட்டால் கூறுவதை உணர்க.

### ஆறந்தம்

அந்தம்: முடிவு. ஆறுவகையான முடிவுகள் ஆறு அந்தம் எனப்பட்டன.

ஆறுவகையான அத்துவாக்களுக்கு இந்த அந்தங்கள் ஆன்ம முயற்சியின் வடிவத்தை விளக்கும் என்றார். காந்தமும் இரும்பும் அருகில் இருப்பது என்ற தூரப் பகுதியால் மட்டுமே ஒன்றை ஒன்று கவர்கின்றன.

அதிலும் பகை முனைகள் (opposite poles) மட்டுமே கவர்கின்றன. ஒத்த இயல்பு முனைகள் விலக்குகின்றன. இந்த இரண்டும் தொலைவால் மட்டுமல்லாமல் செயல் வேறுபாடுகள் இரண்டாலும் ஓர் இயற்கையை உணரவைக்கின்றன.

வெளிப்படையான செயல் நிகழாமல் உணர்வால் செய்திகள் பரிமாற்றப்படும் என்பது ஒரு செய்தியாகும். இப்படிப்பட்ட நேரத்தில் ஒன்று இன்னொன்றைவிடக் குறைந்து நிற்பதே இதற்குத் தேவை என்பது மற்றொரு செய்தி.

வானத்தில் கருடன் பறக்கிறது; ஆனால் பூமியில் வெகுதொலைவில் உள்ள நாகம் அஞ்சுகிறது.

இதுபோல் ஆன்மாவும் சிவமும் காந்தம் இரும்பு போல நமக்குள் இயற்கையான செய்கைகளைச் செய்கின்றன.

பருவப் பெண்ணைப் பார்க்கும் ஓர் இளைஞன் மனத்திலும் உடலிலும் சில செய்கைகள் தாமே நிகழ்கின்றன. இதை இணை விழைச்சு என்று பழைய நூலில் கூறுவார்கள்.

இப்படிப்பட்ட இயற்கை ஈர்ப்புக்கள் கடவுள் ஆன்மாவுக்கு நடுவே செயல்படுவதை அத்துவா நிகழ்ச்சி என்று கூறுவர்.

அத்துவா என்பது மார்க்கம் அல்லது வழி என்று பொருள் படுவதாகும்.

இதற்குப் பயன்படும்படி ஆன்மாக்களிடம் ஆறுவகையான முடிவுகள் உள்ளன.

" வேதத்தின் அந்தமும் மிக்க சித்தாந்தமும்
நாதத்தின் அந்தமும் நற்போத அந்தமும்
ஓதத்தகும் எட்டு யோகாந்த அந்தமும்
ஆதிக் கலாந்தமும் ஆறந்தம் ஆமே "

(திருமந்திரம் 2343)

இப்பாடலில் வேதமுடிவுகள் பற்றிய சிந்தனை, சித்தாந்தம் பற்றிய சிந்தனை, மனத்திற்குள் மந்திரம் கூறுவதால் எழும் நாதம் பற்றிய சிந்தனை, அறிவு ஆய்வின் சிந்தனை, யோகம் (எட்டு விதம்) செய்யும் உணர்வுகள், குணபேதங்களால் ஏற்படும் உணர்வுகள் (கலை + அந்தம்) ஆகியவற்றின் முடிவு ஆறந்தமாகும்.

வேத முடிவால் கடவுள் நம்பிக்கையும் தொழவேண்டும் என்ற முயற்சியும் உண்டாவதே வேதாந்தமாம்.

கடவுள் வேறு ஆன்மா வேறு என்று பிரித்துக் காட்டுவதால் எழும் மன எழுச்சியே சித்தாந்தமாம்.

ஓம் என்பதில் அ+உ+ம் என்ற முப்பகுதி உண்டு 'ம்' என்பது உச்சரிக்கும்போது ஓசை முடிவு உண்டாகும். மறுபடி ஓம் சொல்லும்போது முன்பு வந்த ஓசை முடிவால் இணைக்கப்படும்.

இதனால் பல்சக்கரம் போல உந்துதல் வேகம் ஒவ்வொரு முறை உச்சரிக்கும்போதும் உண்டாவதால் ஏற்படுவது நாதாந்தம் எனும் பகுதியாகும்.

உண்டோ இல்லையோ என்றும், இது ஏன் என்றும், இதை உணர்வோம் என்றும் அறிவு எழுச்சியால் வருவது போதாந்தம் என்க.

ஒவ்வொரு உறுப்பிலும் பகுதியிலும் தேங்கிய பிராணன் புதிய பிராணன் வரும்போது வெளியேறும். இப்படிப் பல முறை செய்யும் முயற்சி யோகாந்தம் ஆகும்.

கலாந்தம், குணங்கள் சுகதுக்கங்களைத் தருவதால் உண்டாகும். பல வித மெய்ப்பாடுகள் தோன்ற இருப்பதும் கலாந்தமே யாம் என்க.

அலுவலகத்திற்கு நேரமாகிவிட்டது என்றும், தேர்வில் தோற்போமோ என்றும், பணம் போதாதோ என்றும் பலவிதக் காரணங்களால் பரபரப்பு அடைகிறோம்.

இதுபோல் பக்தியிலும் அன்பிலும் உண்டாகும் செய்கைகளுக்கும் இந்த ஆறந்தங்கள் துணை செய்கின்றன.

இப்படிப்பட்ட அந்தங்களை ஈடுபாடு மிக்க ஞானிகள் முழுதும் அறிவர். மலமில்லாத நெஞ்சினரும் அறிவர். இவற்றை அறியாதவர் இவைகளோடு கடவுளையும் அறிய மாட்டார்கள்.

ஆறந்தம் அறிபவர் கடவுளையும் அறிவர் என்பதாம். ஒரு மகன் 1000 கி.மீ. தொலைவில் ஒரு விபத்தில் அடிபட்டு அம்மா என்று கதறினான். அது சில வினாடிகளில் அவன் தாய்க்கு உடலில் மனத்தில் ஒரு கலக்கமாகவும் துன்பச் செய்தி ஒன்று வருமோ என்ற அச்சமாகவும் நிகழ்கிறது. இதுவே ஆறந்தம் அறிவதும் அறியாததும் தரும் பயன் என்க.

" அந்தம் ஓர்ஆறும் அறிவார் அதிசுத்தர்
அந்தம் ஓர்ஆறும் அறிவார் அமலத்தர்
அந்தம் ஓர்ஆறும் அறியாதவர் தமக்கு
அந்தமோடு ஆதி அறிய ஒண்ணாதே "

(திருமந்திரம் 2344)

என்ற பாடலால் இயற்கை அறிய வைத்தார் என உணர்க.

## வேதாந்த சித்தாந்த வேறுபாடுகள்

பிரம்மம் என்ற ஒருபொருளே பிரபஞ்சத்தில் உள்ளது. அதுவே வேறு வேறாகக் காட்சியளிக்கிறது என்று அத்வைதமாகிய வேதாந்தம் கூறும்.

அ+த்வைதம் = இரண்டற்றது.

சிந்தாந்தம் என்பதில் பதி, பசு, பாசம் என்று மூன்று பொருள் உள்ளன என்று அடிப்படை வரையறுக்கப்பட்ட பிறகே செய்திகள் கூறப்படுகின்றன.

தானே எல்லாம் ஆனதாக வேதாந்தம் கூறும், தான் என்பது தனி என்று சித்தாந்தம் கூறும் என்று கீழ்வரும் பாடல். அவற்றை முதலடியிலேயே விளக்குகிறார் இதில்.

ஆனால், துரியம் என்னும் யோக முயற்சியால் அணுவளவான ஆன்மாவைக் கண்டு தேனாய் இனிக்கும் பராபரமாகிய சிவ்னைக் கூடும் முயற்சியால் மலமறுபட்டு வீடு சித்திக்கும் நிலையே இரண்டு கொள்கைக்கும் உரிய முடிவு என்றார்.

" தான் ஆன வேதாந்தம் தான் என்னும் சிந்தாந்தம்
ஆனாத் துரியத்து அணுவன் தனைக் கண்டு
தேனார் பராபரம் சேர்சிவ யோகமாய்
ஆனா மலமற்ற அரும்சித்தியாதலே "

(திருமந்திரம் 2345)

என்ற பாடலால் அறியலாம்.

## சிந்தாந்தம்

நாள்தோறும் பக்தியாலோ, ஆன்ம விசாரணையாலோ, யோகத்தாலோ கடவுளோடு ஆன்மா (உயிர்) கலந்திருக்கும்போது, மனம் முதலிய நான்கு உள் உறுப்பும் சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் எனும் ஐந்தையும் அனுபவிக்கும் புலன்க்ளும் - பிற தத்துவங்களும் - செயல் குறைந்து ஒடுங்கி இருக்கும்.

இதனால் சுத்தம் அசுத்தம் என்ற நிலை மாற'மாறி வந்து தொடராமலிருக்கும்.

அந்த நிலையில் சிவன் திருவடிகளை அடைதலே சித்தாந்தத்தின் முடிவு என்று கீழ்வரும் பாடலில் கூறுகிறார்.

" நித்தம் பரனோடு உயிர்உற்று, நீள்மனம்
சத்தம் முதல் ஐந்தும், தத்துவம்தான் நீங்கிச்
சுத்தம் அசுத்தம் தொடராவகை நினைந்து
அத்தன் பரன்பால் அடைதல் சித்தாந்தமே "

(திருமந்திரம் 2346)

## நாதாந்தம்

ஓம் என்றும் பிறவுமான மந்திரங்களை மவுனமாகக் கூறும்போது ஆறு ஆதாரங்களையும் உடம்பில் கடந்து போகிறோம்.

அது ஒளிவடிவில் செல்லும்; அதை விந்து என்று கூறுவர். உடல் முடிந்தபிறகு உச்சித் தலைக்கும் அப்பால் நாதம் திரண்டு நிற்பது உணர்வுக்கு வரும். இது நாதம் எனும் இடம் உச்சந் தலைக்கு மேல் 3 விரல் உயரமாம்.

நாதத்திற்கு மேல் திரட்சியாக இருந்த நாதம் மெல்ல விலகித் தனிப்பது நாதாந்தமாகும்.

அவற்றை அணுநிலையாகக் காணலாம். இந்த நிலையில் பரவிந்தாகிய ஒளியும், நாதமும், முப்பத்தாறாகிய தத்துவமும் நம் நினைவிலிருந்து விலகும். அப்போது அணு நிலையாக நாதாந்தத்தை நோக்கக் கூறினார் என்க.

" மேவும் பிரமனே விண்டு உருத்திரன்
மேவும் மெய்யீசன் சதாசிவன் மிக்கு அப்பால்
மேவும் பரவிந்து நாதம்விடா ஆறாறு
ஓவும்பொழுது அணு ஒன்று உளதாமே "

(திருமந்திரம் 2347)

என்ற பாடலால் கூறினார்.

யோக ஆதாரங்களைக் கூறாமல் அவற்றுக்குரிய தெய்வங் களைக் கூறினார். காரணம், அந்த ஆதாரங்கள் அத்தெய்வ உலகம் வரை தொடர்புடையன ஆதலால் என்க.

| கடவுள் | | ஆதாரம் |
|---|---|---|
| பிரம்மன் | - | மூலாதாரம் |
| விண்டு (விஷ்ணு) | - | சுவாதிட்டானம் |
| உருத்திரன் | - | மணிபூரகம் |
| மெய்யீசன் (மகேசன்) | - | அநாகதம் |

| | | |
|---|---|---|
| சதாசிவன் | - | விசுத்தி |
| பரவிந்து · | - | ஆக்ஞை |
| நாதம் | - | தலை உச்சி |
| ஆறாறு | - | முப்பத்தாறு தத்துவம் முடியும் இடம் உடல் முழுவதும் ஆகும். |

## போதாந்தம்

போதம் = அறிவு

ஆன்மா என்றும் உள்ள ஒன்றாகும். முப்பத்தாறு தத்துவங்கள் ஆன்மா வாழ உடலும் உலகமும் முதலியவற்றைப் பெற்றன.

அவை உபாதி (தற்காலிக உதவி) என்று தெளிந்து, அவற்றை விட்டு விலகவேண்டும் என்ற அறிவு கொண்டு நாதாந்த எல்லையையும் நீங்கி, அதற்குமேல் இருள்நீங்கிய ஒர் உணர்வு உண்டாகுமாயின் நாதாந்த வெளியில் போதாந்தமாக இது வெளிப்படும் என்ற பாடல் கீழே உள்ளது.

" உள்ளஉயிர் ஆறாறது ஆகும் உபாதியைத்
தெள்ளி, அகன்று, நாதாந்தத்தைச் செற்று மேல்
உள்ள இருள் நீங்க, ஒருணர்வு ஆகுமேல்
எள்ளல் இல் நாதாந்தத்து எய்திடும் போதமே "

(திருமந்திரம் 2348)

என்ற பாடலில் காண்க.

## யோகாந்தம்

இயமம், நியமம் முதலிய எட்டு வகையான யோகப் பிரிவுகள் பயின்று பழகி, சமாதிநிலை அடைந்து பரமசிவனுடன் கூடிக் காணும். சிவநிலை அடையும் பற்றுக்கள் நீங்கும் - இப்போது ஏற்படும் பெரும் சாந்தி நிலையே (உபசாந்தம்) யோகாந்தம் என்பர்.

" தேடும் இயமநியமாதி சென்று, அகன்று,
ஊடும் சமாதியில் உற்றுப் பரசிவன்
பாடு உறச் சீவன் பரமாகப்பற்று அறக்
கூடும் உபசாந்தம் யோகாந்தக் கொள்கையே "

(திருமந்திரம் 2349)

என்ற பாடலால் அறிக.

### கலாந்தம்

கலாந்தம் என்பதில் நிவர்த்தி முதலான பஞ்ச கனவுகளும், மேதா முதலான பிராசாதக் கலைகள் 16-ம் விந்துவுக்குள் ஒடுங்கி நிற்கும்.

இவற்றைப் பழகி அனுபவத்தால் உணரவேண்டும்.

" கொள்கையில் ஆன கலாந்தம் குறிக்கொள்ளில்
வில்கையில் ஆன நிவிர்த்தாதி, மேதாதிக்கு
உள்ளனவாம் விந்துவுள்ளே ஒடுங்கலும்
தெள்ளி அதனைத் தெளிதலும் ஆமே "

(திருமந்திரம் 2350)

இதற்கு மேலும் கலாந்தம்பற்றிக் கூறுகிறார்.

இவையல்லாது வேறு ஐந்து கலைகள் ஒளியில் அமைந்துள்ளவை உண்டு. அவை மந்திரம், தந்திரம் (செய்முறை), தெளிவு, உபதேசம், ஞானம் என்னும் உணர்வுகளால் உண்டாவதாகும்.

" தெளியும் இவை அன்றித்தேர் ஐங்கலை வேறு
ஒளியுள் அமைந்துள்ளது ஓர வல்லார்கட்கு
அளியவன் ஆகிய மந்திரம், தந்திரம்
தெளிவு, உபதேசம், ஞானத்தொடு ஐந்தாமே "

(திருமந்திரம் 2351)

என்ற பாட்டலில் இவை விளங்கும்.

### கோயில் அமைப்பு

வட இந்தியக் கோயில்கள் அமைப்பு முழுதும் ஆகமம் சார்ந்தவை அல்ல. தென் இந்தியாவில் எல்லாக் கோயில்களும் ஆகம விதிப்படியே அமைந்தன ஆகும்.

பதி, பசு, பாசம் என்ற மூன்று பேருண்மைகள் எல்லாக் கோயில்களிலும் உண்டு. பலிபீடம் என்பது பாசம்; நந்தி என்பது பசு (ஆன்மா); இலிங்கம் என்பது பதி. பாசம் பசுவை விட்டு நீங்கினால் பசுவாகிய ஆன்மா பதியாகிய சிவத்தை நேர்ப்படும் என்பது சித்தாந்த உண்மை. இதையே சிவன் கோயில் அமைப்பு விளக்குகிறது.

" ஆய பதிதான் அருட்சிவ லிங்கமாம்
ஆய பசுவும் அடல் ஏறு என நிற்கும்
ஆய பலிபீடம் ஆகும் நற்பாசமாம்
ஆய அரன் நிலை ஆய்ந்து கொள்வார்கட்கே "

(திருமந்திரம் 2384)

என்ற பாடலில் விளக்கியுள்ளார்.

## மூலாதார இடம்

பொதுவாக மூலாதாரம் முதுகு எலும்பின் அடியில் உள்ளது என்பதே பலரும் சொல்லும் கருத்தாகும்.

இவரே 'எருவிடும் வாயிலுக்கு இருவிரல் மேல்' உள்ளது என்றும் கூறியுள்ளார்.

ஆனால் அடியில் உள்ள மூலாதாரம் உச்சியில் (முடியில்) உள்ளது என்றும் கீழ்ப் பாடலில் கூறுகிறார்.

தலை உச்சியில் ஆக்ஞாவுக்குப் பின்புறம் பிடரியில் உள்ள பகுதியே மூலம் என்கிறார்.

இங்குத்தான் தண்டுவடம் தொடங்குகிறது. தண்டுவடத்தின் கீழ் உள்ள மூலத்தை இப்போது அதன் மேலுள்ளதாகக் கூறியதும் சரியே.

சில மிருகங்களுக்குப் பிடரிக்கண் இருந்ததாக அறிவியலார் கூறி யுள்ளனர். அதன்படி பார்த்தால் இவர் கூறுவதும் சரியாகவே படும்.

அடிமூலத்திலிருந்து சுழுமுனை நாடிவழியாகக் குண்டலினி சந்தித்துத் தலை உச்சிக்குப் போகும் என்பது யோகம்.

இந்த முறையில் மூலாதாரமே பிடரியில் இருப்பதால் அங்கிருந்து குண்டலினி சக்தி தொடங்கி, ஆக்ஞைக்கு வந்து அல்லது ஆக்ஞைக்கு வரும் வழியின் நடுவே உச்சித் தலைக்குச் செல்வதாக யோக முறை மாறுதல் பெறும்.

இப்புடிச் செய்வதை அறிந்தோர் செய்யும் முயற்சியிலும் தலையையே அடியாகக் கொண்டு சிவன் அருள்வான் என்று கீழ்வரும் பாடலால் கூறுகிறார்.

> " தலை அடியாவது அறியார் காயத்தில்;
> தலை அடி உச்சியில் உள்ளது மூலம்,
> தலை அடியான அறிவை அறிந்தோர்
> தலை அடியாகவே தான் இருந்தானே "

(திருமந்திரம் 2399)

என்று வெளிப்படையாகவே கூறுகிறார்.

## மனமும் திருவடியும்

இறைவன் திருவடியும் நம் மனமும் இணைபிரியாதே உள்ளன. சிந்தையின் உள்ளே சிவன் திருவடி உள்ளது - அவன் திருவடியின்

கீழேதான் மனமும் உள்ளது - அவன் என்னை அறியமுற்படா விட்டால் நானும் அவனை அறிய முடியாது போகும்.

இதையே 'அவன் அருளாலே அவன்தாள் வணங்கி' - என்று திருவாசகம் (சிவபுராணம் 15) கூறுவதை அறியலாம்.

" சிந்தையின் உள்ளே எந்தை திருவடி
சிந்தையும் எந்தை திருவடிக் கீழது
எந்தையும் எம்மை அறிகிலான் ஆகில்
எந்தையை யானும் அறியகிலேனே "

(திருமந்திரம் 2401)

மனம் என்பது பிரபஞ்சம் முழுதும் செல்லும் (வியாபகம்) விரிவு கொண்டது ஆகும். அதனால் இறைவன் திருவடியில் மனம் இருப்பதாகக் கூறப்பட்டது. (இது இரண்டாம் அடியில் உள்ளது).

மனம் அவன் திருவடியை நினைத்துவந்தால் அவன் திருவடி மனத்தில் இருக்கும் என்பது முதலடியில் கூறப்பட்டது.

நாம் நினைப்பதை ஏற்று இறைவனிடமிருந்து உணர்வு திரும்பினால்தான் நம் மனமும் அவரை அறியும் என்று பின் இரு அடிகளில் கூறினார்.

## உடம்பில் மூன்று தாமரை

இடா நாடி, பிங்கள நாடி ஆகிய இரண்டும் முறையே சந்திர சூரியத் தொடர்புடையன. இடப்பக்கம் வலப்பக்கங்களில் அதிகம் அறியப்படுவன.

இடது கண், இடது மூக்கு இவைகளை இயக்குவது வலதுபக்க மூளையும் சந்திரக் கலை உடையன. இவை ஒரு தாமரை என்றார். நாடிகள் தாமரைப் பூவின் தண்டுகள் என்று கொள்க.

இதுபோல் வலது கண் வலது மூக்கு இவை சூரிய கலையுடையன. இவற்றை இயக்கும் இடது பக்க மூளைப் பகுதியும் சூரியக் கலையைக் குறிக்கும் ஒரு தாமரை என்றார்.

உடம்பின் நடுவே ஓடும் நாடி சுழுமுனை நாடியாகும். இது குண்டலினி சக்தியை எடுத்துப் போவதால் அக்னி நாடி எனப்படும்.

இது நடுமூக்கு, ஆக்ஞா, நடுமூளை, பிடரிக் கண் பகுதி ஆகியவை அக்னிக் கலைப் பகுதியாகும். இவற்றை ஒரு தாமரையாகக் கூறினார்.

இட, பிங்களா இருநாடிகளும் கடவுள் திருவடி என்றும் சிறப்பித்தார். இவற்றில் மூச்சும் ஓம் என்னும் மந்திர ஒலியும் ஒளியும் பரவுமாறு செய்வதை நன்றாகக் காய்ச்சுதல் என்றார். இந்த மாதிரியான 3 நாடி யோகத்தால் ஈசனை அடையலாம் என்றும் கூறினார்.

" ஒன்று உண்டு தாமரை ஒண்மலர் மூன்றுள
தன் தாதை தாளும் இரண்டுள காயத்துள்
நன்றாகக் காய்ச்சிப் பதம் செய்ய வல்லார்கட்கு
இன்றே சென்று ஈசனை எய்தலுமாமே "

(திருமந்திரம் 2405)

## தீமையும் அறுக்கும் ஓம்

காமம் வெகுளி மயக்கம் முதலிய உயிர்க் குற்றங்கள் எந்த நற்செயல் செய்வதையும் தடுப்பன ஆகும்.

அவற்றைச் சிறிது விலக்கினாலும் மீண்டும் அவை வரக்கூடும். அப்படி வராமல் தடுக்கும் கயிறாக ஓம் என்பதைக் கூறும் மவுனயோகமாகிய பிரணவ யோகமே ஆகும் என்றார்.

தீயவை மீண்டும் தொடராது இருக்கும் துணையாகவும் ஓம் உள்ளது என்றார்.

" காமம் வெகுளி மயக்கம் - இவைகடிந்து
ஏமம் பிடித்திருந்தேனுக்கு, எறிமணி
'ஓம்' எனும் ஓசையினுள்ளே உறைவதோர்
தாமம் அதனைத் தலைப்பட்டவாறே "

(திருமந்திரம் 2409)

ஏமம் = துணை அல்லது பாதுகாப்பு என்பதாம். எறிமணி ஓம் = பூசையில் மணியை அடிப்பது தீயசக்திகள் வந்து தடைசெய்யாமலிருப்பதற்கேயாம். ஆகையால் எறிமணி என்றார். காரணம் ஓம் என்பதுவும் தீயவற்றை நீக்கும் என்பதாம்.

தாமம் = கயிறு. தலைப்படல் = ஒன்றுபடுதல்.

## மகா வாக்கியம்

வேதங்களின் சாரமாக இருப்பன 4 மகா வாக்கியங்களே. இவையே போதும், வேதம்கூடத் தேவை இல்லை என்பது வள்ளலார் கருத்து. நான்கிற்குமேலும் கூறுவதுண்டு.

" ப்ரக்ஞானம் ப்ரஹ்மம் " (ரிக்வேதம்)

" தத்துவமஸி " (சாமவேதம்)

" அஹம்ப்ரஹ் மாஸ்மி " (யஜுர்வேதம்)

" அயம் ஆத்மா ப்ரஹ்மம் " (அதர்வண வேதம்)

என்பனவே அம்மகா வாக்கியங்களாகும்.

எங்கும் ஞான மயமாயிருப்பது பிரம்மம் என்பது முதல் மகா வாக்கிய விளக்கம் - இது பொருள் விளக்கமாகும்.

(தத் = அது; த்வம் = நீ; அஸி = ஆகிறாய்) நீ அது ஆனாய் என்பது இரண்டாம் வாக்கியப் பொருள். அது என்பது கடவுள் ஆகும்.

நீ கடவுளாய் இருக்கிறாய் என்று குரு தன் மாணாக்கனுக்கு அறிவிப்பதால் இது உபதேச வாக்கியம் எனப்படும்.

நானே (அஹம்) அந்தக் கடவுளாக (பிரம்மமாக) இருக்கிறேன் (அஸ்மி) என்பது மூன்றாம் வாக்கியப் பொருள்.

குருவிடம் இரண்டாம் வாக்கியத்தைப் பாடமாகக் கேட்ட மாணாக்கன் அதைப் பாவித்து முயற்சி செய்து அனுபவத்துக்கே கொண்டுவரும் வாக்கியமாதலால் அனுபவ வாக்கியம் என்பர்.

என் ஆத்மாவே பிரம்மமாகும் என்பது நான்காம் வாக்கியமாகும். இது மூன்றாம் வாக்கியத்தை உறுதி செய்யும் வாக்கிய அனுபவமாகும்.

இவற்றில் இரண்டாம் வாக்கியத்தையே யாவரும் விரித்துக் கூறுவர்.

தத்+த்வம்+அஸி என்னும் மூன்று சொற்களுக்கும் தனித்தனியாகப் பொருள் சொல்வது பலருக்கும் வழக்கம்.

அந்த வகையில் திருமூலரும் பொருள் சொல்கிறார். பல இடங்களில் இதுபற்றிய செய்திகள் பரவிக் கிடக்கின்றன.

" தோன்றிய 'தொம்' பதம்; 'தத்' பதம் சூழ்தர
ஏன்ற 'அசி' பதம்; இம்மூன்றோடு எய்தினோன்
ஆன்ற பராபரம் ஆகும், பிறப்பு அற
ஏன்றனன்; மாளச் சிவமாயிருக்குமே "

(திருமந்திரம் 2410)

என்ற பாடலில் உபதேச வாக்கியமான இதை ஏற்று அனுபவமாகுவோன் சிவமே ஆவான் என்று கூறுகிறது.

" போதம் தனை உன்னிப் பூதாதி பேதமும்
ஓதும் கருவி தொண்ணூறுடன் ஓராறு
பேதமும் நாதாந்தப் பெற்றியின் கைவிட்டு
வேதம் சொல் 'தொம்-பதம்' ஆகுதல் - மெய்ம்மையே "

(திருமந்திரம் 2411)

இதில் நீ என்னும் (த்வம்) 'தொம்' எனும் பதத்தை விளக்குகிறார்.

சாதாரண நிலையில் நீயே கடவுளாகவில்லை. பஞ்சபூதங்கள் உட்பட 96 தத்துவங்களும் உடம்பில் உள்ள ஆறு யோக ஆதாரங்களும் அறிவு நிலையில் ஒன்றாகச் சேர்க்கப்பெற்று - உடம்பின் உச்சியில் 4 முதல் 6 விரல் உயரத்தில் உள்ள நாதாந்த உணர்வில் ஐக்கியப்பட்டு உடம்பு உணர்வைக் கைவிட்டு நிற்பதே நீ என்னும் பதத்துக்கு உரிய உண்மைப் பொருளாம்.

" தத்பதம் என்றும் 'துவம்' பதம்தான் என்றும்
நிற்பது அசியத்து நேரிழையாள் பதம்,
சொற்பதத் தாலும் தொடர ஒண்ணான் சிவன்
கற்பனை இன்றிக் கலந்து நின்றானே "

(திருமந்திரம் 2412)

இப்பாடலில் தத் பதம் 'துவம்' என்னும் பதம் இரண்டும் அசி என்னும் பராசக்தியின் பதத்தால் இணைவதால் சொல்லால் விளக்க முடியாத சிவன் கற்பனைக்கும் எட்டாதவனாய் நம்மோடு கலந்து நின்றான் என்றார்.

'தத்' என்பது கடவுளைக் குறித்த சொல்லாகும்.

" அணுவும் பரமும் அசிபதத்து ஏய்ந்து
கணு ஒன்றிலாத சிவமும் கலந்தால்
இணை அறு பால்தேன் அமுதுஎன இன்பத்
துணை அதுவாய் உரை அற்றிடத்தோன்றுமே "

(திருமந்திரம் 2413)

இப்பாடலில் அசி என்னும் சொல்லை விளக்குகிறார்.

கணு = தடை - அதாவது தடையற்ற காற்று எங்கும் நுழையத் தயாராய் இருப்பது போல வானம் எதனாலும் மறைக்க முடியாதபடி நிற்பது போலச் சிவமும் தடையற்றதாய் எங்கும் எதிலும் பதியத் தயாராய் இருக்கிறது என்றார்.

அணுவாகக் குறைந்த ஆத்மாவும் அகன்றதாகிய (பரம்) சிவமும் 'அசி' எனும் சொல்லால் கலந்தால் பால்தேன் அமுது என இன்பத்தில் மிகுந்து பேசவும் இயலாது நிற்கத் தோன்றும் என்றார்.

" தொம்பதம் தற்பதம் தோன்றும் அசிபதம்;
நம்பிய சீவன் பரசிவனாய் நிற்கும்;
அம்பதம் மேலைச் சொரூபம் மகாவாக்கியம்
செம்பொருள் ஆண்டருள் சீர்நந்தி தானே "

(திருமந்திரம் 2414)

தத்துவமசிப் பொருளை நம்பிப் பயில்வோன் மட்டுமே சிவமாவான் என்றும் தமக்கு இதை உபதேசித்த நந்தியின் திருவருளைக் கொண்டாடுகிறார்.

" ஐம்பது அறியாதவரும் அவர் சிலர்
உம்பனை நாடி உரை முப்பதத்து இடைச்
செம்பரம் ஆகிய வாசி செலுத்திடத்
தம் பரயோகமாய்த் தான்அவன் ஆகுமே "

(திருமந்திரம் 2415)

இப்பாடலில் ஐம்பது வகையான எழுத்துக்களின் ஒலியால் தோன்றும் நிறத்தை அறியாதவர்களும் இம்மூன்று பதங்கொண்ட மகாவாக்கியத்தை மனத்தில் தியானித்து இறைவனையும் எண்ணிப் பிராணாயாமம் செய்து இறைவனை அடையலாம் என்றார்.

ஐம்பது = வடமொழி எழுத்துக்கள் உயிரும் மெய்யுமாம். உம்பன் = இறைவன், முப்பதம் = இந்த மகா வாக்கியம்; வாசி = மூச்சு விட்டு வாங்கும் பிராணாயாமம்.

நனவு, உறக்கம், கனவு என்பவை நீங்கித் துரியம் என்னும் யோக நிலையில் 'அசி' எனும் பதம் மேலும் தெளிவாகும் என்று 2417 ஆம் பாடலில் விளக்குகிறார்.

இப்படி மூன்று துரியம் உள்ளது என்று 2440 ஆம் பாடலில் கூறுகிறார்.

## முப்பாழ்

முப்பாழுக்கும் அப்பால் இறைவனை அடைதல் என்பது சாத்திரமரபு.

மாயப் பாழ், போதப் பாழ், உபசாந்தப் பாழ் என்று அவை கூறப்படும்.

24 ஆன்ம தத்துவங்களில் இருந்து நீங்குவது மாயப் பாழ் என்பர்.

வித்தியாதத்துவம் 7ல் இருந்து விலகுவது போதப் பாழ் (போதம் = அறிவு) ஆகும்.

இந்தத் தத்துவங்களில் முன்பும் இப்போதுமாகிய பல பிறவிகளில் பழகிய (வாசனை) தொடர்பு முழுதுமாக விலகுவது உபசாந்தப் பாழ் என்பர்.

மாயப் பாழ், போதப் பாழ், உபசாந்தப் பாழ் என்பனவற்றை 2467 ஆம் ப்ாடலில் கூறியுள்ளார் என அறிக.

இப்பாழ்கள் மூன்றும் முத்திராந்தம் எனப்படும்.

" கல்ஒளி மாநிறம் சோபை கதிர்த்திட்ட
நல்ல மணி ஒன்றின் நாடி ஒண்முப்பதம்
சொல் அறுமுப் பாழில் சொல் அறுபேர் உரைத்து
அல் இறு முத்திராந்தத்து அனுபூதியே "

(திருமந்திரம் 2455)

படிகக் கல்லானது மாணிக்கத்தைச் சார்ந்து நிறமும் ஒளியும் பெறுவது போலத் தத்துவமசி வாக்கிய அனுபவத்தால் முப்பாழ் நீங்கி அனுபூதி பெறலாம் என்றார்.

அனுபூதி = அருள் அனுபவம்

அனுபவ விளக்கம்

" இடன் ஒரு மூன்றில் இயைந்த ஒருவன்
கடன் உறும் அவ்வுரு ஒன்றுஎனக் காணும்
திடமது போலச் சிவ, பர, சீவர்
உடன் உறைபேதமும் ஒன்று எனலாமே "

(திருமந்திரம் 2457)

சீவன் - ஆத்மா (சீவாத்மா)

பரம் - எங்குமாய் எல்லாமாய் நிற்கும் தெய்வம்

சிவம் - எல்லாவற்றின் உள்ளும் புறமுமாக இருந்தாலும் தனித்துக் காணப்படும் கடவுளாம்.

இவை மூன்றும் ஒன்றாகவும் வேறாகவும் உடனாகவும் நிலையில் கூடி யிருப்பர் என்பதை அனுபவத்தால் உணரக் கூறினார் என்க.

சிவம் ஆவது எப்படி என்பதை மூன்று நிலைகளில் சென்று விளக்கிக் கூறினார் என்க.

இப்படிக் கூறிய அனுபவம் எப்படி அடையக்கூடும் என்பதைக் கீழ்வரும் பாடலால் விளக்குகிறார்.

" ஒளியை ஒளிசெய்து 'ஓம்' என்று எழுப்பி
வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி
வெளியை வெளிசெய்து மேல்எழ வைக்கத்
தெளியத் தெளியும் சிவபதம் தானே "

(திருமந்திரம் 2458)

இப்பாடலில் சிவபதம் அடையும் அனுபவ யோகம் கூறுகிறார்.

சிவப்பான ஒளியாக மனத்தில் கற்பனை செய்யும் போது 'ஓம்' என்ற மந்திர ஒலியும் அதே ஒளியை வெளிப்படுத்தும்.

இதுவே ஒளியை ஒளிசெய்து ஓம் என்று ஓதி எழுப்புவதாகும்.

உள்ளே இழுக்கும் வெளிக்காற்று உடம்பின் உட்பகுதியில் மூலாதாரம் வரை செல்லும்போது பிராணன் என்ற காற்று மாதிரியான சக்தியும் எழும்பும். அதை இடா பிங்களா எனும் இரு நாடிகளின் அசைவால் சுழுமுனை நாடியில் செல்லுமாறு பாவித்தல் வேண்டும்.

இதையே வளியை வளிசெய்து வாய்த்திட வாங்கி என்றார்.

மனத்தில் ஓர் ஆகாசம் உள்ளது. இது தகராகாசம் அல்லது சிதாகாசம் அல்லது சிதம்பரம் எனப்படும். இதைப் பாவித்தபடியே உடம்பு உச்சிக்கு மேல் உள்ள பெரிய ஆகாயத்தை இணைப்பதாகப் பாவிப்பதை மூன்றாம் அடியில் கூறினார்.

இப்படித் தெளிவாகப் பல முறையும் பயில்வதே சிவபதம் எய்தும் முறை என்றும் கூறினார்.

" 'தத்'பதம், 'த்'வம் பதம், தானாம் 'அசி'பதம்
தொல்பதம் மூன்றும் துரியத்துத் தோற்றவே
நிற்பது உயிர், பரம், நீள் சிவம் இம்மூன்றில்
சொல்பதம் ஆகும் துவம்தத் அசியே। "

(திருமந்திரம் 2460)

இப்பாடலில் தத்துவமசி என்பது துவம்தத் அசியென ஆகும் என்று கூறுகிறார்.

தத்துவமசி என்பது உபதேசம்

துவம்தத்அசி என்பது உபதேச முடிவு

'தத்துவமசி' என்பது 'அது நீ ஆனாய்' என்ற பொருள் உடையது.

'துவம்தத் அசி' என்பது 'நீ அது ஆனாய்' என்ற பொருள் உடையது.

'தத்துவமசி' என்பதால் நீ கடவுள் ஆகமுடியும் என்பதும் அதுவே மாறும் போது 'துவம்தத் அசி' என ஆகி நீ கடவுளே ஆகி விட்டாய் என்பதும் பொருளாகிறது.

முதலில் கல்லூரியில் சேர்வதைக் குறித்தது. இரண்டாவது கல்லூரிப் படிப்பிற்கு நற்சான்று பெறுவதைக் குறிக்கிறது.

இப்படி மாறும் நிலையைப் பெறத் துரியமாகிய யோக பாவனையில் இருந்து அனுபவம் பெறலாம் என்கிறார்.

இதைப் பெறச் 'சிவோகம்' எனும் மந்திரம் சொல்லுக என்று 2462 ஆம் பாடலில்

' உந்தும் முறையில் சிவோகம் வைத்து ஓதிடே' என்று கூறுகிறார்.

## உடம்பில் ஈசன் இடம்

" நாசி நுனியினின் நால்மூ விரல் இடை
ஈசன் இருப்பிடம் யாரும் அறிகிலர்
பேசி இருக்கும் பெருமறை அம்மறை
கூசியிருக்கும் குணம் அது ஆமே "

(திருமந்திரம் 2516)

இப்பாடலில் கூறியதாவது:

மூக்கு நுனியிலிருந்து (12 விரல்) ஒரு சாண் அளந்தால் தலையில் உட்புறமாக வரும் இடமே இறைவன் இருப்பிடம் என்றார்.

அது உச்சித் தலையில் நாதம் எனும் இடம் உள்ள பகுதியாகும். அதையே குறித்துத் தியானம் செய்வதற்காக இதைக் கூறினார்.

இதன் பயன் கீழ்ப்பாடலில் கூறுகிறார்:

" தன்னை அறிந்திடும் தத்துவ ஞானிகள்
முன்னை வினையின் முடிச்சை அவிழ்ப்பர்கள்
பின்னை வினையைப் பிடித்துப் பிசைவர்கள்
சென்னியில் வைத்த சிவன் அருளாலே "

(திருமந்திரம் 2550)

அதாவது தலைமேல் சிவத்தை நினைக்கும் அருளால் வினையாவும் நீங்குவதாம் பயன் பெறுவர்.

இப்படி யோகத்தால் சிவமாவதைக் கூறுவது திருமந்திரம் என அறிக. 67 பாடல்களில் சூனிய சம்பாஷணை எனும் பகுதி மறை பொருளாக முன் கூறியதைக் கூறுவதாம். தத்துவமசியை மேலும் பிற்பகுதியில் விளக்குகிறார்.

இந்தக் காரணங்களால் தத்துவமசி என்பதை விளக்கும் உபநிடதமாகவே இந்த நூலைக் கூறுவதுமுண்டு.

சதாசிவத்தை உடலில் இடம் காட்டி அனுபவப்படுத்துவதால் சதாசிவ உபநிடதம் என்றும் இந்த நூலைக் கூறுவர்.

இந்நூல் முழுமையாக யோகம் பற்றியும் சக்கர உபாசனை பற்றியும் மந்திர உச்சாடணம் பற்றியுமே கூறும் என்று கொள்ளலாம்.

"ஆசை அறுமின்கள் ஆசை அறுமின்கள்
ஈசனோடாயினும் ஆசை அறுமின்கள்
ஆசைப்படப்பட ஆய்வரும் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே"

(திருமந்திரம் 2554)

ஈசனை அடையலாம் என்று வழி கூறியதைக் கண்டு ஆசைப்பட்டு விரைவாக முயலவேண்டாம். அது துன்பத்துக்கும் காரணமாகலாம். எனவே, பொறுமையாகச் செயல்படும்படி அறிவுரை கூறியது இப்பாடல்.

பொதுவாக ஆசை விடுவதையும் இதில் சேர்த்துக் கூறினார். அடிக்கடி திருமந்திரத்தையும் அதில் தேர்வு செய்த இந்நூலில் உள்ள செய்திகளையும் பாடல்களையும் படிப்பதால் மட்டுமே படித்துச் சுயமாகச் சிந்திப்பதால் மட்டுமே முழுமை பெற முடியும் என்பதாம்.

## நவகுண்டம்

யாகமும் யோகமும் ஒன்றே என்னும் கொள்கையில் இதைத் திருமூலர் கூறுகிறார்.

இது உடம்பிற்குள் யோகமாகவும் உடம்புக்கு வெளியில் யாகமாகவும் இதைச் செய்யும் வகையில் விவரிக்கிறார்.

யாகம் என்பதில் நம் நினைவையும் நாம் குண்டத்தில் இடும் பொருள்களையும் சிவனைச் சென்று அடையச் செய்வதாகிய முயற்சியே ஆகும்.

யோகம் என்பதும் நம் உணர்வைச் சிவனுடன் ஒன்றுவிப்பதே ஆகும்.

உணர்வு வழியாகச் செய்யும்போது உடம்பு என்ற ஒன்றை மறந்து செய்யவேண்டியவர் ஆகிறோம்.

நாம் நம்மில் எழும் உணர்வைமட்டும் பற்றிக்கொண்டு உடம்பை மறந்தால் அது இறைவனை நெருங்கிடும் முயற்சியே ஆகும்.

ஐந்து வகையான சிவ தத்துவங்களில் ஐந்தாவதாக இருப்பது சுத்த வித்தை என்பதாகும்.

வித்தை என்பது மந்திரம் என்றும் அறிவு என்றும் பொருள்படும்.

உலகம் முதல் பிரபஞ்சம் முடிவாக உள்ள எல்லாப் படைப்புகளையும் படைத்து, அவற்றைக் காத்து, அவற்றை மாற்றி அல்லது அழிப்பதற்கு உரியதாகிய எல்லா அறிவும் தொகுக்கப்பெற்றதே சுத்த வித்தை எனப்படும்.

இது மனிதர்களின் மூலமாக உண்டாகும் அறிவு இல்லையாகையால் சுத்த என்று சிறப்பிக்கப்பட்டது.

இந்த இயற்கை அறிவு அல்லது இறையறிவுதான் மூலப்பிரகிருதி என்று சாங்கியர் கொள்கையாகக் கருதப் பெற்றிருக்க வேண்டும்.

இதிலிருந்தே பிரபஞ்சத்திற்குத் தேவையான அறிவு வெளிப்படுகிறது. இப்படி ஒன்று இருப்பதை இந்திய ஞானிகள் உணர்ந்தனர்.

'' சைதன்யம் ஆத்மம் '' - எனும் சிவயோக சூத்திரக் கருத்தும் இதையே குறிக்கிறது. இதன்படி கடவுளின் அறிவு எங்கும் எப்போதுமாக நிறைந்துள்ளது என்பதாம்.

இதையே சாங்கிய மதக்கொள்கைக்குக் காரணமான கபில முனிவரும் உணர்ந்தார்.

இக்காலத்தில் விஞ்ஞானிகள் இப்படி ஓர்அறிவுத் தொகுப்பு அந்தரத்தில் உள்ளது என்று உணர்கிறார்கள்.

இதை 'universal mind' பிரபஞ்ச மனம் என்ற பெயரில் விஞ்ஞானிகள் வழங்குகிறார்கள்.

கல்வியாகக் கற்காமலே அனைத்து விஞ்ஞான முடிவுகளும் தோன்றியுள்ளன.

கல்வியறிவு ஒரு தாகத்தை விஞ்ஞானிகளுக்கு உண்டாக்கி விடுவதோடு நின்றுவிடுகிறது.

அந்தத் தாகத்தைத் தீர்த்து ஒரு முடிவை உண்டு பண்ணுவது அவர்களுக்கு வெளியிலிருந்து அவர்களுக்குள் புகுந்ததாகவே உணர்கிறார்கள்.

நம் சித்தர்கள் யோகிகள் ஓதாமல் ஓதி உணர்ந்ததாகக் கூறுவது எல்லாம் இந்தச் சுத்த வித்தையிலிருந்து அவர்கள் பெற்ற அறிவைப் பற்றியே ஆகும்.

" வெட்ட வெளிதன்னை
மெய்என்று இருப்பவர்க்குப்
பட்டயம் ஏதுக்கடி- குதம்பாய்
பட்டயம் ஏதுக்கடி "

-என்று சித்தர் பாடலில் வெட்ட வெளியில் ஒரு மெய்யான அறிவு உள்ளது என்பதையும், அதுவே கடவுள் நமக்கு வழங்குவது என்றும் கூறியதை உணரலாம்.

" தட்டுங்கள் திறக்கப்படும்
கேளுங்கள் கொடுக்கப்படும்
தேடுங்கள் கிடைக்கும் "

- என்று ஏசுநாதர் கூறியதுகூட இந்தப் பேரறிவுச் சத்தியின் உதவியையே என்று நாம் உணரலாம்.

நியூட்டன் பூமிக்கு ஈர்ப்புச் சக்தி உண்டு என்ற கண்டுபிடித்தது படிப்பறிவால் இல்லை.

ஆர்க்கிமிடீஸ் மிதவை விதியைக் கண்டுபிடித்ததும், தாமஸ் ஆல்வா எடிஸன் ஆயிரத்துக்கு மேம்பட்ட பொருள்களைக் கண்டு பிடித்ததும் கல்வி அறிவால் இல்லை.

இவர்களின் அறிவுத் தாகம் இவர்கள் உடலையே மறக்கச் செய்தபோது மேலிருந்து வழிகாட்டல்கள் இவர்களுக்குள் புகுந்தன.

இப்படிப்பட்ட நிலையை உடம்பு உணர்வு மறக்கும் போது மட்டுமே பெறமுடியும்.

தானாக உடம்பு உணர்வை மறப்பது என்பது அவர் அவர்க்கும் இயற்கையாகக் கிடைத்த வரமே ஆகும்.

அதை யோக முயற்சியால் பெறுவதே நவகுண்டம் என்னும் அகயாகம் ஆகும். உடம்பிற்குள் செய்யும் யாகமே நவகுண்டம்.

ஒன்பது என்ற பொருளில் நவகுண்டம் என்பதைத் திருமூலர் கூறவில்லை.

மூன்று அடுக்குச் செய்திமட்டுமே கூறுவதால் ஒன்பது என்ற பொருளில் சொல்லப்படவில்லை என அறியலாம்.

நவ என்பதில் புதுமை என்ற ஒரு பொருள் உண்டு. அதையே இதில் அவர் எடுத்தாளுகிறார் எனலாம்.

இதுவரையில் சொல்லியதைவிடப் புதியதாகக் கூறுவதாகையால் இதன் பொருத்தம் உணரலாம்.

நவம் என்பதை ஒன்பது என்றே கொண்டால் இப்பகுதியில் 1034 ஆம் பாடலில் ஒன்பது வகையாக யாககுண்டம் வகுப்பதை எடுத்துக்கொள்ளலாம்.

இது உடம்புக்கு வெளியில் வகுக்கப்படும் வடிவத்தை மட்டுமே கூறுவதால் இதை உடம்பிற்குள் வகுப்பதற்கும் சேர்த்து எடுக்க இயலாது. எடுத்தாலும் தவறில்லை.

உடம்பிற்குள் புதுமை என்றும் உடம்பிற்கு வெளியில் ஒன்பது என்றும் கொள்ளத் தகுந்ததே நவ குண்டம் எனும் இப்பெயர் என அறிக.

" சாதனம் நாலு, தழல் மூன்று, வில்வயம்,
வேதன் ஐவட்டம், வினை ஆறு, பூநிலை,
போதனை, போது, அஞ்சு பொற்கயல், வாரண
நாதனை நாடும் நவகோடி தானே " (திருமந்திரம் 1034)

என்பது அப்பாடலாம்.

சரியை கிரியை யோகம் ஞானம் என்ற மார்க்கங்களுக்குரிய குண்டம் நாற்கோணமாகிய குண்டம்.

காருகபத்தியம், ஆகவநீயம், தட்சணாக்னி ஆகிய மூன்று நெருப்பை ஓம்புவோர் (தழல்) தீ வடிவமாகிய முக்கோணக் குண்டத்தில் யாகம் செய்வர்.

மற்றும் வில்போல் வளைந்த பிறை வடிவானது மதிக் குண்டம். ஆகாயம் போல் வட்ட வடிவமாகக் குறியிட்ட குண்டமும் உண்டு.

ஆறுதொழில் செய்யும் அந்தணர்க்கு அறுகோண வடிவக் குண்டம் ஆகும்.

திசைக் காவலர்களைக் கருதிச் செய்யப்பெறுவது எண் கோணத்தில் அமைக்கப்பட்டதாகும்.

பெண் தெய்வங்களுக்குரியது அரச இலை போன்ற யோனிக் குண்டம் ஆகும். தாமரை போன்ற வடிவமும் உரியதாம்.

சிவன், பராசக்தி, முருகன், விநாயகர், திருமால் ஆகிய அனைவர்க்குமாகச் செய்வது ஐந்து மீன்கள் கூடியது போல் உள்ளதாம்.

ஒரு சிறு வட்ட நடுவில் வைத்து ஐந்து மீன்கள் அவ்வட்டத்தில் இரை உண்பது போல இது அமைக்கப்படும். பஞ்ச கோணம் என்றும் இதைக் கூறுவர்.

நட்சத்திரத்தைக் குறிக்கும் ஐங்கோணத்தைப் போல் வரைந்து ஒவ்வொரு கோணமும் மீன்மாதிரியாக வரைந்து வைப்பதும் இதுவே ஆகும்.

ஐந்து மீன்களுக்கும் ஐந்து பகுதிகள் சமதூரத்தில் அமைக்கப்படும்.

இப்பாட்டில் வாரணநாதன் என்பது ஐராவணம் எனும் யானையை உடைய சிவன் என்று பொருள்படுவதாகும்.

வெளியில் வகுக்கப்படும் இக்குண்டம் ஒன்பது வகைகளையும் கற்பனையாக உடம்பிற்குள் பாவித்துச் செய்தால் பிரபஞ்சத்தையே தனக்குள் காணும் பயனை அந்த யோகி அடைவான் என்று கூறுகிறார்.

அப்பாடல் வருமாறு:

" உகம் கண்ட ஒன்பது குண்டமும் ஒக்க
அகம் கண்டயோகி உள்நாடி எழுப்பும்
பயம் கண்டுகொண்ட இப்பாய்கரு ஒப்பச்
சதம் கண்டு கொண்டது சாதனம் ஆமே "

(திருமந்திரம் 1033)

இப்படி வெளியில் செய்யும் யாகத்தை உடம்பிற்குள் செய்பவர் பல யுகங்கள் மூத்திடும் அளவு அழியாது இருப்பவர் என்று புகழ்கிறார்.

" பார்த்த இடம் எங்கும் பரந்து எழுசோதியை
ஆத்தம் அது ஆகவே ஆய்ந்து அறிவார் இல்லை
காத்து உடல்உள்ளே கருதி இருந்தவர்
மூத்து உடல்கோடி உகம் கண்டவாறே "

(திருமந்திரம் 1032)

இதில் ஆத்தம் (ஆப்தம்) என்பது பெருமைக்குரியது என்று கருதிட வேண்டும்.

எங்கும் சோதி வடிவில் இறைவன் எல்லா அணுக்களிலும் விளங்குகிறான்.

இதை நம்பி எல்லாப் பொருளையும் தியானித்து அந்தச் சோதியை உணரலாம்.

" கண்டன எலாம் மோன உருவெளியது
ஆகவும் கருதி அஞ்சலி செய்குவாம் "

என்று தாயுமானவர் கூறுவதாலும் அறியலாம்.

" அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசமாய்
ஆனந்த பூர்த்தியாகி உள்ளது "

என்றும் தாயுமானவர் கூறுவதை உணர்க.

யோகம் செய்யும்போது எல்லாப் பொருள்களிலும் உள்ள சோதியை உணரலாம். அப்படி உணர்வதே ஆனந்தமாக வந்து பூர்த்தியாகி நம்மில் நிறையும் என்றார் என்க.

இப்படி உள்மார்க்கமாகச் செய்யும் யாக குண்டத்தின் பயனும் கூறுகிறார்.

நமக்குப் பெருஞ்செல்வமாக வருவது உடம்பிற்குள் வளரும் யாக நெருப்பே யாகும்.

இது பரமகுருவால் நமக்குள் அமைக்கப் பெற்ற சாதனமாக (கருவியாக)க் கருத வேண்டும்.

அப்படி நம் அறிவில் அந்த யாகத் தீ பொருந்தும்போது உலகையே ஆளும் செல்வப் பயன் கிடைக்கும் என்றார்.

அப்பாடல் வருமாறு :

" மாதனமாக வளர்கின்ற வன்னியைச்
சாதனமாகச் சமைந்த குரு என்று
போதனம் ஆகப் பொருந்த, உலகு ஆளும்
பார்தனம் ஆகப் பரிந்தது பார்த்தே "

(திருமந்திரம் 1031)

மூலாதாரத்திலிருந்து சுழுமுனை நாடி ஆறு ஆதாரங்களையும் ஊடுருவிச் சென்று (கபாலத்தில்) தலை உச்சியில் முடியும்.

இதில் சுழுமுனை நாடி கொடிபோல் ஆறு யோக ஆதாரங்களையும் தழுவிச் செல்வதால் "கொடி ஆறு சென்று குலவிய குண்டம் " என்று குறிப்பிடுகிறார்.

அதாவது சுழுமுனை நாடியில் சிவந்த சுடர் ஒன்று கீழிருந்து மேல் வரை செல்வதாகப் பாவிப்பதால் இதைக் குண்டம் என்றார்.

தோன்றும் இடத்தில் - மூலாதாரத்தில் - மேல் நோக்கிய முக்கோணமும் தலைஉச்சி உள்ளே கீழ் நோக்கிய முக்கோணமுமாக இருந்து இரு கோணங்களையும் சுழுமுனை நாடி. இணைக்கும் என்பதை "அடிஇரு கோணமாய் அந்தமும் ஒக்கும்" என்றார்.

இதை அடியில் ஒரு கோணமும் அந்தத்தில் ஒரு கோணமுமாக இருகோணம் என்று உணர்க.

மூலாதாரம் முதல் தலை உள்பகுதி முடிய ஏழு ஆதாரங்கள் உள்ளன.

| | |
|---|---|
| உடம்பு ஆதாரம் | 6 |
| சகஸ்ராரம் (தலை) | 1 |
| | 7 |

இந்த ஏழுமே ஏழு உலகங்களாகக் கருதி அந்த ஏழு உலகங்களிலும் யாக நெருப்பு மூள்வதாகப் பாவிக்க வேண்டும். இதை (மடியாது) மாறாது பாவித்துக் கண்டவர்கள். இந்தப் பிரபஞ்சத்தையே செல்வமாகப் பெற்றவர் ஆவர் என்றார்.

அப்பாடல் வருமாறு :

" கொடி ஆறு சென்று குலாவிய குண்டம்
அடி இருகோணமாய் அந்தமும் ஒக்கும்
படி ஏழ்உலகும் பரந்த சுடரை
மடியாது கண்டவர் மாதனம் ஆமே " (திருமந்திரம் 1030)

இதில் குலாவிய என்பது தழுவிய என்று பொருள் தரும். மாதனம் அவர்க்குக் கிடைக்கும் என்றும் உலகிற்கு அவர் இருப்பதே பெரிய செல்வமாகும் என்றும் கொள்க.

புறப்படும் இடத்தில் சிறிதாகத் தெரிவது (பாலப்பருவம்) குழந்தைப் பருவம் என்றும் இந்த சோதிச்சுடர் முடியும்போது பெரிதாகத் தெரிவது முழு வளர்ச்சியடைந்த உத்தம வடிவம் என்றும் கூறினார்.

பெரிய வடிவிற்கும் சிறிய வடிவிற்கும் நடுவில் நடுவகைப்பட்ட வடிவில்இச்சுடர் இருக்கும்.

எனவே, தொடங்கும் இடத்தில் ஏழில் ஒருபகுதி அளவாகத் தொடங்கி வரவர ஏழுமடங்கும் நிறைவாகும்படி திட்டம் செய்து கொண்டு ஓர் ஒளித்தூண் நிமிர்ந்து நிற்பதாகக் கருதுக.

இதை விளக்கும் பாடல்:

" உத்தமன் சோதி உளன்ஒரு பாலனாய்
மத்திமன் ஆகி மலர்ந்து அங்கு இருந்தனன்
பச்சிமதிக்கும் பரந்து குளிர்ந்தன
சத்திமான் ஆகத் தழைத்த கொடியே " (திருமந்திரம் 1029)

இப்பாடலில் கொடியே என்று முடிவதைக் காண்க. நேராகக் கீழிருந்து மேல் வளர்வதாலும், குண்டலினி சக்தியாகிய பெண் ஆகையாலும் இதை இப்படிக் கூறினாராம். பச்சிமதிக்கு = கிழக்கு அதாவது உடலின் முன்பக்கமுமாம்.

கடல் சூழ்ந்த உலகம் ஏழையும் தன் உடம்பாகக் கொண்ட கடவுளைச் செயல் செய்வதில் திருந்திய ஞானம் உடையவர்கள் பொய்மையற்ற அப்பொருளை (கடவுளை)க் கலந்துள்ளார்கள். ஆகவே நீங்களும் அப்படிச் செய்யுங்கள்.

" மெய்கண்ட மாம் விரிநீர் உலகு ஏழையும்
உய்கண்டம் செய்த ஒருவனைச் சேருமின்
செய்கண்ட ஞானம் திருந்திய தேவர்கள்
பொய்கண்டம் இல்லாப் பொருள் கலந்தாரே "
(திருமந்திரம் 1027)

என்பதே அப்பாடலாம்.

சோதி வடிவமே கடவுள். எதனாலும் செய்யப்படாத ஒளி சூரிய ஒளி - அதுவும்கூடச் சில மூலப் பொருள்களால் கடவுள் செய்து வைத்ததே ஆகும்.

அப்படி இல்லாமல் உடம்பிற்குள் உண்டாகும் இயற்கை ஒளி வெப்பம் தராமல் சாந்தம் தருவதாகும்.

அதனால் இது கடவுளே என்று கொள்ளவேண்டும். இது கடவுள் என்று கருதுபவர்க்குக் கிடைக்கும் ஆகையால் ''முத்த நற்சோதி முழுச்சுடர் ஆயவன்'' என்றார். அதாவது முத்திதரும் நலமான சோதியாகிய முழுமையான சுடர் ஆகக் கடவுள் விளங்குகிறான் என்றார்.

இதையே யோகமாகச் செய்யக் கற்று, அதையே நினைத்துச் செய்பவர்கள் கருத்துள் அக்கடவுள் வீற்றிருப்பான் என்பதைக் 'கற்று உற்று நின்றார் கருத்துள் இருந்திடும்' என்றார்.

கருத்தில் கடவுள் ஏறியதும் உலகப் பற்றுக்களை நீக்கிவிட முயற்சி உண்டாகும். அப்படிச் செய்தபின் உடம்பில் தோன்றிய அந்த ஒளியையே பற்றியபடி சென்று பேதஉணர்வு (பகை உணர்வு) ஏதும் இல்லாது இருப்பவர் கடவுளைக் கலந்து இருப்பவராகக் கொள்வர்.

" முத்த நற்சோதி முழுச் சுடர் ஆயவன்
கற்று உற்று நின்றார் கருத்துள் இருந்திடும்
பற்று அறநாடிப் பரந்து ஒளியூடு போய்ச்
செற்று அற்று இருந்தவர் சேர்ந்திருந்தாரே "

(திருமந்திரம் 1025)

மனம் எதை இடைவிடாது நினைக்கிறதோ அதையே சென்று அடையும். கடவுளும் தன்னை யார் நினைக்கிறார்களோ அங்கே போய்ச் சேர்வார்.

இரு பொருளும் இப்படி ஒரே இயற்கை உடையவையாய் இருப்பதால் சோதியைக் கடவுளாய்க் கருதியவர் மனத்தில் கடவுள் போய்ச்சேர்வான் என்றார்.

அவனைத் தவிரப் பிற பற்றுகளில் மனம் ஈடுபட்டால் அவன் நம் கருத்தைவிட்டு விலகுவான் என்பதை மூன்றாம் அடியில் கூறினார்.

பகைமையோ வேற்றுமையோ வேண்டுதல் வேண்டாமை உணர்வோ இல்லாமல் இருப்பதே கடவுளைக் கருத்தில் தக்க வைத்துக்கொள்ளும் வழி என்பதை நான்காம் அடியில் கூறினார்.

உடம்பில் தோன்றும் தீச்சுடரும் யாக குண்டத்தில் உடம்பிற்கு வெளியில் மந்திர உச்சாடணத்தில் வளரும் தீயும் சிவம் என்றே கருதுவது மரபு.

யாக குண்டத்துத் தீயும் இயற்கையாக இருக்க வேண்டும் என்பதால் தீக்கடை கோல்களைத் தேய்ப்பதாலும், சிக்கிமுக்கிக் கற்களைத் தேய்ப்பதாலும் தீயை வளர்ப்பது மரபாக முன்பு இருந்தது.

தீப்பெட்டியில் உள்ள இயற்கைப் பொருள்களைத் தீட்டுவதாலும் எண்ணெய் நெய் ஆகியவற்றில் ஊறிய பஞ்சுத்திரியில் எரிவதும் ஓரளவு இயற்கையான நெருப்பேயாகும்.

தீயைஉருவாக்கும் மூலப்பொருள்கள் இயற்கையாக இப்பொருள்களில் அமைந்துள்ளன.

அவற்றையே நாம் பயன் கொள்கிறோம். எனவே, இன்றுவரை மின்சாரவிளக்கை விடாமல் மங்கலச் சடங்குகளில் இயற்கை ஒளியை நாம் போற்றுகிறோம். அதற்கு இதுவே காரணம்.

எனவே, இயற்கையான இந்த உடம்பில் வேறு முயற்சி யில்லாத மனத்தால் பாவிக்கும் யோகத்தால் உண்டாகும் தீச்சுடர் மிகவும் இயற்கையாகும்.

சூரிய ஒளியைவிட மிகவும் உயர்ந்தது யோகத்தால் பாவிக்கப் பெறும் இயற்கை ஒளியே ஆகும்.

உடம்பில் உள்ள அணுக்களில் நெருப்புச் சக்தி மறைந்து கிடக்கிறது. மனத்தின் பாவனையால் அந்தச் சக்தியை வெளிக் கொண்டுவர முடியும். அவற்றைத் திரட்டி உடம்பின் நடுவே ஒளித்தூணாகச் செய்யமுடியும்.

உடம்பின் உச்சிவரை இத்தூண் கீழிருந்து புறப்பட்டு உயர்கிறது. உச்சியில் சிவன் பகுதியும் கீழே பிரமன் பகுதியும் நடுவே விஷ்ணு பகுதியுமாக இருப்பதால் சிவனின் அடியும் முடியும் மற்ற இருவர் அறியவில்லை என்ற புராணக் கதை எழுந்தது.

சுழுமுனை நாடி மூலாதாரத்தில் தோன்றுமிடம் முதலாகத் தலை உச்சிவரை ஓர் ஒளித்தூணாக இருப்பதைப் பாவிப்பதும் நவ குண்டங்களில் ஒன்றேயாகும்.

பஞ்சகோண குண்டத்தை உடம்பின் நடுவே தொப்புள் பகுதியில் அமைத்து, அதில் அடுக்கடுக்கான ஐந்து குழுக்களைச் சேர்க்க வேண்டும்.

**அஞ்சு குழுக்களாவன:**

1. சுவை, ஒளி, ஊறு, '(உடம்பின் தொடுஉணர்வு) ஓசை, நாற்றம் (மூக்கால் நுகர்வது) என்ற ஐந்தும் ஐந்து குண்டங்களிலும் நிரப்பவேண்டும்.

2. நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்ற ஐந்தும் முன் கூறியவற்றிலிருந்து தோன்றிய உருவ முள்ள மகா பூதங்கள் ஆகும்.

   (நிலம் = நாற்றம், நீர் = சுவை, நெருப்பு = ஒளி, காற்று = ஊறு, ஆகாயம் = ஓசை) என்று இணைத்து அந்தந்தக் குண்டங்களில் இடுவதும் தேவை.

3. முதல் குண்டத்தில் நிலம், நாற்றம் அத்தோடு மூக்கையும் சேர்க்கவும் - நீர், சுவை உள்ள குண்டத்தில் வாயையும் வைக்க வேண்டும். - மூன்றாம் குண்டத்தில் நெருப்பு, ஒளி கண் மூன்றும் சேர்க்க வேண்டும். நான்காம் குண்டத்தில் காற்று, ஊறு, தோல், ஆகிய மூன்றையும் சேர்க்கவும் - ஐந்தாம் குண்டத்தில் ஆகாயம், ஓசை காது ஆகியவற்றையும் சேர்க்க வேண்டும்.

இப்படி ஐந்து குண்டங்களிலும் ஒவ்வொன்றிலும் மூன்று சேர்த்ததாக மனத்தில் திடம் பண்ணிக்கொள்ள வேண்டும்.

4. முதல் குண்டத்தில் நிலம், நாற்றம், மூக்கு மலவாய் - இரண்டாம் குண்டத்தில் நீர், சுவை, வாய், சிறுநீர்த்துளை - மூன்றாம் குண்டத்தில் நெருப்பு, ஒளி, கனல், கைகள் - நான்காம் குண்டத்தில் காற்று, ஊறு, தோல், கால்கள் - ஐந்தாம் குண்டத்தில் ஆகாயம், ஓசை காது, நாக்கு - என்று இப்படிச் சேர்க்கவும்.

இதை வலிமை செய்வதற்கு, சிறு நீர் விடும்போதெல்லாம் ஓம்வம்ப்ருத்வி (நிலம்) ஆத்மிகாயை நமஹ என்ற மந்திரம் கூறுக. மலம் வெளியேற்ற நேரிடும்போது ஓம் வம் அமிர்தாத் மிகாயை நமஹ என்ற மந்திரம் கூறுக - காலையில் எழும்போதும் கைகளால் வேலை செய்யத் தொடங்கும் போதும் கைகளை நினைத்து ஓம் ரம் அக்னியாத் மிகையை நமஹ என்று கூறுவதாம் - காலையில் எழும் போதும் நடக்கத் தொடங்கும்போதும் கால்களை நினைத்து ஓம்யம் வாய் வாத்மிகாயை நமஹ என்று கூறுவதும் - காலையில் எழும்போதும் தலையை நினைக்கும்போதும் ஓம் ஹம் ஆகாசாத் மிகாயை நமஹ என்றும் கூறுக.

5. முதல் குண்டத்தில், நிலம், நாற்றம், மூக்கு, மலவாய், அகங்காரம் - இரண்டாம் குண்டத்தில் நீர், சுவை, வாய், சிறுநீர் சித்தம் - மூன்றாம் குண்டத்தில் நெருப்பு, ஒளி, கண், கை, புத்தி - நான்காம் குண்டத்தில் காற்று, ஊறு, தோல், கால்கள், மனம் - ஐந்தாம் குண்டத்தில் ஆகாயம், ஓசை, காது, நாக்கு, உள்ளம் - என ஐந்திலும் ஐந்து ஐந்தாக அடுக்கி அமைத்துக் கொள்ளவேண்டும்.

இதையே "அஞ்சு இட்ட கோலம் அளப்பன ஐ யைஞ்சும்" என்று கூறுகிறார். இவை குண்டங்களில் நிரப்பப் பெறவேண்டும் என்பதைக் கீழ்வரும்பாடலின் இரண்டாம் அடியில் கூறுகிறார்.

இப்படி ஆன்மதத்துவம் 25-ம் ஐந்து குண்டங்களில் நிரப்பப்பெற்றுத் தியானம் செய்தால் பஞ்சில் நெய் நனைந்ததும் அது எரிவது போல் உடம்பில் பரஞ்சுட ராகிய சிவசோதி தோன்றும் என்றார்.

ஆன்ம தத்துவம் 24தான். ஆன்மாவின் அறிகுறியாகிய உள்ளம் சேர்ந்து 25 என்க. இப்படிப் பஞ்ச கோணகுண்டம் உடம்பில் நிறுவித் தியானிப்பதால் நெருப்பு சிவமாக மூளும் அதையே நினைந்து ஒன்றினால் முத்தியாகிய பயனும் கிடைக்கும் என்றார்.

அப்பாடல் வருமாறு:

" அஞ்சுஇட்ட கோலம் அளப்பன ஐயைஞ்சும்
அஞ்சிட்ட குண்டம் மலர்ந்து அங்கு இருத்தலால்
பஞ்சுஇட்ட சோதி பரந்த பரஞ்சுடர்
கொஞ்சிட்ட வன்னியைக் கூடுதல் முத்தியே "

(திருமந்திரம் : 1024)

யாக குண்டங்களில் இவை இருபத்தைந்தும் நிறைவதாகக் கருதும் போது ஆன்மதத்துவங்களாகிய அந்த இருபத்து ஐந்தும் நம் ஆன்மாவும் வேறு வேறாக உள்ள உணர்வு உண்டாகும். இதைத் தத்துவ நிக்கிரகம் என்றும் கூறுவர். தத்துவங்களை நீக்கி நிறுத்துதல் என்பது இதன் பொருள்.

அஞ்சிட்ட கோலம் என்றதால் அவற்றிற்கு உரிய நிற ஒளிகளையுமம இணைத்துக் கொள்ளவேண்டும்.

முதல் குண்டத்தில் ஆரஞ்சுநிறம் - இரண்டாம் குண்டத்தில் பச்சை - மூன்றில் சிவப்பு - நான்கில் நீலம் - ஐந்தில் மஞ்சள் என்றும் கொள்க.

ந - பச்சை
ம - நீலம்
சி - சிவப்பு
வா - மஞ்சள்
ய - ஆரஞ்சு

என்ற எழுத்துக்களை அந்த அந்தக் குண்டத்திற்கும் இணைத்துக் கொள்க.

'அஞ்சிட்ட குண்டம் மலர்ந்து'

என்பதால் இதைக் கொள்க.

இந்த மந்திரங்களை உச்சரிப்பதால் இந்த குண்டங்களின் ஒளி சிறக்கும். யாவும் கலந்து சிவந்த ஒளியே சுழுமுனை நாடியில் விளங்கும்.

இவை ஐந்துகுண்டம் மணிபூரகத்தில் (தொப்புளில்) வட்டமாக நிகழ்வதால் சிவந்த ஒளி சுழுமுனை நாடி வழியாக மேலே ஏறிச் செல்லும் என்று உணர்க.

மூன்றாவதாக ஒரு நவகுண்டம் இதில் கூறுகிறார். தொப்புளில் (மணிபூரகம்) பத்துக் குண்டம் அமைத்து, மார்பு நடுவில் உட்புறமாக எட்டுக் குண்டம் அமைத்து தலையின் உச்சியில் கீழ்நோக்கிய இடத்தில் நான்கு குண்டம் அமைத்து யோகத்தில் யாகம் செய்வது புதுமையான நவ குண்டம் ஆகும்.

ஒரே நேர்கோணத் தண்டில் பல நெருப்புத் தட்டுகள் ஏற்றிக் கோயில் அர்ச்சனையில் காட்டுவது போல இதைக் காணவேண்டும்.

இதை விளக்கும் பாடல் வருமாறு :

" பத்துஇட்டு அங்கு எட்டு இட்டு நால் இட்டு மூன்று அதன்
மட்டு இட்டு குண்டம் மலர்ந்து எழுதாமரைக்
கட்டிட்டு நின்று கலந்தமெய் ஆகமம்
பட்டிட்டு நின்றது பார்ப்பதி பாலே" (திருமந்திரம் : 1022)

ஏழு ஆதாரங்களில் இருந்து, ஒளிகள் தோன்றி இக்குண்டங்களில் நிறைவதாகக் கருத வேண்டும்.

ஆறு ஆதாரம் + சகஸ்ராரம் ஒலி ஏழு கொண்டதாம்.

இவை ஏழும் ஏழுஉலகமும் அடங்கியதாகக் கொள்வதும் வேண்டும்.

1. பூ } இவை நாம் இருக்கும் உலகம்; அதற்கும்
2. புவ } கீழ் உள்ள உலகம்
3. சுவர்க்க லோகம்
4. மகா லோகம்
5. தப லோகம்
6. ஞான லோகம்
7. சத்ய லோகம்

இவை ஏழும் சொல்லிப் பழகுவதால் அந்த உலகத் தொடர்புகள் நமக்கு உண்டாகும்.

சூரிய காயத்திரி மந்திரம் ஓதுவோர் பூர்புவ என்ற இந்த ஏழையும் பிரித்தும் 'பூர்ப் புவஸ்வரோம்'என்று சேர்த்தும் கூறும் வழக்கம் உண்டு. உடம்பின் கீழ்த்தளத்தில் பார்வதியும் மேல்தளத்தில் சிவமும் உள்ளதாக நினைத்து, இந்த யாககுண்டத்தை பாவிக்கவேண்டும். கடவுள் பிரபஞ்சம் முழுதும் உள்ளும் புறமுமாக உள்ளவன். அவனை முழுதுமாக அளக்கவோ அறியவோ முடியாது.

அவனோடு தொடர்புடைய ஒரு சிறுபொருளைக் கூட அவனே என்று முழுமையாக உணர்ந்து தியானிப்பதால் அவனை உணர்வால் அடைய முடியும்.

உள்ளும் புறமுமாகவும் இதைக் காணலாம்.

திருப்பெருந்துறை யாகிய ஆவுடையார் கோயிலில் ஒருமேடை மட்டுமே இருக்கும். அதன்நடுவில் ஒருமரக்கால் (நெல் அளக்கும் கருவி) கொண்டுவந்து கவிழ்ப்பார்கள் அதன் உள்ளே உள்ள வெளியும் வெளியில் உள்ள பெருவெளியும் பக்தி நினைவால் நிறைந்து சிவத்தின் அடையாள மாகிவிடும். இதற்கே அன்னாபிஷேகம் செய்து யாவரும் உண்பர்.

சீர்காழிக்கு அருகில் உள்ள திருக்குருகாவூரில் இப்படி ஒரு மேடையாகிய வெளியையே சிவம் என்று ஞானசம்பந்தரும் சுந்தரரும் பாடியுள்ளனர்

சிவத்தலமான்மியத்தின்படி காஞ்சிபுரத்தில் ஓர் வெளியை இப்படி வணங்கியதைக் காண்கிறோம்.

இரண்டையும் 'வெள்ளடை' என்றே வழங்கினர். வெளியாக அடைந்து உள்ளதே வெள்ளடையாகும்.

இன்றும் இராமநாதபுரம் மதுரை முதலிய மாவட்டங்களில் இப்படி ஒருமேடை மட்டும் கட்டி அதில் வழிபாடு செய்கின்றனர்.

இப்படியே நம் உடம்பில் உள்ள வெளியையும் கடவுளாகக் கருதி, யோகம் செய்ய வேண்டும் இதனால் எல்லா உலகங்களையும் கொண்ட பிரபஞ்சத்தையும் அதைத் தன் கோயிலாக - உடலாகக் கொண்ட கடவுளையும் உணர்ந்து வணங்கலாம் என்கிறார்.

" மேல்அறிந்து உள்ளே வெளிசெய்த அப்பொருள்
கால் அறிந்து உள்ளே கருத்துஉற்ற செஞ்சுடர்
பார் அறிந்து அண்டம் சிறகுஅறநின்றது
நான் அறிந்து உள் எழ நாடிக் கொண்டேனே "

(திருமந்திரம் 1007)

இப்பாடலில் உடம்பில் உள்ள வெளியை வணங்குவதைக் கூறினார்.

இந்த வெளிகளில் எல்லாம் சோதி நிறைந்ததாகவும் அதுவே ஒளித் தூணாக நடுநாடியாக நின்றதாகவும் தியானிப்பதே இந்த நவ் குண்டம் ஆகும்.

நவ குண்டம் என்பது ஒன்றல்ல, வேறுவேறாகப் பலவாகும் என்பதையும் முதல் பாடலில் கூறினார்.

" நவகுண்டம் ஆனவை நான்உரை செய்யின்
நவகுண்டத்துள் எழுநல் தீபம் தானும்
நவகுண்டத்துள் எழுநன்மைகள் எல்லாம்
நவகுண்டம் ஆனவை நானுரைப்பேனே "

(திருமந்திரம் 1005)

இதனால் நவ குண்டம் பல என அறிக.

இந்தத் தியானத்தின் பயன் ஏழு உலகங்களையும் ஆக்கி அழிக்கவும் செய்யலாம் இப்படி வேதம் கூறிய தியானத்தையே இதில் நானும் எடுத்துக் கூறியுள்ளேன் என்றார்.

அப்பாடல் வருமாறு :

" கொண்ட இக்குண்டத்தின் உள்ள உள்எழுசோதியாய்
அண்டங்கள் ஈரேழும் ஆக்கி அழிக்கலாம்
பண்டையுள் வேதம் பரந்த பரப்புஎலாம்
இன்றுசொல் நூலா எடுத்துரைத்தேனே "

(திருமந்திரம் 1008)

வேதத்தில் பல விடத்திலும் கூறியதையே இங்கு எடுத்துக்கூறுவதாகக் கூறினார்.

பதினாறு தாமரைகள் கொண்ட விசுத்தி என்ற தானத்தில் பதினாறு குண்டங்கள் இருப்பதாக உணர்ந்து தியானம் செய்தால் சந்திரனுக்குரிய பதினாறு கலை உணர்வும் கிடைக்கும். இதன் பயனாகப் பழைய வினைகள் சேராமல் நீங்கும் என்றார்.

" எடுத்த இக்குண்டத்து இடம் பதினாறில்
பதித்த கலைகளும் பாலித்து நிற்கும்
கதித்து அனல் உள் எழக் கண்டுகொள்வார்க்குக்
கொதித்து எழுவல்வினை கூட கில்லாவே "

(திருமந்திரம் 1009)

என்பதே இப்பாடலாகும்.

இனி, வேறு ஒரு நவகுண்டம் கூறுகிறார். ஒன்றை முக்கோணம் மட்டும் உடம்பிற்குள் கருதி 12 இராசிகளில் வரும் சூரியக் கதிர்களையும் தியானிக்க வேண்டும். மேஷம், ரிஷபம், மிதுனம், கடகம், சிம்மம், கன்னி, துலாம், விருச்சிகம், தனுர், மகரம், கும்பம், மீனம் என்ற இராசிகள் பன்னிரண்டையும் மனத்தால் நினைத்து இவற்றில் ஒவ்வொரு இராசிக்கும் ஒருமாத காலமாகச் சூரியன் வருவதாகப் பாவிக்க வேண்டும்.

முக்கோணத்தின் மூன்று பக்கங்களிலும் பக்கத்துக்கு நான்கு இராசியாகப் பிரித்துக்கொள்ள வேண்டும்.

12 இராசிகளாக இந்த உலகம் பிரிக்கப்பட்டுள்ளது. இவற்றைக் கருதவே உலகம் முழுவதுமான தியானம் நிறைவாகும்.

" கூடிய முக்கோணத்துள் எழுகுண்டத்துள்
ஆடிய ஐந்தும் அகம்புறமாய் நிற்கும்,
பாடிய பன்னீர் இராசியும் அங்கு எழ
நாடிக் கொள்வார்கட்கு நற்சுடர் தானே " (திருமந்திரம் 1010)

சூரிய ஒளி மாதம் தோறும் வேறுபடும். அவையாவும் இத்தியானத்தில் கலக்கும் என்றார்.

தலையைச் சுற்றி முகத்தையும் சேர்த்து வட்டமாக ஒருபேரொளி இருக்கும். பெரிய ஞானிகளின் படங்களில் இதைப் பார்க்கலாம்.

இப்படிக் கைகளிலும் உடம்பு முழுவதிலும் சிவலிங்கமாகக் கருதி அங்கும் உள்ளும் புறமும் ஒளிசூழக் கருதும் தியானமும் ஒரு நவ குண்டமே.

ஒரு லிங்கம் போல் உடலைக் கருதி, அது ஒளியால் ஆனதாகக் கருதுவதே இது.

கோயில்களில் மகாலிங்கத்தின் மேல், சுவரில் வட்டமான ஒரு பலகையில் வட்டமாகப் பல ஒளிதிகழச் செய்திருப்பதை நினைத்துக் கொண்டு இதைச் செய்யலாம்.

" நற்சுடர் ஆகும் சிரம், முகவட்டமாம்
கைச்சுடர் ஆகும் கருத்து உற்ற கைகளில்
பைச்சுடர் மேனிப் பதைப்பற்று இலிங்கமும்
நற்சுடராய் எழும் நல்லது என்றானே " (திருமந்திரம் 1011)

என்பதே அப்பாடலாகும். இத்தியானத்தின் போது உடம்பு அசையாமல் இருக்க வேண்டும் என்பதை மூன்றாம் அடியில் கூறினார்.

சிவபெருமான் உடம்பின் மேல் பல நாகங்கள் வளைந்து வளைந்து செல்வது போல உள்உடம்பில் மூலாதாரத்தில் தோன்றிச் சுவாதிட்டானமாகிய இளம்பிறை தோன்றும் இடம் முதலாக எல்லா ஆதாரங்களையும் பாம்புப் பிணையலாய் வளைந்து செல்லும்.

நடுவே சூழுமுனை நாடி சிவந்த ஒளியுடன் மேல் ஓங்குவதைக் காத்து இந்தப் பாம்புப் பிணையல் உடம்பிற்குள் செல்வதகாகக் கற்பனை செய்வது ஒருவகைத் தியானமாகும்.

கோயில்களில் கல்லில் இரு நாகங்கள் பிணைந்து போவதைப் போல் செதுக்கியிருப்பார்கள். இதைப் பார்த்து அப்படிப் பாவிக்கும் படி கூறினார்.

" மின்னா இளம்பிறை மேவிய குண்டத்துச்
சொன்னால் இரண்டு சுடர் நாகம் திக்கு எங்கும்
பன் நாலு நாகம் பரந்த பரஞ்சுடர்
என் ஆகத்துள்ளே இடம்கொண்டவாறே " (திருமந்திரம் 1013)

மூலாதாரத்தில் தோன்றிய இடா பிங்களை என்ற இரு நாடிகளே சுவாதிட்டானம் முதல் பின்னிவருவதால் இப்படிக் கூறினார். இந்த நாடிகளும் சுடர் விழும் நாகங்களாகத் தியானிக்கவும்.

இன்னொரு நவ குண்டம் வருமாறு:

சிவபெருமானின் (நடராசர்) ஊன்றிய திருவடி தொப்புளில் ஊன்றி இருக்க இடப்பாகம் தியானிப்பவர் வலப்பக்க விலாவில் முட்டி நிற்க, கைகளில் எல்லா அண்டங்களும் (உலகம்) செறிந்திருக்க, திருவடிகளுக்கும் கீழ் கடல் அலைவீச, முக்கண் கொண்ட முகம் ஒளி வீச நம்மில் சிவபெருமான் நடிப்பதாகத் தியானிப்பதாம் இது.

ஆறு கோணத்தை மார்பு நடுவே தியானித்து, அதில் 36 தத்துவங்களும் உள்ளே நிறைந்ததாகக் கருதி, யோகம் சாதித்தால் விண்ணில் இந்த உடம்பை எடுத்துப் பறப்பதுபோலும் கனம் குறைந்த சித்தி உண்டாகும்.

இதில் ஓம் என்ற பிரணவத்தையே தியானம் முழுமைக்கும் பயன்படுத்த வேண்டும்.

" நின்ற இக்குண்டம் நிலை ஆறு கோணமாய்ப்
பண்டையில் வட்டம் பதைத்து எழும்; ஆறாறும்
கொண்ட இத்தத்துவம் உள்ளே கலந்து எழ
விண்ணுளும் என்ன எடுக்கலும் ஆமே " (திருமந்திரம் 1019)

என்பதே அப்பாடலாகும்.

கடவுளை அகன்ற இடத்தில் தேடியும் காண முடியாது. அவனை அளந்து சொல்பவரும் இல்லை - அக்கடவுளை அறிவிக்கும் வேறு சொற்களும் இல்லை. இதனால் தான் அவனை அறிந்து கொள்ள முடியவில்லை.

ஆனால், சிறிதாகிய உடம்பிற்குள் பெரிய அப்பொருளைத் தியானிப்பதால் அவனை அடைய முடியும் என்பதால்தான் நவ குண்டம் முதலாகிய யோகத்தைக் கூறுகிறார்கள் என்பதாம். நவ குண்டமாகக் கூறியவை இதில் ஒன்பது பிரிவாக வந்ததையும் காண்க.

" அந்தம் இலானுக்கு அகலிடம் தான்இல்லை
அந்தம் இலானை அளப்பவர்தாம் இல்லை
அந்தம்இலானுக்கு அடுத்த சொல்தான் இல்லை
அந்தம் இலானை அறிந்து கொளாததே " (திருமந்திரம் 1021)

என்ற பாடலில் இதை அறிக.

**சிவக்கூத்து**

அசைவால்தான் இந்தப் பிரபஞ்சம் படைக்கப்பட்டது. அதனால் தான் நடராச மூர்த்தியின் வலது மேற்கையில் உடுக்கை கொடுக்கப்பட்டது.

நாதமோ அல்லது இசையோ ஓர் அசைவால் உண்டாவதே ஆகும்.

உடுக்கையைத் தோல் பகுதியில் ஓசை எழுப்பியபின் நடுவே உள்ள ஒடுங்கிய இடத்தைக் கையால் பற்றி ஆட்டுவார்கள்.

ஆகவே, இறைவன் ஆட்டுவிக்கும் அசைவு பிரபஞ்சம் முழுதும் பரவிப் பலப் பலவாகப் படைப்புத் தொழிலை மேற்கொள்ளுகிறது.

குளத்தில் நடுவே ஒரு கல்லை வீசி எறிந்தால், அது மூழ்கும்போது ஒரு சிறுவட்டம் தோன்றும். அது தனக்கருகே மற்றோர் வட்டத்தை உண்டாக்கும்.

இப்படியாக அந்தக் குளத்தின் எல்லைவரை ஓர் அசைவுப் பலப் பல அசைவுகளை உண்டாக்கும். இது போலவே கடவுளின் திருவுள்ளத்தில் தோன்றிய அசைவு பிரபஞ்சம் முழுதும் பரவியது என அறிகிறோம்.

இதயத்தின் அசைவு (துடிப்பு) உடம்பு முழுதும் இரத்தத்தை அனுப்பிக் காக்கிறது. மூச்சுக் காற்றின் அசைவு எல்லா நாடிகளையும் இயக்குகிறது.

பிராணாயாமமாக விட்டுவிட்டு மூச்சை அனுப்புவதால் எல்லா உடல் அணுக்களும் அசைந்து வலிமையும் தூய்மையும் அடைகின்றன. ஒவ்வொரு கிரகமும் அண்டமும் இப்படிப் பல அசைவுகளால்தான் சுற்றுகின்றன.

உலகின் எல்லா அசைவுகளும் திரண்டு எல்லா ஒலிகளையும் ஓசைகளையும் தூண்டுவதால் 'ஓம்' என்ற ஓர் இயற்கை ஒலி உண்டாகிறது. இதைக் கூர்ந்து நோக்கித் தியானம் செய்பவர் நாதங்களின் அசைவை அறிந்து இன்புறுவர்.

எல்லாமே அசைகின்றன. நம் உடலின் அணுக்கள் முதல் அண்டங்கள் யாவும் அசைவதால் இவைகளை இணைக்க ஓம் எனும் மந்திரம் பயன்படுகிறது.

அணுமுதல் அண்டங்கள்வரை வலம்வரும் முறையில்தான் சுற்றுகின்றன. இந்த ஒழுங்கே கடவுளின் அறிவை விளக்குகிறது. இந்த நாதத்தைப் போலவே நாதனாகிய சிவனும் நடராசமூர்த்தியாக ஆடுவதைத் தியானித்தால் பிரபஞ்சம் முழுதும் உணர இயலும் கடவுளையும் உணர முடியும்.

ஆகவே, கடவுளை நடனம் ஆடுபவராகக் காண்பது ஓர் விஞ்ஞான முறையே ஆகும். அணுவிற்குள் உள்ள அணுக் கருக்களும் அசைந்து நடமாடுவதாகவே அறிவியல் கூறுகிறது.

இறைவன் நடனம் ஆடுகிறான் என்றால் அதற்கு இடம் எது? அதுதான் வெளி. ஒரு பெண் நடனம் ஆடத் தேவை மேடை மட்டுமல்ல. அங்குமிங்கும் போகவும் கைகளை நீட்டி மடக்கவும் விரல்களில் அபிநயத்தைக் கூட்டவும் இடைவெளி வேண்டும்.

அந்த வெளியை அம்பலம் என்பார்கள். வெளி எல்லாம் ஆகாயமே ஆகும்.

ஆகவே, கடவுள் ஆகாசம் இருக்கும் இடத்தில் எல்லாம் அசைகிறான் - அதாவது நடனம் ஆடுகிறான்.

" புறத்துள் ஆகாசம் புவனம் உலகம்,
அகத்துள் ஆகாசம் எம்ஆதி அறிவு,
சிவத்துள் ஆகாசம் செழும்சுடர், சோதி,
சகத்துள் ஆகாசம் தான்ஆம் சமாதியே "

(திருமந்திரம் 2774)

உலகமாகிய அண்டம் ஆகாயத்தில் இருக்கிறது நம் மனத்திற்குள் ஆகாசமாக இறைவன் தந்த அறிவே உள்ளது. சிவத்தின் உட்பொருளாக இருப்பது சோதியே ஆகும். சமாதி யோகம் செய்யும்போது பிரபஞ்சமாகிய பர ஆகாசத்தில் தம்மையும் கரைத்துக்கொள்வார்கள் என்கிறார்.

இதனால் கடவுள் நம் உடம்பிலும் உள்ளத்திலும் எல்லா அண்டங்களும் தங்கியுள்ள ஆகாசங்களிலும் நடனம் ஆடுகிறான் என்பதாம்.

நம் உடம்பில் இரைப்பை, இதயம், குடல்கள், நாடிகள், இரத்தக் குழாய்கள், எலும்புகளின் உள்பகுதி, மூளை, நுரையீரல் ஆகியவை என எல்லா இடைவெளிகளும் அகாசமே. ஓர் அணுவுக்கும் மற்றோர் அணுவுக்கும் நடுவில் உள்ள நுண்ணிய இடமும் கூட ஆகாசவெளியே ஆகும்.

உடம்பிலும் உள்ளத்திலும் ஆகாசம் இருப்பதால் அங்கே ஓம் என்ற அசைவும் இருக்கும். அதன் வெளிப்பாடாகிய நெருப்பும் இருக்கும். இதனால் அவை இயங்கவேண்டிய நியதியும் (நீதி) இருக்கும். ஆகவே, அங்கெல்லாம் இறைவன் ஆட்டமும் இருக்கும் என அறியலாம்.

" உள்ளத்துள் ஓம் என ஈசன் ஒருவனை
உள்ளத்துளே அங்கி ஆய ஒருவனை
உள்ளத்துளே நீதி ஆய ஒருவனை
உள்ளத்துளே உடல் ஆகாசம் ஆமே "

(திருமந்திரம் 2766)

இப்பாடலால் உடல் உள்ளம் எங்கும் சிவன் திருநடம் இயற்றுவதை அறியலாம்.

இப்படி உணர்வதன் பயன் கூறுகிறார்.

" இருதயம் தன்னிலே நின்ற பிராணன்
கரசரண் ஆதி கலக்கும் படியே
அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனாய் எங்கணும் கூத்துஉகந் தானே "
(திருமந்திரம் 2723)

மூச்சை இழுக்கும்போது நமக்குள் எழும் பிராணன் என்னும் சக்தியுள்ள காற்றும் மூச்சுக் காற்றில் கலந்து இரத்த அணுக்களில் நிறைந்து இதயத்திலிருந்து கை கால் முதலிய நீண்ட பகுதிகள் வரை சென்று கலக்கின்றது.

இதை (அரதன மன்று) 'ரெத்தின மேடை' என்று கூறுகிறார். அவன் மாணிக்க நிறமுடையவன் என்கிறார். காரணம் இரத்தத்தின் செய்கையை இயக்குவதால் ஆகும்.

இதனால் இறைவன் உடம்பெங்கும் கூத்தை மகிழ்ந்து ஆடினான் என்பதாம்.

பலவித நடனங்களாகப் பல செய்கைகளை இறைவன் செய்வதை உடம்பில் உணர்ந்து அறியும்போது நம்மிடம்இருந்த பற்றுக்கள் நீங்கிப்போகின்றன என்றார்.

" ஆடிய காலும் அதில்சிலம்பு ஓசையும்
பாடிய பாட்டும் பலவான நாட்டமும்
கூடிய கோலம் குருபரன் கொண்டாடத்
தேடியுளே கண்டு தீர்ந்தற்ற வாறே "(திருமந்திரம் 2722)

உடம்பிற்கு உள்ளே மட்டுமன்றித் தலைக்கு மேல் ஒருசாண் அளவு உயரம் வரை ஒளிச்சுடராக நடமாடுகிறான். எனவே, நம் தலை இறைவனுக்கு மேடையாகும்.

இது வேதாந்த நடனம் என்றார். உடம்பில் உள்ள பல மூலகங்கள் ஆவியாகி உடல் முழுதுமாக வெளியேறுகின்றன. அவைகளைவிட அதிக அளவு தலைவழியே வெளியேறுகின்றன.

தலையில் பிற உறுப்பிலிருந்து வெளியாகும் ஆவிகளும் வந்து திரளுகின்றன.

தலையில் தண்ணீர் ஊற்றப்படும்போது நமது மூச்சுக் காற்றில் தடை ஏற்படுவதை அறியலாம். வெளியேறும் வெப்ப ஆவி தடைப்படுவதே இதற்குக் காரணமாகும்.

" நீடும் சிரத்திடைப் பன்னிரண்டு அங்குலம்
ஓடும் உயிர்எழுந்து ஓங்கி உதித்திட
நாடுமின் நாதாந்தம் நம்பெருமான் உகந்து
ஆடுமிடம் திருஅம்பலம் தானே "

(திருமந்திரம் 2726)

நாதம், விந்து (ஒலி, ஒளி) ஆகியவையே சிவனும் சக்தியுமாம். இவை இரண்டுமில்லாமல் ஒரு பொருள் உண்டாகவோ உண்டாகியவை இயங்கவோ இயலாது.

எனவே, சிவனும் சக்தியும் இணைந்தே எங்கும் இயக்கியும் இயங்கியும் வருவதால் இருவருமே நடனமாடுவதாகக் கூறுவர்.

" இடங்கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங்கொண்டு நின்றமை நானும் அறிந்தேன்
படங்கொண்டு நின்ற இப்பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலும் தாமாய் நின்று ஆடுகின்றாரே "

(திருமந்திரம் 2730)

என்ற பாடலால் இதை அறிக.

தலையில் ஒரு சிற்றம்பலம் கூறினார். மேலும் பல அம்பலங்கள் உடம்பில் உண்டு.

மார்பு நடுவில் உள்ளது 'தகர ஆகாசம்' (சிறிய ஆகாசம்) என்பர். இதனைத் தியானித்தால் பிரபஞ்சமாகிய பேரம்பலம் முழுவதையும் உணர முடியும். 'சித்பரவியோம மாகும் சிற்றம்பலம்" என்று சேக்கிழார் இதைப் புகழ்வதால் அறிக.

இதுபோல் புருவமத்தியும் ஒரு சிற்றம்பலமே ஆகும்.

இவை இரண்டையும் சிற்சபை பொற்சபை என்ற சொற்களால் வள்ளலார் வழங்குவதை அறியலாம்.

" நெற்றிக்கு நேரே புருவத்து இடை, வெளி
உற்று உற்றுப் பார்க்க ஒளிவிடும் மந்திரம்
பற்றுக்குப் பற்றாய்ப் பரமன் இருந்திடம்
சிற்றம்பலமென்று சேர்ந்து கொண்டேனே "

(திருமந்திரம் 2732)

இப்பாடலில் புருவமத்தியைச் சிற்றம்பலம் என்றார். அதை உற்று உற்று நோக்கினால் அதில் அசைவு தோன்றும் சிவந்த ஒளி தோன்றும். உடலில் உள்ள சிவம் இருந்து நடமிடும் இடம் இது என்றார். உடம்பின் இயக்கமும் இதனால் அறியலாம் என்க.

ஆகாசத்தை அம்பலமாக்கி, மேகத்தை முயலகனாக்கித் திசைகளைத் தோள்களாக்கி, சூரிய சந்திர நட்சத்திர ஒளிகளே கண்களாகிடக் கடவுள் நடமாடுகிறான்.

இது உடம்பிற்கும் உரியதாகும்.

" அம்பலமாவது அகில சராசரம்
அம்பலமாவது ஆதிப் பிரானடி
அம்பலமாவது அப்புத் தீமண்டலம்
அம்பலமாவது அஞ்செழுத் தாமே " (திருமந்திரம் 2737)

இதில் நாம் ஓதும் திருஐந்தெழுத்துமே அவன் ஆடும் அம்பலம் என்பது காண்க.

" எங்கும் திருமேனி எங்கும் சிவசத்தி
எங்கும் சிதம்பரம் எங்கும் திருநட்டம்
எங்கும் சிவமாய் இருத்தலால் எங்கெங்கும்
தங்கும் சிவன்அருள் தன்விளை யாட்டே "

(திருமந்திரம் 2684)

சிவனால் எல்லாம் இயங்குவதை உணர்ந்தால் பார்க்கும் பொருளிலும் பார்க்கும் இடத்திலும் அவன் இயக்கத்தை - நடனத்தைச் சிவசக்தியோடு உணரலாம் என்று இப்பாடல் கூறுகிறது.

இறைவன் ஆக்கல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் ஆகிய செயல்களைச் செய்கிறான். அவை யாவும் திருவிளையாடல் என்றும் திருநடனம் என்றுமே பேசப்படும்.

" ஆனநடம் ஐந்து அகள சகளத்தர்
ஆன நடம் ஆடி ஐங்கருமத்து ஆக
ஆனதொழில் அருளால் ஐந்தொழில் செய்தே
தேன்மொழி பாகன்திரு நடம் ஆடுமே "

(திருமந்திரம் 2689)

இப்பாடலால் ஐந்தொழில் நடம் கூறியது அறிக.

" வேதங்கள் ஆட மிகுஆகமம் ஆடக்
கீதங்கள் ஆடக் கிளரண்டம் ஏழாடப்
பூதங்களாடப் புவனம் முழுதாட
நாதம் கொண்டாடினான் ஞானானந்தக் கூத்தே "

(திருமந்திரம் 2691)

கடவுள் ஆடினால் அவனைச் சூழ்ந்த வேதமும் ஆகமமும் ஆடும். அவன் பேரில் எழுந்த கீதங்களும் ஆடும். ஏழு அண்டங்களும் அவற்றில் உள்ள பூதமும் புவனமும் எல்லாம் ஆடும். இது நாதங்கள் ஆடுவதால் அறியும் ஞானானந்தக் கூத்தாகும்.

இதில் வேதம் என்பது முதல் மூன்றும் பரியாயமாக யோகம் செய்வதைக் குறிக்கும். ஏழு ஆதாரங்களே அண்டமாகும். உடம்பே புவனமாகும். (பிரபஞ்சம்) இப்படி உடம்பு முழுதும் நாத அசைவால் ஆடுவதையும் இது குறித்தது என்க.

" காளியோடு ஆடி, கனகஅசலத்து ஆடி,
கூளியோடு ஆடி, குவலயத்தே ஆடி,
நீளிய நீர் தீ கால் நீள்வானிடையாடி,
நாளுற அம்பலத்தே ஆடும் நாதனே "

(திருமந்திரம் 2708)

இறைவன் திருநடனத்தில் ஆர்வம் கொண்டவர் உடம்பில் எங்கெங்கு அசைவு தோன்றுமென்று இப்பாடலில் கூறுகிறார்.

காளி இருக்கும் இடம் மூலாதாரம் - கனகாசலம் (பொன்மலை) என்பது கபாலம் - காளி என்பது பிற நாடிகள் - குவலயம் என்பது உடம்பு முழுதும் - பஞ்ச பூதங்களாகிய சுவாதிட்டானம், மணிபூரகம், அநாகதம், விசுத்தி ஆகிய ஆதாரங்களும் என்க - அம்பலம் என்பது புருவமத்தி - இவையாகிய உடல் பகுதிகளில் திருநடமாகிய அசைவு மிகும் என்பது இதில் கூறப்பட்டதாம்.

" மேரு நடுநாடி; மிக்கஇடை, பிங்கலை
கூரும் இவ்வானின், இலங்கைக் குறிஉறும்;
சாரும் திலைவனம்; தண்மா மலயத்து ஊடு
ஏறும் சுழுமுனை இவை சிவபூமியே "

(திருமந்திரம் 2709)

மேற்பாட்டில் கூறிய செய்தியையே விவரமாகக் கூறுகிறார்.

மேரு நடுநாடி என்பது இந்திர யோனியாகி (உள்நாக்கு) உள்ள நர்க்குப் பகுதி, இடா பிங்களா என்றஇரு நாடிகள், இலங்கை என்பது மூலாதாரம், தில்லைவனம் (திலைவனம்) என்பது மார்புப்பகுதி, மாமலையம் என்பது கபாலம், இவற்றில மேலே ஏறும் சுழுமுனை நாடி ஆகிய இவற்றிலும் நடனமாகிய அசைவு தோன்றுவதால் இவை யாவும் சிவ பூமி என்று தொகுத்துக் கூறினார்.

இந்தத் திருநடனத்தை உணர்வதே அதைக் காண்பதற்குச் சமமாம். இதனால் சிவானந்தப் பேறு உண்டாகும். புளியைச் சாப்பிடும் ஒருவரைக் கண்டால் அவருக்கும் எச்சில் ஊறுவதுபோல இத்திருக்கூத்தைக் காண்பவருக்குச் சிவானந்தம் பயனாகக் கிடைக்கும்.

இதைக் கூறும் பாடல் வருமாறு:

" புளிக் கண்டவர்க்குப் புனல் ஊறுமாப் போல்
களிக்கும் திருக்கூத்துக் கண்டவர்க் கெல்லாம்
துளிக்கும் அருட்கண்ணீர் சோர் நெஞ்சு உருக்கும்
ஒளிக்குள் ஆனந்தத்து அமுது ஊறும் உள்ளத்தே "

(திருமந்திரம் 2740)

சிவானந்த மது உண்டவர்கள் தன்நிலை தடுமாறி வீழ்வதும் உண்டு. சித்தப்பிரமை பிடித்தவர் போலாவதும் உண்டு.

திருவம்பலத்தில் திருநடம் கண்டவர்களும் இப்படியே இன்பம் கொள்வர்.

கண்டவர்க்கு மட்டும் அல்லாது அதைக் கேட்டவர்க்கும் இதே அனுபவம் வரும் என்றார்.

" திண்டாடி வீழ்கை சிவானந்தமாவது
உண்டார்க்கு உணர்வு உண்டால் உன்மத்தம் சித்திக்கும்
கொண்டாடும் மன்றுள் குனிக்கும் திருக்கூத்துக்
கண்டார் வரும்குணம் கேட்டார்க்கும் ஒக்குமே "

(திருமந்திரம் 2741)

ஐந்து தொழில்களுக்கும் உரிய சிவன் திருமேனியை வரிசைப்படுத்துகிறார்.

உடுக்கையால் உலகைப் படைக்கிறவன் - அபயகரத்தால் காக்கிறான். இடது கையின் நெருப்பால் அழிக்கிறான் - ஊன்றிய திருவடியால் மறைக்கிறான் - தூக்கிய திருவடியால் அருள் செய்கிறான்.

" அரன்துடி தோற்றம், அமைத்தல் திதியாம்,
அரன்அங்கி தன்னில் அறையின் சங்காரம்,
அரன் உற்று அணைப்பில் அமரும் திரோதம்,
அரன் அடி என்றும் அனுக்ரகம் என்னே "

(திருமந்திரம் 2761)

என்பதே அப்பாடலாம்.

உருவச் சிவனின் தன்மைபற்றி இங்கே கூறுகிறார்.

குவளைமலர் தான் மலரும்போதே நான்கு இயல்களும் தவிராது மலர்கிறது. தன் இனத்திற்கு ஏற்ற இயல்பும், வடிவமும், நிறமும், மணமும் ஆகியவையே அந்த நான்கும் ஆகும்.

இது போலவே உருவங்களிலும் பிற இயல்புகள் கலந்தே வரும். சத் சித் ஆனந்தம் அருள் ஆகிய நான்கு இயல்புகளும் சிவன் உருவில் இடங்கொண்டுள்ளன.

எனவே, அவ்வுருவை நினைப்பவர்களுக்கும் இந்த நான்கு இயல்புகள் தாமாக வந்து சேரும்.

" சொரூபம் உருவம் குணம் தொல்விழுங்கி
அரியன உத்பலம் ஆமாறு போல
மருவிய சத்திஆதி நான்கும் மதித்துச்
சொருபக் குரவன் சுகோதயத்தானே" (திருமந்திரம் 2803)

கடவுள் உருவை நினைப்பதன் பயனையும் இங்கே இணைத்துக் கூறுகிறார்.

நினைத்ததும் உள்ளத்தில் ஒளியுண்டாகும். ஊழிக்காலம் முழுதும் நினைவுக்கு வரும் உருவை நினைத்தால் தேவரும் ஆகலாம். இதையுணர்த்தும் கடவுள் உணர்வை நினைப்பார் பலரில்லை.

" உருவம் நினைப்பவர்க்கு உள்ளுறு சோதி
உருவம் நினைப்பவர் ஊழியும் காண்பர்
உருவம் நினைப்பவர் உம்பரும் ஆவர்
உருவம் நினைப்பார் உலகத்துள் யாரே? (திருமந்திரம் 2801)

சிவன் சோதி வடிவினன் என்று கேட்டு நினைத்துப் பழகியிருப்பதால் உருவை நினைத்ததும் உள்ளத்தில் ஒளியும் தோன்றுவது இயல்பு.

இதுபோலவே ஓம் என்ற பிரணவத்தை மனத்தால் உச்சரிக்கும் போதும் உள்ளத்தில் ஒளி தோன்றும் என்கிறார்.

" உரையற்ற ஆனந்த ஒண் சொருபத்தன்
கரையற்ற சக்தி ஆதிகாணில், அகாரம்
மருவுற்று உகாரமகாரமது ஆக
உரையற்ற தாரத்தில் உள் ஒளியாமே " (திருமந்திரம் 2804)

உரையற்ற தாரம் என்பது மவுனமாக உச்சரிக்கும் போது என்று கொள்வதாம்.

நம் மனத்தைவிடப் பெரிய பொருளை நமக்குள் காண இடமில்லை - வான் வழிச் சென்று தேடலாம் என்றால் வானம் பெரிது, அவன் வேறு வேறு இடத்தில் செல்லமுடியும் - ஆகையால் உள்ளத்தில் ஒளிதோன்றினால் அதை அறிந்து அவனே நமக்குள் வந்து சேர்வான் என்றார். இது உள் ஒளி பெற்ற பயனாகும்.

" நான் அறிந்து அப்பொருள் நாட இடமில்லை
வான் அறிந்து அங்கே வழியுற, விம்மிடும்
ஊன் அறிந்து உள்ளே ஒளியுற ஓங்கினால்
தான் அறிந்து அங்கே தலைப்படலாமே" (திருமந்திரம் 2937)

உலகில் சூரிய, சந்திர, நட்சத்திர ஒளிகள் இருப்பதுபோல் உடம்பிலும் உண்டு.

வலது கண் சூரிய அம்ச ஒளி - இடது கண் சந்திர அம்ச ஒளி - புருவ மத்தி நட்சத்திர அம்ச ஒளியாம்.

இந்த மூன்றும் ஒன்றாகச் சேர்ந்தால் நெற்றி நடுவே உள் ஒளி தோன்றும் என்கிறார்.

" பற்றிநின்று உள்ளே பரமாய்ப் பரஞ்சுடர்
முற்றினும் முற்றி முளைக்கின்ற மூன்றுஒளி
நெற்றியின் உள்ளே நினைவாய் நிலைதரும்
மற்று அவனாய் நின்ற மாதவன் தானே" (திருமந்திரம் 2941)

" வாமத்தோர் தாமும் மது உண்டு மாளுவர்
காமத்தோர் காமக்கள் உண்டே கலங்குவர்
ஓமத்தோர் உள் ஒளிக்குள்ளே உணர்வர்கள்
நாமத்தோர் அன்றே நணுகுவர் தாமே" (திருமந்திரம் 507)

வாம மார்க்கம் எனும் சமயத்தவர் மதுஉண்பதே ஆனந்தம் என்று உண்டு மாளுவர்.

காமுகர் காமக்கள்ளே இன்பம் என்று பெண்போகம் கொண்டு கலங்குவர்.

உள்ளும் புறமும் யாகம் செய்வோர் உள் ஒளி கண்டு, உள்ளே உணர்வதால் ஆனந்தம் பெறுவர்.

சிவனின் நாமத்தை எப்போதும் கூறுவோர் மிகவும் நெருங்கி அவனை உணர்வர் என்பதாம்.

எல்லா யோகத்திற்கும் அடிப்படையை இங்கே நினைக்க வேண்டும்.

யோகத்திற்குரிய இடத்தை அடையும் வழியில் சென்று வேறு நினைவுகளால் மனம் விலகாது, கருவி ஒன்று அமைத்தது போல் இருந்து, பிறர் துன்புறுத்தினாலும் திடுக்கிட்டு உணராமல் குறிக்கோளுடன் இருப்பதே யோகத்திற்கு அடிப்படையாகும்.

" நெறிவழியே சென்று நேர்மையுள் ஒன்றி,
தறி இருந்தாற்போலத் தம்மை இருத்தி,
சொறியினும் தாக்கினும் துண் என்று உணராக்
குறி அறிவாளர்க்குக் கூடலும் ஆமே" (திருமந்திரம் 1442)

என்பதே அப்பாடலாகும்.

பல ஊழிகளை ஒருசேர உணர்ந்தவர்களுக்கும்கூட உணர முடியாதவன் இறைவன்; மும்மூர்த்திகள் ஒரு ஊழிக்காலத்தளவு முயன்றாலும் உணரமுடியாதபடி உச்சியில் இருப்பவனாம்.

" ஊழிதோறு ஊழி உணர்ந்தவர்க்கு அல்லது
ஊழிதோறு ஊழி உணரவும் தான் ஒட்டான்
ஆழி அமரும் அரி அயன் என்று உளோர்
ஊழி முயன்றும் ஓர் உச்சி உள்ளானே" (திருமந்திரம் (1443)

என்ற பாடலால் அதை அறியலாம்.

## திருவடிப் பேறு

இறைவன் திருவடி ஒளி என்றும், அருள் என்றும் ஞான மென்றும் கூறுவர்.

கடவுளுக்கு உருவம் கூறாத திருவள்ளுவர் இறைவன் திருவடியைச் சொல்லத் தவறவில்லை.

ஞானிகள் குருமார்கள் ஆகிய பெரியவர்கள்தாம் திருவடிகள் மூலம் சீடர்களுக்கு ஆசி வழங்கினர்.

கால் என்பது மூலாதாரம், சுவாதிட்டானம், மணிபூரகம் ஆகிய மூன்றின் கலப்பாகி உடம்பிலிருந்து நீண்டது - உடம்பிற்கே தாங்கும் துணையாக இருப்பது.

"பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்" என்று மாணிக்கவாசகர் கூறுகிறார். இதனால் மேற்கூறிய கருத்தை அறியலாம்.

திருவடியை மலர் என்பர். இது உடம்பின் சக்தியை மலரவைப்பது என்றும் பொருளாகும்.

குருநாதன் திருவடியைத் தலைமேல் வைக்க மாணாக்கர்கள் மிகவும் விரும்புவர்.

இறைவன் திருவடியை தம் தலைமேல் வைதது அருளுமாறு அப்பர் சுவாமிகள் திருச்சத்தி முற்றத்தில் வேண்டுகிறார்.

திருநல்லூரில் இறைவன் கேட்டுக்கொண்டபடி அப்பர் தலைமேல் திருவடி வைக்கிறான். அதில் இன்புற்று ''நனைந்தனைய திருவடி என் தலைமேல் வைத்தார்'' என்று புகழ்கிறார் அப்பர்.

பெருமாளை ஏந்தி வரும் கருடனைப் பெரிய திருவடி என்றும் இராமனுடைய அருள் தாங்கிய அனுமனைச் சிறிய திருவடி என்றும் கூறுவர்.

குருநாதன் திருவடியைத் தலையில் வைத்ததும் உள்ளத்தில் அறியாமை இருள் நீங்கும் என்றும் கூறுவர்.

" சிவந்த குருவந்து சென்னியில் வைக்க
உவந்த குருபதம் உள்ளத்து வந்தே"

(திருமந்திரம் 1574)

இறைவன் திருவடியைத் தரும்போதே தன்னை முழுவதுமாகத் தருகிறான் என்றும் ஞானமும் தந்து வலிமையும் அருளி, முடிவு இல்லாமல் வீடு பேற்றில் இருப்பாயாக என்று அருள் செய்து பாராளும் முடியையும் சூட்டினான் என்று புகழ்கிறார்.

" தாள் தந்த போதே தனைத் தந்த எம்இறை
வாள்தந்து ஞான வலியையும் தந்திட்டு
வீடு அந்தம் இன்றியே ஆள்க எனவிட்டு
அருட்பாடு இன்முடி வைத்துப் பார்வேந்து தந்ததே"

(திருமந்திரம் 1575)

என்ற பாடலில் இதை அறியலாம்.

திருவடியால் உண்டாகும் ஞானம் யோக சித்திகளின் பயன்களையும், தவப் பயன்களையும் தரும் என்று கூறுகிறார்.

" திருவடி ஞானம் சிவமாக்குவிக்கும்
திருவடி ஞானம் சிவலோகம் சேர்க்கும்
திருவடி ஞானம் சிறைமலம் நீக்கும்
திருவடி ஞானம் திண்சித்தி முத்தியே" (திருமந்திரம் 1582)

என்ற பாடலால் அறியலாம்

திருவடியை மனத்தில் பதியும்படி செய்துவிட்டால பொய் வழியில் இழுத்துச் செல்லும் புலன்கள் வழியில் போகாமல் இருக்கலாம். இதுவரை துன்புற்ற இரு வினைகளி லிருந்தும் மீட்கும் வேதாந்தத்தின் கருத்தெல்லாம் மெய்யாக அறிந்தேன் என்றார்.

வேதாந்தம் என்பது வேத முடிவாகிய யோகம் என்றும் குறிப்பாகக் கூறுவர்.

" வைத்தேன் அடிகள் மனத்தினுள்ளே நான்
பொய்த்தே எரியும் புலன்வழிப் போகாமல்
எய்த்தேன் உழலும் இருவினை மாற்றிடும்
மெய்த்தேன் அறிந்தேன் அவ்வேதத்தின் அந்தமே"
(திருமந்திரம் 1586)

என்ற பாடலால் அறியலாம்

திருவடியை நம்பினோர்க்கு எல்லா விதத்திலும் துணை செய்யும். திருவடியை நினைப்பதுவே மந்திரமாகும் - அதை எண்ணிக்கொண்டு நீர் குடிப்பதும் நீறு பூசுவதும் நோய்க்கு மருந்துமாகும் - அதுவே சாத்திர நுணுக்கம் தரும் - பிறர்க்கு வழங்குவதும் - தூய நெறியாவதும் எல்லாம் திருவடியை நம்பினாலே ஆகும்.

" மந்திர மாவதும் மாமருந் தாவதும்
தந்திர மாவதும் தானங்களாவதும்
சுந்தர மாவதும் தூய்நெறியாவதும்
எந்தைபிரான் தன் இணையடி தானே" (திருமந்திரம் 1588)

என்ற பாடலால் தெளியலாம்.

கற்பது கேட்பதை விட இந்தப் பரிசமே பெரிய பயன் தரும். சிவமாகத் தவம் கூட வேண்டாம், சிவானந்தம் கொண்டோர் பரிசமே போதுமென்கிறார்.

''நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப் பெற்றேன்'' என்ற அளவில் சித்தம் சிவமாகிவிட்டது மாணிக்க வாசகருக்கு. அதையே இவர் கூறுகிறார்.

" சித்தம் சிவமாகச் செய்தவம் வேண்டாவால்
சித்தம் சிவானந்தம் சேர்ந்தோர் அறஉண்டால்
சித்தம் சிவமாகவே சித்தி முத்தியாம்
சித்தம் சிவமாதல் செய்தவப் பேறே" (திருமந்திரம் 1628)

என்ற பாடலால் இதை அறியலாம்.

''அவன் அருளாலே அவன் தாள் வணங்கி'' என்ற திருவாசகப்படி எல்லாம் இறைவன் அருளால்தான் கிடைக்கும் என்கிறார்.

'' பிரான் அருள் உண்டெனில் உண்டு நற்செல்வம்
பிரான் அருள் உண்டெனில் உண்டு நன் ஞானம்
பிரான் அருளிற் பெரும் தன்மையும் மாகும்
பிரான் அருளாற் பெருந் தெய்வமுமாமே''

(திருமந்திரம் 1629)

'' சிவனருளால் சிலதேவருமாவர்
சிவனருளால் சிலதெய்வத்தோடொப்பர்
சிவனருளால் வினை சேரகிலாமை
சிவனருள் கூறின் சிவலோகமாமே''

(திருமந்திரம் 1633)

திருவடி சேரவும் சிவநெறி சேரவும் இவர் வழியும் கூறுகிறார். திருநீற்றைக் கவசமாக நினைத்து, திருவைந்தெழுத்து ஓதி, முறைப்படி பூசி அதனால் மகிழ்ச்சி அடைபவர் வினைகள் நீங்கப் பெறுவர் - சிவநெறியும் திருவடியும் சென்று சேர்வர் என்றார்.

'' கங்காளன் பூசும் கவசத் திருநீற்றை
மங்காமல் பூசி மகிழ்வீரே ஆமாகின்
தங்கா வினைகளும் சாரும் சிவநெறி
சிங்காரமான திருவடி சேர்வரே'' (திருமந்திரம் 1650)

என்பதால் உணர்க.

ஞானமே இல்லாதவர் சிவ வேடம் தரிப்பதால் பயனில்லை. அவர் நரகத்திற்கே போவர் என்றார். ஞானம் வேண்டும் என்று வேண்டிக்கொண்டு வேண்டுமானால் அதற்குரிய பண்பில் நடக்க வேண்டும் என்றார்.

'' ஞானமிலார் வேடம் பூண்டும் நரகத்தார்
ஞானமுளார் வேடம் இன்று எனின்நன்முத்தர்
ஞானம் உளதாக வேண்டுவோர் நக்கன்பால்
ஞானம் உளவேடம் நண்ணி நிற்பாரே'' (திருமந்திரம் 1652)

எனும் பாடலால் அறிக.

எல்லாம் அனுபவிக்க வாய்ப்பு இருந்தாலும், சிவஞானிகள் அதைச் செய்யாது, செத்தவர்கள்போல் திரிவார்கள் என்றார்.

" ஒத்துப் பொறியும் உடலும் இருக்கவே
செத்துத் திரிவர் சிவஞானியார்களே" (திருமந்திரம் 1655)

என்பதால் அறிக.

அடியவராகி இறைவன் உலகில் செல்லும் போக்கில் தெளிந்து இறைவனுக்குத் தொண்டு செய்வதே சிவ வேடமாகும்.

" அருளால் அரனுக்கு அடிமை அது ஆகி
பொருளாம் தனது உடல் பொற்பதிநாடி
இருளானது இன்றி இருஞ்செயல் அற்றோர்
தெருளாம் அடிமை சிவவேடத்தாரே" (திருமந்திரம் 1660)

என்பது அப்பாடலாம்.

எல்லாம் சிவன் செயல் என்று எண்ணி யிருப்பதால், மனம் என்ற பொருளே இல்லாமல் - பெண் உறவும் இல்லாமல் - ஆனால், மங்கையொருபாகனிடம் அன்பு மாறாமல் இருப்பவரே சிவவேடத்தார் ஆவர். தமக்கென ஒரு செயலுமின்றி இருப்பர்.

" மயல் அற்று இருள் அற்று மாமனம் அற்றுக்
கயல் உற்ற கண்ணிதன்கை இணக்கு அற்றுத்
தயல் உற்றவரோடும் தாமே தாமாகிச்
செயலற்று இருந்தார் சிவவேடத்தாரே" (திருமந்திரம் 1662)



# 3. திருமந்திரச் செய்தித் தொகுப்பு

திருமூலர் அருளிய திருமந்திரம் ஒன்பது பகுதியாக உள்ளது.

ஒவ்வொன்றும் தந்திரம் என்ற பெயரில் முதலாம் தந்திரம் .... ஒன்பதாம் தந்திரம் என வழங்கப்படுகிறது.

தந்திரம் என்பது ஆகமம் என்ற பொருள் கொள்ளத் தக்கதாகும்.

'தந்திரமாவது நீறு' என்ற ஞானசம்பந்தர் தேவாரத்தாலும் இதை அறியலாம்.

சதாசிவ ஆகமம் என்றே திருமந்திரம் பேசப்படுவதாலும் உணரலாம்.

கடவுள் வாழ்த்தை அடுத்து ஆசிரியர் தம் வரலாற்றை ஓரளவு தாமே கூறுகிறார்.

அடுத்து அவையடக்கத்துடன் வேதம், ஆகமம், மூர்த்திகள், அகத்தியம் என்பவை கூறுகிறார்.

சிவனின் வீரட்டத் தலங்களை விளக்கிச் சில புராணச் செய்திகளுக்கு வேறு விதமான காரணப் பொருள் கூறுகிறார்.

மூலக்கனலை மேலேற்றுவதே அதோமுகத் தரிசனம் என்கிறார்.

இறைவனின் ஐந்தொழில்களையும் விளக்குகிறார்.

கர்ப்பம் தரிக்கும் நிலையை இக்கால மருத்துவத்துக்கு ஏற்பச் சொல்கிறார்.

மூவகை உயிர்கள்பற்றிக் குறித்தபின், யாக்கை, செல்வம், இளமை, முதலியவை நிலையாமை உடையன, அதற்குள் உய்தி பெற வேண்டும் என்கிறார்.

உயிர் நிலைபெறும் வழி கூறுகிறார். அந்தணர் செய்கையும் வேதாந்தமும் விளக்குகிறார்.

உள்ளத்தில் பல தீர்த்தம் உள்ளன என்கிறார். அறச்செயல், அன்புடைமை, கல்வி, கேள்வி, கல்லாமை, கொல்லாமை, பிறர்மனை நயவாமை, மகளிர் இழிவு, நல்குரவு, கள்ளுண்ணாமை, சிவத்தை நிந்தை செய்யாமை, பொறை உடைமை, பெரியாரைத் துணைக் கொள்ளல், நடுவுநிலைமை முதலிய 'அறச் செய்திகள் கூறுகிறார்.

அட்டாங்க யோகங்களைத் தொகுத்தும் வகுத்தும் விரித்தும் கூறுகிறார்.

தியானம்பற்றிக் கூறுவதும் சமாதிபற்றிக் கூறுவதும் இப்பகுதியில் சிறப்பானவை.

அட்டமா சித்திபற்றி விரிவான விளக்கம் தந்துள்ளார்.

கலை நிலையும், உடல் சித்தி உபாயமும், மரணத்தை வெல்வது குறித்தும் பேசுகிறார்.

பிராணாயாம வார நியதி கூறுகிறார். கேசரி யோகம், பரியங்க யோகம் என்னும் உடல் உறவுச் செய்தி, அமுரி என்ற சிவநீர் பற்றிய செய்தி, சந்திரயோகம் பற்றிக் கூறுகிறார்.

அசபைபற்றி முழுவிளக்கம் தருகிறார். திருமந்திரத்தில் கூறப்படும் சக்கரங்களில் சிறந்ததாகிய திருவம்பச் சக்கரமும் பிரசாதயோகமும் விரிவாகக் கூறுகிறார்.

நவகுண்டம் எனும் யாகப் பகுதிவிளக்கம் கூறியபின் பலவகை சத்திகள், திரிபுரைச் சக்கரம்பற்றிக் கூறுகிறார்.

ஆதியிரவி மந்திரம், பூரண சத்தி, உடம்பில் உள்ள சக்கரங்கள், பஞ்ச சதாட்சரி மந்திரம் ஆகியவை கூறுகிறார்.

ஏரொளிச் சக்கரம், வயிரவச் சக்கரம், சாம்பவி மண்டலச் சக்கரம், புவனாபதி சக்கரம், நவாக்கரி சக்கரம் முதலிய யந்திர அமைப்புப் பற்றியும் அவற்றில் வழிபடும் முறைபற்றியும் கூறுகிறார்.

இப்பகுதி முழுவதும் சாக்த சமயத்தின் விரிவாக உள்ளது.

சுத்த சைவம் எது என்பது சொல்லி - சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றையும் அவற்றின் பொருட் செறிவாகிய சன்மார்க்கம், சகமார்க்கம், சத்புத்திரமார்க்கம், தாசமார்க்கம் என்பவற்றை விளக்குகிறார்.

பதமுத்திகளாகிய சாலோகம், சாமீபம், சாரூபம், சாயுச்சியம் ஆகிய நான்கும் கூறுகிறார்.

அருள் வீழ்ச்சியாகிய சத்தி நிபாதம் எது என்று விளக்கியுள்ளார்.

புறச் சமயங்கள் அகச் சமயங்கள் வகுக்கப்பட்டு விளக்கப்படுகின்றன.

சிவனே குருவாய் வருவான் என்று விளக்குகிறார். சிவனுடைய திருவடிச் சிறப்பை மேலும் சிறப்பிக்கிறார்.

சிவனோடு ஏகனாக நிற்பதற்குப் பயன்தரும் ஞாதுரு, ஞானம், நேயத்தை விளக்குகிறார்.

துறவின் பெருமையும் தவத்தின் மாட்சியையும் விளக்கி தவத்தை மேற்கொள்வதைக் குறித்து, அருள் மூலமே முக்தி எய்தும் முறையினைக் கூறுகிறார்.

பொய்த்தத்துவத்தையும் மெய்த்தத்துவத்தையும் பிரித்து விளக்கிப் பக்குவமாக இருப்பது எது, அபக்குவம் எது என்பவற்றைக் கூறுகிறார்.

உடம்பின் ஆதாரங்களினால் செய்யும் ஆதார யோகமும் உடம்பிற்கு வெளியில் உள்ள சூக்குமங்களில் செய்யும் யோகமும் கூறுகிறார். (நிராதாரயோகம்)

அண்டத்தையே லிங்கமாகக் காணல், உடம்பையே (பிண்ட) லிங்கமாகக் கொள்ளல், சதாசிவம் உடம்பில் புகும் நிலை உணர்தல், உடம்பில் உள்ள விந்து நாதங்களே ஆன்ம லிங்கம் என்று கூறுதல் மற்றும் ஞான லிங்கம் சிவ லிங்கம் பற்றிய செய்திகள் கூறுகிறார்.

மல நீக்கமாகிய சம்பிரதாயம் சொல்லி, உலகு முழுதும் திருவருள் இயக்கமே என்றும் அருள் ஒளியும் காட்டுகிறார்.

சிவ பூசை, குரு பூசை, மகேசுவர பூசை ஆகியவற்றை விளக்குகிறார்.

அடியார் பெருமையை நாட்டு நலமாகவே கூறுகிறார்.

பூசைக்குப் பயனாகும் முத்திரைகள், அருளை நமக்குள் வரவழைக்கும் என்கிறார்.

யோகியர்களின் சிறப்பையும் முத்தியையும் வேறுபடுத்தி விளக்குகிறார்.

சுத்த மாயையில் விந்து (ஒளி) தோன்றி, அசுத்த மாயையில் தோன்றிய மனத்தோடு ஒன்றுபடுகிறது. மனம் விந்து தத்துவத்தில்

ஒடுங்கும், எல்லாத் தத்துவங்களும் விந்துவாகிய ஒளியில்தான் உண்டாகின என்றும் கூறுகிறார்.

சுக்கிலமாகிய விந்துவைக் காப்பாற்றி, யோகத்தில் சித்தியடைதலைக் காட்டுகிறார்.

உடலில் - மனத்தில் - நம் ஞானத்தில் - சிவ இயல்பில் சூரியர்கள் உண்டு; பிண்ட ஆதித்தன், மன ஆதித்தன், ஞானாதித்தன், சிவ ஆதித்தன் என்று அவை பெயர் பெறும் என்கிறார்.

பசுவாகிய ஆன்ம நிலையை விளக்குகிறார்.

பிராணன், புருடன், அணுநிலை, சீவன், பசுவன் (சிறந்த உயிர்), போதன் (உணர்வு முற்றிய பின்) என்ற பல நிலைகளை விளக்கிக் காட்டுகிறார்.

ஐந்து இந்திரியங்களையும் அடக்குவது என்பதை விளக்கி அருளால் மட்டுமே அடக்க முடியும் என்கிறார்.

குரு, குருத்தன்மை இல்லாத குரு இவர்களை விரிவு செய்து பக்தி மார்க்கத்திற்கு உரிய ஒழுக்கம் கூறுகிறார்.

கேடு கண்டு இரங்குதலால் உடம்பில் சிவஉணர்வைப் பெறலாம் என்று குறித்து, இதோபதேசமாகச் சித்தத்தில் நிலையாக இரு என்கிறார்.

தூல உடல், சூக்கும உடல் இவற்றை விளக்குகிறார். உயிரிலேயே சிவன் வாழ்கிறான் என்று கூறுகிறார்.

கீழாலவத்தை, மத்தியாலவத்தை, சாக்ர அவத்தை, சுத்தநனவு, கேவலம், உச்சம், சுத்தம் என்ற அனுபவ நிலைகள் விளக்கப்படுகின்றன. உச்சம் என்பது தலையின் மேல் சூக்கும நிலை உணரும் பராவத்தை. மேலும் சந்திரகலை பிராவித யோகம் இவற்றை விளக்குகிறார்.

பிறகு மேலால் அவத்தையை விளக்குகிறார். இதில் உயிரே சிவம் ஆகும் என்றும் ஞான உடல் பெறலாம் என்றும் முக்திபெற்றோர் நிலையைக் கூறுகிறார்.

ஆன்ம விசாரணை பற்றி விளக்குகிறார். தொடர்ந்து பதி, பசு, பாச, நிலைகள் விளக்கப்படுகின்றன. மூவகைக் குற்றம் விளக்கியபின் தத்துவமசி என்னும் மகாவாக்கியத்தில் உள்ள 'தத்' 'துவம்' 'அஸி' என்று மூன்று சொற்களின் விளக்கத்தை கூறுகிறார்.

இதே வழியில் உடம்பிற்கு உள்ளேயும் வெளியேயும் பரம்பொருள் சிறப்பதைக் காட்டுகிறார்.

பரம் என்பது கடவுளுக்கும் ஆன்மாவுக்கும் பொருந்தும் என்கிறார்.

மூன்று துரிய நிலைகள், மூன்று முக்தி நிலைகள், மூன்று சொரூபங்கள், மூன்று கரணங்கள், மூன்று ஆனியங்களில் சிவம் நிறைதல் காட்டுகிறார்.

மூன்று பாழ்கள் காரியப் பாழ், மாயப் பாழ், போதப் பாழ் இவை எனக் கூறி, முப்பால் விட்டதும் உபசாந்தம் கிடைக்கும் என்கிறார்.

காரண காரிய உபாதிகள் நீங்கினால் உயிர் சிவம் என்பது தெரியும் என்கிறார். (தற்காலிக நிலை உபாதி எனப்படும்).

உபசாந்தம் என்பதை விளக்கி, ஆன்மா சிவமாகாது என்றும் ஆனால் சிவனின் ஆன்ம உறவுடையது என்று கூறுகிறார்.

ஒன்பது சத்தி நிலைகள் கூறுவது நவரவத்தை என்கிறார்.

சுத்த அசுத்தங்களின் விளக்கம் தருகிறார் - வாய்மையால் மல நீக்கம் பெறலாம், ஞானிகள் ஆகாமிய வினை சேராமல் காப்பர் - அவாவை அறுத்துப் பக்தியைப் பெருக்குவர் - என்கிறார்.

தத்துவமசி மகா வாக்கியத்தைச் சைவ நெறிக்கு ஏற்பக் காட்டுகிறார்.

எல்லாப் பொருள்களும் விரிந்த பர வெளியில் அடக்கம் என்பதை விசுவக்கிராசம் எனும் பகுதியில் விளக்குகிறார்.

அகவெளியை உணர்தலே குருமட தரிசனம் என்கிறார். அங்கே சிவகுருவைக் காணுவதும் சொல்கிறார்.

எல்லாம் சிவமென உணர்தலாகிய பிரணவ சமாதி கூறுகிறார்.

உள்ளும் புறமும் ஒளியே நிறைந்தது என்கிறார்.

பஞ்சவாக்கரத்தில் தூலம், சூக்குமம், அதிசூக்குமம், காரணம், மகாகாரணம் ஆகிய வகைகளைக் கூறுகிறார்.

இறைவனின் கூத்துகளில் அருள்கூத்து, சிவானந்தக் கூத்து, சுந்தரக் கூத்து, பொற்பதிக் கூத்து, திருவம்பலக் கூத்தாகிய பொற்றில்லைக் கூத்து, அற்புதக் கூத்து ஆகியவைகளை

 

விளக்குகிறார்.

உயிர் அண்டவெளியாகுதல், சிவத்தையும் வான் வடிவத்தையும், உட்பொருளையும், உணர்ந்து சிவமாகிய பேறுபெறுதல் ஆகிய விளக்கப்படுகின்றன.

உயிரில் சிவத்தை தரிசித்தல் சிவானுபூதி பெறுதல் என்பதை விளக்குகிறார்.

சிவனுக்கு அந்நியம் இல்லாமல் வாழ்தலைக் கூறினார்.

சூனிய சம்பாஷணை என்று ஒருபகுதி உள்ளது; 69 பாடல் கொண்டது.

பிறிது மொழிதல் சிலேடை ஆகிய வகைகளில் தாம் பாடிய செய்திகளை மீண்டும் குறிப்பால் கூறுகிறார்.

இந்தப் பகுதிக்கு அனுபவத்தால் அல்லது சொற்பொருள்களால் உரை காண முடியாது.

பிரபஞ்சம் முழுதும் அருள்வெள்ளம். அதில் எல்லாம் மூழ்கி உள்ளன. எனவே, எங்கும் எதிலும் சிவமே உள்ளது என்கிறார்.

சிவனின் பெருமை, இயல்பு முதலியவற்றைத் தோத்திரம் என்ற இறுதிப் பகுதியில் சொல்லி, வாழ்த்துக்களோடு இந்த நூல் முற்றுப் பெறுகிறது.

திருமந்திரத்தில் உள்ள எல்லாச் செய்திகளும் இதில் தொகுக்கப் பெற்றன. ஆனால், அவை விளக்கப்படவில்லை. விரித்தால் பெரிதாகும் என்பது கருதியே விரிக்கப்படவில்லை.

இத்தொகுப்பை அடிக்கடி மனத்தில் செப்பினால், திருமந்திரப் பொருள்கள் சிறிதளவு தெளிவாகும்.

நூலில் கூறப்பட்ட வரிசையிலேயே இத்தொகுப்பும் செய்யப் பெற்றது என அறிக.



# மெய்கண்டார்

## பொருளடக்கம்

# மெய்கண்டார்

## 1. முன்னுரை

சங்க காலத்தில் தமிழகத்தில் பண்பாடு, ஒழுக்கம், வழிபாடு சிறப்புற்றிருந்தன. அடுத்து வந்த இருண்ட காலத்தில் அவை அனைத்தும் மாறின. கி.பி.ஆறாம் நூற்றாண்டுமுதல் பல்லவராட்சி தமிழகத்தில் பரவியது. திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர் ஆகியோர் மக்களிடத்தில் மாற்றத்தை உண்டாக்கினர். சிவ வழிபாடு, சிவன்புகழ் பாடு நூல்கள் பெருகின. கி.பி. ஏழாம் நூற்றாண்டில் தென்னாட்டுக்கு வந்த யுவான்சுவாங் என்ற சீனநாட்டறிஞர் புத்தம் சமணம் செல்வாக்குப் பெற்றிருந்ததைக் குறிப்பிட்டுள்ளார். நாயன்மார்களால் புத்த சமயம், சமணசமயம் செல்வாக்குக் குறையத் தொடங்கிற்று.

பாண்டி நாட்டிலும் திருஞானசம்பந்தரால் சமணம் செல்வாக்குக் குறைந்தது; சைவம் வளர்ந்தது. திருஞானசம்பந்தரும் திருநாவுக்கரசரும் தமிழ்நாட்டில் உள்ள புகழ்பெற்ற கோயில்களுக்குச் சென்று தேவாரப் பாடல்களைப் பாடினர்; அற்புதச் செயல் பலவற்றை நிகழ்த்தினர்

பல்லவர் ஆட்சியின் வீழ்ச்சிக்குப்பின் பிற்காலச் சோழப் பேரரசு தோன்றியது. பல சிவன் கோயில்கள் கற்றளிகளாக மாற்றப்பட்டன. செம்பியன் மாதேவி அவ்வகையில் பெருந்தொண்டு புரிந்தார். இராசராசன், இராசேந்திரன் முதலியோர் பெருங்கோயில்களைக் கட்டினர். திருக்கோயில்களில் தேவாரப் பாடல்களைப் பண்ணோடு பாடப் பிடாரர் (ஓதுவார்) பலரை நியமித்தனர். சோழ மன்னர்களில் கண்டராதித்தர் திருவிசைப்பாப்

பாடியுள்ளார். சோழர் காலத்தில் முதல் ஏழு திருமுறைகள் தொகுக்கப்பெற்றன. திருமுறைகளைத் தொகுத்த நம்பியாண்டார் நம்பி அவர்களே சைவத் தொடர்பான நாயன்மார் தொடர்பான பத்து நூல்களைப் பாடியுள்ளார். கருவூர்த் தேவர் புதிதாகக் கட்டப் பெற்ற தஞ்சைப் பெரிய கோயில், கங்கை கொண்ட சோழேச்சரம் ஆகிய கோயில்களைப் பற்றியும், பிற கோயில்களைப் பற்றியும் திருவிசைப்பாப் பாடியுள்ளார்.

ஒட்டக்கூத்தர் சோழர்காலத்தில் மூவர் உலா, தக்கயாகப் பரணி ஆகியவற்றைப் பாடியுள்ளார். சேக்கிழார் பெருமான் பெரிய புராணத்தையும், கச்சியப்ப சிவாச்சாரியார் கந்தபுராணத்தையும் பாடியுள்ளனர். சோழர் ஆட்சியில் சைவம் மிகச் சிறந்த நிலையைப் பெற்றிருந்தது. கோயில் வழிபாடு ஒழுங்கு செய்யப்பெற்றது. சைவ இலக்கியங்கள் பல்கிப் பெருகின.

## முந்திய சித்தாந்த நூல்கள்

சைவத்தத்துவக் கொள்கை சங்ககாலம்தொட்டுத் தமிழகத்தில் இருந்துவந்துள்ளது. தனி நூல் எதுவும் தோன்றவில்லை. திருவியலூர் உய்யவந்த தேவ நாயனார் திருவுந்தியார் என்னும் நூலை இயற்றினார். திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனார் திருக்களிற்றுப் படியார் என்னும் நூலை இயற்றினார். ஞானாமிர்தம், திருவுந்தியார், திருக்களிற்றுப் படியார் ஆகிய மூன்று சைவ சித்தாந்த நூல்களும் சிவஞான போதத்திற்கு முன் தோன்றிய சைவசித்தாந்த நூல்களாகும்.



# 2. மெய்கண்டார் வரலாறு

தொண்டை நாட்டிற்கும் சோழ நாட்டிற்கும் நடுவே உள்ள நாடு நடுநாடாகும்; திருமுனைப்பாடி என்றும் வழங்கப் பெறும். திருநாவுக்கரசரும் நம்பியாரூரரும் இந்நாட்டில் அவதரித்தவர் ஆவர்.

" அறந்தருநா வுக்கரசும் ஆலால சுந்தரரும்
பிறந்தருள உளதானால் நம்மளவோ பேருலகில்
சிறந்ததிரு முனைப்பாடித் திறம்பாடும் சீர்ப்பாடு"

(திருநாவுக்கரசு நாயனார் புராணம் பாடல் 11)

என்று சேக்கிழார்பெருமான் பெரியபுராணத்தில் குறிப்பிட்டுள்ளார். அந்நாட்டில் பெண்ணாகடம் என்பது தேவாரப் பாடல் பெற்ற திருத்தலமாகும். விருத்தாசலத்திலிருந்து தென்மேற்கில் 17 கி.மீ. தொலைவில் இத்தலம் உள்ளது. தேவ கன்னியர், காமதேனு, வெள்ளை யானை (பெண்+ஆ+கடம்) ஆகியவை வழிபட்டதால் பெண்ணாகடம் என ஆயிற்று என்பது தலபுராணச் செய்தி. கடந்தையர் - வீரமக்கள் - வாழ்ந்ததால் கடந்தை நகர் என்ற பெயர் ஏற்பட்டது. தூங்கானை மாட அமைப்பில் கோயில் உள்ளது. அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரான கலிக்கம்பர் இத்தலத்தில் தோன்றியவர் ஆவார்.

பெண்ணாகடத்தில் சைவ வேளாள மரபில் அச்சுதக் களப்பாளர் என்பவர் வாழ்ந்துவந்தார். வாழ்க்கையில் எல்லாச் செல்வங்களும் நிறைந்திருந்த போதிலும் மக்கட்செல்வம் இல்லாத பெருங்குறை. அவருக்குக் கற்பில் சிறந்த மனைவி வாய்க்கப் பெற்றிருந்தார். திருவெண்ணெய்நல்லூர்ச் சடையப்ப வள்ளலின் உடன்பிறந்தவள் இவ்வம்மையார் என்பது மறைமலை அடிகளார் கருத்தாகும். அக்காலத்தில் திருவதிகையின் வடக்கேயுள்ள திருத்துறையூரில் சகலாகம பண்டிதர் என்பவர் சிறந்து விளங்கினார். சைவத்தையும் சித்தாந்தத்தையும் அடியார் பலருக்கு முறையாக

உபதேசித்துவந்தார்; பலருக்குச் சிவதீக்கை செய்துவைத்தார்; பலருக்குக் குலகுருவாக விளங்கினார்.

சகலாகம பண்டிதர் தம்மிடம் வருவோர் குறைகளை வினாவித் தெரிந்துகொண்டு, அவர்களுக்கு வேண்டிய நல்லறிவுரைகளை அவ்வப்போது வழங்கி வந்தார். ஆதலால் சைவ மக்களிடத்தே மிகச் செல்வாக்குப் பெற்று விளங்கினார்; அச்சுதக் களப்பாளருக்கு ஞானாசிரியராக அமைந்தார். சைவத்தின் பெருமைகளைப் பலகால் உபதேசித்துவந்தார். அச்சுதக் களப்பாளரும் அவரிடத்தில் பெருமதிப்பும் பேரன்பும் கொண்டிருந்தார்.

அச்சுதக்களப்பாளர் மக்கட் பேறில்லாக்குறைய அவ்வப்போது குறிப்பாகவும் வெளிப்படையாகவும் பணிவுடன் விண்ணப்பித்துவந்தார். சகலாகம பண்டிதரும் நாள்தோறும் சைவத் திருமுறைகளை ஓதிவருமாறு உரைத்திருந்தார். அச்சுதக் களப்பாளரும் அவ்வாறே திருமுறைகளை ஓதிவந்தார். ஒருநாள் சகலாகம பண்டிதர் வந்து அச்சுதக் களப்பாளர் இல்லத்தில் தங்கியிருந்தார். சிவபூசை முடித்துவிட்டு அமர்த்திருந்தபோது அச்சுதக்களப்பாளர் தம்குறையை முறையிட்டார். உடனே சகலாகம பண்டிதரும் திருமுறை எழுதிய ஓலைச் சுவடிக் கட்டுகளைக் கொண்டு வரச் செய்தார். அதனை இருக்கையின் மேல் வைத்துச் சிவபெருமான் வீற்றிருக்கும் திருக்கோயிலும், திருவுருவமுமாகக் கருதி வழிபாடு செய்தார். பட்டுக்கயிறு ஒன்றை எடுத்து ஓலைக்கட்டின் நடுவே சாத்தி எடுத்தார். திருஞானசம்பந்தர் பாடிய "கண்காட்டும் நுதலானும்" எனத் தொடங்கும் பதிகத்தில் இரண்டாம் திருப்பாட்டு ஆன

"பேயடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ள நினைவு
ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்
வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்
தோய்வினையார் அவர் தம்மைச் தோயாவாம் தீவினையே"

எனும் இப்பாடல் வந்தது. அதனைப் பல முறை படித்துக் காட்டினார். படிக்கும் போதெல்லாம் பெருமகிழ்ச்சியும் பேரின்பமும் தோன்றின. ஞானாசிரியர், உறவினர், நண்பர் முதலியோர் பாடலின் பொருளை அறிந்து வியந்தனர். "பிள்ளையினோடு உள்ள நினைவு ஆயினவே வரம் பெறுவர் ஐயுற வேண்டா ஒன்றும்" என்ற தொடரைக் கண்டு திருவருளின் பெருமையை நினைத்துக் கண்ணீர்விட்டனர்.

திருவெண்காட்டுத் திருக்கோயிலில் சந்திர தீர்த்தம், சூரிய தீர்த்தம், அக்கினிதீர்த்தம் ஆகிய மூன்று தீர்த்தங்களில் மூழ்கி எழுந்தால் தீவினைகள் விட்டு நீங்கும், பேய்பிடிக்காது, அகன்றுவிடும். மக்கட்பேறு கிட்டும். உள்ளத்தில் நினைத்த வரங்கள் எல்லாவற்றையும் பெறுவர். இவ்வாறெல்லாம் நடக்கிறதா? நடக்காதா என்று ஐயமுற வேண்டாம்-என்பது பாட்டின் பொருள்.

சங்க காலத்தில் புகார் நகரின் ஒரு பகுதியாகத் திருவெண்காடு இடம்பெற்றிருக்கவேண்டும். சிலப்பதிகாரத்தில், கனாத்திற முரைத்த காதையில் தேவந்தி கண்ணகியிடம் "சோம குண்டம் சூரிய குண்டம் துறைமூழ்கி" வழிபட வேண்டுமென்று கூறியதாக இளங்கோவடிகள் குறிப்பிட்டுள்ளார். சிலப்பதிகாரக் காலத்திற்குப்பின் திருவெண் காட்டில் அக்கினி தீர்த்தமும் சேர்ந்து தீர்த்தங்கள் மூன்றாயின, தற்போதும் திருவெண்காட்டுக் கோயிலில் மூன்று தீர்த்தங்கள் உள்ளதைக் காணலாம்.

குலகுருவான சகலாகம பண்டிதர் அச்சுதக்களப்பாளரையும் அவர் துணைவியாரையும் திருவெண்காட்டுக்குச் சென்று நாள்தொறும் முக்குளத்தில் மூழ்கி வழிபாடு செய்யுமாறு பணித்தார். தற்போது திருவெண்காடு சீர்காழிக்குத் தென்கிழக்கில் 10 கி.மீ தொலைவில் உள்ளது. அச்சுதக் களப்பாளரும் அவர் மனைவியாரும் திருவெண்காடு சென்று நல்ல இல்லம் ஒன்றில் தங்கினர். நாள்தோறும் முக்குளத்தில் மூழ்கித் திருவெண்காடுடைய மகாதேவரை வழிபட்டுவந்தனர். ஒருநாள் இரவு அச்சுதக் களப்பாளர் கனவில் திருவெண்காட்டு இறைவன் தோன்றி "உனக்கு இப்பிறப்பில் மகப்பேறு கிடைத்தல் அரிது எனினும் உண்மையான அடியார்கள் பாடிய திருமுறைப் பாட்டுக்களை உண்மை என நம்பி எம்மை வழிபட்டுவருகிறாய். ஆகையால் திருப்பாட்டுக்களைப் பாடி அருளிய திருஞானசம்பந்தர் போலவே நல்ல ஞானத்தை மக்களுக்குப் போதிக்கும் மெய்ஞ்ஞானமுடைய மகனைக் குழந்தையாகப் பெறுவாய்" என்று சொல்லித் திருநீறு கொடுத்துவிட்டு மறைந்தார். இக் கனவைக் கண்ட அச்சுதக் களப்பாளர் அளவில்லாத மகிழ்ச்சி அடைந்தார். மனைவியிடமும் கனவு பற்றி அடிக்கடி உரையாடி வந்தார். முறையாக நாள்தோறும் சிவபெருமானை வழிபட்டுவந்தார்.

### கனவு பற்றிச் சைவத்திரு. கா. சுப்பிரமணியபிள்ளை கருத்து

கனவில் கண்டதெல்லாம் பொய்யென்று ஒதுக்கிவிடுதல் தவறு. கனவென்பது நுண்ணுடம்பின் நுகர்ச்சியாக உள்ளது. நமது

கண்ணிற்குப் புலனாக நின்ற உடம்பே தூல உடம்பென்று கூறப்படும். அவ்வுடம்பு கொண்டு நனவிலே உயிர் போதல் வருதல் முதலியன செய்யும்; கட்புலனாகாத நுண்ணுடம்பு தூங்கும்போது பலவித நுகர்ச்சிகளை அடைதல் கூடும், அருந்தவத்தினரது கட்புலனுக்கு அருள் செய்யுங் கடவுள் அவரது நுண்ணுடம்பிற்கு மாத்திரையே புலனாகும் வண்ணம் தோன்றுதலும் இயல்பே. (மெய் கண்ட சாத்திரம் பதினான்கு - கா. சுப்பிரமணியபிள்ளை முன்னுரை பக்கம் 12, 13)

## குழந்தைப் பேறு - பெயர் சூட்டுதல் பற்றிய கருத்து வேறுபாடு

1. அச்சுதக் களப்பாளரின் மனைவியார் கருவுற்றார். பத்துத் திங்களும் செய்ய வேண்டிய சடங்குகளைச் செய்துவந்தார். நல்ல வேளையில் குழந்தை அவதாரம் செய்தது. ஆண் குழந்தைக்குச் செய்ய வேண்டிய சடங்குகளை யெல்லாம் செய்து, சிலநாள் கழிந்த பின் திருப்பெண்ணாகடம் மீண்டார். உறவினரும், ஊரில் உள்ளாரும் செய்தியறிந்து அச்சுதக் களப்பாளரின் இல்லத்திற்கு வந்து குழந்தையின் சிறப்பைக் கண்டு மகிழ்ந்து வாழ்த்திச் சென்றனர். குழந்தைக்குச் சுவேதவனப் பெருமாள் என்று பெயரிட்டனர். இவ்வாறு கருதுபவர் கா. சுப்பிரமணிய பிள்ளையாவார்.

2. அச்சுதக் களப்பாளர் மனைவியார் திருவெண்காட்டில் கருவுற்றார். கரு முதிரத்தொடங்கியதும் பெண்ணாகடம் சென்று சேர்ந்தார். பெண்ணாகடத்தில் குழந்தை பிறந்தது. பெண்ணாகடத்தில் பெயரிட்டனர் (மெய்கண்ட தேவர் சரித்திர சுருக்கம் - சிவப்பிரகாசம்-மதுரைச் சிவபிரகாசர் உரை பக்கம் 27)

3. அச்சுதக் களப்பாளர் மனைவியார் கருக்கொண்டார். இறைவன் தமக்குச் செய்த அருள்திறத்தை நினைந்து வியந்து பல காலம் வணங்கி, அங்கிருந்தும் புறப்பட்டுத் தமதூர்க்குச் செல்லாமல், தம் மனைவியாரின் தாய்வீட்டுக்கே அவரை அழைத்துச் செல்லும்பொருட்டு, அச்சுதக் களப்பாளர் மனைவியாருடன் திருவெண்ணெய் நல்லூரே போய்ச் சேர்ந்தார். தலைப்பிள்ளைப் பேற்றிற்குத் தாய்வீடு செல்வதே தமிழ்நாட்டு மகளிர்க்குள் வழக்கமாயிருத்தலின், அச்சுதக் களப்பாளரும் அவ்வழக்கப்படியே தம் மனைவியாரை அவர்தம் தாய்வீட்டிற்கு அழைத்தேகினார் என்க.

சிலர் கருதுமாறு, மிகப் பெருஞ் செல்வரான திருவெண்ணெய் நல்லூர்ச் சடையபிள்ளை, அச்சுதக் களப்பாளரின் மனைவியோடு உடன்பிறந்தவரானால், இவ்விருவரும் அவரது இல்லத்தில் எத்துணை வளத்துடன் இருந்தவராகல் வேண்டுமென்பதை யாங்கூறல் வேண்டா. அம்மையார் பத்தாந் திங்களில் ஓர் அழகிய ஆண்மகனை ஈன்றனர். திருவெண்காட்டிறைவர் திருவருளால் அம்மகவு பிறந்தமைபற்றி அதற்குந் திருவெண்காடன் அல்லது சுவேதவனன் என்று பெயரமைத்தார்கள். வெண்காடன் என்பது தமிழ்ப் பெயர். சுவேதவனன் என்பது அதற்கு நேரான வடமொழிப் பெயர். வெண்மையைச் சுவேதம் என்றும், காட்டை வனம் என்றும் வடவர் வழங்குவர். மெய்கண்ட .தேவருக்குச் 'சுவேதவனன்' என்னும் பெயர் போந்த காரணம் இங்ஙனமாதல் கண்டுகொள்க. (சிவஞானபோத ஆராய்ச்சி-மறைமலை அடிகள், பக்கம் 244).

4. அச்சுதக்களப்பாளர், மனைவியாரும் திருவெண்காட்டில் முக்குளநீராடி வழிபாடு செய்துவந்தனர். மனைவியார் கருப்பவதியாகி ஓர் ஆண் பிள்ளையைப் பெற்றெடுத்தனர். குழந்தைக்குச் சுவேதவனப் பெருமாள் என்ற திருநாமம் சூட்டப்பட்டது. இக்குழந்தை பெண்ணாகடத்தில் தந்தையார் இல்லத்திலும், அருமையாக வளர்ந்துவந்தது (ம. பாலசுப்பிரமணியம் - மெய்கண்டார் வரலாறு - சிவஞானமாபாடியம் பக்கம் 23)

திருவாரூர்ச் சாமிநாத தேசிகர் பாடிய ' சைவ சந்தானாச்சாரியார் புராணம்' என்னும் நூலில் மெய்கண்டார் வரலாறு பலவாறாகப் பாடப்பட்டுள்ளது. அந்நூலின் அடிப்படையிலேயே பலரும் மெய்கண்டார் வரலாற்றை எழுதியுள்ளனர். புராணம் உண்மைச் செய்திகளை உள்ளவாறு கூறுவதுமுண்டு. சில இடங்களில் புராணச் சுவைக்காக மாற்றியும் பாடுவதுண்டு. தமிழ் நாட்டில் மக்கட் பழக்கவழக்கங்கள், பண்பாடு, சமுதாய அமைப்பு, உறவினர் உரிமைகள், முதலியவற்றில் பல மரபுகள் உண்டு. பெண் ஒருத்தி கருவுறும்போது தாய்வீட்டுக்கு அழைத்துச் செல்வதென்பது சிறந்த பண்பாட்டு மரபாகும். கருவுற்ற காலத்தில் தாய்வீட்டில் இருக்கும்போது மனமகிழும் சூழ்நிலை உருவாகும். பெண்ணுக்குத் தாயிடமே பலவற்றைச் சொல்லும் இயற்கைக் குணம் இயல்பாக அமைந்திருக்கும். மற்றவர்களைக் காட்டிலும் கருவுற்ற பெண்ணை நன்கு கவனித்துக்கொள்வாள். கருவுற்ற காலத்தில் கடைசிச் சில மாதங்களில் தாய்வீட்டில் தங்கி யிருத்தல் தமிழர் பண்பாட்டு

மரபாகும். குழந்தை பிறந்த பின் சில திங்கள் கழித்தே கணவன் வீட்டுக்கு அழைத்துச்செல்வதும் வழக்கத்தில் உள்ளதே.

### மெய்கண்டார் பெண்ணாகடத்தில் தோன்றினார் என்பதற்கு அகச்சான்றுகள் :

மெய்கண்டாரின் மாணாக்கர் அருள்நந்தி சிவாச்சாரியார் மெய்கண்டாரைக் குறிப்பிடும் போதெல்லாம் பெண்ணா கடத்தோடே தொடர்புபடுத்திக் குறிப்பிட்டுள்ளார்.

1. கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் தானென
வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்ட தேவ

(இருபா இருபஃது - 2)

2. வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்து

(இருபா இருபஃது - 6)

என இரண்டு இடங்களில் வெண்ணையில் தோன்றியதாகவே அருணந்தி சிவாச்சாரியார் குறிப்பிட்டுள்ளார். மதுரைச் சிவப்பிரகாசரும் உரையில் திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியருளியதாகவே குறிப்பிட்டுள்ளார்.

3. சிவஞானபோதம் சிறப்புப் பாயிரம்

" உயர்சிவ ஞானபோதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன் "

என்று குறிப்பிடுகிறது.

சிவஞான முனிவர் இப்பகுதிக்கு உரை எழுதும் போது திருவெண்ணெய் நல்லூரில் அவதரித்து அருளிய சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமம் உடையான் என்றே உரைவகுத்துள்ளார்.

4. " விண்டலர்ப் பொழில்புடை சூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்."

*(சிவஞான சித்தியார் பரபக்கம் பாயிரம்)*

5. மின்னமர் பொழில் சூழ் வெண்ணெய்
மேவிவாழ் மெய்கண்டார்,

*(சிவஞான சித்தியார் சுபக்கப் பாயிரம்)*

எனச் சித்தியாரிலும் திருவெண்ணெய் நல்லூரோடு மெய்கண்டார் சேர்த்துக் கூறப்பட்டுள்ளார். எனவே, மெய்கண்டார் அவதரித்த ஊர் திருவெண்ணெய் நல்லூர் ஆகும். வேறு சாத்திர நூல்களில் மெய்கண்டாரைப் பெண்ணாகடம், திருவெண்காடு ஆகிய ஊர்களோடு சேர்த்துக் கூறப்படவில்லை.

## ஞானகுரு உபதேசம்

திருவெண்ணெய் நல்லூரில் குழந்தை வளர்ந்துவரும் போது இரண்டாண்டு முடிவுற்று, மூன்றாம் ஆண்டு தொடங்கியது. கயிலாயத்திலிருந்து பரஞ்சோதி முனிவர் வான் வழியாகத் தெற்கு நோக்கிச் சென்றார். குழந்தை வீதியில் விளையாடிக் கொண்டிருந்த இடத்தை அடைந்தபோது முனிவருடைய வான்வழிச் செலவு தடைப்பட்டது. உடனே முனிவர் நடைபெறப்போவதை உணர்ந்து பூமியில் விளையாடிக்கொண் டிருந்த குழந்தையிடம் வந்தார். முனிவர் பெற்றிருந்த சிவஞானத்தைக் குழந்தைக்கு உபதேசம் செய்தார். குழந்தைக்குத் தம் ஞானகுருவான சத்தியஞானதரிசினிகள் என்பதனைத் தமிழில் மெய்கண்டார் எனத் தமிழ் மரபுக் கேற்ப மாற்றி யமைத்து வழங்கினார். சைவசித்தாந்தக் கொள்கைகள் தமிழகத்தில் நிலைபெற்று விளங்குமாறு நூல் ஒன்றைச் செய்யுமாறு உரைத்து விட்டு, முனிவர் தம் பயணத்தைத் தொடங்கினார்.

" பின்னர்க் குழந்தையாகிய மெய்கண்டார் தாம் வழிபடுகின்ற திருவெண்ணெய் நல்லூர்ச் சிவாலயத்திலுள்ள பொல்லாப் பிள்ளையார் சந்நிதியில் சென்றிருந்து, ஞானநிட்டை கூடிச் சிவானுபவம் பெற்று, அதன் பயனாக ஏது திருட்டாந்தங்களோடு சிவஞான போதம் என்ற சைவசித்தாந்த சாத்திரத்தைத் தமிழ் மொழியில் முதன்முதலாகச் செய்தார்" என்று ஆராய்ச்சிப் பேரறிஞர் மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ளார்.

மெய்கண்டாரும் சித்தாந்த உண்மைகளைப் பலருக்கும் போதித்துவந்தார். பலரும் இவரிடம் வந்து சைவசமய உண்மைப் பொருள்களைத் தெரிந்துகொள்ள முயன்றனர்.

## அருள்நந்தியாரை ஆணவத்தின் வடிவமென்று சுட்டி இருப்பாரா?

அருள்நந்தி சிவாச்சாரியர் திருவெண்ணெய் நல்லூரில் இருந்த தம் மாணாக்கர்களைக் காணும்பொருட்டுத் துறையூரிலிருந்து திருவெண்ணெய் நல்லூர் வந்து சேர்ந்தார். மாணாக்கர், வீதி

ஒப்பனை செய்து ஞானகுருவைச் சிறப்பாக வரவேற்றனர். மாணாக்கர் பலரும் அவரைக் கண்டு வணங்கி வாழ்த்துப் பெற்றுச் சென்றனர். அக்காலத்தே பெண்ணாகடத்து வாழ்ந்தவரும் தம்முடைய மாணாக்கருமான அச்சுதக்களப்பாளருக்கு மகனாகத் தோன்றிய மெய்கண்டார் தம்மை வந்து காணாமையைத் தெரிந்துகொண்டார். மெய்கண்டார் சைவசித்தாந்தத்தைச் சிறப்பாகச் சொல்வதைக் கேள்விப்பட்டு வியப்புற்றார். எனினும், தம்மை வந்து காணாததால் உள்ளத்தே அழுக்காறு தோன்றிற்று, உடனே மெய்கண்டார் சைவசித்தாந்தம் சொல்லும் இடத்திற்குச் சென்றார். இவரங்குச் சென்றபோது மெய்கண்டார் மாணாக்கரோடு ஆணவமலத்தைப் பற்றி உரையாடிக்கொண் டிருந்தார். இவர் சென்றதை மெய்கண்டார் கண்டுகொள்ள வில்லை. அழுக்காற்றால் உள்ளம் வெதும்பிக் கோபமுற்று "ஆணவத்தின் சொரூபம் யாது"? என்று மெய்கண்டாரைக் கேட்டார். அவர் உடனே எவ்விதத் தடையுமின்றி முகமலர்ந்து புன்முறுவல் செய்து தம் வலக்கைச் சுட்டுவிரல் நீட்டிச் சகலாகம பண்டிதரையே சுட்டிக் காட்டினார்.

உண்மையுணர்ந்த சகலாகமபண்டிதர் கீழே விழுந்து வணங்கி, மெய்கண்டாரைக் குருவாக ஏற்றுக்கொண்டார் என்று சைவ சந்தானாச்சாரியார் புராணம் குறிப்பிடுகிறது. இது ஒரு பொய்க்கதையாகும். வேறு எங்கும் இதற்கு ஆதாரமில்லை. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், "அருணந்தி சிவாச்சாரியருடைய அழகிய ஞான உரைகளை நாம் இன்று படிக்கின்றோம், பயன் துய்க்கின்றோம். அவற்றை நினைக்கும் போது இவ்வரலாற்றுக் குறிப்பு மெய்ம்மையோடு படாத பொய்க் குறிப்பு என்று நமது உள்ளத்தில் நன்கு தோன்றுகிறது"என்று குறிப்பிடுகிறார்.

### மெய்கண்டார் மாணாக்கர்

மெய்கண்டார்க்கு நாற்பத்தொன்பது மாணாக்கர் இருந்ததாகக் குறிப்பிடுகின்றனர். தலையாய மாணாக்கர் அருணந்தி சிவாச்சாரியார் ஆவார். மற்றொரு மாணாக்கர் மனவாசகம் கடந்தாராவார். அருணந்தி சிவாச்சாரியார் சிவஞானபோதத்திற்கு விளக்கமாகச் சிவஞான சித்தியார் என்னும் நூலைச் செய்துள்ளார். அதில் மெய்கண்டாரைப் பார்த்து வினவும் முறையில் நூலை அமைத்துள்ளார், அருணந்தி சிவாச்சாரியாரும் மெய்கண்டாரை வினவும் முறையில் இருபா இருபஃது என்ற நூலைப் பாடியுள்ளார். சிவஞான போதத்தைச் செய்து, சைவத்திற்குப் பெருமை சேர்த்த

மெய்கண்டார் ஓர் ஐப்பசித் திங்கள் சுவாதி நட்சத்திரத்தன்று இறைவன் திருவடியடைந்தார்.

## மெய்கண்டார் காலம்

மெய்கண்டார் சிவஞான போதத்தைச் செய்து உபதேசித்து வருகையில் தமிழ்நாடெங்கும் அவர் புகழ் பரவியது. திருவண்ணாமலையில் அக்காலத்தில் கோளகிமடமொன்று செல்வாக்குப் பெற்றிருந்தது. மெய்கண்டார் மடத்தின் தலைவராக இருந்து சைவ சித்தாந்தத்தைப் போதித்து வந்தார்.செல்வர்பலர் மெய்கண்டாரிடம் சைவசித்தாந்தம் கேட்டுச் சிறப்புற்றனர். அவர்களில் ஊருடைய பெருமாள் என்பவரும் ஒருவர். அடுத்து வலியவேளார் என்றும் அவருக்குப் பெயருண்டு. திருவண்ணா மலைக்கு அண்மையில் மாத்தூர் என்று ஓர் ஊருண்டு. அவ்வூர் திருவண்ணாமலைக்குத் தேவதானமாக விடப்பட்டதாகும். அடுத்தது வலியவேளார் தேவதானமான மாத்தூரில் கோயிலாரிடம் ஆணைபெற்றுப் புதிதாக ஏரி ஒன்றை வெட்டினார். அதற்குத் தம் ஞான குருவான மெய்கண்டார் பெயரில் மெய்கண்ட தேவப் புத்தேரி என்று பெயரிட்டார். இந்த ஏரியின் கீழ்ப் பகுதியில் அவ்வேளானரே சிவன் கோயில் ஒன்றையும் கட்டி, அதற்கு மெய்கண்டீச்சுரம் என்றும் பெயரிட்டார். மெய் கண்டாருடைய சிறப்பையும் மாணர்க்கர் சிவத்தொண்டையும் கண்ட கோயிலார் அவ்வேரியின் கீழுள்ள நிலங்களை மெய்கண்டீச்சுரம் உடைய பெருமானுக்குத் தேவதானமாக விடவேண்டுமென்று எண்ணி, அக்கால அரசனிடம் வேண்டினர். அக்காலத்தில் ஆட்சி செய்த சோழ மன்னன் திரிபுவனசக்கரவர்த்திகள் மூன்றாம் இராசராசன் ஆவான்.அரசனும் மனம் மகிழ்ந்து மாத்தூருக்கு இராசராசநல்லூர் என்று பெயரிட்டு ஆணை வழங்கினான்.

"ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீ ராசராச தேவர்க்கு யாண்டு 16 ஆவது இஷபநாயிற்று இருபத்தெட்டாந்தியதியும் சனிக்கிழமையும் பெற்று மிருக சீரிடத்து நாள் உடையார் திருவண்ணாமலை உடைய நாயனார் கோயில் சீமாகேஸ்வரக் கண்கானி செய்வார்களும் தேவர்கன்மி கோயில் கணக்கனும், திருவெண்ணெய் நல்லூருடையான் மெய்கண்ட தேவன் ஊருடைய பெருமாளான எடுத்தது வலிய வேளாளர்க்குக் கல்வெட்டிக் கொடுத்த பரிசாவது.......... இவ்விராசராச நல்லூரில் எழுந்தருளுவிக்கின்ற உடையார் மெய்கண்டீசுரமுடைய நாயனார்க்குப் பூசைக்கும் அமுதுபடிக்கும் மூன்றில் ஒன்று

தேவதானமாகவும்................ இப்படிக் சம்மதித்துச் கல்வெட்டிக் கொடுத்தோம் இவ்வாணையோம். இது பன்மாஹேஸ்வ ரக்ஷை". என்பது கல்வெட்டாகும். இக்கல்வெட்டு மூன்றாம் இராசராசனுடைய 16ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டாகும். மூன்றாம் இராசராசன் கி.பி. 1216 முதல் 1256 வரை ஆட்சி செய்த சோழ மன்னனாவான். இக்கல்வெட்டின் காலம் 1216+16 =1232 ஆகும்.

மெய்கண்டாருக்குப் பின் அருணந்தி சிவாச்சாரியார், அவர் மாணாக்கர் மறைஞான சம்பந்தர், அவர் மாணாக்கர் உமாபதி சிவாச்சாரியார் ஆவார். உமாபதி சிவாச்சாரியார் சங்கற்ப நிராகரணம் என்ற நூலை அருளிய காலம்.'ஏழஞ்சு இருநூறு எடுத்த ஆயிரம் வாழும் நற்சகம்' எனக் குறிப்பிடப் பெறுகிறது. இது சகம் 1235 ஆகும். சக ஆண்டோடு 78 ஐக் கூட்டினால் கி.பி.ஆண்டு வரும். எனவே 1235+78 =1313, இவ்வாண்டு சங்கற்ப நிராகரணம் பாடிய காலமாகும். உமாபதி சிவாச்சாரியார்க்கு மூன்று தலைமுறை முற்பட்டவர் மெய்கண்டார். எனவே 75 ஆண்டுக்கு ஏறக்குறைய முற்பட்டவர் ஆவார். 1313 +75=1238, 1238ஐ ஒட்டிய காலம் மெய்கண்டார் காலமாக இருக்கலாம். கல்வெட்டுக் கூறும் 1232ம் இதற்குப் பக்கத்தில் உள்ளது. எனவே கி.பி. 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதி மெய்கண்டார் காலமாகலாம்.

து.அ. கோபிநாத ராயரே முதன் முதலாகச் சாசனம் கூறியபடி மெய்கண்டார் 1232ல் வாழ்ந்தார் என்று எழுதினார். இவர் கூற்றைத் தனிப்பட்டுப் பின்னர் ஒருவரும் ஆராயாமலே ஏற்றுக் கொண்டார்கள். அதன்பயனே இச்சந்தானசாரியார் 13ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று கருதுகின்ற மரபு ஏற்பட்டது என்பது மு. அருணாசலம் அவர்கள் கருத்தாகும்.

### களப்பாளரைப் பற்றிய கருத்து

மெய்கண்டாரின் தந்தையார் அச்சுதக்களப்பாளர். தமிழ்நாவலர் சரிதையில் அச்சுதக்களப்பாளர் ஒருவர் குறிப்பிடப் பெறுகிறார். அவர் தில்லையில் வாழ்ந்தவர், பிறந்தவர், இருவரும் வெவ்வேறானவர், களப்பிரர் வேறு, களப்பாளர் வேறு, களப்பிரர் தமிழகத்திலில் கி.பி. 3ம் நூற்றாண்டுக்கும் 6ம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட இருண்ட காலத்தில் வாழ்ந்த ஒரினத்தவர். அவர்கள் தமிழ்ப்பண்பாட்டையும் சமயத்தையும் சிதைத்தவர் ஆவர். பண்டைக்காலத்தில் வாழ்ந்த மழவர், வாணர் முதலியோர்களை வென்றவர்களை மழவராயர், வாணராயர் எனப் பெயரிட்டு

அழைத்தனர். களப்பிரரை வென்றவரைக் களப்பாளராயர் என அக்காலத்து வழங்கினர். தொடக்க காலத்தில் இச்சிறப்புப் பெயர் வெற்றி பெற்ற சிலருக்கே இருந்தது. காலஞ்செல்லச் செல்லத் தந்தையின் சிறப்பு மகனுக்கும் வழி வந்தோர்க்கும் வருகின்ற முறையில் களப்பாளராயர் குடிப்பெயராக அமைந்தது.

"களப்பாளராயர் என்ற பெயர் கொண்ட பலரும் தமிழ் வேளாண் மக்களே ஆவர்"என்பர் ஔவை சு.துரைசாமிப் பிள்ளையவர்கள். அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரான கூற்றுவ நாயனார் களந்தை என்ற ஊரில் வாழ்ந்த களப்பாள மரபைச் சேர்ந்தவராவார். முதற் குலோத்துங்கன் காலத்தில் தொண்டை நாட்டு நெற்குன்றம் என்ற ஊரில் அரையன் நெற்குன்றங் கிழார் கருவுள் நாயகரான களப்பாளராயர் ஒருவர் இருந்ததைக் கல்வெட்டால் அறியமுடிகிறது. இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் கங்கை கொண்ட சோழக் களப்பாளராயர் ஒருவர் இருந்துள்ளார். கொங்குச் சோழர் வீர ராசேந்திரன் காலத்தில் காடுவெட்டிக் கண்ணன் களப்பாளராயன்பற்றிய செய்தி கண்ணபுரக் கல்வெட்டால் காணப்படுகிறது. பிற்காலத்தில் விசயநகரப் பேரரசுக் காலத்தில் களப்பாளராயர் பெயரில் பலர் இருந்துள்ளனர். இத்தகைய வேளாளர் மரபில் தோன்றிய அச்சுதக்களப்பாளரும் வேளாள மரபினரே ஆவர்.



மரபாகும். குழந்தை பிறந்த பின் சில திங்கள் கழித்தே கணவன் வீட்டுக்கு அழைத்துச்செல்வதும் வழக்கத்தில் உள்ளதே.

**மெய்கண்டார் பெண்ணாகடத்தில் தோன்றினார் என்பதற்கு அகச்சான்றுகள் :**

மெய்கண்டாரின் மாணாக்கர் அருள்நந்தி சிவாச்சாரியார் மெய்கண்டாரைக் குறிப்பிடும் போதெல்லாம் பெண்ணா கடத்தோடே தொடர்புபடுத்திக் குறிப்பிட்டுள்ளார்.

1. கண்ணகன் ஞாலத்துக் கதிரவன் தானென
வெண்ணெய்த் தோன்றிய மெய்கண்ட தேவ

(இருபா இருபஃது - 2)

2. வெண்ணெய்த் தோன்றி நண்ணியுள் புகுந்து

(இருபா இருபஃது - 6)

என இரண்டு இடங்களில் வெண்ணையில் தோன்றியதாகவே அருணந்தி சிவாச்சாரியார் குறிப்பிட்டுள்ளார். மதுரைச் சிவப்பிரகாசரும் உரையில் திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியருளியதாகவே குறிப்பிட்டுள்ளார்.

3. சிவஞானபோதம் சிறப்புப் பாயிரம்

" உயர்சிவ ஞானபோதம் உரைத்தோன்
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணெய்ச் சுவேதவனன்
பொய்கண் டகன்ற மெய்கண்ட தேவன் "

என்று குறிப்பிடுகிறது.

சிவஞான முனிவர் இப்பகுதிக்கு உரை எழுதும் போது திருவெண்ணெய் நல்லூரில் அவதரித்து அருளிய சுவேதவனப் பெருமாள் என்னும் பிள்ளைத் திருநாமம் உடையான் என்றே உரைவகுத்துள்ளார்.

4. " விண்டலர்ப் பொழில்புடை சூழ் வெண்ணெய் மேவு
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்."

(சிவஞான சித்தியார் பரபக்கம் பாயிரம்)

5. மின்னமர் பொழில் சூழ் வெண்ணெய்
மேவிவாழ் மெய்கண்டார்,

(சிவஞான சித்தியார் சுபக்கப் பாயிரம்)

எனச் சித்தியாரிலும் திருவெண்ணெய் நல்லூரோடு மெய்கண்டார் சேர்த்துக் கூறப்பட்டுள்ளார். எனவே, மெய்கண்டார் அவதரித்த ஊர் திருவெண்ணெய் நல்லூர் ஆகும். வேறு சாத்திர நூல்களில் மெய்கண்டாரைப் பெண்ணாகடம், திருவெண்காடு ஆகிய ஊர்களோடு சேர்த்துக் கூறப்படவில்லை.

## ஞானகுரு உபதேசம்

திருவெண்ணெய் நல்லூரில் குழந்தை வளர்ந்துவரும் போது இரண்டாண்டு முடிவுற்று, மூன்றாம் ஆண்டு தொடங்கியது. கயிலாயத்திலிருந்து பரஞ்சோதி முனிவர் வான் வழியாகத் தெற்கு நோக்கிச் சென்றார். குழந்தை வீதியில் விளையாடிக் கொண்டிருந்த இடத்தை அடைந்தபோது முனிவருடைய வான்வழிச் செலவு தடைப்பட்டது. உடனே முனிவர் நடைபெறப்போவதை உணர்ந்து பூமியில் விளையாடிக்கொண் டிருந்த குழந்தையிடம் வந்தார். முனிவர் பெற்றிருந்த சிவஞானத்தைக் குழந்தைக்கு உபதேசம் செய்தார். குழந்தைக்குத் தம் ஞானகுருவான சத்தியஞானதரிசினிகள் என்பதனைத் தமிழில் மெய்கண்டார் எனத் தமிழ் மரபுக் கேற்ப மாற்றி யமைத்து வழங்கினார். சைவசித்தாந்தக் கொள்கைகள் தமிழகத்தில் நிலைபெற்று விளங்குமாறு நூல் ஒன்றைச் செய்யுமாறு உரைத்து விட்டு, முனிவர் தம் பயணத்தைத் தொடங்கினார்.

" பின்னர்க் குழந்தையாகிய மெய்கண்டார் தாம் வழிபடுகின்ற திருவெண்ணெய் நல்லூர்ச் சிவாலயத்திலுள்ள பொல்லாப் பிள்ளையார் சந்நிதியில் சென்றிருந்து, ஞானநிட்டை கூடிச் சிவானுபவம் பெற்று, அதன் பயனாக ஏது திருட்டாந்தங்களோடு சிவஞான போதம் என்ற சைவசித்தாந்த சாத்திரத்தைத் தமிழ் மொழியில் முதன்முதலாகச் செய்தார்" என்று ஆராய்ச்சிப் பேரறிஞர் மு. அருணாசலம் குறிப்பிட்டுள்ளார்.

மெய்கண்டாரும் சித்தாந்த உண்மைகளைப் பலருக்கும் போதித்துவந்தார். பலரும் இவரிடம் வந்து சைவசமய உண்மைப் பொருள்களைத் தெரிந்துகொள்ள முயன்றனர்.

## அருள்நந்தியாரை ஆணவத்தின் வடிவமென்று சுட்டி இருப்பாரா?

அருள்நந்தி சிவாச்சாரியர் திருவெண்ணெய் நல்லூரில் இருந்த தம் மாணாக்கர்களைக் காணும்பொருட்டுத் துறையூரிலிருந்து திருவெண்ணெய் நல்லூர் வந்து சேர்ந்தார். மாணாக்கர், வீதி

ஒப்பனை செய்து ஞானகுருவைச் சிறப்பாக வரவேற்றனர். மாணாக்கர் பலரும் அவரைக் கண்டு வணங்கி வாழ்த்துப் பெற்றுச் சென்றனர். அக்காலத்தே பெண்ணாகடத்து வாழ்ந்தவரும் தம்முடைய மாணாக்கருமான அச்சுதக்களப்பாளருக்கு மகனாகத் தோன்றிய மெய்கண்டார் தம்மை வந்து காணாமையைத் தெரிந்துகொண்டார். மெய்கண்டார் சைவசித்தாந்தத்தைச் சிறப்பாகச் சொல்வதைக் கேள்விப்பட்டு வியப்புற்றார். எனினும், தம்மை வந்து காணாததால் உள்ளத்தே அழுக்காறு தோன்றிற்று, உடனே மெய்கண்டார் சைவசித்தாந்தம் சொல்லும் இடத்திற்குச் சென்றார். இவரங்குச் சென்றபோது மெய்கண்டார் மாணாக்கரோடு ஆணவமலத்தைப் பற்றி உரையாடிக்கொண் டிருந்தார். இவர் சென்றதை மெய்கண்டார் கண்டுகொள்ள வில்லை. அழுக்காற்றால் உள்ளம் வெதும்பிக் கோபமுற்று "ஆணவத்தின் சொரூபம் யாது" ? என்று மெய்கண்டாரைக் கேட்டார். அவர் உடனே எவ்விதத் தடையுமின்றி முகமலர்ந்து புன்முறுவல் செய்து தம் வலக்கைச் சுட்டுவிரல் நீட்டிச் சகலாகம பண்டிதரையே சுட்டிக் காட்டினார்.

உண்மையுணர்ந்த சகலாகமபண்டிதர் கீழே விழுந்து வணங்கி, மெய்கண்டாரைக் குருவாக ஏற்றுக்கொண்டார் என்று சைவ சந்தானாச்சாரியார் புராணம் குறிப்பிடுகிறது. இது ஒரு பொய்க்கதையாகும். வேறு எங்கும் இதற்கு ஆதாரமில்லை. ஔவை. சு. துரைசாமிப் பிள்ளை அவர்கள், "அருணந்தி சிவாச்சாரியருடைய அழகிய ஞான உரைகளை நாம் இன்று படிக்கின்றோம், பயன் துய்க்கின்றோம். அவற்றை நினைக்கும் போது இவ்வரலாற்றுக் குறிப்பு மெய்ம்மையோடு படாத பொய்க் குறிப்பு என்று நமது உள்ளத்தில் நன்கு தோன்றுகிறது"என்று குறிப்பிடுகிறார்.

## மெய்கண்டார் மாணாக்கர்

மெய்கண்டார்க்கு நாற்பத்தொன்பது மாணாக்கர் இருந்ததாகக் குறிப்பிடுகின்றனர். தலையாய மாணாக்கர் அருணந்தி சிவாச்சாரியார் ஆவார். மற்றொரு மாணாக்கர் மனவாசகம் கடந்தாராவார். அருணந்தி சிவாச்சாரியார் சிவஞானபோதத்திற்கு விளக்கமாகச் சிவஞான சித்தியார் என்னும் நூலைச் செய்துள்ளார். அதில் மெய்கண்டாரைப் பார்த்து வினவும் முறையில் நூலை அமைத்துள்ளார், அருணந்தி சிவாச்சாரியாரும் மெய்கண்டாரை வினவும் முறையில் இருபா இருபஃது என்ற நூலைப் பாடியுள்ளார். சிவஞான போதத்தைச் செய்து, சைவத்திற்குப் பெருமை சேர்த்த

மெய்கண்டார் ஓர் ஐப்பசித் திங்கள் சுவாதி நட்சத்திரத்தன்று இறைவன் திருவடியடைந்தார்.

## மெய்கண்டார் காலம்

மெய்கண்டார் சிவஞான போதத்தைச் செய்து உபதேசித்து வருகையில் தமிழ்நாடெங்கும் அவர் புகழ் பரவியது. திருவண்ணாமலையில் அக்காலத்தில் கோளகிமடமொன்று செல்வாக்குப் பெற்றிருந்தது. மெய்கண்டார் மடத்தின் தலைவராக இருந்து சைவ சித்தாந்தத்தைப் போதித்து வந்தார்.செல்வர்பலர் மெய்கண்டாரிடம் சைவசித்தாந்தம் கேட்டுச் சிறப்புற்றனர். அவர்களில் ஊருடைய பெருமாள் என்பவரும் ஒருவர். அடுத்து வலியவேளார் என்றும் அவருக்குப் பெயருண்டு. திருவண்ணா மலைக்கு அண்மையில் மாத்தூர் என்று ஓர் ஊருண்டு. அவ்வூர் திருவண்ணாமலைக்குத் தேவதானமாக விடப்பட்டதாகும். அடுத்தது வலியவேளார் தேவதானமான மாத்தூரில் கோயிலாரிடம் ஆணைபெற்றுப் புதிதாக ஏரி ஒன்றை வெட்டினார். அதற்குத் தம் ஞான குருவான மெய்கண்டார் பெயரில் மெய்கண்ட தேவப் புத்தேரி என்று பெயரிட்டார். இந்த ஏரியின் கீழ்ப் பகுதியில் அவ்வேளானரே சிவன் கோயில் ஒன்றையும் கட்டி, அதற்கு மெய்கண்டீச்சுரம் என்றும் பெயரிட்டார். மெய் கண்டாருடைய சிறப்பையும் மாணர்க்கர் சிவத்தொண்டையும் கண்ட கோயிலார் அவ்வேரியின் கீழுள்ள நிலங்களை மெய்கண்டீச்சுரம் உடைய பெருமானுக்குத் தேவதானமாக விடவேண்டுமென்று எண்ணி, அக்கால அரசனிடம் வேண்டினர். அக்காலத்தில் ஆட்சி செய்த சோழ மன்னன் திரிபுவனசக்கரவர்த்திகள் மூன்றாம் இராசராசன் ஆவான்.அரசனும் மனம் மகிழ்ந்து மாத்தூருக்கு இராசராசநல்லூர் என்று பெயரிட்டு ஆணை வழங்கினான்.

"ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவனச் சக்ரவர்த்திகள் ஸ்ரீ ராசராச தேவர்க்கு யாண்டு 16 ஆவது இஷபநாயிற்று இருபத்தெட்டாந்தியதியும் சனிக்கிழமையும் பெற்று மிருக சீரிடத்து நாள் உடையார் திருவண்ணாமலை உடைய நாயனார் கோயில் சீமாகேஸ்வரக் கண்காணி செய்வார்களும் தேவர்கன்மி கோயில் கணக்கனும், திருவெண்ணெய் நல்லூருடையான் மெய்கண்ட தேவன் ஊருடைய பெருமாளான எடுத்தது வலிய வேளாளர்க்குக் கல்வெட்டிக் கொடுத்த பரிசாவது.......... இவ்விராசராச நல்லூரில் எழுந்தருளுவிக்கின்ற உடையார் மெய்கண்டீசுரமுடைய நாயனார்க்குப் பூசைக்கும் அமுதுபடிக்கும் மூன்றில் ஒன்று

தேவதானமாகவும்................. இப்படிக் சம்மதித்துச் கல்வெட்டிக் கொடுத்தோம் இவ்வாணையோம். இது பன்மாஹேஸ்வ ரக்ஷை". என்பது கல்வெட்டாகும். இக்கல்வெட்டு மூன்றாம் இராசராசனுடைய 16ஆவது ஆட்சியாண்டுக் கல்வெட்டாகும். மூன்றாம் இராசராசன் கி.பி. 1216 முதல் 1256 வரை ஆட்சி செய்த சோழ மன்னனாவான். இக்கல்வெட்டின் காலம் 1216+16 =1232 ஆகும்.

மெய்கண்டாருக்குப் பின் அருணந்தி சிவாச்சாரியார், அவர் மாணாக்கர் மறைஞான சம்பந்தர், அவர் மாணாக்கர் உமாபதி சிவாச்சாரியார் ஆவார். உமாபதி சிவாச்சாரியார் சங்கற்ப நிராகரணம் என்ற நூலை அருளிய காலம்.'ஏழஞ்சு இருநூறு எடுத்த ஆயிரம் வாழும் நற்சகம்' எனக் குறிப்பிடப் பெறுகிறது. இது சகம் 1235 ஆகும். சக ஆண்டோடு 78 ஐக் கூட்டினால் கி.பி.ஆண்டு வரும். எனவே 1235+78 =1313, இவ்வாண்டு சங்கற்ப நிராகரணம் பாடிய காலமாகும். உமாபதி சிவாச்சாரியார்க்கு மூன்று தலைமுறை முற்பட்டவர் மெய்கண்டார். எனவே 75 ஆண்டுக்கு ஏறக்குறைய முற்பட்டவர் ஆவார். 1313 +75=1238, 1238ஐ ஒட்டிய காலம் மெய்கண்டார் காலமாக இருக்கலாம். கல்வெட்டுக் கூறும் 1232ம் இதற்குப் பக்கத்தில் உள்ளது. எனவே கி.பி. 13ஆம் நூற்றாண்டின் முற்பகுதி மெய்கண்டார் காலமாகலாம்.

து.அ. கோபிநாத ராயரே முதன் முதலாகச் சாசனம் கூறியபடி மெய்கண்டார் 1232ல் வாழ்ந்தார் என்று எழுதினார். இவர் கூற்றைத் தனிப்பட்டுப் பின்னர் ஒருவரும் ஆராயாமலே ஏற்றுக் கொண்டார்கள். அதன்பயனே இச்சந்தானசாரியார் 13ம் நூற்றாண்டில் வாழ்ந்தவர் என்று கருதுகின்ற மரபு ஏற்பட்டது என்பது மு. அருணாசலம் அவர்கள் கருத்தாகும்.

### களப்பாளரைப் பற்றிய கருத்து

மெய்கண்டாரின் தந்தையார் அச்சுதக்களப்பாளர். தமிழ்நாவலர் சரிதையில் அச்சுதக்களப்பாளர் ஒருவர் குறிப்பிடப் பெறுகிறார். அவர் தில்லையில் வாழ்ந்தவர், பிறந்தவர், இருவரும் வெவ்வேறானவர், களப்பிரர் வேறு, களப்பாளர் வேறு, களப்பிரர் தமிழகத்திலில் கி.பி. 3ம் நூற்றாண்டுக்கும் 6ம் நூற்றாண்டுக்கும் இடைப்பட்ட இருண்ட காலத்தில் வாழ்ந்த ஓரினத்தவர். அவர்கள் தமிழ்ப்பண்பாட்டையும் சமயத்தையும் சிதைத்தவர் ஆவர். பண்டைக்காலத்தில் வாழ்ந்த மழவர், வாணர் முதலியோர்களை வென்றவர்களை மழவராயர், வாணராயர் எனப் பெயரிட்டு

அழைத்தனர். களப்பிரரை வென்றவரைக் களப்பாளராயர் என அக்காலத்து வழங்கினர். தொடக்க காலத்தில் இச்சிறப்புப் பெயர் வெற்றி பெற்ற சிலருக்கே இருந்தது. காலஞ்செல்லச் செல்லத் தந்தையின் சிறப்பு மகனுக்கும் வழி வந்தோர்க்கும் வருகின்ற முறையில் களப்பாளராயர் குடிப்பெயராக அமைந்தது.

"களப்பாளராயர் என்ற பெயர் கொண்ட பலரும் தமிழ் வேளாண் மக்களே ஆவர்"என்பர் ஔவை சு.துரைசாமிப் பிள்ளையவர்கள். அறுபத்துமூன்று நாயன்மார்களில் ஒருவரான கூற்றுவ நாயனார் களந்தை என்ற ஊரில் வாழ்ந்த களப்பாள மரபைச் சேர்ந்தவராவார். முதற் குலோத்துங்கன் காலத்தில் தொண்டை நாட்டு நெற்குன்றம் என்ற ஊரில் அரையன் நெற்குன்றங் கிழார் கருவுள் நாயகரான களப்பாளராயர் ஒருவர் இருந்ததைக் கல்வெட்டால் அறியமுடிகிறது. இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் கங்கை கொண்ட சோழக் களப்பாளராயர் ஒருவர் இருந்துள்ளார். கொங்குச் சோழர் வீர ராசேந்திரன் காலத்தில் காடுவெட்டிக் கண்ணன் களப்பாளராயன்பற்றிய செய்தி கண்ணபுரக் கல்வெட்டால் காணப்படுகிறது. பிற்காலத்தில் விசயநகரப் பேரரசுக் காலத்தில் களப்பாளராயர் பெயரில் பலர் இருந்துள்ளனர். இத்தகைய வேளாளர் மரபில் தோன்றிய அச்சுதக்களப்பாளரும் வேளாள மரபினரே ஆவர்.



# 3. சிவஞானபோதம்

## சிவஞானபோதம் தமிழ் முதல் நூலே

சிவஞான போதம் தமிழில் தோன்றிய முதல் நூலாகும். பேராசிரியர் சுந்தரம் பிள்ளை, மறைமலை அடிகளார், கா. சுப்பிரமணிய பிள்ளை முதலியோர் ஆராய்ந்து தமிழில் தோன்றிய முதல்நூலே என்று உறுதி செய்துள்ளனர். பாலசுப்பிரமணிய முதலியாரவர்கள் 120 காரணங்களைக் காட்டிச் சிவஞானபோதம் தனித்தமிழ் நூலே என்று நிறுவியுள்ளார். அவற்றுள் சில.

1. மெய்கண்ட சாத்திரங்களில் அவற்றை எழுதிய ஆசிரியர்கள் எங்கும் சிவஞான போதத்திற்கு முதல்நூல் இதுவென்று குறிப்பிடவில்லை.

2. சிவஞானபோதத்திற்கு வடமொழியில் உள்ள இரெளவரவ ஆகமத்தில் பாசவிமோசனப் படலத்தில் உள்ள பன்னிரண்டு சூத்திரங்களே மூலமென்பர். சத்தியோசோதி சிவாச்சாரியார் தத்துவசங்கிரகம் என்னும் நூலை இயற்றியவர். திரிலோசன சிவார்ச்சாரியார் சித்தாந்த சாராவளி என்னும் நூலை எழுதியவர். சோதி சிவாச்சாரியார் இரெளவரவ ஆகமத்திற்கு உரை எழுதியவர். அகோர சிவாச்சாரியார் ஆகமத்தின் பல பகுதிகளை மேற்கோள் காட்டுவர். நீலகண்ட சிவாச்சாரியர், ஆதி சங்கராச்சாரியார் ஆகமங்கள் பலவற்றிற்கு விளக்கமும், பலவற்றை மேற்கோளாகவும் செய்தவர்; இவர்களில் யாரும் பன்னிரண்டு சூத்திரங்களில் ஒன்றைக்கூடக் குறிப்பிடவில்லை.

3. வடமொழிச் சிவஞானபோத அமைப்பிற்கும் தமிழ்ச் சிவஞான போத அமைப்பிற்கும் வேறுபாடு உண்டு.

4. முதல் சூத்திரம் வடமொழியில் பெண் ஆண் அலி எனக் குறிப்பிடுகின்றது. தமிழ்ச் சிவஞானபோதம் அவன், அவள், அது என்று குறிப்பிடுகின்றது.

5. இரண்டாம் சூத்திரம் வடமொழியில் இறைவன் வியாப்தியாய் இருப்பதைக் குறிக்கிறது. தமிழ்ச் சிவஞானபோதம் கடவுள் வியாபகம், உயிர்கள் வியாப்பியம் மலங்கள் வியாப்தி என்ற கொள்கை உடையது. இவ்வாறு பல சூத்திர வேறுபாடுகள் தமிழ்ச் சிவஞானபோதம் வடமொழிச் சிவஞான போதம் இரண்டுக்கும் மிக்குள்ளன.

"மெய்கண்டதேவர் சிவஞான போதம் அருளிச் செய்தற்கு முன் அப்பெயர் கொண்ட நூலொன்று வடமொழியிலாதல், தென் மொழியிலாதல் இருந்ததற்குச் சான்றேதுமில்லை" என்பர் மறைமலை அடிகளார். தமிழ்ச் சிவஞான போதத்தைப் பார்த்து வடமொழியில் மொழிபெயர்த்துக்கொண்டனர். தாம் மொழி பெயர்த்த பன்னிரண்டாம் சூத்திரத்தின் இறுதியில், 'இங்ஙனமாகச் சிவஞானபோதத்தில் சைவசித்தாந்தப் பொருள் முடிவை அறிந்து கொள்க' என்ற பொருளில் 'ஏவம் வித்யாச் சிவஞான போதே சைவார்த்தி நிர்ணயம்' என்ற வடமொழிப் பகுதி அமைந்துள்ளது. தமிழ்ச் சிவஞான போதம் 'ஆலயந்தானும் அரனெனத் தொழுமே' என்று முடிகிறது. "இத்தகையவற்றை உற்று நோக்குங்கால் அவ்வடமொழிச் சூத்திரங்கள் பன்னிரண்டும் தமிழ்ச்சிவஞான போதச் சூத்திரங்கள் பன்னிரண்டன் மொழி பெயர்ப்பாதல் புலனாகா நிற்கும்" என்று மறைமலை அடிகள் ஆய்வு முடிவு செய்துள்ளார்.

தொல்காப்பியம், இறையனார் களவியல், சங்க இலக்கியங்கள், திருமுறைகள் ஆகியவற்றில் காணப்பெறும் சைவசித்தாந்தக் கொள்கைகளை ஒன்று திரட்டித் திருவருள் கூட்டத் தமிழ்ச் சிவஞானபோதத்தை மெய்கண்டார் இயற்றியுள்ளார்.

## மெய்கண்டார் மரபு

இறைவன் நந்தி எம்பெருமானுக்குத் தத்துவப் பொருள்களை உபதேசித்தார். நந்தியெம்பருமான் சனற்குமாரருக்கு உபதேசித்தார். சனற்குமாரர் சத்தியஞானதர்சினிகளுக்கு உபதேசித்தார். சத்தியஞானதரிசினியிடம் பரஞ்சோதி முனிவர் உபதேசம் பெற்றார். இவர்கள் நால்வரும் கயிலை மலையின்கண் தொடர்ந்து உபதேசம் பெற்றதால் அகச் சந்தானம் என அழைக்கப்பெற்றனர்.

பரஞ்சோதி முனிவர் திருவெண்ணெய் நல்லூரில் சுவேதவனப் பெருமானுக்குச் சிவஞானத்தை உபதேசித்தார். தம் ஞானகுருவான சத்தியஞான தரிசினிகள் என்ற பெயரைத் தமிழகத்திற்கேற்ப

மெய்கண்டார் என்று மாற்றிச் சுவேதவனப் பெருமானுக்கு இட்டு வழங்கினார். இதுமுதல் மெய்கண்டார் என வழங்கப்பட்டது. மெய்கண்டாருக்கு மாணாக்கர் பலர் இருந்தாலும் அருள் நந்தி சிவாச்சாரியாரே சந்தான மரபில் மெய்காண்டாரின் மாணாக்கராக வழங்கப்பெறுகிறார். அருள்நந்தி சிவாச்சாரியார் மறைஞான சம்பந்தருக்கு உபதேசம் செய்தார். மறைஞான சம்பந்தரிடம் தில்லை வாழ் அந்தணரான உமாபதி சிவாச்சாரியார் உபதேசம் பெற்றார். உமாபதி சிவாச்சாரியார் சிவப்பிரகாசம், திருவருட்பயன் முதலிய எட்டுச் சாத்திர நூல்களை எழுதினார்.

1. மெய்கண்டார்
2. அருள்நந்தி சிவாச்சாரியார்
3. மறைஞானசம்பந்தர்
4. உமாபதி சிவாச்சாரியார்

ஆகிய நால்வரும் புறச் சந்தானம் என வழங்கப்படுகின்றனர். நிலவுலகில் மக்களுக்குப் பயன்படும் வகையில் சந்தானகுரவராக விளங்கியதால் புறச்சந்தானகுரவர் என வழங்கப் பெற்றனர்.

## சிவஞானபோதம் நூல் உரைகள்

சிவஞான போதத்திற்கு விளக்கமாக அருள்நந்தி சிவாச்சாரியார், சிவஞான சித்தியார் என்ற நூலைப் பொருள்விளக்க முறையில் பாடல் வாயிலாக விரிவான அமைப்பு முறையைத் தந்துள்ளார். பாண்டிப் பெருமாள் எழுதிய உரையே சிவஞான போதத்திற்குத் தோன்றிய உரைவடிவான முதல் உரையாகும். சிவஞான முனிவர் பேருரை, சிற்றுரை என்ற இருவகை உரைகளையும் எழுதியுள்ளார். தென்னிந்திய மொழிகளிலேயே மாபாடியம் என வழங்கிய பேருரை சிவஞானபோதத்திற்குத்தான் தமிழில் தோன்றியது. ஆதலால், திராவிட மாபாடியம் என்று பெயர் பெற்றது. சிவஞான போதக் கருத்துக்கள்பற்றிய விளக்கம் உரைகள் இந்நூலில் சிவஞான முனிவரின் சிற்றுரை பேருரைகளை ஒட்டியே அமைக்கப் பட்டுள்ளன.

## சிவஞான போதம் - நூல்

சிவஞான போதம் (1) கடவுள் வாழ்த்து (2) சிறப்புப்பாயிரம். (3) அவையடக்கம் ஆகிய மூன்று பகுதிகளை முதலில் கொண்டுள்ளது. அடுத்துப் பன்னிரண்டு நூற்பாக்களால் ஆன நூல் அமைந்துள்ளது. பன்னிரண்டு நூற்பாக்களும் சேர்ந்து நாற்பது

அடிகளைக் கொண்டு விளங்குகிறது. நாற்பது அடிகளுக்கும் இருநூற்றுப் பதினாறு சொற்கள் உள்ளன. பன்னிரண்டு நூற்பாக்களை விளக்க எண்பது வெண்பாக்கள் உள்ளன.

## (1) கடவுள் வாழ்த்து

கல்லால் நிழல் மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே

எடுத்துக் கொண்ட காரியம் தடையின்றி இனிது நிறை வேறுதற்காகக் கடவுளை வழிபடுவது மரபாகும். திருவருள் கைவரப்பெற்ற மெய்கண்டார்க்கு நூல் செய்யத் தடை வாராது என்பது நன்கு தெரியும் ஆயினும், முன்னோர்கள் கடவுள் வாழ்த்துப் பாடிய மரபு முறையைப் பாதுகாத்தற்காகவும், தாம் கடவுள் வாழ்த்துப் பாடாவிட்டால் மாணாக்கர்கள் அவ்வாறே பாடாமல் கைவிடுவராதலான் அவர்க்கு அறிவுறுத்துவதற்காகவும் கடவுள் வாழ்த்துப் பாடினார்.

### பாடற் பொருள்

திருக்கயிலையில் அருள்வடிவான கல்லால மரத்தின் நிழலில் வீற்றிருப்பவர் சிவபெருமான். அவர் நந்தியெம்பெருமானுக் குண்டான ஐயத்தைப் போக்கியவர். அவர் அருள் செய்யும் பொருட்டுத் திருவெண்ணெய் நல்லூரில் வீற்றிருக்கும் பொல்லாப்பிள்ளையாருடைய இரண்டு திருவடிகளையும் பெரியவர்கள் தலைமேல் அணிந்து கொள்வர். எனவே நாமும் அவ்வறே அணிந்துகொள்ளலாம் என்பது கருத்து.

மலைவு இல்லார் - மலைவு இல்லாமல் செய்தவர்; மலை வில்லார் - மேரு மலையை வில்லாகக் கொண்டவர் என்றும் பொருள் கூறலாம். அருளிய - அருளும் பொருட்டு, பொல்லார் - பொள்ளார் - உளியால் செதுக்கப்படாதவர். இணைமலர் - ஒத்த இரண்டு திருவடிகள்.

### கடவுள் வாழ்த்து மூவகைப்படும்

*(1)* வாழ்த்து *(2)* வணக்கம் *(3)* பொருளியல்புரைத்தல் ஆகியன. வாழ்த்தல் - வாழ்த்துவாம், போற்றி - முதலியன. (2) வணங்குவாம், வணக்கம் செய்வாம் முதலியன (3) நூலின் பொருளைக் கடவுள் வாழ்த்தில் அமைத்துப் பாடுதல் ஆகும்.

மெய்கண்டார் பாடிய கடவுள் வாழ்த்து, பொருளியல்பு உரைத்தல் ஆகும். கல், ஆல், நிழல், மலைவு, இல்லார், அருளிய, பொல்லார், இணை, மலர், நல்லார், புனைவர், ஏ - ஆகிய பன்னிரண்டு சொற்கள் உள்ளன. சிவஞானபோதம் பன்னிரண்டு நூற்பாக்களால் ஆனதைப் பன்னிரண்டு சொற்கள் உணர்த்தும். அருளிய, புனைவர் ஆகிய இரண்டு வினைமுடிவுகள் பொது அதிகாரம், உண்மை அதிகாரம் ஆகிய இருபகுப்பைக் காட்டும். இவ்வாறு அமைந்த கடவுள் வாழ்த்தை மங்கல வாழ்த்து என்பது மரபு ஆகும்.

## சிறப்புப் பாயிரம்

எல்லா நூல்களாலும் பாடப்பெறும் சிறப்புடையவர் முதற்கடவுள் ஆவர். முதற் கடவுளின் திருவருளாலன்றி அறிய முடியாத முப்பொருள் உள்ளமையைத் திருவருள் துணையால் மட்டும் அறிய முடியும். திருவருள் துணையால் முப்பொருள் உண்மையை உணர்ந்த உயிர், மலம் நீங்கிய நிலையில் பொறுத்தற்கு அரிய துன்பத்தைத்தந்து உடன் நிற்கும்-காணப்பட்ட இவ்வுடலைக் கொண்டு காணப்படாத உயிரின் இயல்பை அறியும். உயிர்க்குயிராய் விளங்கி நிற்கும் இறைவன் இயல்பையும் அறியும். இவற்றின் இயல்புகளை யெல்லாம் மயக்கம் நீங்க நந்தியெம் பெருமான் வழிவழியாக உணர்த்தப் பெற்றுவரும் சிவஞானபோதம் என்ற நூலைப் பெண்ணையாறு சூழ்ந்த திருவெண்ணெய் நல்லூரில் சுவேதவனப் பெருமான் என்ற இயற்பெயருடையவரும், நிலையில்லாத பொருள்களை நிலையில்லாதன என்று அறிந்து அதனால் நிலையுடைய பொருள் இது என உணர்ந்தமையால் மெய்கண்டார் என்னும் சிறப்புப் பெயருடையவரும், பிறவிப் பெரும்பகையைக் கடந்தவரும், தவத்தோர் தமது திருவடிகளை அணிந்துகொள்வதற்குக் காரணமான தலைமைத் தன்மை யுடையவரும் ஆனவர் இயற்றினார்.

இந்தக் கருத்தமைந்த சிறப்புப்பாயிரத்தை அருணநந்தி சிவாச்சாரியார் பாடினார் என்று சிவஞான போதத்துக்கு முதலில் உரையெழுதிய பாண்டிப்பெருமாள் குறிப்பிட்டுள்ளார். இதனை மறைமலையடிகளார் மறுத்துள்ளார்.

## 3. அவையடக்கம்

கடவுள் வாழ்த்துப் பாடும் போது, சிவபெருமானே தனிப் பெருங் கடவுள் என்று கூறினார். அவையடக்கத்தில் அந்தச் சிவபெருமான் அருள் பெற்ற சைவசித்தாந்தத்தின் உயர்ச்சியும்

மற்றைய சமயநூல்களை உணர்ந்தவருடைய தாழ்வும் கூறப்பெற்றுள்ளன.

உடைப்பொருள் இருவகைப்படும் (1) அடிமை (2) உடைமை ஆகியவை. உயிர்ப் பொருள் எல்லாம் உடைமைப் பொருள். இறைவனுக்கு அடிமைப் பொருளாக விளங்கும் உயிர்கள் முதலில் தம்மியல்பினை உணரவேண்டும். பின் தம்மை உடையானாகிய தலைவனை உணரவேண்டும். அவ்வாறு உணர்ந்தோர் மெய்யுணர்வுடையவர் ஆவர். அவ்வாறு மெய்யுணர்வு உடையவர் எம்முடைய குற்றங்களை நீக்கிக் குணம் கொண்டு பாராட்டுவர், எம்மையும் உடைமைப் பொருளாகக் கொண்டமையால் பாராட்டுவதன்றி இகழமாட்டார். ஆதலால் எம்மால் செய்யப்படும் இந்நூலையும் ஏற்றுக் கொள்வர். உயிராகிய தம்மையும் உடையானாகிய இறைவனையும் உணராதவர் தங்களுக்குள் கருத்து வேறுபாடு கொண்டு மாறுபட்டிருப்பார், ஆதலின் அத்தகையோர் எம்முடைய நூலையும் இகழவே செய்வார். அவ்வாறு இகழ்ந்துரைப்போர் உரையை யாம் ஒருபொருளாகக் கொள்ளமாட்டோம்.

சிவபெருமானுக்குத் தாம் அடிமை என்று உணரமாட்டாதவர் புறச் சமயத்தார் ஆவர். அவர்கள் கூறும் புறங்கூறுதலையும் ஒரு பொருளாகக் கருதமாட்டோம்.

## சிவஞானபோதம்

### பொதுவியல்

கடவுள், உயிர், தளை ஆகியவற்றின் பொதுத்தன்மைகளை ஆராய்ச்சி அறிவால் அறிந்துகொள்வது. கேட்டல், சிந்தித்தல் என்ற வழிகளில் உணர்ந்துகொள்வது. தத்துவ உலகில் பொது வியல்பு என்பது பருநிலை-தூல நிலையாகும். பிற பொருள்களோடு தொடர்பு கொண்டிருக்கும் பருநிலை, தூலநிலை, தடத்த இலக்கணம் என்பது ஒருபொருட் சொற்கள்.

1. பதிக்குப் பொது நிலை உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்றல் ஆகும்.

2. பசுவுக்குப் பொதுநிலை கருவி கரணங்களுடன் கூடி நிற்றலாகும்.

3. பாசத்துக்குப் பொதுநிலை காரிய நிலையில் நிற்றலாகும்.

4. பொதுவியல்பு பிரமாணத்தினாலும் இலக்கணத்தினாலும் அறியப்படும்.

## பிரமாணவியல்

பிரமாணம் - அளவையாகும். (1) காண்டல் (பிரத்தியட்சப்பிரமாணம்) (2) கருதல் - (அனுமானப்பிரமாணம்) (3) உரை - (ஆகமப்பிரமாணம்) என மூவகைப்படும். பிரமாணவியலில் பதி உண்மைக்குப் பிரமாணம் பசு உண்மைக்குப் பிரமாணம் பாச உண்மைக்குப் பிரமாணம் என்ற மூன்று செய்திகளை முதல் மூன்று நூற்பாக்களால் அமைத்துக் காட்டியுள்ளார்.

### முதல் நூற்பா

ஒருவன் என்றும், ஒருத்தி என்றும், ஒன்று என்றும் பகுத்துப் பலவாய் உணரப்படும் இவ்வுலகத் தொகுதி தோன்றுதல் நிலைத்தல் ஒடுங்குதல் என்ற முத்தொழில்களை உடையது. உலகு அறிவற்றதாதலால் இம்முத்தொழில்களைத் தானே செய்து கொள்ளாது, முத்தொழில்களைச் செய்வதற்கு முதல்வன் கடவுள் ஒருவன் வேண்டப்படுவான். அம்முதல்வனால் ஒடுக்கப்பட்டு உலகமே மீளத் தோற்றுவிக்கப்படுவதால் உலகம் உள்பொருளே ஆகும். ஒடுக்கத்தைச் செய்த கடவுளே உலகத்தை மீளத் தோற்றுவித்தற்குக் காரணம், உயிர்களிடத்து உள்ள மலமாகிய மாசினைப் போக்குவதற்கே ஆகும். எனவே ஒடுங்கியும் தோற்றுவித்தும் தொழிற்படுத்தும் ஒப்பற்ற அழித்தற் கடவுளாகிய சிவபெருமானே உலகிற்கு முதற்கடவுள் ஆவர்.

காணப்பட்ட காரியமாகிய குடத்தைப் பார்த்து, அதனை வனைதற்கு உரிய காரணன் ஆகிய குலாலன் ஒருவன் உண்டு என்று கருதியதைப் போலக் காணப்பட்ட காரிய உலகத் தொகுதியைப் பார்த்து அதனைப் படைத்தற்குக் காரணன் ஆகிய கடவுள் ஒருவன் வேண்டும் என்று உணர்ந்துகொள்ள வேண்டும் என்பது கருத்து.

ஒருவன், ஒருத்தி, ஒன்று என்ற பாகுபாடுகளைக் கொண்டிருத்தலாலும் பலவாகச் சடமாக இருக்கும் காரணத்தாலும், சுட்டி அறியப்படாத முயற்கொம்பு முதலிய பொய்ப் பொருள் போல அல்லாமல் மெய்யாகச் சுட்டி அறியப்படும் காரணத்தாலும், இவ்வுலகம் தோன்றுதல், இருத்தல், அழிதல் ஆகிய முத்தொழிலை உடையது.

முதல் நூற்பா மூன்று கூறுபாடுகளைக் கொண்டது.

முதற் கூறு

உலகத்தொகுதி தோற்றம், நிலைபேறு, அழிதல் என்ற முத்தொழிலை உடையது. உலகத்தொகுதி கண்ணால் காண்டற்கு உரியதாக இருக்கின்றது. அதன் தோற்றத்தையும் அழிவையும் யாரும் கண்டது இல்லை. எனவே, கண்ணால் காணமுடியாத தோற்றமும் அழிவும் உண்டு என்று கூறுதல் எவ்வாறு பொருந்தும்? எனவே, உலகம் முத்தொழிலை உடையது என்பது பொருந்தாது என்பது உலகாயதர், மீமாம்சர் ஆகியோர் கொள்கை. அவர்கள் கருத்தை மறுப்பதே முதற்கூறு ஆகும். தோற்றமும் அழிவும் உள்ள ஒன்றினாலேயே அறியமுடியும். ஒருபொருள் காணும்போது உள்ளது என்றால் அதுமுன்பு தோன்றியிருக்கவேண்டும். தோன்றும் பொருள் முன்பு ஒருகாலத்தில் அழிந்திருக்கவேண்டும். எனவே, தோன்றுவதும் அழிவதும் உள்ள ஒரு பொருளுக்கு நிச்சயம் உண்டு. அவ்வாறானால் ஒன்று அழியப் பிறிது ஒன்று தோன்ற ஒன்று இருக்க மற்றொன்று அழிய, ஒன்று இருக்க வேறொன்று தோன்றக் காணப்படுகிறதே யல்லாமல் ஒருங்கு தோன்றி, ஒருங்கு நின்று, ஒருங்கு அழிவது எங்கும் காணோமே-என்று தடை வருகின்றது, மழைக் காலத்தில் ஒரே வகையான பயிரினங்கள், உயிரினங்கள் ஒருங்கு தோன்றி வேனிற் காலத்தில் அவை ஒருங்கு அழிவதைக் கண்கூடாகக் காணலாம். இவ்வாறே உலகமும் ஒருகாலத்தில் ஒருங்கு அழியும் என்பது உறுதியாகும்.

இரண்டாம் கூறு

முத்தொழிலும் இறைவனாலேயே நடைபெறும். உலகம் தோன்றி அழியும் என்னும் அவ்வுலகம் உள்பொருள் ஆகாது, இல்பொருள் ஆகத் தத்தம் சார்பிலே தோன்றி அழியும், அவ்வாறு தோன்றி அழிவது அதனுடைய இயற்கை ஆகும். ஆதலால் அதற்குக் கடவுள் ஒருவன் தேவையில்லை என்பது புத்தர், சமணர் கொள்கையாகும். அவர்கள் கருத்தை மறுப்பதே இரண்டாம் கூறு ஆகும்.

முயல்கொம்பு முதலிய இல்பொருள்கள் என்றும் தோன்றுவது இல்லை. உள் பொருளே எக்காலத்தும் தோன்றுவதாகும். உலகம் காண்பதற்குரிய உள்பொருள் ஆதலின், ஒரு காலத்துத் தோன்றியிருக்க வேண்டும். உள்பொருளைத் தோற்றுவிப்பதற்கு முதல்வன் ஒருவன் உண்டு என்பது கருத்து.

உலகம் உள்பொருள் எனினும், அது மாயையில் ஒடுங்குதலால் அதிலிருந்தே தோன்றலாம், அதனைத்

தோற்றுவிப்பதற்கு முதல்வன் ஒருவன் தேவையில்லை என்பது சாங்கியர் கூறும் தடை.

மாயையும் உலகமும், வித்தும் முளையும் போல அமையும். வித்துக்கு நிலைக்களமாகிய நிலம் குளிர்ந்த போது அல்லாமல் அந்நிலத்திலிருந்து வித்து முளைக்காது. அதைப் போல இறைவன் வைப்புச் சத்தியாக அமைந்த மாயையும் இறைவனுடைய அருளாற்றலாகிய சத்தியின் செயல் இல்லாமல் உலகத்தைத் தோற்றுவிக்காது.

முளைக்கு ஆதாரம் வித்து, வித்துக்கு ஆதாரம் நிலம். அதுபோல உலகத்துக்கு ஆதாரம் மாயை, மாயைக்கு ஆதாரம் சிவசக்தி, அச்சக்தி சிவனுக்கு வேறாதல் இல்லை. ஆதலால், உலகத்துக்கும் மாயைக்கும் சிவன் தேவை என்பது கருத்து. மாயையில் ஒடுங்கிய உலகத்தை மாயையே தோற்றுவிக்கும் என்பதும் அதற்குக் கடவுள் ஒருவன் வேண்டா என்பதும் மண்ணில் ஒருங்கிய குடத்தை மண்ணே தோற்றுவிக்கும், குலாலன் ஒருவன் வேண்டா என்பது போல் உள்ளது. வேட்டை வாளி என்னும் குளவியாதற்கு உரிய புழுவுக்கு வேட்டை வாளியானது அப்புழுவுக்கு வேண்டியவற்றை அமைத்துக் கொடுத்து அதனைத் தானாக ஆக்குமாறுபோல் சிவபெருமான் அவ்வவர்க்கு வேண்டிய உருவத்தை அவ்வவர்க்கு அவ்வப்போது கொடுத்து அந்தந்த வினைக்குப் பொருந்திய பயன்களை அவ்வவர்க்குத் தருவான். படைத்தல், காத்தல், அழித்தல் ஆகியவற்றைச் செய்யும் சிவபெருமானுக்கு அவற்றால் வேறுபாடு உண்டாகாதா? என்பது தடை.

காலம் - இறந்த காலம், நிகழ்காலம், எதிர்காலம், நாழிகை முதலியனவாக வெவ்வேறு வகைப்பட நின்று தொழில்கள் எல்லாவற்றையும் செய்யும், ஆனால், காலம் அதனால் விகாரம் - வேறுபாடு அடையாது, அதுபோலக் கருவிகளால் படைக்காமலும், காக்காமலும், அழிக்காமலும் நினைத்த அளவிலேயே அவற்றைச் செய்து வருதலால் வேறுபாடு அடையான்.

உலகினர் கை, கால் முதலிய கருவிகளைக் கொண்டு செயல் செய்கின்றனர். இறைவன் அவ்வாறன்றி நினைத்த அளவிலேயே அனைத்தையும் செயல்படுத்துகின்றான். ஆதலால், அவன் விகாரம் அடையான். படைத்துக் காத்து அழிக்கும்போது அவற்றால் தொடர்பு உண்டாகிப் பாதிக்கப்பட மாட்டானா என்பது மற்றொரு தடை.

ஒருவன் ஒரு நூலைக் கற்கும்போது கற்கும் நூலில் உள்ள சொல்லும் பொருளும் அவன் உள்ளத்தில் தோன்றும்போது அவன் உள்ளம் அவற்றால் பாதிக்கப்படாது. கனவில் சிலவற்றைக் கண்டபோது கண்டவை நனவில் நன்கு தெரிந்தாலும் அதனால் பாதிப்பு ஏற்படுவது இல்லை. அவற்றைப் போல இறைவனுக்கு முத்தொழிலால் பாதிப்பு ஏற்படுவதில்லை.

மூன்றாம் கூறு

சங்காரக் கடவுள் ஒருவனே முதல்வன் ஆவான். மிகமிக வியந்து போற்றத்தக்க இவ்வுலகத்தை ஒருவன் தோற்றுவித்தல் இயலாது. அதற்குப் பல கடவுளர் வேண்டும் என்று அநேக ஈசுவரவாதியர் கூறுவர். அநேக ஈசுவரவாதியர் - பலகடவுளர் உண்டு என்னும் கொள்கை உடையவர்.

தேர் முதலியனவற்றைப் பலர் கூடியே செய்வார்கள். அவ்வாறு செய்யும்போது தலைமையான ஒருவன் ஏவல் வழிநின்றே செய்வார்கள். அதுபோல இவ்வுலகும் பிரமா முதலியவர்களால் தொழிற்படினும் அவர்கள் அனைவரும் சிவபெருமான் ஏவல்வழி நின்றே தொழில் செய்வார்கள்.

உலகம் முழுவதும் ஒப்பற்ற பரம்பொருளாலே படைக்கப்பட்டுக் காக்கப்படும். அந்தப் பரம்பொருளிடத்திலேயே ஒடுங்கும். அத்தகைய கடவுளே உலகத்திற்கு முதற்கடவுள் ஆவர். காரியமாகிய உலகம் அறிவில்லாத சடப்பொருள் ஆகும். அறிவுடைய பசுக்களும் ஆணவம் முதலிய பாசத்தால் கட்டுண்டு சிற்றறிவு உடையனவாய் இருக்கும். இவ்வாறு உலகமும் உயிர்களும் இருத்தலால் அவற்றைத் தொழிற்படுத்தும் முதற்கடவுள் முற்றறிவு உடையராயும் பேராற்றல் உடையவராயும் இருத்தல் வேண்டும். அத்தகைய கடவுள் ஒருவரே இருத்தல் முடியும், பலர் இருக்கமுடியாது. ஆதலால், சங்கார காரணராகிய கடவுளே உலகிற்கு முதல்வர் ஆவர்.

## இரண்டாம் நூற்பா

உலகத்துக்கு முதல்வனாக விளங்கும் சிவபெருமான் உயிர்களின் பொருட்டு உலகத்தை மீண்டும் தோற்றுவிப்பான். உடம்பு இருந்து செயல்படுவதற்கு உயிர் அவ்வுடம்போடு கலந்து நின்று அவ்வுடம்பாகவே நிற்கும். அதுபோல உயிர்கள் நிலைபெற்று உடலிலிருந்து செயல்படுவதற்கு அவ்வுயிர்களிடத்து இறைவன் கலந்து நின்று அவ்வுயிர்களாகவே நிற்பான். இது

ஒன்றாய் நிற்றல் எனப்படும். கண் காண்பதற்குத் துணையாய் ஒளியைத் தருவது சூரியன் ஆகும். சூரியன் கண்ணிலிருந்து வேறாதல் போல உயிர்களிடத்து அறிதலைச் செய்தற்குத் துணையாய் நிற்கும் இறைவன் அவ்வுயிர்களின் வேறாய் நிற்பன். இது வேறாய் நிற்றல் எனப்படும். கண்ணின் ஒளி பொருளைக் காண்பதற்கு உயிர் அறிவுடன் நின்று கண்ணொளியுடன் சேர்ந்து பார்க்கும் பொருளுக்குச் செல்லுமாறு போல உயிர்கள் இன்பதுன்பங்களை அனுபவித்தற்கு அவ்வின்பதுன்பங்களுக்கு இடனாக இருக்கும் பொருள்களில் உயிரோடு சேர்ந்து இறைவன் செல்லுதலால் உயிரோடு உடனாய் நிற்பன். இது உடனாய் நிற்றல் எனப்படும்.

இவ்வாறு இறைவன் உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நின்று தன்னுடைய ஆணை எனப்படும் சிற்சத்தியினால் செலுத்தப்பட்டுவரும் இருவினைகளால் அவ்வுயிர்கள் இறப்பு பிறப்புக்களை மேற்கொள்ளும் முறையில் அவ்வாணையாகிய-சிற்சக்தியாகிய - அறிவாற்றலுடன் பிரிப்பின்றி ஒற்றுமைப்பட்டு நிற்பன்.

குலாலன் மண்ணைப் பிசைந்து தண்டு சக்கரத்தின் மேல்வைத்துச் சுற்றச் செய்து குடத்தைச் செய்கின்றான். குலாலன்-நிமித்த காரணம்-மண்-முதற்காரணம். நிமித்த காரணமும் முதற்காரணமும் ஒன்றாகத்தான் இருக்கும். துணைக்காரணம் - தண்டு, சக்கரம், சுற்றிவிடும் கருவி எனப் பலவகைப்படும்.

உலகத்திற்கு நிமித்த காரணம் இறைவன் ஒருவனே; முதற் காரணம் மாயை ஒன்றே. துணைக்காரணம்-திருவருட்சக்தி, கன்மம் எனப் பலவகைப்படும். இரண்டாம் நூற்பா நான்கு கூறுபாடுகளைக் கொண்டது.

இறைவன் உயிர்களில் இரண்டறக் கலந்து நிற்பான். இறைவன் உயிர்களோடு செயல்படும் தன்மைக்கு மூன்று விதமான கருத்துக்கள் தத்துவ உலகில் கூறப்பட்டு வருகின்றன. (1) பொன்னே ஆபரணம் ஆவதுபோல் பிரமமே உயிராயிற்று என்று ஏகான்மவாதிகள் கூறுவர். (2) இருளும் ஒளியும் போல் இறைவனும் உயிரும் வேறு வேறு என்று கூறுவர் மாத்துவர் (3) சொல்லும் பொருளும் போல் இறைவனும் உயிரும் ஒருவிதத்தில் ஒன்றாயும், வேரு ஒருவிதத்தில் வேறாயும் இருக்கும் என்று கூறுவர் வைணவர். இவர்கள் மூவரும் இவ்வாறு கூறுவதற்கு அத்துவிதம் என்ற சொல்லே அடிப்படைக்காரணம் ஆகும். தமிழில் 'ந' என்பது

முன்னொட்டாக வரும்போது சிறப்புப் பொருளில் வரும் ந+பூதன்=நப்பூதன், ந+செள்ளை=நச்செள்ளை, ந+கீரன்=நக்கீரன் என்பன அவ்வாறு வந்தனவாகும். வடமொழியில் 'ந' என்பது முன்னொட்டாக வரும்போது பல பொருளில் வரும். (1) சாமியம் (2) இன்மை (3) பேதம் (4) சிறுமை (5) இழிவு (6) மறுதலை ஆகிய ஆறு பொருள்களில் வரும். 'ந' என்பதில் ந் என்ற மெய்கெட்டு அகரம் மட்டும் நிற்கும். ந+சுத்தம்=ந்+அ+சுத்தம்=அசுத்தம் என வரும். ந+து+விதம்=நத்துவிதம் என்ற வடமொழிச் சொல்லில் உள்ள நகரமெய் கெட்டு அதன்மேல் நின்ற அகரமுதலாக நின்று தமிழில் அத்துவிதம் என வழங்கப்பட்டு வருகின்றது. அத்துவிதம் என்ற சொல்லில் உள்ள அகரம் அன்மை, இன்மை, மறுதலை ஆகிய மூன்று பொருளையும் உணர்த்தும்.

அ+பிரகாசம்+அப்பிரகாசம் என்பதில் உள்ள அகரம் பிரகாசம் இல்லை - ஒளியில்லை என்று இன்மைப் பொருளைக் குறித்தது. அது போலவே - அத்துவிதம் என்பதில் உள்ள அகரம் இன்மைப் பொருளை உணர்த்தி, இரண்டு இல்லை எனவே ஒன்று என்று உரைகண்டனர் சங்கரர். அவ்வாறு பிரமப்பொருள் ஒன்று என்று உணர்வது எதுவோ அவ்வுயிர் பிரமத்தின் வேறாம் என மறுக்கப்படும்.

நீதி x அநீதி, தர்மம் x அதர்மம் - இவற்றில் அகரம் மறுதலைப்பொருள் தந்து நீதியல்ல, தர்மம்அல்ல என வந்தது. நீதியும் அநீதியும், தர்மமும் அதர்மமும் மாறானவையாகும். அதுபோல அத்துவிதம் என்ற சொல்லில் உள்ள அகரம் மறுதலைப் பொருள்பட்டுக் கடவுளும் உயிரும் வேறுவேறு எனப்பொருள் கொண்டனர் மாத்துவர்.

இரண்டும் வேறுவேறு ஆயின் யாண்டும் நீக்கமற நிறைந்து இருப்பன் என்பதற்கு மாறாகும். உயிர் வேறாக இருக்கும் என்றால் உயிர் தனித்தியங்கும் ஆற்றல் உடையது என்ற நிலை ஏற்படும். அவ்வாறு கூறுவது உ்யிர்க்குப் பொருந்தாது.

ஏகான்மவாதிகள் கொண்டவாறே இன்மைப் பொருள் கொண்டு, கடவுள், யாண்டும் நீக்கமற நிறைந்தவன் என்றும் உயிரும் உலகமும் கடவுளிடத்து அடக்கம் என்றும் கூறுவர் வைணவர். உலகமும் உயிரும் பலவானாற்போல கடவுள் பல அல்ல ஒன்றே என்றும் அவர் கூறுவர். அத்துவிதம் என்பதில் உள்ள அகரம் அன்மைப் பொருளையுணர்த்தும் என்பது மெய்கண்டார் கருத்தாகும். அ+பிராமணன்=அப்பிராமணன் என்பதில் பிராமணன்

அல்லாத மன்னவன் வணிகன் முதலியோரைக் குறிக்காமல் பிராமணன்ஆகவிருந்தும் பிராமணத்தன்மை யில்லாத அன்மைப்பொருளைக் குறிக்கும். அதுபோல அத்துவிதம், என்பதில் உள்ள அகரம் அன்மையைக் குறிக்கும். அன்மைப் பொருள் கொள்ளும்போது பிராமணனாயிருந்தும் பிராமணத் தன்மையில்லாதவாறு போலக் கடவுளும் உயிர்களும் பொருள் தன்மையால் இரண்டாயினும் இரண்டின் தன்மையாக வேறுபிரித்து அறியவாராத கண்ணொளியும் ஆன்ம அறிவும் போலக் கலந்து நிற்கும் என்பது சைவசித்தாந்தக் கொள்கை. இரண்டாம் நூற்பா நான்கு கூறுபாடுகளையுடையது.

## முதற் கூறு

இறைவன் உயிர்களுடன் ஒன்றாயும், உடனாயும் நிற்றலே சைவசித்தாந்த அத்துவிதமாகும். ஒன்றாய் நிற்றலால் நிலைத்து நிற்கவும், வேறாய் நிற்றலால் அறிவித்தலால் அறியவும், உடனாய் நிற்றலால் இயக்க இயங்கவும் நடைபெறுவதால் அவ்வாறு மூன்றாகக் கூறப்பட்டன.

உயிரானது உடம்பினையும் ஐம்பொறிகள் முதலிய வற்றையுங் கொண்டு செயல்பட்டு நிற்கும். வேறொருவன் உடம்புக்கு வைத்த பெயரால் சாத்தா! கொற்றா! என்று அழைக்கும்போது, ஏன் என்று கேட்பான். இருவர் கைகோத்துக் கொண்டு செல்லும்போது அவ்வாறு பெயரைச் சொல்லி அழைத்தால் அப்பெயர்க்குரியவன் ஏன் என்று கேட்பான். உடம்புக்கு வைத்த பெயர் கொண்டு அழைத்த போது உயிர் ஏன் எனக் கேட்டதற்குக் காரணம் உயிரானது உடம்பு என்றும் தான் என்றும் வேற்றுமை காணாமல் ஒன்றாக நின்றதே யாகும். அதுபோலச் சிவபெருமான் உயிர்களிடத்து வேறுபடாது ஒன்றாக இயைந்து நிற்பான். அவ்வாறு இயைந்து நின்றவிடத்தும் உயிர்-உயிரே, உடம்பு-உடம்பே, உயிர் உடலாகாது, உடல் உயிராகாது. அவ்வாறு இருந்தாலும் உயிர் உடலாயும், அதற்கு வேறாகவும் நிற்கும். உடல் அதுபோல் நில்லாது. அதுபோலச் சிவபெருமான் சிவபெருமானே, உயிர் உயிரே, சிவபெருமான் உயிர் ஆகான், உயிர் சிவபெருமானாகமாட்டாது. அவ்வாறு இருந்தாலும் சிவபெருமான் உயிராயும் அதனின் வேறாயும் நிற்பன்; உயிர் அவ்வாறு நிற்கமாட்டாது. உயிரும் சிவபெருமானும் வேறாயினும் அபேதமாய் நிற்கும் - ஒன்றாய் நிற்கும் - இயல்பு இவ்வாறு காட்டப்பெற்றது.

வேதம் ஏகம் என்று கூறுவதற்குக் காரணம் பதிப்பொருளாகிய கடவுள் ஒன்றேயுண்டு இரண்டில்லை என்பதாகும். 'ஒருவனே தேவன்' என்று திருமூலர் கூறுவதும் 'ஒருவன் என்னும் ஒருவன் காண்க' என்று மாணிக்கவாசகர் கூறுவதும் இக்கருத்தை வலியுறுத்துவதாகும். பதிப்பொருளை ஒன்று என்று சொல்லுகின்ற உயிர் பாசத்தால் கட்டுண்டிருப்பது - அவ்வாறிருப்பது பதியாகாது.

அகரமாகிய உயிர் எழுத்து இல்லாவிட்டால், பிற எழுத்துக்களின் இயக்கம் இல்லை. அதுபோலப் பதிப்பொருளாகிய கடவுள் இல்லாவிட்டால் பிற பொருள்களின் இயக்கம் இல்லை.

'மெய்யின் இயக்கம் அகரமொடு சிவணும்' என்ற தொல்காப்பியத்தாலும் 'அகர முதல எழுத்தெல்லாம் ஆதி பகவன் முதற்றே உலகு' என்ற திருக்குறளாலும் அகர உவமையின் சிறப்பை அறியலாம். இறைவன் உயிர்களுடன் வேறாயிருந்து செயல்படும் முறை விளக்கப்பெற்றது. பண்ணும் அதனின் வேறாகாத இசையும் போலவும், பழமும் அதனின் வேறாகாத சுவையும் போலவும் எங்கும் நிறைந்திருக்கும் சிவபெருமானின் திருவருள் உயிர்களிடத்தில் வேற்றுமையின்றி நிற்றலால் வேதங்கள் ஒன்று என்று கூறாமல் அத்துவிதம் என்று கூறுகின்றன. வேதங்கள் பதிப்பொருள் ஒன்றே என்பதனை ஏகம் என்றும், அப்பதி உயிர்களோடு இரண்டறக் கலந்திருத்தலால் அத்துவிதம் என்றும் கூறுகின்றன என்பது கருத்தாகும். உடனாய் நிற்றல் இவ்வாறு விளக்கப்பெற்றது.

உருக்கிய அரக்கோடு கலந்த கற்பொடியானது அவ்வரக்கினோடு சேர்ந்து ஒருங்கியைந்து நீக்கமின்றிச் சாணைக்கல்லாய் நின்றதைப்போலச் சிவபெருமான் உயிர்களிடத்தில் ஒருங்கு சேர்ந்து நின்று நீக்கமின்றி உடனாதலால் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் நிற்பான் என்பது கருத்து. உயிர்களுக்கு வினைப்பயனை இறைவனே கொடுப்பின் இறைவன் உயிர்களின் பொருட்டு உலகத்தை மீண்டும் தோற்றுவிக்கும்.

### இரண்டாம் கூறு

இறைவன் உயிர்களின் பொருட்டு உலகத்தை மீண்டும் தோற்றுவிக்கும்போது இறைவனுக்கு இருவினை, மாயை முதலிய காரணப்பொருட்கள் வேண்டா, அவை மீண்டும் தோற்றுவித்தற்கு வேண்டுமாயின் தன்வயத்தன் ஆதல், அளவிலாற்றல் உடையவன்

முதலிய தன்மைகளுக்கு இழுக்காக முடியுமே என்பர் பரிணாமவாதிகள்.

ஒரு நகரத்தைக் காக்கும் அரசன் தன்னுடைய காத்தல் தொழிலை நம்பிக்கைக்கு உரிய ஒருவனிடத்து வைத்துச் செயல்படுத்துவான். அதுபோலச் சிவபெருமான் உயிர்களோடு சேர்ந்துநின்று உலகத்தை மாயையிலிருந்து தோற்றுவிக்கும்போது தன்னுடைய துணைக்காரணமாகிய சிற்சக்தியை இருவினைகளிடத்து வைத்து நடத்துவது முறையாகும். ஆதலால், உயிர்களுக்கு இரு வினைகளையும் சிவபெருமான் தன்னுடைய ஆணையால் அருளுவான்.

வினை-அறிவற்ற சடமாகலான் தானே உயிரைச் சென்று அடையாது, உயிர் சிற்றறிவு உடையதாகலின் தானே வினையை எடுத்துக்கொள்ளாது. இறைவனே உயிர்களுக்கு அவற்றின் வினைப்பயனை அறிந்து சேர்த்துவிப்பான். ஒருவன் இரும்பை எடுத்துக் காந்தத்தின் நேரே பிடிக்கும்போது காந்தம் அதனை இழுத்துக்கொள்ளும். அதுபோலச் சிவபெருமான் உயிர்களுக்கு வினைப்பயனை மாறாமல் நுகர்விக்கும்போது புண்ணிய பாவங்களைச் செய்யும் உயிர்கள் தமக்கும் இடமாக உள்ள உடம்பிலேயிருந்து வினைப்பயனை அனுபவிக்கும்.

நெல்லின்கண் உமியும், செம்பின்கண் களிம்பும் ஆராய்ந்து பார்த்தால் இடையே புதியனவாக வந்தன அல்ல, தொன்று தொட்டே உண்டானவையாகும். அதுபோல மாயாமலம் ஆணவமலம் கன்மமலம் ஆகிய மூன்றும் தொன்றுதொட்டே உள்ளனவாகும். சூரியன் ஒளியால் தாமரை மலர் மலர்தலும் வாடுதலும் நடைபெறுவதைப் போல மூன்று மலங்களும் இறைவனாலேயே தொழிற்படும்.

மாயை என்பது இறைவனுடைய வைப்புச் சக்தியாகும். வேண்டும்போது பயன்படுத்தப்பெறும் சடப்பொருளின் ஆற்றலாகும். உலகு ஒடுங்கியிருக்கவும் தோற்றவும் உதவுவதும் மாயையாகிய வைப்புச் சக்தியாகும்.

**மூன்றாம் கூறு**

உயிர்கள் மாறிப்பிறந்துவரும். குடம் உடைந்தபோது குடத்தின் உள்ளேயிருந்த வெளி ஆகாயத்தின் வெளியோடு சென்று சேர்வதைப்போல உடம்பு நீங்கிய உயிர் பிரமத்தோடு சேர்ந்துவிடும். ஆதலால் உயிரின் பொருட்டு இறைவன் உலகத்தை

மீளத்தோற்றுவிக்க வேண்டுவதில்லை. இறந்த உயிரும் மீளப் பிறவாது என்பது மற்றையவர்கள் கூறும் தடை.

கண், காது முதலிய உறுப்புகளை உடைய பருஉடம்பு அழிந்தபோது சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம், மனம், புத்தி, அகங்காரம் ஆகிய எட்டினால் ஆகிய நுண்ணுடம்பு (சூக்குமதேகம்) என்றும் அழியாததைத் துணையாகக் கொண்டு உயிர் மேலே செல்லும், முன்பு செய்த தீவினையை நரகத்தில் சென்று அனுபவிக்க வினையுடைய யாதனா சரீரத்தைக் கொண்டு அனுபவிக்கும். முன்செய்த நல்வினையைச் சுவர்க்கத்தில் சென்று அனுபவிக்க மென்மையான பூதசார சரீரத்தைக் கொண்டு அனுபவிக்கும். இவ்வாறு துன்ப இன்பங்களை அனுபவித்து வரும்போது நனவின் போது கண்டவற்றைக் கனவு காணும்போது மறந்து அறிவு வேறுபட்டாற்போல முன்பு பரு உடம்பு, நுண்ணுடம்பு, யாதனாசரீரம், பூதசார சரீரம் ஆகியவற்றில் அறிவு வேறுபட்டு அனுபவித்தவற்றை மறந்து, மனம் செலுத்துவதற்கேற்பப் புண்ணிய பாவங்களுங்கேற்ப நுண்ணுடம்பாய்ச் சென்று ஒரு கருவினிடத்துச் சென்று பிறக்கும்.

உயிர்களுக்கு மறுபிறப்பு உண்டு என்று கூறும்போது முற்பிறவிகளில் அனுபவித்தவற்றை உயிர்கள் இப்பிறவியில் ஏன் அறிவதில்லை என்ற ஐயத்துக்குப் பதில் தரும் முறையில் இப்பகுதி அமைந்துள்ளது.

மேலுலகில் துன்பத்தையும் இன்பத்தையும் அனுபவித்த உயிர் எஞ்சிய வினையை அனுபவிக்கும் பொருட்டு மீண்டும் நிலவுலகிற்கு வரத்தொடங்குகின்றது. மேகமண்டலத்தை யடைந்து மழைத்துளிகளோடு கீழே வருகின்றது. அங்குள்ள நெல் முதலிய தானியங்களில் சேர்ந்து உணவு வடிவாக ஆணின் உடலைச் சேர்கின்றது. ஆண்விந்து என்னும் சுக்கிலமாக மாறிப் பெண்விந்தாகிய சுரோணிதத்தோடு சேர்ந்து கருக்கொண்டு தாய் வயிற்றில் தங்கிக் குழந்தையாக வளர்ச்சியடைந்து பிறக்கின்றது. மேலுலகம், மேகமண்டலம், நிலம், தந்தை, தாய் ஆகிய ஐந்து இடங்களை அக்கினியாகவும் உயிரை ஆகுதியாகவும் கொண்டு கூறுதலால் பஞ்சாக்கினி வித்தை என்று வழங்கப்படுகின்றது.

பாம்பு தோலையுரித்துப் பின் வேறொரு தோலுடன் இருத்தலும், உயிர் நனவுடம்பின் நீங்கிக் கனவுடம்பில் செல்லுதலும், யோகியர் தம் உடம்பைவிட்டு மற்றொரு உடம்பிலே சென்று மீளுதலும் ஆகிய இம்மூன்றும் உயிர் பருவுடம்பை விட்டுப் போவதற்கு உவமைகளாகக் கூறப்படுகின்றன.

குடம் உடைந்தால் குடத்தின் உள்ளே இருக்கும் வெளி ஆகாயவெளியோடு கலப்பதாகக் கூறப்படும் உவமை உயிர் நுண்ணுடம்பை விட்டு உயிர் போவதற்கு இவ்வுவமை பொருந்தாது.

நான்காம் கூறு

இறைவன் தன் ஆணையாகிய திருவருட் சக்தியுடன் நீக்கமின்றி நிற்பான். இருவினையைக் கூட்டுவிக்கும் என்ற திருவருட்சக்தி இறைவனின் வேறு என்பர் மீமாம்சர். இறைவனின் வேறு அன்று, அவ்விறைவனே என்பர் நையாயிகர். இவ்விருவர் கருத்தையும் மறுக்கும் முறையில் அமைந்தது நான்காம் கூறு.

தன்னை விளக்குவதும் பொருள்களை விளக்குவதும் சூரியன் என்றாலும் தன்னை விளக்கும்போது சூரியன் என்றும் பொருள்களை விளக்கும்போது ஒளிக்கதிர் என்றும் வழங்கப்படுகின்றன. அதே போலப் புறப் பொருளை நோக்காது ஒன்றிலும் தோய்வின்றித் தன் உண்மை நிலையில் நிற்கும்போது சிவன் என்றும், புறப் பொருளை நோக்கி உலகத்திற்குப் பயன்படும்போது சத்தி என்றும் வழங்கப் பெறும். சூரியனும் அதன் ஒளிக்கதிரும் பிரிவின்றி இயைந்து நின்றதைப் போல இறைவனும் அவருடைய ஆணையாகிய சத்தியும் தாதான்மியாய் நீக்கமின்றி இருப்பர் என்பது கருத்து. ஒரே பொருள் குண குணித்தன்மையாய் இரண்டாக இருப்பது தாதான்மியம் எனப்படும். சத்தி-குணம், சிவம்-குணி இரண்டும் கலந்திருப்பது தாதான்மிய மாகும்.

தீயின் சக்தி ஒன்றே சுடுதல், அடுதல், விளக்குதல் முதலிய வேறுபாட்டினால் சுடும் சக்தி, அடும்சக்தி, விளக்கும் சக்தி எனப் பல வேறு வகைப்படுதல் போலச் சிவசக்தி ஒன்றே காரிய வேறுபாட்டினால் பராசக்தி, ஆதி சக்தி, இச்சா சக்தி, ஞான சக்தி, கிரியா சக்தி என ஐவகைப்படும்.

## மூன்றாம் நூற்பா

ஆன்மாவின் உண்மைத்தன்மையை உணர்த்துவது.

1. இலது என்றலின் ஆன்மா உளது-சூனிய ஆன்மவாதி-ஆன்மா என்ற ஒன்று இல்லை என்று கூறுபவன். இல்லை என்று அறியும் அறிவு என்ற ஒன்று உண்டு அல்லவா? அவ்வாறு அறிவதே ஆன்மாவாகும். ஆதலால் இல்லை என்பதனாலேயே ஆன்மா உண்டு என்பதாகும்.

2. எனது உடல் என்றலின் ஆன்மா உளது- உலகத்தார் தம்மின் வேறாகிய பொருள்களை 'என்வீடு'என்று கூறுவது போல் என் கை, என் கால், என் உடம்பு என்று வேறாகவே கூறுவதனால் உடம்பிற்கு வேறாக ஆன்மா உண்டு என்பதாகும்.

3. ஐம்புலன் அறிதலின் ஆன்மா உளது-ஐம்பொறிகள் ஐம்புலன்களாகிய சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகியவற்றை அறிவது உண்மையாகும், எனினும் ஒவ்வொரு பொறியும் ஒவ்வொரு புலனை அறியமுடியுமே யன்றி ஒரு பொறியே எல்லாவற்றையும் அறிய முடியாது. ஐம்பொறிகளைக் கொண்டு புலன்களால் வரும் ஐந்து பயன்களையும் அறிந்துவருகின்ற ஆன்மா அவற்றைத் தனித்தனியே அறியும் ஐம்பொறிகளுக்கு வேறாக உள்ளது என்பதாகும்.

4. ஒடுக்கம் அறிதலின் ஆன்மா உளது-ஐம்பொறிகளும் ஒடுங்கி நின்றபோது நிகழும் கனவு நிலையில் நிகழ்ந்த காரியங்களை அறிகின்றதொன்று உளதாகலின் கனவில் இயங்கும் சூக்கும தேகத்திற்கு வேறாக ஆன்மா ஒன்று உண்டு என்பதாகும்.

5. கண்படில் உண்டி வினையின்மையின் ஆன்மா உளது-உறக்கம் விழிப்பு என்ற இருநிலையிலும் பிராணவாயு ஒரேதன்மையாக இயங்கிக் கொண்டிருந்தாலும் உறக்கத்தின் போது இன்பதுன்ப நுகர்ச்சியும் தொழில் நிலையும் உடம்புக்கு இல்லை. விழிப்பு நிலையில் அவையுண்டு. ஆதலால் பிராணவாயுவே ஆன்மா என்பது பொருந்தாது, அதற்கு வேறாக ஆன்மா என்ற ஒன்று உண்டு என்பதாகும். உண்டி-இன்பதுன்ப நுகர்ச்சி, வினை-தொழில், செயல்.

6. உணர்த்த உணர்தலின் ஆன்மா உளது- கருவிகளோடு கூடிய போதும் தன்னுடைய தன்மை இது என்று உணராமல் உணர்த்த உணருகின்ற சிற்றறிவை உடையது ஆன்மா, அத்தகைய ஆன்மா மறந்து மறந்து அறியும்; முதல்வனாகிய பிரமம் அவ்வாறு இல்லாமல் அறிந்தவாறே முழுவதும் அறிந்து நிற்கும் பேரறிவு உடையவன் ஆதலால் பேரறிவுடைய பிரமாகிய முதல்வனுக்கு வேறாகச் சிற்றறிவுடையதாய், உணர்த்த உணரும் தன்மையுடைய ஆன்மா தனியே உண்டு என்பதாகும்.

7. மாயா இயந்திரதனுவினுள் ஆன்மா உளது-மாயையின் காரியங்களால் கட்டப்பட்டு அசைகின்ற சூத்திரப்பாவை போன்ற உடம்பின் இடத்தில் அதனில் வேறாகத் தனியே ஆன்மா என்பது ஒன்று உண்டு. உடம்பில் உள்ள கருவிகளின் சேர்க்கையே ஆன்மா

என்பது சமூக ஆன்மாவாதிகள் கொள்கை. கருவிகள் தோற்றக்கேடுகள் உடையன அழியுந்தன்மையன-ஆன்மா என்றும் அழியாதது.

சூனிய ஆன்மவாதி, தேகான்மவாதி, இந்திரியான்மவாதி, சூக்கும தேகான்மவாதி, பிராண ஆன்மவாதி, விஞ்ஞான ஆன்மவாதி, சமுதாய ஆன்மவாதி ஆகிய ஏழு வகையான கொள்கையுடையவர்களை மறுக்கும் நிலையில் அமைந்துள்ளது மூன்றாம் நூற்பா. ஆதலால், ஏழு கூறுபாடுகளை உடையது மூன்றாம் நூற்பா ஆகும்.

## முதல் கூறு

இல்லை என்று கூறுகின்ற அறிவுடைமையால் அறிவுடையது உயிர். ஆன்மா இலது என்று கூறுதல்பற்றி-ஆன்மா உண்டெனக் கொள்ளுதல் முயற்கோடு இல்லை என்று கூறுதல்பற்றி உண்டு என்று சாதித்தலோடு ஒக்கும் என்பர் சூனிய ஆன்மவாதிகள். ஆன்மா இல்லையென்று கூறும் சூனிய ஆன்மவாதிகளும் இல்லை என்று வாளா கூறாமல் உடல், பொறி முதலியவற்றையெல்லாம் முறையே 'இஃது ஆன்மா அன்று இஃது ஆன்மா அன்று' என்று ஒவ்வொன்றாகக் கழித்து, அங்ஙனம் இல்லை என்னும் அறிவுடனே கூறிக்கொண்டு நிற்கும் ஓர் அறிவு உள்ளதாகலின் அவ்வறிவே ஆன்மாவாகும். அந்த அறிவையும் சூனிய ஆன்மவாதிகள் சூனியம் என்று கூறினால், அஃது 'என் தாய் மலடி' என்பதனோடு ஒக்கும். சூனியமாவது உள்ளதும் அன்று, இல்லதும் அன்று, இரண்டும் அன்று வேறும் அன்று என்று கூறப்படும் பாழாகும்.

## இரண்டாம் கூறு

எனதுடல் என்று பொருட் பிறிதின்கிழமையாகச் சொல்லுவதால், உடற்கு வேறாய் உயிர் உண்டு. உடம்பு உயிராகும், உயிரைத் தனியே காணமுடிவதில்லை. நான் இளைத்தேன், நான் பருத்தேன் என்று உடம்பையே நான் என்று வழங்கக் கான்கிறோம். ஆதலின், உடம்பே உயிர் என்பர் தேகான்மவாதிகள். அவர் கொள்கையை மறுப்பதே இப்பகுதியாகும்

'நான் பருத்தேன், நான் சிறுத்தேன்' என்று கூறுவது உடலின் இயல்புகளை உயிர்க்கு ஏற்றியுரைப்பதாகும். இவ்வாறு வழங்கிலும் என் உடம்பு என்கை, என்கால் என்று வேற்றுமைப்படவே அனைவரும் வழங்குகின்றனர். எனவே, உடம்புக்கு வேறாக ஆன்மா என்ற ஒன்று உண்டு என்பதாகும்.

மூன்றாம் கூறு

ஐந்தையும் ஒருவனே அறிதலின் ஒவ்வொன்றை மட்டும் அறிகின்ற ஐந்தற்கும் வேறாய் உயிர் உண்டு.

செவி, மெய், கண், வாய், மூக்கு என்ற ஐம்பொறிகள் ஒவ்வொருபுலனை அறியும் என்பது அனைவருக்கும் உடன்பாடு ஆகலாலும், அவைகள் உடல் போலச் சடம் அல்லாமையாலும் அவைகளே ஆன்மா ஆகும் என்ற வழக்கம் பெரும்பான்மை இல்லாமையாலும் அவைகளே ஆன்மா ஆகும் என்பது இந்திரிய ஆன்மவாதிகள் கொள்கையாகும். அவர்கள் கருத்தை மறுப்பதே மூன்றாம் கூறு ஆகும்.

உடலில் உள்ள பொறிகளில் ஒருபொருளை அறிந்த இந்திரியம் மற்றொரு பொருளை அறியாது. கண் உருவத்தை அறியும், ஆனால் கேட்காது, காது கேட்டலைச் செயும், ஆனால் பார்க்காது. ஏனைய பொறிகளும் இவ்வாறே யாகும். ஐம்பொறிகளையும் அறிந்து அனுபவிப்பது ஆன்மாவே யாகும். ஐம்பொறிகள் அறியும்போதும் தம்மை யுணரமாட்டா. தம்மைச் செயல்படுத்துகின்ற ஆன்மாவையும் அறியமாட்டா. ஐம்பொறிகளையும் செயல் படுத்துகின்ற, அனுபவிக்கின்ற ஆன்மாவானது ஐம்பொறிகளுக்கு வேறாக உண்டு என்பதாம்.

நான்காம் கூறு

நுண்ணுடம்பு என்னும் சூக்கும தேகம் மெய், வாய், கண், மூக்கு, செவி, மனம், புத்தி அகங்காரம் என்ற எட்டின் செயல்பாடாகும். ஐம்பொறிகளையும் நுண்ணுடம்பு உள்ளே இருந்து செலுத்தி அறிகின்றதாகலின் அந்த நுண்ணுடம்பே உயிர் என்பது சூக்கும தேக ஆன்மவாதிகள் கொள்கை. அவர்கள் கருத்தை மறுப்பதே நான்காம் கூறாகும். கனவுடலை விட்டு நனவுடலிலே வருகையினாலே அக்கனவுடலாய நுண்ணுடம்புக்கு வேறாய் உயிருண்டு.

கனவு காணும்போது உயிர்க்குக் கருவியாக நின்று அறிவது இந்த நுண்ணுடம்பே யாகும். இந்த நுண்ணுடம்பே உயிராயின் கனவில் கண்டவற்றை நனவில் மயங்காது அறிதல் வேண்டும். அவ்வாறு இல்லாமையால் நுண்ணுடம்பின் வேறாக உயிர் உண்டு என்று கருத வேண்டும். உயிர்-நுண்ணுடம்பு போல என்றும் ஒரே தன்மையாக இராது; சில கருவிகளை விட்டு அகத்துச் செல்லுதலும் விட்ட அந்தச் சில கருவிகளோடு சேர்ந்து புறத்துச் செல்லுதலும்

ஆகிய நிலைவேறுபாடுகளை உடையது. ஆதலால், கனவில் கண்டவற்றை நனவில் மயங்கி அறியுந்தன்மை ஆன்மாவுக்கு உண்டு.

### ஐந்தாம் கூறு

உடம்பு உயிராகாது, தூங்கும்போது உடம்புக்கு இன்ப-துன்ப அனுபவத்தைக் காண முடிவதில்லை, தூங்கும்போது தொழிற்படுவதும் இல்லை-ஆனால், தூங்கியெழுந்த பின் 'சுகமாய்த் தூங்கினேன்' என்று கூறுவதைக் காணலாம். தூங்கும் போது பிராணவாயு இயங்குகின்றது. நனவு, உறக்கம், கனவு ஆகிய எல்லாச் சமயத்திலும் பிராணவாயு இயங்குகின்றது. அந்தப் பிராண வாயுவே ஆன்மா என்பது பிராண ஆன்மவாதி கொள்கையாகும். இவர்கள் கருத்தை மறுப்பதே ஐந்தாம் கூறு ஆகும்.

தூக்கத்திலும் பிராணவாயு தொழிற்படவும் இன்ப துன்ப நுகர்ச்சி, செயல் ஆகிய இரண்டும் உடம்பில் நிகழாமையால் பிராண வாயுவுக்கு வேறாக ஆன்மா உண்டு. உடம்பில் தூக்கத்தின்போது கருவிகள் தொழிற்படுவதில்லை, தொழிற்படாது ஒடுங்கியபோது புலன்களால் வரும் இன்பதுன்ப நுகர்ச்சி உடம்புக்கு இல்லாமல் இருக்கவும் பிராணவாயு இயங்கிக்கொண் டுள்ளது. பிராணவாயு இயங்கிக்கொண் டிருந்தபோது நுகர்ச்சியில்லாமையால் கருவிகளின் செயல்பாட்டா லாகிய இன்பதுன்பங்களைக் கண்டறியும் உரிமையுடைய ஆன்மா அப்பிராணவாயுவுக்கு வேறாக உண்டு என்பதாம். தற் காலத்தில் பெரும்பாலோர் பிராணவாயுதான் ஆன்மா எனக் கருதிப் பேசி வருகின்றனர். பிராணவாயு ஆன்மா ஆகாது என்பதனைத் தமிழ்த் தத்துவ நூல்கள் விரிவாகக் கூறுகின்றன.

### ஆறாம் கூறு

பிரமப் பொருள் என்பது முற்கூறிய பொருள்களைப் போல அறிவற்ற பொருள் ஆகாது. பிரமப் பொருள் அறிவுடையது, ஆதலின், பிரமப் பொருளே ஆன்மா என்பது விஞ்ஞான ஆன்மவாதிகள் கொள்கையாகும். அவர்கள் கருத்தை மறுப்பதே ஆறாம் கூறு ஆகும். மறந்து மறந்து நினைக்கின்றதனாலே எப்போதும் மறவாத பிரமத்துக்கு வேறாக ஆன்மா உண்டு.

ஆன்மாவானது கருவிகள் தொழிற்படாமல் அடங்கிய நிலையில் எதனையும் அறிவதில்லை. எல்லாக் கருவிகளும் கூடிய விழிப்புநிலையில் அனைத்தையும் நன்றாக ஆன்மா அறிகின்றது. ஆனால், பிரமமோ கருவிகள் எவற்றின் துணையுமின்றி என்றும்

ஒரே தன்மையாக அறிகின்றது. ஆன்மா ஒன்றனையே அறிந்து மற்றொன்றை அறியப்புகுந்தும், முன் அறிந்ததைப் பின் மறந்தும், இடையீடின்றி அறியமாட்டாது, விட்டு விட்டு அறியுந்தன்மையது ஆன்மாவாகும். இத்தகைய தன்மையுடைய ஆன்மா சடமும் அன்று, இயல்பாக உணரும் பேரறிவும் அன்று. காட்டும் ஒளிக்கு வேறாகிய கண்ணொளிபோல் பேரறிவுப் பொருளாகிய பரப்பிரம சிவத்துக்கு வேறாய் அது, அதுவே தானெனச் சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறியும் தன்மையுடையது ஆன்மாவாகும்.

ஏழாம் கூறு

'உடல், பொறி, நுண்ணுடம்பு, பிராணவாயு முதலியவற்றுள் ஒவ்வொன்றே உயிர் என்றல் பொருந்தாது, அவற்றுள் ஒன்று குறைந்தபோது அறிவு நிகழாமையால் அவை எல்லாம் கூடியபோது அறிவுநிகழ்வதால் அவை அனைத்தும் கூடிய கூட்டமே ஆன்மா' என்பது பொருந்தும் என்பது சமூக ஆன்மவாதிகள் கொள்கை. அவர் கருத்தை மறுத்துக் கூறுவதே ஏழாம் கூறு ஆகும்.

எல்லாப் பொருள் கருவி முதலியவை வேறு வேறு பெயர் பெற்று இருப்பதனாலே அவற்றுக்கு வேறாக ஆன்மா உண்டு.

எல்லாக் கருவிக்கும் சேர்ந்த சமுதாயம்-கூட்டுநிலை-உடம்பு என்று பெயர் பெறுவதன்றி உயிர் எனப் பெயர் பெறுதல் இல்லை. அந்த உடம்பு ஆன்மா அறிதற்குக் கருவியாகவே அமைந்துள்ளது, கருவிகளின் கூட்டாகிய உடம்பும் மாயையின் ஆக்கம், அறிவற்றது அழிவுடையது-ஆன்மாவே சிற்றறிவு உடையது, என்றும் அழியாதது எனவே கருவிகளின் கூட்டாகிய உடம்புக்கு வேறாக ஆன்மா என்ற ஒன்று உண்டு என்பதாகும்.

## இலக்கண இயல்

முதல் நூற்பாவில் பதி உண்டு என்றும், இரண்டாம் நூற்பாவில் பாசம் உண்டு என்றும், மூன்றாம் நூற்பாவில் பசு உண்டு என்றும் நிலைநாட்டப் பெற்றன. அம் முப்பொருளின் இலக்கணம் கூறத் தொடங்கி நான்காம் நூற்பாவில் பசுவினுடைய இலக்கணம் கூறப்பெற்றுள்ளது.

### நான்காம் நூற்பா

ஆன்மாவுக்குத் துணை செய்வன உடம்பில் உள்ள கருவிகள். அவற்றைப் புறக்கருவிகள், அகக்கருவிகள் என இரண்டாகப்

பாகுபாடு செய்து கூறப்படுவது உண்டு. மெய், வாய், கண், மூக்கு, செவி, கை, கால் முதலியன புறக்கருவிகள். மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகியவை அகக்கருவிகள் ஆகும். தத்துவ உலகில் அந்தக்கரணங்கள் என அழைக்கப்பெறும். அந்தர்-உள், கரணம்-கருவி அந்தர்-கரணம்-அந்தக்கரணம் எனவாகும், (அந்தர்-புரம்-அந்தப்புரம், அந்தர்-வாயில்-அந்தவாயில் என இவ்வாறு வருவது வடமொழி முறையாகும் )

அரசன் நுட்பமான அறிவு இல்லாதிருத்தலால் ஆலோசனைத் துணைக்கு மந்திரிமார்களைத் துணையாகக் கொண்டு செயல்படுவான். அவர்கள் அறிவுத்துணை கொண்டு ஆட்சியை அரசன் நடாத்துவான். அதுபோல ஆன்மாவானது ஆணவ மல மறைப்பினால் அறிவின்றி அந்தக்கரணங்களோடு சேர்ந்து தொழிற்படும். அந்தக்கரணங்க ளாகிய மனம், புத்தி, அகங்காரம், சித்தம் ஆகிய நான்கனுள் ஆன்மா ஒன்று அன்று; ஆயினும் ஆலோசனைத் துணையாகிய அவ்வைந்தனுடன் சேர்ந்து நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம் உயர்ப்படங்கல் ஆகிய ஐந்து அவத்தைப்பட்டுச் செயல்படும்.

நான்காம் நூற்பா மூன்று கூறுபாடுகளை உடையது.

முதல் கூறு

முன்பு உடல், பொறி, நுண்ணுடம்பு முதலியவற்றை உயிர் என்று கூறுவது பொருந்தாது. அந்தக்கரணங்கள் அறிவுடைய, அவற்றை ஆன்மா என்று கூறலாம் என்பது அந்தக்கரண ஆன்மவாதிகள் கொள்கையாகும்.

உயிர் அந்தக்கரணங்களைச் செலுத்துகின்றது. அந்தக் கரணங்கள் ஐம்பொறிகள் வழியாக உணர்கின்றன. ஐம்பொறிகளை நோக்க அந்தக்கரணங்கள் அறிவுடையவை எனினும், அவை தம்மைத் தாம் அறியமாட்டா, அறிவற்றதாய் இருக்கும்-அதலால் அந்தக்கரணங்களுக்கு வேறாக உயிர் உண்டு.

ஆன்மாவால் செலுத்தப்படும் அந்தக்கரணங்களுள் சித்தம் ஒன்றைச் சிந்தித்து அறியும், 'ஆனால் யான் சிந்தித்தேன்' என்று அறியமாட்டாது. மனம்: இஃது இன்னது, இஃது இவ்வாறு ஆகுமோ, ஆகாதோ என்று ஒன்றை நினைத்துப் பற்றும், தன்னைப்பற்றி அறியாது. அகங்காரம்: அதனை இவ்வாறு இருக்கும் என்று துணிந்து முடிவு செய்வேன் என்று ஒருப்பட்டு எழுந்து செயல்படும், யான் ஒருப்பட்டு எழுந்தேன் என்று அறியாது. புத்தி:

இன்னது இது என்று நிச்சயித்து அறியும், யான் நிச்சயித்தேன் என்று அறியமாட்டாது. ஆனால், ஆன்மா யான் சிந்தித்தேன், யான் பற்றினேன், யான் எழுந்திருந்தேன், யான் நிச்சயித்தேன் என்று அறியும். ஆன்மா தன்னை நோக்கியும் பிறவற்றை நோக்கியும் சித்தாயுள்ள நிலையில் தன்னை நோக்கச் சடமாயுள்ள அந்தக்கரணங்களின் வேறாக உண்டு என்பது கருத்து. சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் ஆகிய ஐம்புலன்களை ஐம்பொறிகள் கண்டு அனுபவிக்கும். பொறிகள் இவ்வாறு உணர்வது வாயில் காட்சி என்று வழங்கப்படும். மனம் முதலிய அந்தக்கரணங்களில் மனத்துக்கு மேலான புத்தியில் ஆன்மா தன்னனுபவமாகக் கருதியனுபவிப்பது தன்வேதனைக் காட்சி என்று வழங்கப்படும்.

வாயில் காட்சி, மானதக் காட்சி, தன்வேதனைக்காட்சி ஆகியவை முறையே ஒன்றன்பின் ஒன்றாகத் தொடர்ந்து நடைபெறும். கடலில் தோன்றிக் கரையை அடையும் அலைபோல ஆன்மாவில் இக்காட்சிகள் ஒனறன்பின் ஒன்றாகத் தோன்றியடங்கும். கடல்போல் ஆன்மா, அலைபோல் காட்சிகள், அலை ஒன்றன்பின் ஒன்று தொடர்ச்சியாகக் கரையடைவதைப் போல் மூன்று காட்சியும் முறையாக ஒன்றன்பின் ஒன்றாகத் தோன்றி ஆன்மாவின் அறிவினுள் பதிந்து மறையும். மனம் முதலிய கருவிகள் ஐம்புலனுக்கு வேறாதற் போல் ஆன்மாவும் மனமுதலிய கருவிக்கு வேறாகும் என்பது கருத்து.

'ஓம்' என்னும் பிரணவம்-வழங்கியவாறே இருக்கும், பிரிக்கக் கூடாது ஒன்றாகவே இருக்கும்-அதற்குச் சமட்டிப் பிரணவம் என்று பெயர். அதனையே அகரம், உகரம், மகரம், நாதம், விந்து என்று ஐந்தாகப் பிரிக்கலாம், அவ்வாறு பிரிப்பதை வியட்டிப் பிரணவம் என்று கூறுவது மரபு.

அகரத்திற்கு அதிதெய்வம் பிரமா. அகரத்தால் அகங்காரம் செலுத்தப்படும்.உடனே அகங்காரம், இன்னது எனத் தெளிவேன் என்று தொழிற்படும். உகரத்திற்கு அதிதெய்வம் மாயோன். உகரத்தால் புத்தி செலுத்தப்படும். உடனே புத்தி இன்னது என்று தெளிந்துகொள்ளும். மகரத்திற்கு அதிதெய்வம் உருத்திரன். மகரத்தால் செலுத்தப்பட்ட மனம் இன்னது இது என்று சென்று பற்றும். விந்துவுக்கு அதிதெய்வம் மகேசுவரன். விந்துவால் சித்தம் செலுத்தப்பட்டுச் சிந்திக்கும். சதாசிவத்தை அதிதெய்வமாகக் கொண்டு நாதம் புருடதத்துவத்தைச் செலுத்த ஆன்மா செயல்படும்.

ஞாயிறு முதலியவற்றோடு கூடி நின்று நாழிகை, நாள், வாரம், மாதம்,ஆண்டு முதலியவாகக் கால தத்துவம் இருந்தாலும் ஞாயிறு முதலியவற்றுக்கு வேறானாற் போல ஆன்மா அந்தக்கரணங்களால் பலவற்றை யறிந்தாலும் அவற்றின் வேறு என்பதாகும்.

## இரண்டாம் கூறு

ஆன்மா அந்தக்கரணங்களுள் ஒன்று அல்ல என்றால், ஆன்மா அந்தக்கரணங்களோடு சேர்ந்திருப்பது ஏன் என்பது அந்தக்கரண ஆன்மாவாதிகளின் தடை! மலத்தின் மறைப்பினால் உயிருக்கு அறிவு விளங்கவில்லை. ஆன்மா அந்தக்கரணங்களுக்கு வேறாயிருந்தாலும் செம்பிற் களிம்புபோலத் தன்னோடு உடனாயிருக்கும் ஆணவ மலத்தின் மறைப்பினால் தன்னியல்பை உணர முடியவில்லை. ஆன்மா மாய மலகாரியமான உடம்பைப் பெற்றுள்ளது, அவ்வுடம்பைக் கொண்டு அனைத்தையும் அறிகின்றது. ஆனால், ஆணவ மலம் உயிரை அனாதிகாலத் தொட்டே பிணித்துள்ளது. விறகிலுள்ளே தீ மறைந்திருக்கும், விறகாகவே இருக்கும், சூரியகாந்தக் கல்லிடத்தே சூரியகாந்தம் மறைந்திருக்கும், சூரியகாந்தமாகவே இருக்கும். அவற்றைப்போல ஆணவம் ஆன்மாவில் மறைந்திருக்கும் உயிர்க்கு அறிவை விளக்கும் துணையாக இருப்பது மாயை; உயிர்க்கு அறிவு நிகழாமல் தடைசெய்வது ஆணவமலம். ஒளிபோன்றது மாயை, இருள்போன்றது ஆணவம். உயிர்க்குச் சிற்றறிவு உண்டு. ஆணவமலம் இயல்பாகவே உடனாய் நிற்றலால் உயிரால் ஒன்றையும் உள்ளவாறு உணரமுடியவில்லை. அதனால் மனம் முதலிய அந்தக்கரணங்களோடு நின்று உணர வேண்டியதாயிற்று.

## மூன்றாம் கூறு

இருள் நீங்கப்பெற்றபின் கண் ஒரே விதமாகப் பொருள்களை உணர்கின்றது. அதுபோல அந்தக்கரணங்களோடு கூடிய உயிரும் ஒரேவிதமாக உணர வேண்டும். வேறு வேறு விதமாக அவத்தைகளை அடைவது ஏன் என்பது அவர்கள் எழுப்பும் தடை.

உயிர் ஆணவமலத்தோடு சேர்ந்திருப்பதால் உயிரின் அறிவு செயல்படுவதில்லை. அந்தக்கரணங்களோடு கூடுவதால் உயிரின் அறிவு செயல்படத் தொடங்குகின்றது. ஆயினும், உயிர் ஓரிடத்தில் நிலையாக நிற்பதில்லை. ஒரே விதமாகக் கருவிகளோடு கூடிநிற்பதும் இல்லை. ஆதலால், உயிர் தான் நிற்கும் இடத்துக்கும்

சேர்ந்திருக்கும் கருவிகளுக்கும் ஏற்பச் செயல்பாட்டுநிலை -அவத்தை - வேறுபடுகின்றது. ஐந்து விதமான அவத்தை அடைகின்றது. உயிர் புருவ நடுவில் நிற்கும்போது நனவு (சாக்கிரம்) என்னும் நிலையில் செயல்படும். அப்போது 35 கருவிகள் செயல்படும். உயிர் கழுத்தில் நின்று செயல்படும்போது கனவு (சொப்பனம்) நிகழும். அப்போது 25 கருவிகள் செயல்படும். உயிர் இதயத்தில் நின்று செயல்படும்போது உறக்கம் (கழுத்தில்) நடைபெறும். 3 கருவிகள் செயல்படும், உயிர் உந்தியில் நின்று செயல்படும்போது பேருறக்கம் (துரியம்) நிகழும். 2 கருவிகள் செயல்படும். உயிர் மூலாதாரத்தில் நின்று செயல்படும்போது உயிர்ப்படங்கல் (துரியாதீதம்) நிகழும். அப்போது ஆன்மா என்ற ஒன்றுமட்டும் இருக்கும். கருவிகளோடு கூடியும் பிரிந்தும் வரும் ஆன்மாவின் நிலை விளக்கப்பெற்றது.

## ஐந்தாம் நூற்பா

மெய், வாய், கண், மூக்கு, செவி ஆகிய கருவிகள் ஆன்மாவின் துணையால் ஐம்புலன்களை அறிகின்றன. அவ்வாறு அறிந்தாலும் அறிகின்ற தம்மையும் தம்மை அறியச் செய்கின்ற ஆன்மாவையும் ஐம்பொறிகள் அறிவதில்லை அவற்றைப்போல ஆன்மாவும் திருவருள் துணையால் அனைத்தையும் செய்து அவற்றின் பயன்களை நுகர்கின்றது. அவ்வாறு இயக்கும் இறைவனின் திருவருளையும் அறிவதில்லை. திருவருள் இயக்க இயங்கும் ஆன்மாவின் இயல்பு காந்தத்தின் முன்நின்ற இரும்பு இயங்குவதுபோல ஆகும். அவ்வாறு இயக்க இயங்கினும் ஆன்மாவை இறைவன் செயல்படுத்தும்போது வேறுபாடு அடையமாட்டான். காந்தம் இரும்பைத் தன்பால் இழுப்பினும் வேறுபாடு அடையாததைப் போல இறைவனும் வேறுபாடு அடையமாட்டான்.

ஐந்தாம் நூற்பா இரண்டு கூறுகளையுடையது.

### முதற் கூறு

தாமரையிலையிலுள்ள தண்ணீர் போல உயிர் பற்றின்றி நிற்கும். அவ்வாறு நிற்கும் உயிரின் முன்னிலையில் புத்தி தத்துவமே ஐந்து அவத்தைப்படும், உயிரே ஐந்து அவத்தைப்படும் என்பது பொருந்தாது என்பது சாங்கியம் கூறும் தடை.

அரசன் தன்னுடைய அத்தாணிமண்டபத்தில் வீற்றிருந்து தன்கீழ் உள்ளவர்களை அந்தந்தப் பணிக்கு ஏவுவான். உயிரும் புருவ நடுவில் நின்று மெய், வாய், கண் முதலில் பொறிகளை அந்தந்தப் புலனுக்கு அனுப்பும். அரசனால் அனுப்பப்பட்ட ஏவலர்கள் தமக்குரிய செயல்களை மட்டும் செய்வர். அதற்குமேல் செல்ல மாட்டார்கள். உயிரால் செயல்படும் பொறிகளும் தத்தமக்குரிய புலன்களைமட்டும் நுகரும். ஐம்பொறிகளோடும் உயிர் ஒற்றுமைப்பட்டு நின்றறிதலான் உயிரினாலே ஐம்பொறிகள் தொழிற்படுகின்றன. ஐம்பொறிகள் தாமே செயல்படா. பொறிகளைப்போல அந்தக்கரணங்களும் அறிவற்றன. ஆதலால் புத்தியே தனியாகச் செயல்படாது, அவத்தைப்படாது, உயிரே ஐந்து அவத்தைப்படும்.

### இரண்டாம் கூறு

புத்தி முதலிய கருவிகள் அறிவற்றன. ஆதலால், அறிவுடைய உயிரின் துணை அவற்றிற்குத் தேவைப்பட்டது. ஆனால், உயிர் அறிவுடையது என்பது எல்லாரும் ஏற்றுக்கொண்ட கொள்கை. அவ்வாறு அறிவுடைய உயிர்க்கு இறைவனின் துணைவேண்டா. வேண்டப்படும் என்றால், உயிர்க்குத் துணை செய்யும் இறைவனுக்குப் பிறிதொருதுணை தேவைப்படும், இவ்வாறே கொண்டால் வரம்பின்றிச் செல்லும் குற்றத்திற்குக் காரணமாகும் என்பர் ஈசுவர அவிகாரவாதிகள்.

ஐம்பொறிகள் அறிவற்றன, உயிர் அறிவுடையது, இவ்வாறு வேற்றுமை இருந்தாலும் உயிர் தன்னையும் தனக்குத் துணையாக இருக்கும் திருவருளையும் அறியாது. பொறிகள் தம்மையும் தம்மைச் செலுத்தும் உயிரையும் அறியமாட்டா. உயிரும் அதுபோலத் தன்னையும் தன்னைச் செலுத்தும் திருவருளையும் அறிவதில்லை. பொறிகளுக்கு உயிர் இன்றியமையாதது போல உயிர்க்கு இறைவன் திருவருள் இன்றியமையாதது, பொறிகள் உணர்வன உயிர்க்காகவே ஆகும். உயிர் உணர்வது தன்பொருட்டேயாகும். இறைவன் உயிர்க்கு உதவுவது கருணையாலன்றித் தன்பொருட்டன்று. அனைத்துயிர்க்கும் தான் முதல்வனாக உள்ளதன்றித் தனக்கொரு முதல்வன் இல்லாதவன் இறைவன். ஆதலால், உயிர்க்கு இறைவன் திருவருள் வேண்டப்படுவது போல இறைவனுக்குப் பிறர் துணை வேண்டுவதில்லை

இறைவன் திருவருள் என்பது மறைப்பாற்றலையே (திரோதான சத்தி) குறிக்கும். உயிர் மலக்குற்றங்களை நீக்குதற்பொருட்டு உலகியல் அனுபவத்தில் தலைப்படும்போது அவற்றால் உண்டாகும் நன்மை தீமைகளை அறியவேண்டிய நிலை உண்டானால், உயிர் உலகியல் அனுபவத்தில் தலைப்படாது. ஆதலால், அத்தகைய நன்மை தீமைகளை உயிர் அறியாதவாறு மறைத்தலால் திரோதான சத்தி எனப்பட்டது. மாயை கன்மங்களின் வழியே இவ்வாறு செயல்படவேண்டுதலால் ஆன்மாவுக்குத் திருவருள் துணை வேண்டப்பட்டது.

சூரியன் விகாரம் இன்றியே இயல்பாக நிற்க, அவனுடைய ஒளியில் தத்தம் பக்குவ நிலைக்கேற்பத் தாமரையில் ஒன்று மலர்தலையும் மற்றொன்று வாடுதலையும் காணமுடிகிறது. அது போல இறைவனும் எத்தகைய விகாரமும் இன்றி இயல்பாக இருக்க, அவனுடைய திருவருள் சங்கற்பத்தின்வழி உயிரும் தன் வினைகளுக்கேற்பச் செயல்படும்.

உயிரின் குற்றங்களை நீக்கி மேம்படுத்தற்குரிய இரக்கக்குணம் சிவபெருமானுக்கு இயல்பாகும். அந்த இரக்கமாகிய திருவருள் பிறிதொரு பொருள் அன்று. சிவபெருமானுக்குரிய சத்தியேயாம். அவ்விரக்கக் குணத்தையுடைய சிவபெருமான் குணி. அவ்விரக்கக் குணமாகிய சக்தி சிவபெருமானை விட்டுத் தனியாக இல்லை, சிவபெருமானும் அவ்விரக்கக் குணமாகிய திருவருளை விட்டுத் தனியாக இல்லை.

## ஆறாம் நூற்பா

இலக்கணவியல் நான்காம் நூற்பாவில் பசுவின் இலக்கணம், ஐந்தாம்நூற்பாவின் பாசத்தில் இலக்கணம் கூறப்பெற்றன. எஞ்சிய பதியின் இலக்கணம் இவ்வாறாம் நூற்பாவில் கூறப்பெறுகிறது. உயிர்களின் அறிவுக்குத் துணையாய் உள்ள இறைவன் அளவையால் அறியப்படும் பொருளா, அறியப்படாத பொருளா, என்பதே இங்கு எழும் தடையாகும். நிலையான மெய்ப்பொருளைச் சத்து என்றும் நிலையில்லாத பொய்ப் பொருளை அசத்து என்றும் கூறுவது தத்துவ வழக்காகும்.

அறிகருவிகளால் அறியப்படுவன எல்லாம் உருவும் அருவும் ஆகிய உலகியற் பொருளேயாய் அசத்தாய் உள்ளன. ஒருபொருள் எவ்விதத்திலும் அறியப்படாதது என்றால், அப்பொருள் முயற்கோடு ஆமை மயிர்க்கம்பலம் போல இல்லாத பொருளாகும்,

இல்லாத பொருள் சூனியம் என்று வழங்கப்பெறும். ஆதலால், அவ்விருவகையும் இன்றி ஒருவாற்றால் பாசஞானம் பசுஞானங்களால் அறியப்படாத சிவமாயும், ஒருவாற்றால் பதிஞானம் ஒன்றினால் அறியப்படும் சத்தாயும் இருக்கும். இருவகையானும் இறைவன் சிவசத்தே ஆகும் என்று மெய்யுணர்வு உடையார் கூறுவார்.

ஆறாம் நூற்பா இரண்டு கூறுபாடுகளை யுடையது.

## முதல் கூறு

உலகம் அறியப்படும் பொருளே ஆகும். அது போல இறைவனும் அறியப்படும் பொருளே என்பர் நையாயிகர். அவ்வாறாயின் உலகம் போல இறைவனும் அழிவானோ என்னும் ஐயம் உண்டாகும். சுட்டியறியப்படும் பொருளும் அழியாத நிலையான பொருளே. ஆதலால், இறைவனும் அழியாத பொருளே என்பர் சாங்கியர். அவ்விருவரையும் மறுக்கும் முறையில் அமைந்தது முதல் கூறு.

சுட்டியறியப்படும் உலகம் முதலிய பொருள்க ளெல்லாம் ஒருகாலத்தில் காணப்பட்டாலும் பிறிதொரு காலத்தில் அழியும். அப்பொருள்கள் நீரில் எழுதப்பெறும் எழுத்தும், கனவும், கானல் நீரும் போல அதிவேகமாக அழிந்துவிடும். ஆதலால், எல்லாப் பொருள்களும் நிலையுடையனவை என்று கூறமுடியாது. இறைவன் எங்கும் நீக்கமற நிறைந்திருப்பவன் ஆதலின், மற்றைய உலகியற் பொருள்கள்போல இவன்தான் இறைவன் என்று சுட்டியுரைக்கப்படாதவன் என்று இருவர் கருத்தும் மறுக்கப்பட்டது.

## இரண்டாம் கூறு

இறைவன் இயல்பு அறியப்படுவது என்றோ அறியப்படாதது என்றோ கூற இயலாது என்பர் மாயாவாதிகள்.

இறைவன் ஏனைய அறியப்படுகின்ற பொருள்களைப் போல அறிதற்கு உரியனும் அல்லன், அறியப்படாத பொருள்களைப் போல இல்பொருளாகிய சூனியனும் அல்லன். ஆன்மா தன்னறிவான பசுஞானத்தாலும் தனக்குத் துணையாக உள்ள கருவிகரணங்களாலான பாச ஞானத்தாலும் அறிதற்குரியவன் அல்லன். அவனோடு உடனாய் நின்று அவனருளே கண்ணாகக் காணுகின்றபொழுது அறிதற்குரியவன் ஆவான். ஆதலால்,

வாக்குமனங்கடந்த இறைவன் அவன் அருள் துணையால் காணும் போது விளங்கித் தோன்றுவான்.

திருமுறைகளில் 'காண்பார் ஆர் கண்ணுதலால் காட்டாக்காலே', 'அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்' என்று திருநாவுக்கரசரும் 'அருளாலே மெய்ப்பொருளைக் காணும் விதியுடையேன்' என்று காரைக்காலம்மையாரும் பாடியுள்ளனர்.

இறைவன் வாக்குமனம் கடந்தவன் என்பது பொருத்தும், விளங்கித்தோன்றுவன் என்பது பொருந்தாது என்று மாயாவாதிகள் தடையெழுப்பினர்.

ஒருவாற்றாலும் அறியப்படாத பொருள் உண்டு என்று கூறுவது பொருந்தாது ஆதலால், இறைவன் திருவருளில் அழுந்தியறிவும் அனுபவம் ஞானத்தால் அறியப்படுவான் அவ்வாறு அறியப்படும்போது விளங்கித்தோன்றுவான் என்று அவர்கருத்து மறுக்கப்பட்டது. இவ்வாறு கூறியதும் நையாயிகர் இறைவன் விளங்கித்தோன்றுவான் என்பது பொருந்தும் வாக்குமனங் கடந்தவன் என்பது பொருந்தாது என்று தடையெழுப்பினர்

பாதஞ்சலர் என்பவர் இறைவன் தியானம் முதலிய பாவனைகளால் அறியக்கூடியவனே என்று கூறினார். பதஞ்சலியோகத்தைப் பின்பற்றுவோர் பாதஞ்சலர் எனப்படுவார். யோகநூலில் பாவனை நான்கு வகையாகக் கூறப்படுகிறது.

1. இறைவன் மனம் முதலிய கருவியோடு சேர்ந்து நின்று பாவிக்கப்படுவது என்றால், அறிவினால் அறியக்கூடிய சுட்டுப்பொருளாகியிருந்து இறைவன் அசத்து ஆவான்.

2. கருவிகளோடு சேராமல் நின்று, கருவிகளின் நீங்கிப் பாவனையைக் கடந்து பாவிக்கப்படுவது என்றால், கருவிகள் நீங்கியபோது எதனையும் அறியமுடியாது. ஆதலால், இறைவனும் அறியமுடியாத பொருளாகப் பயன்படாமல் போய்விடுவான்.

3. கருவிகளோடு கூடியும் கருவிகளோடு கூடாமலும் இருவகையும் இன்றி உறுதியாகச் சொல்ல இயலாதது-அநிர்வசனம் என்று பாவிக்கலாம் என்றால், இறைவன் சூனியப் பொருள் ஆவார்.

4. பாவனைக்கு எய்தாப் பொருளை எய்தியதாகக் கொண்டு கற்பனையில் பாவிக்கலாம் என்றால், அவ்வாறு பாவிப்பது வெறும் போலிப் பாவனையாய் பயனற்றதாய்விடும், எவ்விதப் பயனுமில்லை.

1. கருவிகளோடு கூடிப்பாவித்தல் 2. கருவிகளோடு கூடாது பாவித்தல் 3. இரண்டுவகையும் இல்லாமல் பாவித்தல் 4. பசித்தவன் உண்டதாக நினைத்துக்கொண்டு பொய்யாகப் பாவித்தல் எனப் பாவித்தல் இத்தகு நால்வகையால் பாவித்தலும் தவறு. நான்கு வகையான பாவித்தலுக்கு வாராமைபற்றி இறைவன் பாழ்ப்பொருள் (சூனியம்) ஆகமாட்டான். இறைவனை அவன் திருவருள் துணை கொண்டே பாவிக்க வேண்டும் என்பது கருத்து. சிவசமவாதிகள் இறைவன் ஆன்மாவின் அறிவுக்கு விளங்கித்தோன்றுவன் என்பர்.

இறைவன் உயிர்களுடன் நீக்கமின்றிக் கலந்து நிற்பான். கண்ணொளியுடன் கலந்துநிற்கும் உயிரைக் கண்ணொளி காணார்தவாறுபோல உயிர்களுடன் கலந்துநிற்கும் இறைவனை உயிர்களின் அறிவு அறியாது. எனவே, உயிர்களின் அறிவுக்கு விளங்கித்தோன்றுவன் இறைவன் என்பது பொருந்தாது. சிவாத்துவித சைவர் முத்தியில் உயிர் இறைவனுடன் வேறாக நில்லாது ஒன்றாய் விடும்; ஆதலால், இறைவனருளால் உயிர் அறியும் என்பது பொருந்தாது என்பர்.

சூரியனை அறியவேண்டிய கண் சூரியனின் கதிரொளியை ஊடுருவிச்சென்று அச்சூரியன் ஒளியால் சூரியனைக் காணமுடியும். அதுபோல இறைவனை அறியவிரும்பிய உயிர் இறைவன் திருவருளில் திளைத்துநின்று அத்திருவருளின் துணையால் இறைவனை அறிய முடியும். எனவே, அவனருளால் உயிர் அறிய முடியும் என்பது பொருந்தும். 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்ற மணிமொழி ஒப்பு நோக்கத்தக்கது.

## சாதன இயல்

பதிபசு பாசம் ஆகியவற்றின் இலக்கணத்தை உயிர் இதுவரை அறிந்துவந்தது. மலத்தால் கட்டுண்டு உயிர் மலம் நீங்கி இறைவனை அடைவதே உண்மையான வழியென்று ஆய்ந்தறியும் அத்தகைய நிலையில் உயிர் என்ன செய்ய வேண்டும் என்பதையும் அவ்வாறு செய்யும்போது கிடைக்கும் குருஅருளையும் அந்நிலையில் பெற்ற அனுபவ நிலையையும் சாதனமாகக் கூறும் மூன்று நூற்பாக்கள் சாதனை இயலாகும்.

### ஏழாம் நூற்பா

சிவசத்தியாகிய இறைவனின் முன்னிலையில் அசத்தாகிய நிலையில்லாத பொருள்கள் அனைத்தும் பாழ் ஆதலால், சத்தாகிய

பாசத்தை அறிதலைச் செய்யாது, பாசம் அறிவில்லாதது ஆதலால் நிலையான சிவத்தை அறிதலைச் செய்யாது. இவ்வாறு சிவமும் அசத்தும் ஒன்றை ஒன்று அறியாது என்பதனால் இவ்விரண்டையும் அறியும் அறிவுடைய பொருள் ஒன்று வேண்டுமென்பது உண்மையாகிறது. பதி பாசம் என்ற இரண்டும் போக எஞ்சியது பசுவாகிய உயிரேயாகும். எஞ்சிய முறையில்-பாரிசேட அளவையில்-உயிரே அவ்விரண்டையும் அறியும் என்பதாயிற்று, நிலையுடைய பொருளாகிய சத்தையும். நிலையில்லாத பொருளாகிய அசத்தையும் அறியும் உரிமை உயிருக்கு இருத்தலால் உயிரைச் சதசத்து என்று கூறுவது சித்தாந்த மரபாகும்.

ஏழாம் நூற்பா மூன்று கூறுபாடுகளை உடையது.

## முதற் கூறுபாடு

உலகம் இறைவனுடைய திருமேனியாகக் கூறப்படுவது மரபு. அவ்வாறு இருக்கும்போது உலகமாகிய அசத்து இறைவன் முன் விளங்கித்தோன்றாது-முனைந்து நில்லாத நிலையுடையது என்று கூறுவது பொருந்தாது இறைவன் உயிர்களுக்காக உலகத்தை அறிபவன் என்று சிவாத்துவித சைவர் கூறுவர். இவர்கள் கருத்தை மறுப்பதே இப்பகுதியாகும்.

இறைவன்முன் உலகம் முனைந்து நில்லாது என்பதற்குப் பொருள், இது, குடம் இஃது ஆடை சிலபொருள்கள் நம்மால் சுட்டி அறியப்படுவதைப் போல, இவ்வுலகம் இறைவனால் சுட்டியறிப்படாது. ஏனென்றால், உலகம் அவனின் வேறாகாது நிற்கும் என்பது கருத்து, இறைவன் நிலையில்லாத பொருளாகிய உலகத்தை அறிய வேண்டிய நிலை உண்டானால் உடனாய் நின்று அனைத்துப் பொருள்களையும் ஒருங்கே அறிவான். அவ்வாறில்லாமல் நம்மைப்போல் வேறாக நின்று ஒவ்வொன்றாக அறியக்கூடியவன் அல்லன் என்பதாகும்.

## இரண்டாம் கூறு

நிலையான பொருளாகிய இறைவன், நிலையில்லாத பொருள்களாகிய உலகை அறியான், என்றாலும் நிலையில்லாத பொருள்களாகிய மெய் வாய் கண் முதலிய கருவிகள் உயிரின் முன்னிலையில் விளக்கின்முன் நிற்கும் கண்போலக் கட்டுநிலையில் அசத்தையும், வீட்டுநிலையில் சிவத்தையும் அறியமுடியும், ஆதலால், அசத்து சத்தை அறியாது என்பது பொருந்தாது என்று

சிவசங்கராந்தவாதிகள் கூறுவர். இவர்கள் கருத்தை மறுப்பதே இப்பகுதியாகும்.

பொதுநிலையில் காணும்போது மெய் வாய் கண் முதலிய கருவிகளுக்கு அறிவு இருப்பதுபோல் தோன்றும். உண்மையில் நன்றாக ஆராய்ந்து காணும்போது அக்கருவிகளுக்கு அறிவில்லை என்பது நன்கு தெரியும். புலன்களின் சுவைகளைக் கருவிகள் உணரும். உயிர்வழியே அவை அவ்வாறு அறியும், கருவிகளின் வழியே உயிர்க்கு ஏற்படும் ஞானத்தைப் பாச ஞானம் என்று கூறுவர். ஆதலால் கண் கண்டது, சித்தம் சிந்தித்தது, மனம் பற்றியது என்றெல்லாம் கூறும் முறை உயிரினுடைய செயல்பாட்டை அக்கருவிகளின் செயல்பாடாகக் கூறும் முறையாகும். கருவிகளுக்கும் எவ்விதத்திலும் அறிவில்லை, கருவிகளுக்கு அறிவு உண்டு என்று கூறுவது போலாகும்.

### மூன்றாம் கூறு

நிலையில்லாத பொருளாகிய அசத்து நிலை உடைய பொருளாகிய சத்தையும், நிலையுடைய பொருளாகிய சத்து, நிலையில்லாத பொருளாகிய அசத்தையும் அறியா என்று கூறினால் அவ்விரண்டையும் அறியும் பொருள்தான் எது என்ற தடைக்கு விடை தருவதே இப்பகுதியாகும்.

சத்து அசத்து ஆகிய இருபொருளையும் அறிவதாயும் அவ்விரு பொருள்களால் அறிவதாயும், அவ்விரு பொருள்களினிடத்தும் அதுவதுவாயே நின்று அறிவதாயும் உள்ள பொருள் உயிரோகும்.

பதி பசு பாசம் ஆகிய முப்பொருள்களில் பசுவாகிய உயிரொன்றே ஏனைய இரண்டையும் அறியும் தன்மை வாய்ந்தது, எனவே, பாசத்தை நீக்கிப் பதியை அடையும் முயற்சியை உயிர் மேற்கொள்ள வேண்டும். அத்தகைய முயற்சியை மேற்கொள்வதற்கு வேண்டிய துணையைக் கூறுவதால் இந்நூற்பா சாதன இயல் ஆயிற்று.

## எட்டாம் நூற்பா

உயிர் முன்பிறப்புக்களில் செய்த புண்ணியத்தின் பயனாக இதுவரை உள்ளே நின்று உணர்த்திவந்த இறைவன், இப்பொழுது ஞானநெறியை அருளுவதற்காகக் குருவடிவம் கொண்டு எழுந்தருளிவருகிறான். உயிர்க்குச் சிவதீக்கை செய்து உபதேசம்

செய்வான் பக்குவப் பெற்ற உயிரைப் பார்த்து, அரசகுமாரனாகிய நீ ஐம்பொறிகளாகிய வேடரில் அகப்பட்டு அங்கேயே வளர்ந்து வந்ததனால் நின் பெருமைகளை அறியாமல் மயங்கித் துன்புத்துக்கு ஆளானாய், நின் பெருமைகள் இத்தகையன என்று உபதேசிப்பான். ஆன்மாவாகிய உயிர் உடனே உண்மையைக் குருவின் உபதேசத்தால் உணரும். அப்பொழுது ஐம்பொறிகளாகிய வேடர்களை விட்டு நீங்கும், இறைவனாகிய அரசனோடு நீக்கமின்றிச் சேர்ந்து திருவடிகளை அடையும். இவ்வாறு பக்குவப்பட்ட உயிர், ஐம்பொறிகளை விட்டு நீங்கிய உயிர் திருவடியை அடையும் என்று கூறுவதால் பிரிந்துநின்று பின்னர் அடைந்தது என்பது பொருளாகாது. உயிர் என்றும் இறைவன் திருவடியோடு சேர்ந்திருந்தாலும் ஐம்பொறிகளின் கூட்டுறவால் உயிர் உணராமல் இருந்தது. இப்போது உணர்ந்து திருவடி இன்பத்தைத் துய்க்கும் என்பது கருத்து.

இறைவனை அரசனாகவும் உயிரை அரசனுடைய மகனாகவும் ஐம்பொறிகளை வேடர்களாவும் உருவகம் செய்து கூறப்பெற்றன. வெண்கொற்றக் குடையும் நவமணிகள் பதிக்கப்பெற்ற மூடியும், சிங்காசனமும் அரசர்க்கே உரியன. இத்தகைய சிறப்பு அடையாளங்கள் அரசர்க்கன்றி வேறு யார்க்கும் இல்லை. அவற்றுள் வெண்கொற்றக் குடை அனைவர்க்கும் மேலாய் அனைத்தையும் தனக்குள் அடக்கும் சிறப்பைக் காட்டும். நவமணிமுடி அனைத்தையும் நடத்தும் செயல் முறையைக் காட்டும். அவற்றைப்போல இறைவனுக்கும் தனிச்சிறப்புக்கள் பல உண்டு. உலகம் முழுவதற்கும் அடிப்படையான மூலகாரணத்தை இயல்பாகக் கொண்டுள்ள வெண்கொற்றக் குடை இறைவனுக்கு உள்ளதாகக் கருத வேண்டும். அனைத்தையும் ஒன்றாக ஒரேவிதத் தன்மையால் அறியும் பேரறிவாகிய பெருஞ்சுடர்முடி இறைவனுக்கு உள்ளதாக உணரவேண்டும். உயிராகிய சிங்கத்தை ஆசனமாகக் கொண்டு அங்கங்கே உயிர்க்குயிராய் நின்று அனைத்து உயிர்களையும் நடாத்தும் இயல்பாகிய ஒப்பற்ற பெரிய சிங்காசனம் இறைவனுக்குக் கொள்ள வேண்டும். இம்மூன்று அடையாளங்களும் வேறு ஒருவர்க்கு இன்றி இறைவனுக்கே தனிச் சிறப்புடையன. ஆதலால் உயிர்களின் பாசங்களை அரித்தலால் அரன் என்ற பெயருடைய இறைவனை அரசனாகவும் அரசன் செல்வம் முழுவதையும் தன்னுடையதாக அனுபவிக்கும் சுதந்திரமும் அரசகுலச் சிறப்பும் அரசனுடைய மகனுக்கு உரிமை உடையது போல உயிர்க்கு இறைவனுடைய

பேரானந்தப்பெருஞ்செல்வம் முழுவதையும் தன்னுடையதாக அனுபவிக்கும் சுதந்தரமும் இறைவன் அறிவுடையனாதல் போல் சிற்றறிவு உயிர்க்கு உடைமையாதல் என்ற இனச்சிறப்பும் இருப்பதனால் உயிரை அரச குமாரனாகக் கூறப்பெற்றது. இறைவனை அடைவதற்காக வழி தேடி உடல், கருவி, உலகம், நுகர்பொருள் ஆகியவற்றில் உயிர் செல்வதனால் ஐம்பொறிகளாகிய வேடர்கள் உயிர் அடைவதற்குரிய அறிவுச் செல்வம் முழுவதையும் தடை செய்துகொண்டு உயிரைத் துன்புறுத்தலால் வேடர்களாகக் கூறப்பட்டன. அரசகுமாரன் அரசனுக்குரிய செல்வங்களை அனுபவிக்கும் சுதந்திரமும், அரசகுலமும் உடையனாயிலும் அரசன் ஏவல்வழியே அனுபவிப்பான். அது போல உயிரும் இறைவன் அருள்வழியே சிவானந்தத்தை அனுபவிக்கும் என்பது கருத்து.

எட்டாம் நூற்பா நான்கு கூறுகளை உடையது.

## முதல் கூறு

முன்பு ஏழாம் நூற்பாவில் சத்து, அசத்து இரண்டையும் அனுபவிப்பது சதசத்தாகிய உயிர் என்று கூறப்பெற்றது. அவ்வாறு அறியும் உயிர்க்கு இவ்வொரு பிறவியில் செய்த தவத்தினாலே நன்மைகள் வந்து சேரா. முற்பிறவிகளில் ஒன்றன் பின் ஒன்றாகப் படி முறையில் செய்துவந்த தவமாகிய சரியை, கிரியை, யோகம் ஆகியவற்றால் குருநாதன் உணர்த்திய முறையில் சிவஞானம் கை கூடும்.

சரியை நிறைவெய்திய பின் கிரியையும், கிரியை நிறைவெய்தியபின் யோகமும் ஒன்றன் பின் ஒன்றாக முற்பிறவிகளில் செய்த தவத்தால் ஞானம் கை கூடும் அல்லாமல் இவ்வொரு பிறவியிற் செய்த தவத்தால் ஞானம் கூடாது.

சரியை, கிரியை, யோகம் ஆகிய தவங்களை முறையாகச் செய்வர். அவ்வாறு செய்யும்போது சரியையின் பயனை அனுபவிப்பதற்குச் சாலோக பதமுத்தியையும், கிரியையின் பயனை அனுபவிப்பதற்குச் சாமீப பதமுத்தியையும் யோகத்தின் பயனை அனுபவிப்பதற்குச் சாரூப முத்தியையும் அதற்குரிய காலம் தீர்ந்த பின் அப்பதமுத்திகளை விட்டு நீங்கி மீண்டும் நிலவுலகத்தில் பிறப்பர். முன்பு நிலவுலகத்தில் வாழ்ந்தபோது மனத்தில் உண்டான ஆசைகளை மீண்டும் பிறந்து அனுபவித்துத் தீர்ப்பதற்காக முந்திய பிறப்பின் தவக்குறையை நீக்குதற்பொருட்டு நல்ல செயல்களிப் திருவருள் துணை கொண்டு முயற்சி மேற்கொள்வர்.

**சரியை**

சரீரத்தால் செய்வது என்பது பொருள். திருக்கோயில் கூட்டுதல், மெழுக்கு இடுதல், நந்தவனம் அமைத்தல், பூப்பறித்து மாலை கட்டிக் கொடுத்தல் முதலியனவாகும். திருவுருவங்களில் ஒன்றை முறையாக வழிபடுதல், அடியாரை வழிபடுதல் முதலியனவும் சரியையே யாகும்.

**சாலோகம்**

ஒரு வீட்டில் வேலை செய்பவர் வீடுமுழுவதும் தடையின்றிச் செல்வார். அதுபோலச் சிவலோகத்தில் தடையின்றி இயங்கி இன்பம் அனுபவிப்பர். தாசமார்க்கம் (அடிமை நெறி) எனவும் வழங்கப்பெறும்.

**கிரியை**

செயல்முறை என்பது பொருள். சிவதீக்கை பெற்றுச் சிவலிங்கத்தை உடையவராக வைத்துப் பூசை செய்தல் ஆகும். பூசைக்குரிய பொருள்களைச் சேகரித்துக் கொண்டு உரிய முறையில் அகத்தும் புறத்தும் வழிபடுதலாகும்.

**சாமீபம்**

ஒரு வீட்டில் மக்கள் எல்லா உரிமையும் பெற்றுச் செயல்படுவார்கள். அதுபோலச் சிவலோகத்தில் இறைவனிடத்து அருகிருக்கும் உரிமை பெற்றுச் செயல்பட்டுச் சிவஇன்பத்தை அனுபவிப்பார்கள். சற்புத்திரமார்க்கம் (மகன்மை நெறி) என்றும் வழங்கப்பெறும்.

**யோகம்**

ஒன்றுவது என்பது பொருள். இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி ஆகிய எட்டுவகை யோகங்களை முறையாக மேற்கொள்ளுதல் ஆகும். இத்தகைய யோகத்தில் சிவபெருமானின் அருவ நிலையை ஞானத்தால் நினைந்து வழிபாடு செய்வர்.

**சாருபம்**

வீட்டில் மக்களைக் காட்டிலும் நண்பர்கள் உரிமை அதிகம் உடையவராய் எல்லாச் செயல்களில் பங்கு கொள்வர். அதுபோலச் சிவலோகத்தில் உள்ள கணங்களோடு ஒத்த நிலையுடையவராகச்

செயல்படுபவர். சன்மார்க்கம் (தோழமை நெறி) என்றும் வழங்கப்பெறும்.

ஒரு நல்வினை செய்யத் தொடங்கி அதற்காக அறநூலை ஆராய்ந்து பார்ப்பது உண்டு. ஆராயும்போது அறநூலில் வேள்விமுதலிய செயல்பாடுகள் சிறந்த அறம் என்று கூறுவது போல் மனத்தில் தோன்றும். அவ்வாறு வேள்வி முதலியவற்றைக் கூறிவரும்போது அவற்றால் உண்டாகும் சுவர்க்கம் முதலிய காமியப் பயன்களை உடன் கூறிக்கொண்டே வருவது தெரியும். வேள்வி முதலியவற்றால் உண்டாகும் பயன் உண்மைப் பயன்கள் ஆகா. முன்பு பசி வந்தபோது உணவு உட்கொண்டு அவ்வுணவு சீரணமான பின்னும் பசியை உடையவனுக்குப் பசியை நீக்கும். உணவு உண்டபோது உண்டாகும் இன்பத்தைப் போன்றது வேள்வியால் உண்டாகும் பயனாகும். பசியை நீக்கும் உணவினால் உண்டாகிய இன்பம் மீண்டும் பசியுண்டாகுங்கால் நிலைத்தலின்றிக் கெடும். அதுபோல வேள்வி முதலியவற்றால் உண்டாகும் சுவர்க்க இன்பம் மீண்டும் பிறக்கும்போது நிலைத்தலின்றிக் கெடும்.

சரியை முதலிய தவங்கள் பயன்களைக் கொடுத்துக் கெடாது நின்று ஞானத்தைப் பெறுவதற்கு வழியாக அமைந்து வீடுபேற்றைத் தரும். சரியை முதலிய தவங்களைச் செய்யும்போது இருவினை ஒப்பு நேர்ந்தால், ஞான குருவைத் தேடியடைந்து ஞானத்தைப் பெற வழிவகுக்கும்

## இருவினையொப்பு

நல்வினையின் பயனாகிய இன்பத்தில் விருப்பும், தீவினையின் பயனாகிய துன்பத்தில் வெறுப்பும் இல்லாமல் இரண்டையும் ஒன்றுபோல் நினைத்து அவற்றில் பற்றுக் கொள்ளாது இருத்தலாகும்.

## இரண்டாம் கூறு

சரியை முதலிய தவங்களால் உண்டாகும் ஞானம்-ஞானாசிரியர் உணர்த்த உண்டாகுமேயன்றித் தானே நிகழாது. ஞானாசிரியர் உலகியல் நூற்பொருளையுணர்த்தும் உலகத்து ஆசான் அல்லாமல், இறைவனே குருவாக எழுந்தருளுவதில்லை என்று சாங்கியர், நையாயிகர் ஆகியோர் கூறுவர்.

சரியை, கிரியை, யோகம் மற்றும் நிறைவெய்திய பின் மல பரிபாகமும் சத்திநிபாதமும் தோன்றும். இதுவரை உள் நின்று உணர்த்திய இறைவனே குருவடிவாய் எழுந்தருளிவந்து உண்மை

ஞானத்தை உணர்த்துவர். உயிரின் பக்குவத்தை உயிர்க்குயிராகிய இறைவன் அறிந்து உணர்த்துவாரே யல்லாமல் ஏனையோர் உணர்த்தார். திருவருட்பயன் என்ற நூலில் அகத்தின்கண் பொருந்திய நோயை அகத்தில் உள்ளாரன்றி ஏனையோர் அறியமாட்டார் என்பதனை

"அகத்துறு நோய்க்கு உள்ளினரன்றி யதனைச்
சகத்தவரும் காண்பரோ தான்"

என்று கூறியுள்ளனர். தயிரினிடத்து நெய் அத்தயிராகவே விளங்கித் தோன்றுதல் போல் குருவின் உபதேசமானது அறிவுவடிவாகவே உயிரிடத்து விளங்கித்தோன்றும்.

இறைவன் குருவாக வந்து உணர்த்தும்போது விஞ்ஞான கலர்க்கு அறிவுக்கு அறிவாம் தன்மையில் நின்றவாறே உணர்த்துவான். பிரளயாகலர்க்குத் தன்மையில் நின்று உணர்த்தாது நான்கு தோளும் மூன்று கண்ணும் நீலகண்டமும் உடையராய் முத்தொழில் செய்கின்ற இயற்கை வடிவமே குருவடிவமாகக் காட்டி முன்னிலையில் நின்று உணர்த்துவான். சகலர்க்கு-அச்சகலர் வடிவுபோலும் வடிவுடைய குருவின் வடிவில் மறைந்து நின்று உணர்ந்துவான்.

விஞ்ஞானகலர்-ஆணவம் ஒரு மலம்மட்டும் உடையவர். பிரளயாகலர்-ஆணவம், கன்மம் ஆகிய இரு மலம் உடையவர். சகலர்-ஆணவம், கன்மம், மாயை ஆகிய மும்மலம் உடையவர்.

உயிர்கள் தமக்குரிய பக்குவ முறையில் இறைவன் அறிவிக்க அறியும் தன்மையுடையன. அவ்வாறல்லாமல் எல்லா உயிர்க்கும் ஒரே விதமாக அறிவித்தால் அறியும் தன்மையுடையவை அல்ல. ஆகையால், அறிவித்தால் அறியக்கூடிய குறைபாடு இல்லாத தாமே அறியும் தன்மையுடைய விஞ்ஞானகலர்க்கு இறைவன் உண்மை வடிவான அறிவு வடிவத்தால் உணர்த்துவான். குருவின் உபதேசத்தை உள்ளவாறு உணரமுடியாத பிரளயாகலர்க்கு முன்னிலையிலும் மானுட வடிவில் படர்க்கையிலும் உணர்த்துவான். ஆபரணங்களை அணிந்துள்ள பெண் ஒருத்திக்குத் தன் குழந்தையிடத்துக் கொண்டுள்ள அன்பு வெளிப்படையாகத் தெரியாது; என்றாலும் அந்த அன்பின் தன்மையாக அவரிடத்தில் உண்டாகும் முலைப்பாலும் கண்ணீரும் அவருடைய அன்பின் தன்மையாக அவரிடத்து உண்டாகும், அவ்வாறு வெளிக்காட்டும் முலைப்பாலும் கண்ணீரும் குழந்தையைக் காண்பதற்கு முன்

இல்லாமல், கண்டதும் உண்டாவதும் இயல்பேயாகும். அதுபோல நீரின்கண்ணே உள்ள நிழல் வெளிப்பட்டு வேறு நில்லாமல் அந்த நீருடனே கலந்து நிற்பதுபோல் உயிர்களிடத்துத் தனியாக வெளிப்பட்டு நில்லாமல் அருவமாக நின்ற இறைவன் உயிர்களின் பக்குவத்திற்கேற்ப வெளிப்பட்டுக் குருவாய்த் தோன்றுவான். பக்குவம் இல்லாதபோது தோன்றமாட்டான். இறைவனே குருவடிவாய் வந்து உணர்த்தாவிட்டால் இறைவன் இயல்பினை யார்தாம் அறிவார்?

## மூன்றாம் கூறு

உலகப் பொருள்களை உணர்வதற்கு மெய், வாய், கண், மூக்கு, செவி என்ற ஐம்பொறிகளே உயிர்க்குக் கருவிகளாய் அமைந்து துணைசெய்யும். அந்த ஐம்பொறிகளே சிவகரணங்களாக நின்று தத்துவ ஞானத்தை அறிந்துகொள்ளத் துணை செய்யும். இறைவனே குருவாய் வருதல் என்பது பொருந்தாது என்று சிவசங்கிராந்தவாதிகள் தடை யெழுப்பினர்; அதற்கு விடையாக அமைந்தது இப்பகுதியாகும்.

பளிங்குக் கல்லினிடத்துப் பொருந்திய பல நிறங்களின் தன்மையை அந்தப் பளிங்குக் கல் தன்னிடத்தில் பிரதிபலித்துக் காட்டும். நிறங்களின் இயல்பு பளிங்கினிடத்தில் விளங்கித் தோன்றுவது பளிங்குக்குப் பொது இயல்பு. இத்தகைய பொதுவியல் புடைய பளிங்குபோல் உயிர்களினிடத்துப் பொருந்திய இந்திரியங்களின் தன்மையையே உயிர்கள் தம்மிடத்து விளக்கிநிற்கும், தம்மைச் சார்ந்த இந்திரியங்களின் வண்ணமாய் நிற்றல் உயிர்களின் பொதுவியல்பு. இத்தகைய பொதுவியல்பை முன்னர்ச் சிந்திந்து அறிந்தபின் பளிங்கினிடத்துத் தோன்றிய அந்நிறங்கள் பளிங்குக்கு வேறானவை என்று அறிந்துகொள்ளுதல் போல இந்திரியங்கள் வேறு என்று தெரிந்து, இந்திரியங்களால் உண்டான பல்வேறு நன்மைகளை நீக்கி உண்மையை உயிர்கள் உணருமாறு குருவே உபதேசிக்கமுடியும். அந்தக் குருவாகிய சிவத்துக்கு உயிர்கள் என்றும் அடிமையாக இருக்கும்.

## நான்காம் கூறு

உயிர்கள் அறிவாயும் வியாபகமாயும் உள்ள சிறப்பியல்பை இந்திரியங்களுக்கு வேறு என்று உணர்ந்தால் அவ்விந்திரியங்களால் ஆகக்கூடியது ஒன்றுமில்லை. உடனே இறைவன் திருவடியை அடையும். ஒருவன் ஏறியிருந்து ஆடுவதற்கு ஆதாரமான ஊசல்

கயிறு அறுந்தபோது துன்பம் உற்ற காலத்துத் தூங்கும் தாய் போல் ஆடிய ஊசலில் இருந்தவனைத் தாங்கிக்கொள்வது தரையேயாகும். வேறு ஒன்றும் தாங்காது. அது போல இந்திரியங்களின் வேறாக உயிர்கள் தம்மைக் காண முற்பட்டபோது தாங்கிக்கொள்வது இறைவன் திருவடியே யன்றி வேறில்லை. ஆற்றின் குறுக்கே அணையை உயர்த்திக் கட்டி நீரைத் தடைசெய்ய, தடைப்பட்டுத் தேங்கிநின்ற அந்த நீர் அணையுடைந்து தடை நீங்கினால் உடனே கடலை நோக்கி விரைவாகச் சென்று கடல் நீரில் கலந்து கடல்நீராகவே மாறித் திரும்பிவாராமல் இருக்கும். அதுபோலப் பாசஞானத்தால் தடைப்பட்டு நிற்கும் உயிர்கள் பாசஞானம் நீங்கியதும் இறைவன் திருவடியை அடையும்.

ஞானாசிரியரான குருவின்வழியே உயிர் இறைவன் திருவருளைத் தரிசித்தது, இறைவன் திருவடியைச் சேர்ந்த உயிர் மீளுதல் செய்யாது என்று கூறவேண்டுதல் இல்லை. எல்லாம் தீவிரமாக இருத்தலால் உயிர் மீண்டால் என்ன, மீளா விட்டால் என்ன என்ற தடைகளுக்கு விடை கூறப்படுகிறது. அணையுடைந்த நீர் கடலில் சென்று கலக்கும், ஆற்றின் வழியாகக் கடலில் கலந்த நீர் மீண்டுவருங்கால் கடல் நீராக வருமேயல்லாமல் ஆற்று நீராக வராது. அதுபோலச் சிவபெருமான் திருவடியை அடைந்த உயிர், சில சமயம் மீண்டால் சிவமாகவே மீளுமேயல்லாமல் உயிர்நிலையில் மீளாது, மீண்டாலும் திரும்பவும் திருவடியையே அடையும்.

பாசி படர்ந்திருக்கும் நீர்நிலையில் கல்லை எறிந்தால் பாசி நீங்கும். கல்லடங்கிட்டால் மீண்டும் பாசி பரவும். அதுபோல இறைவன் திருவடியை மறந்தால் மீண்டும் அவை வந்து தாக்கும். அவ்வாசனை வந்து உயிரைத் தாக்கிய போது உயிரை விட்டு இறைவன் நீங்காது இருப்பான். அந்த நிலையிலும் இறைவன் திருவடி ஞானத்தைச் சிந்தித்தால் மலத்தால் உண்டாகும் வேதனை நீங்கும்.

## ஒன்பதாம் நூற்பா

இறைவனே குருவாக வந்து உபதேசம் செய்தார். அவ்வுப தேசத்தைக் கேட்ட உயிர் திருவருளைச் சிந்தித்து ஐம்பொறிகளாகிய வேடர்களுடன் சேர்ந்து வளர்ந்த அசுத்தத்தை நீக்கிக்கொள்ள எண்ணியது. அத்தகைய உயிர் தன்னைத் தூய்மைப்படுத்திக் கொள்ளும் முறையைக் கூறுவதே ஒன்பதாம் நூற்பாவாகும்.

வேறு துணையில்லாமல் அறிய முடியாத குறைகளை உடையது பசுஞானமான உயிரறிவாகும். உயிருக்குத் துணை செய்யும் கருவி கரணங்களால் உண்டாகும் ஒருபுடை அறிவை உடையது, பாச அறிவாகும். இவ்விரண்டு அறிவினாலும் பதியாகிய இறைவனை அறிய முடியாது. பசுஞானத்தாலும் பாசஞானத்தாலும் அறிய முடியாத இறைவனை அவ்விறைவனுடைய திருவடி ஞானத்தால் உயிர் தன்னுடைய அறிவில் ஆராய்ந்து அறியவேண்டும். அத்திருவடி ஞானத்தால் இறைவனை அறிவதோடு நிலம் முதலாக நாதம் ஈறாக உள்ள தத்துவமான பாசக் கூட்டத்தைக் கானல் நீர் போலத் தோன்றிப் பொய்யாகத் தோன்றி நீங்குவது என அறிய வேண்டும். அவ்வாறு அறிந்து பாசக் கூட்டத்தை விட்டு உயிர் நீங்கவே பதிஞானமாகிய திருவடிஞானம் பிறவித் துன்பமாகிய வெப்பத்திற்குக் குளிர்ந்த நிழலாக வெளிப்பட்டுத் தோன்றும், அந்த முறையில் பாசக்கூட்டத்தை விட்டு நீங்கித் திருவடி ஞானத்தைப் பெற்று அந்தத் திருவடி ஞானத்தால் இறைவனைக் கண்ட காட்சி சலியாமல் நிலைபெறும் பொருட்டுத் திருஅஞ்செழுத்தை முறையறிந்து செபிக்க (கணிக்க) வேண்டும்.

இந்நுற்பா மூன்று கூறுகளை உடையது.

## முதற் கூறு

இறைவன் பதி ஞானத்தால்மட்டும் அறியக் கூடியவன் என்று ஏன் கூறவேண்டும்? சுட்டி அறிகின்ற உயிரின் இயல்பில் குற்றம் நீங்கிய போது நல்ஞானம் பெற்றுப் பதிஞானத்தோடு ஒத்திருக்கும். அத்தகைய ஞானம் பெற்ற உயிர் என்பதே ஏற்றது என்பர், சிவசமவாத சைவர். அவருக்கு விளக்கம் கூறும் முறையில் அமைந்ததே இப்பகுதியாகும்.

உடம்பு காணக்கூடிய ஒன்று. அவ்வாறு காணக்கூடிய உடம்பில் நான்யார்? நாடியோ, நரம்போ, சீயோ, கோழையோ, இந்திரியங்களோ, அந்தக்கரணங்களோ-இவற்றுள் உயிரென்று எதனைத் தேடி அறிவது? இவ்வாறு அறிய முடியவில்லை என்று ஆராய்ச்சி அறிவிடத்தே நான் என்பதனை அறிவிக்கின்ற அறிவுப்பொருள் அவ்வாராய்ச்சியின் வேறாக உண்டென்று ஆராய்ந்து பார்த்தால் அறிவார். அவ்வாறு ஆராய்ந்து பார்க்கும் போது இறைவன் திருவருள் நன்றாக விளங்கித் தோன்றும். அத்திருவருளாகிய திருவடிஞானத்தால் இறைவனையும் அறிந்து இறைவனை விட்டு நீங்காத உயிராகிய தன்னையும் அறியும்.

அவ்வாறு இறைவனுடைய அருளால் இறைவனையும் இறைவனை விட்டு நீங்காத உயிரையும் அறிவாரே உயர்ந்தோராவர். அவ்வாறு அறிதலைச் செய்யாதார் கருவி கரணங்களெல்லாம் நீங்கிய முத்திக் காலத்தில் இறைவனை விட்டு நீங்கி நில்லாத தம்மை வேறு எந்த முறையில் அறிவார்?

நாடி நரம்பு முதலியவற்றுள் நான் யார் என்று ஆராய்ந்து அறிந்து உயிரே தன்னையும் இறைவனையும் தெளிந்து அறியும் என்பது கொள்ளத்தக்கதே; ஆனால் பதி ஞானத்தால் அன்றி உயிராகிய தன்னையும் இறைவனையும் தெளிந்து அறிதல் கூடாது என்று கூறுவது எவ்விதத்திலும் பொருந்தாது என்பர் சிவசமவாத சைவர்.

கண் ஒரு பொருளைக் காணும்போது தானே காணமாட்டாது. உயிர் காட்டக் கண் காணும். அம்முறையில் பொருளைக் காணுகின்ற கண் கண்ணாகிய தன்னியல்பையும் அறியமுடியாது; தன்னைச் செலுத்துகின்ற உயிரையும் அறியாது. அதுபோல நாடிநரம்பு முதலியவற்றில் நான் யார் என ஆராய்ந்து அறியும் உயிர், தானே ஆராய்ந்து அறியாது. இறைவன் மறைந்து நின்று அறிவிக்க, அறியும். கண் போலத் தன்னியல்பையும் அறிவதில்லை. தன்னை அறிவித்து நிற்கின்ற இறைவனையும் அறிவதில்லை. அவ்வாறிருந்தாலும் கண் சடமாதலால் எக்காலத்தும் அறியக்கூடிய இயல்பில்லை. உயிர் கண்ணைப்போலச் சடமின்றி அறிவுப் பொருளாதலால் நான் யார் என்று ஆராய்ந்து அறிகின்ற அவ்வறிவிடத்து இறைவன் உடனாய்நின்று உயிரை ஆராய்ந்து அறியுமாறு செய்து இறைவன் தெரியாமல் மறைந்து கள்வனாய் இருப்பான். அவ்வாறு நிற்கும் இறைவனை அவனருளால் ஆராய்ந்து அறியவேண்டும். மெய்கண்டார் இறைவனைக் கள்வனென்று குறிப்பிட்டுள்ளார். சங்க இலக்கியங்களில் தலைவி தலைவனைக் கள்வன் என்றும் தலைவன் தலைவியைக் கள்வி என்றும் கூறும் முறை உண்டு. திருஞானசம்பந்தர் இறைவனை முதன்முதலில் 'உள்ளம் கவர் கள்வன்' என்றார். திருவுந்தியாரில் இறைவனைக் கள்ளர் என்று குறிப்பிட்டார். இறைவனைக் கள்வனென்று கூறியதற்குச் சிவஞான முனிவர் மிகச்சிறந்த விளக்கம் தந்துள்ளார். " கள்வனென்றது கண்ணுக்கு உயிர் மறைந்து நின்றே காட்டுவதாகலான அது தன்னையும் உயிரையும் அறியமாட்டாது. அதுபோல முதல்வன் இதுகாறும் மறைந்து நின்றே உணர்த்துதலின் உயிர் தன்னையும் முதல்வனையும் அறியமாட்டா தாயிற்று" என்பது அவர் விளக்கமாகும்.

## இரண்டாம் கூறு

இறைவன் அசுத்தப் பிரபஞ்சம்போல முக்குணவடிவமாய் அளவிட்டு அறியக்கூடியவன் அல்லன். அசுத்தப் பிரபஞ்சம் சத்துவ, இராசத, தாமத வடிவானவை. முக்குணங்களைக் கடந்த கலப்புலகம் (மிச்சிரப் பிரபஞ்சம்) போல மலம் வினை ஆகியவற்றின் வடிவமாய் அறியக்கூடியவன் அல்லன், அசுத்த உலகம், தூய உலகம் இரண்டும் சேர்ந்தது கலப்புலகம், முக்குணங்களைக் கடந்தது, மலம் வினை ஆகியவற்றைக் கடந்தது. தூய உலகம் அது ஆனந்த வடிவானது. ஆனாலும் நிலையில்லாதது, அதைப்போல அறியக் கூடியவனும் அல்லன்; இம்மூன்று உலகத்தையும் சேர்ந்து அறிவது உயிர்; அவ்வுயிருக்கு மேலானவன் இறைவன். இத்தகைய இறைவன் இன்னதென்றறியாத சூனியப் பொருளும் அல்லன். ஆனால் அறிவினிடத்து நீங்காது நிலைபெற்றிருப்பான். அவன் சோதிக்குள் சோதியாய்த் தோன்றுவான்.

'உயிரால் சுட்டி அறியப்படுகின்ற உலகத்தை ஒவ்வொரு பொருளாகக் கண்டு இது நிலை உடையதன்று, இது நிலையுடைய தன்று என்று எல்லாப் பொருள்களையும் நீக்கின போது அவ்வாறு நீக்கிய தன் அறிவினிடத்து அறிவாய் விளங்கும் சிவத்தை ஆராய்ந்து கண்டு அச்சிவத்தை நான் என்றே பாவிக்கவேண்டும். இப்பாவனையே 'சிவோகம் பாவனை' ஆகும். அவ்வாறு பாவிக்கும் உள்ளத்தில் பாவனை கடந்த நிலையில் இறைவன் பாவிப்பவனுடைய அறிவில் நீங்குதலின்றி விளங்கித் தோன்றுவான். அவ்வாறு பாவிக்கும்போது தோன்றும் இறைவன் உயிரோடு அனாதி காலந் தொட்டுத் தொடர்ந்து வருகின்ற ஆணவ மலப்பற்றை நீங்குமாறு செய்வான். பாம்புக் கடியுண்ட ஒருவன் பாம்பின் நஞ்சினால் துன்புறுவான். கருடத் தியானம் தெரிந்த ஒருவன், அத்தியானத்தால் தெய்வத்தன்மை பொருந்திய மந்திர கருடனைத் தியானிக்க அந்த மந்திர கருடனால் நஞ்சை நீக்குவான். அதுபோல் ஆன்மாவின் ஆணவமலத்தைச் சிவோகம் பாவனையால் நீக்கலாம்.

## மூன்றாம் கூறு

முத்தி பஞ்சாக்கரத்தை முறையாக கணித்தால் (செபித்தால்) வாசனாமலம் நீங்கும் என்பது இப்பகுதியின் கருத்தாகும். உயிர் தன்னை ஐம்புலன்களில் வேறாகக் கண்டது. அவ்வாறு கண்ட காட்சி நிலைபெறும் பொருட்டு அசத்தாக உள்ள நிலம்முதல் நாதம்

ஈறாக உள்ள பாச உலகத்தை அசத்தென்று கண்டு, அதிலிருந்து நீங்கியபோது பதிஞானம் உண்டாகும். உயிரின் அறிவிடத்துச் சிவத்தின் இயல்பு தோன்றிற்று. ஐம்புலனுக்கு வேறாக உயிர் தன்னைக் காண்பதும் உலகத்தை அசத்தென்று கண்டு சிவஞானத்தைக் காண்பதும் ஆகிய இரண்டும் சிவானந்தப் பேரின்பத்தை அடைவதற்கும் சாதகமாகும். அவ்வாறு சாதிப்பது உயிராகிய ஆன்மாவேயாகும். அவ்வாறு சாதித்த உயிருக்கு வேறு ஒன்று உள்ளது என்பது உணர்த்தப்பட்டது.

வேம்பின் கசப்பைத் தின்ற புழு அதனை விடுத்துக் கரும்பின் இனிய சுவையைச் சேர்ந்து நுகரும். கரும்பின் இனிய சுவையை அறிந்தாலும் பயிற்சி வயத்தால் வேம்பின் கசப்பையே மீண்டும் தேடிச் செல்லும், அதுபோலச் சாதனங்களைச் செய்து நிறைவெய்திய உயிர்க்கு அச்சாதகங்களால் சிவஞானம் விளங்கியபோதும் முன் பற்றியிருந்த ஐம்புல நுகர்ச்சியைப் பயிற்சி வசத்தால் நாடிச் செல்லும். அத்தகைய வாசனா மலம் நீங்குவதற்கு முத்தி பஞ்சாக்கரத்தை முறையாகக் கணிக்க வேண்டும்.

உயிர் சிவபெருமானுக்கு அடிமையாகும் முறையினை ஐந்தெழுத்தை உச்சரிக்கும் முறையில் வைத்துக் காண வேண்டும். இதயத்தைப் பூசைக்குரிய இடமாகவும், உந்தியை வேள்விக்குரிய இடமாகவும், புருவத்தின் நடுப்பகுதியைத் தியானம் செய்வதற்குரிய இடமாகவும் கருதி வழிபாடு செய்யவேண்டும். புறத்தே பூசை செய்வதுபோல அகத் தாமரையில் சிவபெருமானைப் பூசிக்கவேண்டும். அவ்வாறு பூசிக்கும் போது ஐந்தெழுத்தால் அமைந்த சிவலிங்கத் திருமேனியைக் கொல்லாமை, ஐம்பொறி அடக்கம், அருள், பொறை, ஞானம், தவம், அன்பு, வாய்மை ஆகிய எட்டுப் பூக்களைக் கொண்டு ஐந்தெழுத்து வடிவுடைய சிவலிங்கத்தைப் பூசிக்க வேண்டும். உந்தியில் ஞானத்தீயை எழுப்பி வேள்வி செய்யவேண்டும். ஐந்தெழுத்தினால் புருவ நடுவிலிருந்து அமுதமாகிய நெய்யைப் பெய்ய வேண்டும். புருவ நடுவில் சிகரமாகிய தனக்கு மேலான பதிப்பொருளையும், யகரமாகிய இரண்டின் தன்மைபெற்ற உயிர்ப் பொருளையும், வகரமாகிய திருவருட்சத்திப் பொருளையும் முறையாக அறிந்து அம்முறைமையால் சிவம் உயிரென்று சிவோகம்பாவனை செய்ய வேண்டும். அப்பாவனையில் இறைவன் விளங்கித் தோன்றுவான்.

ஆகாயத்தில் உலவும் ஒன்பது கோள்களில் இராகு கேது தவிர ஏனைய ஏழு கோள்களும் அறியப்படும். இராகு கேது அறியப்படுவதில்லை, நேரே அறியப்படாத இராகு கேதுகளைக்

கிரகணகாலத்தில் சந்திரனிடத்திலும் சூரியனிடத்திலும் காண முடியும். அதுபோலப் பதிபசுபாசம் என்ற முப்பொருள்களில் 'நான் இதனை அறிந்தேன், இதனைஅறியவில்லை' என்று அறிவிற்குத் தெரியவரும் பசுபாசங்களைப் போல் அல்லாமல் எல்லாவற்றாலும் காணப்படாத பதியாகிய சிவபெருமானை உயிர் தம் இதயத்தாமரையில் வைத்து ஐந்தெழுத்தை ஓத வேண்டும், அவ்வாறு ஐந்தெழுத்தை ஓதினால் கோலை நட்டுக்கயிற்றினால் சுற்றிக் கடையும்போது விரைந்து வெளிப்படும் தீப்போலச் சிவபெருமான் வெளிப்படுவான். அவ்வாறு வெளிப்படும் போது அறிவுக்கறிவாய் வெளிப்படுவான். உயிரில் விளங்கித் தோன்றுவான், உயிரும் நெருப்பைச் சேர்ந்த இரும்புபோலத் தன் சுதந்திரத்தை விட்டு அச்சிவபெருமானுக்கு அடிமையாகும், இதற்காகவும் ஐந்தெழுத்தைக் கணிக்க (செபிக்க) வேண்டும்.

தத்துவங்கள் முப்பத்தாறு வகைப்படும், நிலம், முதலாக 24 தத்துவங்களை உந்தியிடத்துத் தோன்றிய எட்டுவிரல் அளவுற்ற அடித்தண்டாகக் கொள்ள வேண்டும். வித்தியா தத்துவங்கள் ஏழினையும் சுத்த தத்துவங்களையும் சேர்த்து எட்டுத் தத்துவங்களை அத்தண்டின்மேல் உள்ள எட்டு இதழாகக் கொள்ள வேண்டும். ஈசுவரம், சதாசிவம் ஆகிய தத்துவங்களை அவ்விதழுக்குள்ளே யுள்ள மகரந்தங்களாகக் கொள்ள வேண்டும். சத்தி தத்துவம் அந்த மகரந்தங்களுக்குள்ளே உள்ள கொட்டை வடிவமாகக் கொள்ள வேண்டும். சிவதத்துவம் அக்கொட்டையின் மீதுள்ளவிதை வடிவாகக் கொள்ள வேண்டும். இவ்வாறு 36 தத்துவங்களாகிய தாமரை மலரில் சிவபெருமான் திருவடியை ஐந்தெழுத்தால் பூசிக்க வேண்டும்.

சைவத்திற்குச் சிறந்த மந்திரம் ஐந்தெழுத்து மந்திரமாகும். ஐந்தெழுத்து மந்திரம் உயிர்களின் பக்குவ நிலைக்கேற்பக் குரு உபதேசம் செய்வார். ஐந்தெழுத்து மந்திரம் பல வகைப்படும்.

1. நமச்சிவாய-பருஐந்தெழுத்து (தூல பஞ்சாட்சரம்) ஆகும், இறைவனின் மந்திரமாகவும், திருப்பெயராகவும் இறைவன் வடிவாகவும் திருமுறைகளில் அதிகம் பயின்றுவரும்.

2. சிவாயநம-நுண் ஐந்தெழுத்து (சூக்கும பஞ்சாட்சரம்) ஐந்தெழுத்தும் ஐந்துசொற்களாகும். 'அந்தியும் நண்பகலும் அஞ்சுபதம் சொல்லி', என்பர் சுந்தரமூர்த்தி நாயனார். சி-சிவன் வா-திருவருட் சக்தி, ய-உயிர் (ஆன்மா), ந-மறைப்பு (திரோதானம்), ம-மலம் : ஆணவமலம்

"சிவன் அருள் ஆவி திரோதம் மலம் ஐந்து
அவன் எழுத்து அஞ்சின் அடைவாம்-"

என்பது உண்மை விளக்கம்.

"நானேயோ தவம் செய்தேன் சிவாயநம எனப்பெற்றேன்"

என்பார் மாணிக்கவாசகர்.

"சிவாய நம என்று சிந்தித்து இருப்போர்க்கு
அபாயம் ஒருநாளும் இல்லை"

என்பார் ஔவையார்

3. சிவயசிவ-அதிநுண் ஐந்தெழுத்து (அதி சூட்சும பஞ்சாட்சரம்) முத்தி பஞ்சாட்சரம், இருதலை மாணிக்கம் என்றும் வழங்கப்பபெறும்.

4. சிவசிவ-காரண ஐந்தெழுத்து (காரணபஞ்சாட்சாரம்) ஆகும்.

"சிவசிவ என்கிலர் தீவினையாளர்
சிவசிவ என்றிடத் தீவினை மாளும்
சிவசிவ என்றிடத் தேவரும் ஆவர்
சிவசிவ என்னச் சிவகதி தானே"

என்பது திருமந்திரம்.

5 சி-பேரெழுத்து (மகாகாரண பஞ்சாட்சரம்) ஆகும்.

'எங்கள் பிரான் எழுத்து ஒன்றில் இருப்பது'- திருமந்திரம்

'பேரெழுத்து ஒன்று உடையானை' திருநாவுக்கரசர்

இனி எழுத்துக் கணக்கின்படி ஐந்தெழுத்து வகைசெய்வதும் உண்டு

1. ஓரெழுத்து - சி
2. இரண்டெழுத்து - சிவ
3. மூன்றெழுத்து - சிவாய
4. நான்கெழுத்து - சிவசிவ
5. ஐந்தெழுத்து - நமச்சிவாய, சிவாயநம
6. ஆறெழுத்து - ஓம் நமச்சிவாய
7. எட்டெழுத்து - ஓம்ஆம் ஔம் சிவாயநம

ஐந்தெழுத்துக்கள் பற்றி நூல்களில் படிக்கலாம், ஐந்தெழுத்து அமைந்துள்ள பாடல்களைத் தோத்திரமாக ஓதலாம். பொருள் விளக்கம் கூறலாம். மந்திரமாகச் செபிக்கும்போது நாமாகவே செபிக்கக் கூடாது. தக்க குருவிடத்துத் தீக்கை பெற்றுக் குரு உபதேசித்த முறைப்படி ஐந்தெழுத்து மந்திரத்தைச் செபிக்கவேண்டும்.

## பயன் இயல்

ஏழாம் நூற்பாவில் சாதிக்கும் அதிகாரி உயிர் என்று கூறப்பெற்றது. எட்டாம் நூற்பாவில் அவ்வதிகாரி செய்யவேண்டிய சாதனம் உலகப்பற்று நீக்கமும் பதிஞான அறிவும் என்பதும் இறைவனே குருவாய் வந்து உணர்த்துவான் என்பதும் கூறப்பெற்றன. ஒன்பதாம் நூற்பாவில் பாசத்தை விட்டு இறைவன் திருவடியை அடைய வேண்டும் என்று சாதிக்கும் முறையும் கூறப்பெற்றது.

சாதனத்தால் சாதிக்கும்போது கிடைப்பது பயன். முற்கூறிய முறையில் சாதிக்கும்போது பாசத்தை விட்டு இறைவன் திருவடியை அடைதல் என்ற பயன் உண்டாகும்.

## பத்தாம் நூற்பா

பதிஞானத்தால் உயிரினால் அறியப்பட்ட இறைவன் பொருள்தன்மையால் உயிர்க்கு வேறாக இருந்தாலும் வேறு காணப்படாமல் நானே கண்டேன் என்று கூறுமுறையில் உயிரே ஆகக் கட்டு (பெத்த) நிலையில் நிற்பான். அதுபோல வீட்டு (முத்தி) நிலையில் உயிர் என்று வேறு காணப்படாமல் இறைவனாகவே ஒற்றுமைப்பட்டு உயிரானது தான் பணி நீத்தல் ஆகிய இறைபணியிலே சலியாது நிற்கும். அவ்வாறு நிற்கும்போது ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்று மலங்களும் இல்லாமல் நீங்கும். ஒற்றுமைப்படுவதைச் சிவஞான முனிவர் விரித்துக் கூறி விளக்கஞ் செய்துள்ளார்.

1. குடம் உடைந்த போது குடத்துக்குள் இருந்த வெளியும் பெரிய ஆகாயவெளியும் ஒன்றாதல் போல் ஒற்றுமைப்படுவதா?

2. மரக்கட்டையைக் கள்வன் என்பது போல் திரிபுக்காட்சியால் ஒற்றுமைப்படுவதா?

3. மண்ணே குடம் என்பதுபோல் ஒன்று திரிந்து மற்றொன்றாய் ஒற்றுமைப்படுவதா?

4. வெள்ளை நிறமும் தாமரையும்போல் குணகுணித் தன்மையால் ஒற்றுமைப்படுவதா?

5. தீயும் இரும்பும்போல் ஒன்றினொன்று கலத்தலால் ஒற்றுமைப்படுவதா?

6. பாலும் நீரும்போல் பிரிக்கப்படாது இயல்பினால் ஒற்றுமைப்படுவதா?

7. கருடனும் மாந்திரிகனும்போல் பாவனை மாத்திரையால் ஒற்றுமைப்படுவதா?

8. காய்ச்சிய இரும்பின் நீர்போல் ஒன்றின் ஒன்று சேர்ந்து சுவறி ஒற்றுமைப்படுவதா?

9. பேயும் பேய்ப் பிடியுண்டவனும் போல் ஆவேசத்தால் ஒற்றுமைப்படுவதா?

10. விறகில் தீயைப்போல் விளங்காமையால் ஒற்றுமைப்படுவதா?

11. சூரியன் ஒளியில் விளக்கொளிபோல் சத்தி கெட்டு நிற்றலால் ஒற்றுமைப்படுவதா?

12. தலைவனும் தலைவியும்போல் இன்பநுகர்ச்சியால் ஒற்றுமைப்படுவதா?

13. நட்புடைய நண்பர் இருவர்போல் நட்பின் மிகுதியால் ஒற்றுமைப்படுவதா?

14. ஊர்களில் உள்ள பசுவும் காட்டுப்பசுவும் போல் ஒப்புமை மாத்திரத்தால் ஒற்றுமைப்படுவதா?

என்று அவ்வச்சமயத்தார் கூறும் ஐயப்பாடுக ளெல்லாம் பொருந்தா என்று கருதவேண்டும். சிவபெருமான் உயிர்க்கு வேறாக இருந்தாலும் பெத்த காலத்தில் அச்சிவபெருமான் அவ்வுயிராகவே ஒற்றுமைப்பட்டு நிற்பான். இதுபோல முத்திக் காலத்தில் உயிர் அச்சிவபெருமானேயாய் ஒற்றுமைப்பட்டு ஏகனாகி இறைபணி நிற்றல் வேண்டும்.

இந்நூற்பா இரண்டு கூறுபாடுகளையுடையது.

முதல் கூறு

முன்னர் ஒன்பதாம் நூற்பாவில் உயிர் பதிஞானத்தால் இறைவனைக் காண்பது முறை என்பது கூறப்பட்டது. அவ்வாறு

உயிர் கண்டால் ஞானத்தாலும் திருவடியின்பத்தாலும் தூய்மையடையும். அதனாலேயே வீடுபேறு அடையலாம். அதற்கு மேல் வீடுபெறுதற்கு என்று செய்ய வேண்டுவது ஒன்றில்லை என்று சிவசமவாத சைவர் கூறுவர். அவர் கருத்துக்கு மறுப்புக் கூறுவதே இப்பகுதியாகும்.

உயிர் பதிஞானத்தால் இறைவனை - பதியைக் கண்டபொழுதும் அவ்வாறு கண்டோம். என்றும் தன்முனைப்பு இருந்து கொண்டேயிருக்கும். ஆதலால், அவ்வாறு தோன்றும் யான் எனது என்ற மயக்கம் நீங்குதற்பொருட்டு 'யான் என்று ஒருபொருள் இல்லை, எல்லாப் பொருளும், இறைவனே' என்று காண்கின்ற தெளிந்த அறிவு உயிரிடத்துத் தோன்றுதல் வேண்டும். அவ்வாறு தோன்றுவதே ஏகனாகி நிற்றல் ஆகும். ஏகனாகி நின்றால் இறைபணி தானே உண்டாகும்.

### இரண்டாம் கூறு

சிவனுடைய அறிவேயன்றி உயிராகிய தனக்குத் தனியறிவு இல்லையென்றும் சிவனுடைய செய்கையேயன்றித் தனக்குத் தனியாகச் செயலில்லை யென்றும் உணர்ந்து சிவபெருமானுடைய மறந்துபட்ட திருவடி ஞானப்பரப்பினுள் அடங்கிப் பேரின்பத்தைப் பெற்றேன் என்று கருத வேண்டும். திருவடி ஞானப்பரப்பினுள் நில்லாமல் விட்டு நீங்கினால் உலக வாதனை வந்து தாக்கும். அது தாக்கவே விருப்பு வெறுப்புத் தோன்றும். அவை தோன்றவே பிறவிக்குக் காரணமாகிய பெத்த நிலை மீண்டும் தோன்றும். எனவே, இவ்வாறு வாழாதிருக்க இறைபணியில் சலியாது நிற்றல் வேண்டும்.

இறைபணி நின்றால் உடம்போடு கூடி நிற்கும்போது அனுபவித்தற்கு வேண்டப்படும் நுகர்வினையும், அதுபற்றி வரும் எதிர்வினையாகிய ஆகாமியமும் வந்து சேரமாட்டா. வினைகளை நுகர்தற்கும் ஈட்டுதற்கும் கருவியாகிய செவி, வாய் முதலிய இந்திரியங்கள் சிவபெருமானுடைய உடைமையாகிய மாயையினால் ஆனவை (மாயேயம்)யன்றி, உயிராகிய நாம் ஆவன அல்ல. அந்த இந்திரியங்களைச் செயல்படுத்தலும் சிவபெருமான் வயத்தனவே யல்லாமல் உயிராகிய நம்வயத்தன அல்ல. செவி, வாய், கண் முதலிய இந்திரியங்கள் நுகர்வனவற்றிற்கு ஆதாரமான உடல், கருவி, உலகம், நுகர்பொருள் (தனு கரண புவன போகம்) ஆகியனவும் மாயேயமே யல்லாமல் நாம் அல்ல. அவை தொழிற்படுவதும் அச்சிவபெருமான் வயத்தன அன்றி, நம்

வயத்தன அல்ல. அவற்றோடு கூடி நின்று வினைகளை ஈட்டி நுகர்ந்துவருகின்ற யாமும் சிவபெருமான் அறியுமாறு செய்தாலன்றிச் செய்யமுடியாது.

சிவபெருமான் அருள்வழி நிற்கும் தன்மையுடையே மன்றி தனித்து நிற்கும் தன்மையுடையேம் அல்லேம் என்று உணர வேண்டும். இவ்வாறு உள்ளபடி உணர்ந்து சிவபெருமான் அருள்வழி நின்று செய்யும் செயலாகக் கண்டுகொண்டிருந்தால் இத்தகைய இறைபணியாகிய அடிமைத்திறம் உடையார் எவ்வுடம்பில் நின்று எவ்வினைகளைச் செய்யினும் அவ்வினைகள் அவர்க்குப் பந்தமாகமாட்டா. எதிர் (ஆகாமிய) கொண்டு வருவதாகிய நுகர் (பிராரத்து) வினையும் இறைவன் முன்னிலையில் உடம்பு அனுபவிப்பதாகக் கழியும். ஏனையோர்க்குப் போல் துன்பந்தராது. முன்செய்த (சஞ்சித) வினை ஞானாசாரியரால் அத்துவசுத்தி செய்து தீக்கை செய்தபோது வறுத்த வித்துப்போல் பயனற்றுப் போயிற்று. நுகர் (பிராரத்த) வினை உடலின் நுகர்ச்சியாகக் கழிந்தது. எதிர் (ஆகாமிய) வினை வாராமல் காக்கப் பெற்றது.

'தன்னையடைந்தார் வினை தீர்ப்பதன்றோ தலையாயவர் தங்கடன்' என்று திருநாவுக்கரசர் பாடியுள்ளார். தம்மை அடைக்கலம் என்று சார்ந்தாரை அவர்க்கு வரும் இடையூறுகளை நீக்கிக் காத்தல் உயர்ந்தோர் கடமையாகும். சிவபெருமான் பிறரை விட்டுவிட்டுத் தம்மைச் சார்ந்தவரைப் பாதுகாப்பார். அதனால் நடுநிலை நீங்கினவர் அல்லர். தம்மைச் சார்ந்த இறைபணி நிற்பாரைத் தாமே ஆக ஆக்கித் துன்பம் வாராமல் காப்பார். இறைபணி நிற்காத பிறரை ஆகாமிய வினையை ஒழுங்கு செய்து அவர்களையே நுகருமாறு செய்வார். இறைபணி நிற்போர் இறைபணி நிற்காதவர் ஆகிய இருவருக்கும் நுகர்ச்சிக்குவரும் நிகழ்வினைகளை அவ்வவர் செயலுக்குத் தக்கவாறு நுகரச்செய்வர்.

பெருங்காயம் வைக்கப்பட்டிருந்து பின் எடுக்கப்பட்ட பாத்திரத்தில் பெருங்காய வாசனை கொஞ்ச காலம் இருந்து பின் மங்கிப் போகும். சிவோகம் பாவனை செய்து இறைபணி நிற்கும் ஞானியர்க்குப் பயிற்சிவயத்தினால் சிலசமயம் தற்போதம் (யான் எனது என்னும் செருக்கு) தோன்றும். அதனால் நுகரும் வினையும் மாயேயாங்களும் அவ்வாறு எண்ணும் போது தோன்றும். இவை தோன்றினாலும் பெருங்காயம் இல்லாது பாத்திரத்தில் வாசனை மங்கிப்போவதைப்போல அவையும் மங்கிப்போகும்.

இறைவன் திருவடியாகிய ஞானத்தைப் பற்றியவர்கள் ஐம்புலவேட்கையில் சென்றாலும் பந்தம் அடையமாட்டார்கள். நெருப்பின் நடுவில் நிற்கும்போதும் அக்கினியைக் கட்டுப்படுத்தும் மந்திர ஆற்றல் உடையவரைச் சுடுவதில்லை. குதிரையைக் கதியறிந்து செலுத்தும் ஆற்றல் உடையவர் குதிரைமேல் அமர்ந்து விரைவாகச் சென்றாலும் குதிரையின் வேகத்தால் தளர்ச்சியடையார். இவ்விருவர்களைப்போல இறைபணி நிற்போர் நுகர்ச்சியின் பயனாகச் சில சமயம் பொறிவழிச் சென்று புலன்களை நுகர்ந்தாலும் வீடுபேறு அடையும் சிறப்புச் செய்கையிலிருந்து நீங்கமாட்டார்.

அசத்தாகிய உலகியற்பொருள்களோடு சேர்ந்து அசத்தாகியும், சத்தாகிய சிவனோடு சேர்ந்த சத்தியாகியும் இருப்பது உயிரினியல்பு. திருவருளின் வழிநின்று அனைத்தையும் காணும் தன்மை யேற்பட்டால் ஒளிமுன் எதிர்ப்பட்ட இருள்போல் ஐம்புல நுகர்ச்சியின் அல்லல் நீங்கும்.

## பதினொன்றாம் நூற்பா

காட்டக் காணுகின்ற இயல்புடைய கண்ணுக்குக் கான வேண்டிய பொருளைக் காட்டிக் காணும் தன்மை யுடையது உயிர். அதுபோல உணர்த்த உணருந்தன்மையுடைய உயிர்க்கு இறைவனும் அப்பொருளை உயிர் உணருமாறு செய்து தானும் உணர்த்துவான். அவ்வாறு ஒன்றுபட்டு உதவிவருகின்ற இறைவனுடைய கருணையை மறவாமல் உறுதியாகக் கொண்டு அன்பு செய்ய வேண்டும். அத்தகைய அன்பினால் இறைவன் திருவடியாகிய சிவப் பேற்றை உயிர் அடையும்.

கண், உயிரின் அறிவுக்கலப்பின்றி உருவத்தைக் காணமாட்டாது; உயிரின் அறிவும் கண்ணின் ஒளியும் கலந்து உருவத்தைக் காணும்போது உயிரின் அறிவும் கண்ணின் ஒளியும் தனித்தனி காணமுடியாது. ஒன்றாகவே பிரிப்பின்றி இருக்கும். உயிரின் துணையால் கண் கண்ட அந்த உருவத்தைக் கண் கண்டது என்றும் கண்ணை இடமாகக் கொண்டிருந்த உயிர் கண்டது என்றும் பிரித்தறிய முடியாது. கண்ணின் காணுதல்தொழிலும் உயிரின் காட்டுதல் தொழிலும் ஒன்றனை யொன்று விடாமல் இரண்டற்று ஒன்றாகவே யிருக்கும். அதுபோலச் சிவபெருமானையின்றித் தனித்து நில்லாத உயிர் ஒருபொருளை அறியும்போது சிவபெருமானின் அறிவாற்றல் உயிரின் அறிவோடு கலந்து சிவபெருமான் அறிவு என்றும் உயிரின் அறிவு என்றும் பிரித்தறிய

முடியாது உடனாய் நிற்கும். சிவபெருமானும் உயிருடன் அவ்வாறு கலந்து உயிர்க்கு அறிவித்த ஒருபொருளை அவ்வுயிர் அறிந்தது என்றும் அவ்வுயிரை இடமாகக் கொண்டு நின்ற சிவபெருமான் அறிந்தது என்றும், பிரித்தறிய வராமல் உயிரின் அறிவும் இறைவன் அறிவும் ஒன்றை யொன்று விடாமல் இரண்டற்று ஒன்றாகவே யிருக்கும். இறைவன் உயிர்க்குக் காட்டியும் கண்டும் உபகாரம் செய்துவருகின்றான். ஐந்தாம் நூற்பா காட்டும் உபகாரம், பதினொன்றாம் நூற்பா காணும் உபகாரம்.

பதினொன்றாம் நூற்பா இரண்டு கூறுபாடுகளையுடையது.

முதல் கூறு

சுவை, ஒளி, ஓசை, ஊறு, நாற்றம் ஆகிய ஐந்துவகையான நுகர்வுகளை உணரும்போது உயிர்-தன்னுடைய இயல்பு இது என்று வேறு காணமுடியாமல் அந்த நுகர்வுகளைப் போல அது அதுவாய்க் கலந்து நின்று அறியும் இயல்பை உடையது. உயிர் அந்த ஐந்து நுகர்வுகளையும் ஒருங்கே அறியமாட்டாது. ஒவ்வொன்றாக அறிந்து பலதிறப்படும் இயல்பு இல்லாமல், என்றும் ஒரே இயல்பாக இருக்கும். சிவபெருமான் எல்லா உயிர்களின் நுகர்வுகளையும் ஒரே நிலையில் உணர்வான். இவ்வாறு உணர்வது பொதுவகையான உணர்வாகும். அந்தந்த உயிரோடு சேர்ந்து நின்று சிறப்பு வகையானும் உணர்வான். இவ்வாறு உடன் நின்று உணரும்போது உயிரைப் போலச் சிவபெருமான் விகாரம் அடையான்.

உயிரும் சிவபெருமானும் உடனாய் நின்று நுகர்வுகளை அறிந்தாலும் உயிர் தன்னால் சாரப்பட்ட ஒவ்வொரு நுகர்வையே பற்றிப் பல்வேறு வகைப்பட அறியும்; சிவபெருமான் எல்லா உயிராலும் சாரப்பட்ட எல்லா நுகர்வுகளையும் ஒரு தன்மையாக அறிவான். இவை வேறுபாடு ஆகும். உயிர் முத்தி நிலையில் சிவபெருமானைச் சார்ந்தபோது அச்சிவபெருமான் தன்மையே தன்தன்மையாயும் அவனோடு ஒற்றுமைப்பட்டு அவனுடைய திருவடிகளை உணரும். அவ்வாறு உணரும் உயிர்க்கு இறைவன் மேலான பேரின்பமாய் மேலும் மேலும் புதியதாய்த் தோன்றி வளரும் அழகு உடையவன் ஆவான். அம்முறையில் இறைவனை உணரும்போது உணருகின்ற அவ்வுயிரினுடைய அறிவில் இறைவன் ஒன்றுபட்டு அவ்வறிவை விட்டு நீங்கான். இவ்வாறு மேலான பேரின்பமாய்த் தோன்றல் வேறாய் நிற்கும் தன்மையாகும். அறிவில் ஒன்றுபட்டு நிற்றல் ஒ

தன்மையாகும். ஆதலால் உடனாய் நிற்கும் தன்மைபற்றிக் கருதுவார் கருதியவாறு விளங்கித் தோன்றும் பொருளாகிய சிவ பெருமான் தன்னை அம்முறையில் கருதுவாருடைய அறிவுடன் கூடி நின்று அறியமாட்டானோ? அறிவான்.

சிவபெருமான் உயிருடன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும, நிற்பான். முத்திநிலையில் ஒன்றாய் நிற்பதனால் உயிரில் அறிவுடன் கலந்து நிற்பான். முத்திநிலையில் வேறாய் நிற்பதனால் உயிரின் அறிவுடன் உடன் நின்று அறிவான். எனவே, சிவபெருமான் நுகர்வுகளை உணர்வது என்பது எல்லாவிடத்துக்கும் பொருந்தும்.

## இரண்டாம் கூறு

இறைவனை மறவாமல் அன்பு செய்யவேண்டும். அவ்வாறு அன்பு செய்தால் இறைவன் திருவடியின்பத்தை நுகர்ந்து அவனோடு ஒற்றுமைப்பட் டிருக்கலாம். அன்பு, பத்தி என்பன சிவபெருமானிடத்து இச்சை மிகுவது என்ற கருத்தில் தத்துவ உலகில் வரும். ஒரு பொருளை அடீநத அளவிலேயே அதனிடத்து இச்சை நிகழ்வதைப்போல இச்சை நிகழ்ந்த அளவிலேயே அப்பொருளைப் பெறவேண்டும் என்று உடனே முயற்சிசெய்வது உலகத்தில் இல்லை. உயிர்க்கு இச்சையாகிய பக்தி வந்ததும் திருவடியைச் சென்று சேரும் என்பது எவ்வாறு பொருந்தும் என்பது தடை.

சிவபெருமான் உயிரில் கலந்து நின்று உயிர்க்குச் சிவானந்தத்தை உண்டாக்குவான். சிவானந்தத்தை உயிர் அறிந்தது என்றும், உயிரோடு கலந்து நின்று சிவபெருமான் அறிந்தான் என்றும் பிரித்தறிய வாராமல் இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாமல் ஒருங்கு நின்று நிகழுமாறு உபகாரத்தை இறைவன் செய்வான். அந்த உபகாரத்தை உயிர் மறவாமல் திருவருள் கூட்ட - அதனுடன் நிற்றலால் - இச்சை நிகழ்ந்ததும் திருவடியைச் சென்று உயிர் சேரும் என்று கூறுவது பொருந்தும்.

சூரியன் அனைவருக்கும் ஒரே தன்மையாக இருப்பான், அப்படியிருந்தாலும் ஒளி மழுங்கிய கண்ணுக்கு இருட்டேயாகும். ஒளிவிளங்கிய கண்ணுக்கு நன்றாகத் தோன்றுவான். அதுபோலச் சிவபெருமான் பெத்தர் முத்தர் இருவரிடத்தும் ஒரே தன்மையாக இருப்பான். பெத்தர்க்குப் பாச ஞானத்தால் விளங்கித் தோன்றான். முத்தர்க்குப் பாசம் நீங்கியதால் விளங்கித் தோன்றுவான். முத்தர், சீவன் முத்தர், அணைந்தோர் என்ற சொற்கள் ஒரே பொருளன. உலகத்தவரைப் போலச் சீவன்முத்தரும் உடம்போடு இருத்தலான்

பாசம் உடையவர் ஆவார் அல்லவா? அவர்க்கு எப்படி விளங்கித் தோன்றமுடியும் என்பது தடை. சூரியன் உதித்து வரும்போது தடாகத்தில் தாமரைகள் அனைத்தும் இருந்தாலும் பக்குவம் உடைய தாமரைகளே சூரியனால் மலரும், மற்றத் தாமரைகள் மலரா. பெத்தர்களை (பாசக்கட்டுடையவர்) போலச் சீவன்முத்தர் உடம்போடு இருந்தாலும் பக்தியினால் தன்னை மறவாது வழிபடுகின்றார் ஆகலான், இறைவன் திருவருட் பார்வையால் பாசம் நீங்குகின்றது, இறையருள் கிட்டுகிறது.

சிவபெருமான் தன்னைப்போல உயிரை ஆக்கிக் கொள்ளவேண்டும் என்ற கருணையினால் அனாதிகாலந்தொட்டு மலத்தோடு கூடிய உயிருடன் தானும் அனாதிகாலந் தொட்டே உடனிருந்து உபகாரஞ் செய்கின்றான். கண்ணிடத்து நிலை பெற்றிருக்கும் இருளை வளர்பிறைச்சந்திரன் நாள்தோறும் சிறிதுசிறிதாக அதிகமாக நீக்கி நிறைநிலா (முழுமதி-பௌர்ணமி) அன்று ஓட்டிவிடுகின்றான், சிவபெருமான். சிவபெருமானும் உயிரினிடத்து உண்டாகும் பக்குவத்துக்கு ஏற்பப் பருவந்தோறும் சிறிது சிறிதாக மல ஆற்றலை நீக்கி முதிர்ந்த பக்குவத்தில் முழுவதுமாக நீக்கிவிடுவான்.

காந்தக் கல் தன் முன்னிலையில் இரும்பைத் தன்னிடத்து இழுத்துக்கொண்டு தன்வசமாகச் செய்யும் எனினும் காந்தக் கல்லுக்குச் சலிப்பு ஏற்படுவதில்லை. அதுபோலச் சிவபெருமானும் திருவருட் சக்தியை உயிரிடத்துப் பதிக்கச் செய்கின்றான். மலவாற்றல் முழுவதும் நீங்கியபொழுது தன் சக்தி முழுவதையும் உயிரிடத்துப் பதியச்செய்கின்றான். உயிரைத் தன்பால் இழுத்துத் தன்வசம் ஆக்குகிறான். எனினும் ஒருபொழுதும் சலிப்பு ஏற்படுவதில்லை.

சிவபெருமான் திருவடியை உயிர் அடைந்து ஒன்றாகுங்காலத்து உயிர் கெட்டு ஒன்றாகுமோ, கெடாது ஒன்றாகுமோ என்பது தடை. உயிர்கெட்டு ஒன்றாகும் போது கூடும் பொருள் இல்லை. ஆதலால் உயிர்கெட்டு ஒன்றாகும் என்பது பொருந்தாது. கெடாது ஒன்றாகும் என்றால் கெடாதவிடத்து உயிரும் சிவமும் வேறு வேறு பொருளாய் நிற்பதனால் ஒன்றாவதில்லை. உப்பு தன்னிடத்துள்ள கடினத்தன்மை கெட்டு நீரைச் சேர்ந்து ஒன்றாய்ப் போவதுபோல் உயிர் சிவானந்தத்தைத் தலைப்பட்டுச் சிவபெருமானுக்கு அடிமையாக - உயிரும் சிவமும் பிரியாமல் இயைந்து நிற்பர்.

இறைவன் திருவடியாகிய ஞானத்தைப் பற்றியவர்கள் ஐம்புலவேட்கையில் சென்றாலும் பந்தம் அடையமாட்டார்கள். நெருப்பின் நடுவில் நிற்கும்போதும் அக்கினியைக் கட்டுப்படுத்தும் மந்திர ஆற்றல் உடையவரைச் சுடுவதில்லை. குதிரையைக் கதியறிந்து செலுத்தும் ஆற்றல் உடையவர் குதிரைமேல் அமர்ந்து விரைவாகச் சென்றாலும் குதிரையின் வேகத்தால் தளர்ச்சியடையார். இவ்விருவர்களைப்போல இறைபணி நிற்போர் நுகர்ச்சியின் பயனாகச் சில சமயம் பொறிவழிச் சென்று புலன்களை நுகர்ந்தாலும் வீடுபேறு அடையும் சிறப்புச் செய்கையிலிருந்து நீங்கமாட்டார்.

அசத்தாகிய உலகியற்பொருள்களோடு சேர்ந்து அசத்தாகியும், சத்தாகிய சிவனோடு சேர்ந்த சத்தியாகியும் இருப்பது உயிரினியல்பு. திருவருளின் வழிநின்று அனைத்தையும் காணும் தன்மை யேற்பட்டால் ஒளிமுன் எதிர்ப்பட்ட இருள்போல் ஐம்புல நுகர்ச்சியின் அல்லல் நீங்கும்.

## பதினொன்றாம் நூற்பா

காட்டக் காணுகின்ற இயல்புடைய கண்ணுக்குக் காண வேண்டிய பொருளைக் காட்டிக் காணும் தன்மை யுடையது உயிர். அதுபோல உணர்த்த உணருந்தன்மையுடைய உயிர்க்கு இறைவனும் அப்பொருளை உயிர் உணருமாறு செய்து தானும் உணர்த்துவான். அவ்வாறு ஒன்றுபட்டு உதவிவருகின்ற இறைவனுடைய கருணையை மறவாமல் உறுதியாகக் கொண்டு அன்பு செய்ய வேண்டும். அத்தகைய அன்பினால் இறைவன் திருவடியாகிய சிவப் பேற்றை உயிர் அடையும்.

கண், உயிரின் அறிவுக்கலப்பின்றி உருவத்தைக் காணமாட்டாது; உயிரின் அறிவும் கண்ணின் ஒளியும் கலந்து உருவத்தைக் காணும்போது உயிரின் அறிவும் கண்ணின் ஒளியும் தனித்தனி காணமுடியாது. ஒன்றாகவே பிரிப்பின்றி இருக்கும். உயிரின் துணையால் கண் கண்ட அந்த உருவத்தைக் கண் கண்டது என்றும் கண்ணை இடமாகக் கொண்டிருந்த உயிர் கண்டது என்றும் பிரித்தறிய முடியாது. கண்ணின் காணுதல்தொழிலும் உயிரின் காட்டுதல் தொழிலும் ஒன்றனை யொன்று விடாமல் இரண்டற்று ஒன்றாகவே யிருக்கும். அதுபோலச் சிவபெருமானையின்றித் தனித்து நில்லாத உயிர் ஒருபொருளை அறியும்போது சிவபெருமானின் அறிவாற்றல் உயிரின் அறிவோடு கலந்து சிவபெருமான் அறிவு என்றும் உயிரின் அறிவு என்றும் பிரித்தறிய

முடியாது உடனாய் நிற்கும். சிவபெருமானும் உயிருடன் அவ்வாறு கலந்து உயிர்க்கு அறிவித்த ஒருபொருளை அவ்வுயிர் அறிந்தது என்றும் அவ்வுயிரை இடமாகக் கொண்டு நின்ற சிவபெருமான் அறிந்தது என்றும், பிரித்தறிய வராமல் உயிரின் அறிவும் இறைவன் அறிவும் ஒன்றை யொன்று விடாமல் இரண்டற்று ஒன்றாகவே யிருக்கும். இறைவன் உயிர்க்குக் காட்டியும் கண்டும் உபகாரம் செய்துவருகின்றான். ஐந்தாம் நூற்பா காட்டும் உபகாரம், பதினொன்றாம் நூற்பா காணும் உபகாரம்.

பதினொன்றாம் நூற்பா இரண்டு கூறுபாடுகளையுடையது.

முதல் கூறு

சுவை, ஒளி, ஓசை, ஊறு, நாற்றம் ஆகிய ஐந்துவகையான நுகர்வுகளை உணரும்போது உயிர்-தன்னுடைய இயல்பு இது என்று வேறு காணமுடியாமல் அந்த நுகர்வுகளைப் போல அது அதுவாய்க் கலந்து நின்று அறியும் இயல்பை உடையது. உயிர் அந்த ஐந்து நுகர்வுகளையும் ஒருங்கே அறியமாட்டாது. ஒவ்வொன்றாக அறிந்து பலதிறப்படும் இயல்பு இல்லாமல், என்றும் ஒரே இயல்பாக இருக்கும். சிவபெருமான் எல்லா உயிர்களின் நுகர்வுகளையும் ஒரே நிலையில் உணர்வான். இவ்வாறு உணர்வது பொதுவகையான உணர்வாகும். அந்தந்த உயிரோடு சேர்ந்து நின்று சிறப்பு வகையானும் உணர்வான். இவ்வாறு உடன் நின்று உணரும்போது உயிரைப் போலச் சிவபெருமான் விகாரம் அடையான்.

உயிரும் சிவபெருமானும் உடனாய் நின்று நுகர்வுகளை அறிந்தாலும் உயிர் தன்னால் சாரப்பட்ட ஒவ்வொரு நுகர்வையே பற்றிப் பல்வேறு வகைப்பட அறியும்; சிவபெருமான் எல்லா உயிராலும் சாரப்பட்ட எல்லா நுகர்வுகளையும் ஒரு தன்மையாக அறிவான். இவை வேறுபாடு ஆகும். உயிர் முத்தி நிலையில் சிவபெருமானைச் சார்ந்தபோது அச்சிவபெருமான் தன்மையே தன்தன்மையாயும் அவனோடு ஒற்றுமைப்பட்டு அவனுடைய திருவடிகளை உணரும். அவ்வாறு உணரும் உயிர்க்கு இறைவன் மேலான பேரின்பமாய் மேலும் மேலும் புதியதாய்த் தோன்றி வளரும் அழகு உடையவன் ஆவான். அம்முறையில் இறைவனை உணரும்போது உணருகின்ற அவ்வுயிரினுடைய அறிவில் இறைவன் ஒன்றுபட்டு அவ்வறிவை விட்டு நீங்கான். இவ்வாறு மேலான பேரின்பமாய்த் தோன்றல் வேறாய் நிற்கும் தன்மையாகும். அறிவில் ஒன்றுபட்டு நிற்றல் ஒன்றாய் நிற்கும்

தன்மையாகும். ஆதலால் உடனாய் நிற்கும் தன்மைபற்றிக் கருதுவார் கருதியவாறு விளங்கித் தோன்றும் பொருளாகிய சிவ பெருமான் தன்னை அம்முறையில் கருதுவாருடைய அறிவுடன் கூடி நின்று அறியமாட்டானோ? அறிவான்.

சிவபெருமான் உயிருடன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும, நிற்பான். முத்திநிலையில் ஒன்றாய் நிற்பதனால் உயிரில் அறிவுடன் கலந்து நிற்பான். முத்திநிலையில் வேறாய் நிற்பதனால் உயிரின் அறிவுடன் உடன் நின்று அறிவான். எனவே, சிவபெருமான் நுகர்வுகளை உணர்வது என்பது எல்லாவிடத்துக்கும் பொருந்தும்.

### இரண்டாம் கூறு

இறைவனை மறவாமல் அன்பு செய்யவேண்டும். அவ்வாறு அன்பு செய்தால் இறைவன் திருவடியின்பத்தை நுகர்ந்து அவனோடு ஒற்றுமைப்பட் டிருக்கலாம். அன்பு, பத்தி என்பன சிவபெருமானிடத்து இச்சை மிகுவது என்ற கருத்தில் தத்துவ உலகில் வரும். ஒரு பொருளை அடிநத அளவிலேயே அதனிடத்து இச்சை நிகழ்வதைப்போல இச்சை நிகழ்ந்த அளவிலேயே அப்பொருளைப் பெறவேண்டும் என்று உடனே முயற்சிசெய்வது உலகத்தில் இல்லை. உயிர்க்கு இச்சையாகிய பக்தி வந்ததும் திருவடியைச் சென்று சேரும் என்பது எவ்வாறு பொருந்தும் என்பது தடை.

சிவபெருமான் உயிரில் கலந்து நின்று உயிர்க்குச் சிவானந்தத்தை உண்டாக்குவான். சிவானந்தத்தை உயிர் அறிந்தது என்றும், உயிரோடு கலந்து நின்று சிவபெருமான் அறிந்தான் என்றும் பிரித்தறிய வாராமல் இருவகை அறிவும் ஒன்றனை ஒன்று விடாமல் ஒருங்கு நின்று நிகழுமாறு உபகாரத்தை இறைவன் செய்வான். அந்த உபகாரத்தை உயிர் மறவாமல் திருவருள் கூட்ட - அதனுடன் நிற்றலால் - இச்சை நிகழ்ந்ததும் திருவடியைச் சென்று உயிர் சேரும் என்று கூறுவது பொருந்தும்.

சூரியன் அனைவருக்கும் ஒரே தன்மையாக இருப்பான், அப்படியிருந்தாலும் ஒளி மழுங்கிய கண்ணுக்கு இருட்டேயாகும். ஒளிவிளங்கிய கண்ணுக்கு நன்றாகத் தோன்றுவான். அதுபோலச் சிவபெருமான் பெத்தர் முத்தர் இருவரிடத்தும் ஒரே தன்மையாக இருப்பான். பெத்தர்க்குப் பாச ஞானத்தால் விளங்கித் தோன்றான். முத்தர்க்குப் பாசம் நீங்கியதால் விளங்கித் தோன்றுவான். முத்தர், சீவன் முத்தர், அணைந்தோர் என்ற சொற்கள் ஒரே பொருளன. உலகத்தவரைப் போலச் சீவன்முத்தரும் உடம்போடு இருத்தலான்

பாசம் உடையவர் ஆவார் அல்லவா? அவர்க்கு எப்படி விளங்கித் தோன்றமுடியும் என்பது தடை. சூரியன் உதித்து வரும்போது தடாகத்தில் தாமரைகள் அனைத்தும் இருந்தாலும் பக்குவம் உடைய தாமரைகளே சூரியனால் மலரும், மற்றத் தாமரைகள் மலரா. பெத்தர்களை (பாசக்கட்டுடையவர்) போலச் சீவன்முத்தர் உடம்போடு இருந்தாலும் பக்தியினால் தன்னை மறவாது வழிபடுகின்றார் ஆகலான், இறைவன் திருவருட் பார்வையால் பாசம் நீங்குகின்றது, இறையருள் கிட்டுகிறது.

சிவபெருமான் தன்னைப்போல உயிரை ஆக்கிக் கொள்ளவேண்டும் என்ற கருணையினால் அனாதிகாலந்தொட்டு மலத்தோடு கூடிய உயிருடன் தானும் அனாதிகாலந் தொட்டே உடனிருந்து உபகாரஞ் செய்கின்றான். கண்ணிடத்து நிலை பெற்றிருக்கும் இருளை வளர்பிறைச்சந்திரன் நாள்தோறும் சிறிதுசிறிதாக அதிகமாக நீக்கி நிறைநிலா (முழுமதி-பௌர்ணமி) அன்று ஓட்டிவிடுகின்றான், சிவபெருமான். சிவபெருமானும் உயிரினிடத்து உண்டாகும் பக்குவத்துக்கு ஏற்பப் பருவந்தோறும் சிறிது சிறிதாக மல ஆற்றலை நீக்கி முதிர்ந்த பக்குவத்தில் முழுவதுமாக நீக்கிவிடுவான்.

காந்தக் கல் தன் முன்னிலையில் இரும்பைத் தன்னிடத்து இழுத்துக்கொண்டு தன்வசமாகச் செய்யும் எனினும் காந்தக் கல்லுக்குச் சலிப்பு ஏற்படுவதில்லை. அதுபோலச் சிவபெருமானும் திருவருட் சக்தியை உயிரிடத்துப் பதிக்கச் செய்கின்றான். மலவாற்றல் முழுவதும் நீங்கியபொழுது தன் சக்தி முழுவதையும் உயிரிடத்துப் பதியச்செய்கின்றான். உயிரைத் தன்பால் இழுத்துத் தன்வசம் ஆக்குகிறான். எனினும் ஒருபொழுதும் சலிப்பு ஏற்படுவதில்லை.

சிவபெருமான் திருவடியை உயிர் அடைந்து ஒன்றாகுங்காலத்து உயிர் கெட்டு ஒன்றாகுமோ, கெடாது ஒன்றாகுமோ என்பது தடை. உயிர்கெட்டு ஒன்றாகும் போது கூடும் பொருள் இல்லை. ஆதலால் உயிர்கெட்டு ஒன்றாகும் என்பது பொருந்தாது. கெடாது ஒன்றாகும் என்றால் கெடாதவிடத்து உயிரும் சிவமும் வேறு வேறு பொருளாய் நிற்பதனால் ஒன்றாவதில்லை. உப்பு தன்னிடத்துள்ள கடினத்தன்மை கெட்டு நீரைச் சேர்ந்து ஒன்றாய்ப் போவதுபோல் உயிர் சிவானந்தத்தைத் தலைப்பட்டுச் சிவபெருமானுக்கு அடிமையாக - உயிரும் சிவமும் பிரியாமல் இயைந்து நிற்பர்.

சூரியன் காலை நேரத்தில் மேகக் கூட்டத்துள் மறைந்து ஒளிவிளங்காமல் இருப்பான். மேகக் கூட்டம் சிறிது நீங்கியவிடத்து அச்சூரியன் ஒளி சிறிது விளங்கித்தோன்றும். பெருங்காற்றால் அம்மேகக் கூட்டம் முழுவதும் கலைந்து போனபோது அச்சூரியன் ஒளி எங்கும் விளக்கமாகத் தெரியும். அதுபோலச் சார்ந்ததன் வண்ணமான உயிர் அனாதியே மலத்தைச் சேர்ந்து அறிதல் தொழில் இல்லாமல் கேவலப்பட்டு நிற்கும். பின் மலநீக்கத்தின் பொருட்டு இறைவன் அருளினால் உயிருக்குக் கருவிகளைக் கூட்டுவான். உயிர் கருவிகளோடு சேர்ந்து சிறிது அறிவு விளங்கப் பெற்று உலகப்பொருளை ஓரளவு அறிந்துகொள்ளும். பின் அம்மலத்தின் ஆற்றலைத் திருவருட் சத்தி முழுவதுமாக நீக்கும். அப்போது சிவன் திருவருள் நன்கு விளங்கி நிற்கும்.

சூரியன் மேகத்துடன் கூடியபொழுதும் மேகம் சிறிது நீங்கிய பொழுதும் மேகம் முழுவதும் நீங்கியபொழுதும் தன் தன்மை கெடுவதில்லை. நீக்கத்திற்கு ஏற்ப ஒளி வெளிப்படும். உயிரும் கேவலம், அசுத்தம், சுத்தம் ஆகிய மூன்றும் அவத்தைப்பட்ட போதும் சார்ந்ததன் வண்ணத்தில் வேறுபடுவதில்லை.

ஆன்மாவுக்கு உண்டாகும் நிலை அவத்தை எனப்படும்.

1. காரணஅவத்தை 2. காரிய அவத்தை என அவத்தை இருவகைப்படும்.

காரண அவத்தை 1. கேவலாவத்தை 2. சகலாவத்தை 3. சுத்தாவத்தை என்று மூவகைப்படும். உயிர் ஆணவத்தோடுமட்டும் தனியாக இருக்கும் நிலை கேவலாவத்தை யாகும். கேவலம்-தனிமை. கருவிகரணங்களோடு சேர்ந்து உடம்பு கொண்டு உலகில் வாழும் வாழ்க்கை நிலை சகலாவத்தை எனப்படும். ச+கலை=சகலம்-கலையோடு சேர்ந்தது. கலை-மாயை, ஈண்டுத் தனு கரண புவன போகங்கள் (உடம்பு, கருவி, உலகம், நுகர்பொருள்), மயம் நீங்கி, உயிர் இறைவன் திருவருளோடு கூடியிருத்தல் சுத்தா வத்தையாகும்.

காரிய அவத்தை சாக்கிரம், சொப்பனம், துரியம், துரியாதீதம் ஆகியவை நான்காம் நூற்பாவில் கூறப்பட்டன்.

நனவு, கனவு, உறக்கம், பேருறக்கம், உயிர்ப்படங்கல் என்று தமிழில் கூறுவது புராணங்கள், சிற்றிலக்கியங்களில் உண்டு.

## பன்னிரண்டாம் நூற்பா

சிவபெருமானை மறக்காத அன்பை உடைய அடியார் - அணைந்தோர் அல்லது சீவன்முத்தர் என வழங்கப்பெறுவார். சீவன்முத்தர் இறைவனை இடைவிடாது சிந்தித்துக் கொண்டிருந்தாலும் அவருடைய அறிவும், இச்சையும், தொழிலும் சில சமயங்களில் வெளியே செல்லும் நிலை ஏற்படும், அவ்வாறு புறத்தே செல்லுங்கால் இறைவனுடைய செந்தாமரை மலர் போன்ற திருவடிகளைச் சிந்திக்க வேண்டும். இறைவன் திருவடியைச் சீவன் முத்தர் அணைய முடியாமல் திருவடி ஞானத்தை மும்மலங்கள் மறக்கும்படி செய்யும். அவ்வாறு செய்யும் மும்மலங்களாகிய அழுக்கை ஞானம் என்ற நீரால் கழுவ வேண்டும். அன்பு செய்யும் அடியாரோடு கூட வேண்டும். மலங்களால் உண்டாகும் மயக்கம் நீங்குவதால் அடியார் திருவேடங்களையும் சிவன் திருக்கோயிலையும் இறைவனென்று கண்டு வழிபட வேண்டும்.

மலமாகிய அழுக்கை ஞானநீரால் கழுவுவதால் சீவன் முத்தருடைய அறிவு செயல்படும். அடியார்களோடு கூடுவதால் சீவன்முத்தருடைய இச்சை நிறைவெய்தும். அடியார்களுடைய திருவேடத்தையும், சிவபெருமானுடைய கோயிலையும் இறைவன் என்றே வழிபடுவதால் சீவன்முத்தருடைய தொழில் நடைபெறும்.

பன்னிரண்டாம் நூற்பா மூன்று கூறுபாடுகளை உடையது.

### முதற்கூறு: மும்மலங்களைக் களைக

ஆணவம், மாயை, கன்மம் ஆகிய மூன்று மலங்களும் மெய்யுணர்ந்தோரிடத்து ஏதேனும் ஒரு வழியில் நுழைந்து அவருடைய மெய்யுணர்வைக் கீழ்ப்படுத்திப் பிறவிக்கு வித்தாகிய பழைய இழந்த எண்ணங்களைச் சேர்ந்து உயர்த்திக் காட்டுவதால் அம்மூன்று மலங்களும் மெய்யுணர்ந்தவர்க்கு ஆகா. ஆதலால், அவற்றைக் களைய வேண்டும். புண்ணிய பாவப் பயன்களாயும், அவற்றின் காரணமாயுள்ள விருப்பு வெறுப்புகளாயும், உள்ளநிலை கன்ம மல மாகும். நிலம் முதல் அசுத்தமாயைத் தத்துவம் முடிய உள்ள தத்துவக் கூட்டங்கள் தனு, கரண, புவன, போகங்கள் ஆகிய மாயாமல மாகும். அஞ்ஞானத்தைக் காட்டுவது ஆணவமல மாகும். இந்த மூன்று மலங்களும் மெய்ஞ்ஞானிகளுக்கு ஆகா. அவற்றை நீக்க வேண்டும்.

## இரண்டாம் கூறு: சிவஞானிகளுடன் கூடுக

சிவஞானிகள் என்போர் பத்தியினால் இறைவனை மறவாதவர்; வழிபாட்டினால் சிவனருள் பெற்றவர். சிவனருள் பெற்ற சீவன் முத்தர்களே சிறந்த சிவஞானிகள் ஆவர். திருவருள் ஞானத்தை மறைக்கச் செய்து தீயநெறிக்குக் கொண்டு சென்று மலங்கள் பிறவிக்குழியில் விழும்படிசெய்யும். அத்தகைய மலங்களிலும் கொடியவர் அடியவ ரல்லாதவர். மலங்கள் வாய்ப்புக் கிடைக்கும்போதே தீமையைச் செய்யும். அடியவ ரல்லாதார் எப்பொழுதும் தீமையைச் செய்வார். சிவபத்தரிடத்து அன்பு செய்து அவர் சொன்ன வழியில் நிற்போர் உலக மயக்கம் நீங்கிச் சிவ அனுபவத்தில் மேம்பட்டு நிற்பர். சிவனானுபவத்தில் திளைத்திருப்பதால் பூத உடம்பு உள்ளவரை நீங்காது நின்ற நுகர்வினை (பிராரத்த வினை) அவரை அதிகம் துன்புறுத்தாது. சிவபத்தரோடு சேர்ந்தாலன்றிப் பாசநீக்கமும் சிவப்பேறும் உண்டாகா. மணிவாசகரும் "அடியார் நடுவுள் இருக்கும் அருளைப் புரியாய்" என்று வேண்டிக்கொண்டுள்ளார்.

## மூன்றாம் கூறு

சிவஞானிகளையும் சிவலிங்கத்தையும் சிவனென்றே கருதி வழிபடுதல். சிவபத்தரையும் சிவாலயத்திலுள்ள திருவுருவத்தையும் வழிபடுவது முறை. அவ்வாறில்லாமல் சிவபத்தருடைய திருவேடத்தையும், சிவாலயத்தையும் சிவனென்றே கருதி வழிபட வேண்டும் என்று கூறப்பட்டதன் காரணம், காமக்கிழத்தியராகிய விலைமகளிர் வடிவில் காணப்படும் ஆடை, சந்தனம், அணிகலன்கள் முதலாயின காணப்பட்டவுடன் காமுகரை வசப்படுத்தி இன்பத்தை உண்டாக்கும். அதுபோலச் சிவபத்தர் அணிந்திருக்கும் திருவேடமும் சிவபெருமான் எழுந்தருளி யிருக்கும் சிவாலயமும் கண்டவுடனேயே மெய்யுணர்வுடையாரை வசப்படுத்தி அவருக்கு இன்பம் செய்யும். ஆதலால் திருவேடத்தையும் சிவாலயத்தையும் வணங்க வேண்டுமென்று கூறப்பட்டது.

பெரிய புராணத்தில் திருநாவுக்கரசர் வேடத்தைக் கண்டு திருஞானசம்பந்தர் மகிழ்ந்தது இந்நிலைக்கு ஆதாரமாகும். "கண்ட கவுணியக் கன்றும் கருத்தில் பரவு மெய்க் காதல், தொண்டர் திருவேடம் நேரே தோன்றியது என்று தொழுதே" என்பது பெரிய புராணமாகும்.

பரம்பொருளாகிய சிவபெருமான் உலகத்தார் தம்மை அறிந்து கொள்ள வேண்டிக் கருணைகொண்டு தம்முடைய திருவேடமாகிய திருநீறு, கண்டிகை முதலிய வடிவத்தைத் தம்முடைய அடியாருக்குக் கொடுத்தார். அத்தகைய அடியார் இடமாக நின்று இறைவன் அந்தந்த உலகத்தவருக்கு விளங்கிக் காட்டுவான். தம்மை உள்ளவாறு உணரும் தொண்டராகிய அடியாரிடத்தில் தயிரின்கண் நெய்போல் விளங்கித் தோன்றுவான்; ஆதலால் திருவேட முடையவர் சிவமாகவே கருதப்பெறுவர். திருவேடம், பாவனை, செயல், தன்மை-ஆகிய நான்கினாலும் திருவேடமுடைய மெய்யன்பர்கள் சிவமாகவே தோன்றுவர். அவர்களே சிவன் என்று வழிபடுவதற்குரியவர். பந்த பாசம் உடைய ஏனையோரிடத்து அச்சிவபெருமான் பாலில் நெய் போல் விளங்காது நிற்பான்-அவர் சேர்க்கை கூடாதென்பதாம்

சிவபக்தர் திருவேடம் சிவபெருமானை அறிவுறுத்துவதால் சிவபெருமானால் கொடுக்கப்பட்டதாகவே கருதி வழிபட வேண்டும். திருவேடத்தில் சிவபெருமான் விளங்கித் தோன்றுவான் என்பது பொருந்தும், அத்திருவேடத்தை உடைய சிவபத்தர் சிவபெருமானை உள்ளவாறு உணரும் தகுதி உடையவர், ஆதலால் சிவமாகக் கருதி வழிபடலாம். ஆனால், சிவாலயத்தில் உள்ள திருவுருவங்கள் தாவர வடிவமாதலால் அவற்றுக்கு அவ்வாறு உணரும் இயல்பில்லை. தாவர வடிவுடைய திருவுருவங்களில் மந்திரம், கிரியை, பாவனை முதிலியவற்றைப் பிறர் செய்யும் செயலுக்கேற்ப விளங்கித் தோன்றுவானே யன்றி அவை இல்லாதவிடத்து விளங்கித் தோன்றமாட்டான். ஆதலால், திருவுருவங்கள் உடைய சிவாலயத்தைச் சிவபெருமானே என்று வழிபடுவது எவ்வாறு பொருந்தும் என்பது தடை.

விறகிடத்தில் தீ நீங்காது எப்போது மிருக்கும் என்றாலும், தீக்கடை கோலினால் கடைந்தபோது தீ விறகிலிருந்து வேறாய் விளங்கித் தோன்றும், கடையாதபோது தீ தோன்றுவதும் இல்லை, விளக்கமும் இல்லை. அவ்வாறு தோன்றாததை வைத்துக்கொண்டு விறகில் தீயில்லை என்று கூறமுடியாது. அதுபோல உயிர்களுக்கு இம்மையின்பம், வீடுபேற்றின்பம் ஆகியவற்றைக் கொடுப் பதற்காகக் காணப்பட்ட தாவரவடிவான திருவுருவங்களில் இறைவன் கலப்பினால் அவ்வடிவமே தானாயும், பொருளின் தன்மையினால் அவ்வடிவத்தின் வேறாயும் இருக்கும் இயல்புடையவன். இத்தகைய இரண்டு நிலைகளையும் அவ்வடிவத்தில் காண வேண்டும். அவ்வாறு காணாதவர்க்கு மந்திரம்

கிரியை முதலியவற்றைக் கொண்டு செய்யும் நிலையில் விளங்கித் தோன்றுவான். திருவுருவங்களில் இறைவன் திருவருள் இருப்பதை ஞானிகள் தாமே உணர்வர். திருவருள் இருப்பதாகக் கருதி வழிபாடு செய்வர். ஞானிகள் அல்லாதார்க்குத் திருவுருவில் இறையருள் இருப்பது தெரியாது. அவர்களுக்காகவே கிரியை, மந்திரம் முதலியவற்றால் எழுந்தருளச் செய்ய வேண்டும். உலகத்தாருக்குப் பயன்படுவதற்காக இறைவன் இவ்வாறு அருள் செய்கிறான்.

### பன்னிரண்டாம் நூற்பாவுக்கு ஒழிபு - எஞ்சியவை

மூன்று மலங்களைக் களைதல், சிவஞானிகளுடன் கூடுதல், சிவனடியாரோடு சேர்ந்திருத்தல், சிவலிங்கத்தைச் சிவமெனக் கண்டு வழிபடுதல் ஆகியவை சீவன்முத்தருக்கு இயல்பாக உள்ள இலக்கணமாகும். நரம்பு, நாடி, இறைச்சி, எலும்பு முதலிய தாதுக்களில் வேற்றுமை இல்லாமல் அதுவதுவாகவே இருந்து வருகிற உயிரானது அந்நரம்பு முதலியவற்றுக்கு வேறாகவும் இருக்கும். அதுபோல உயிர்க்குயிராக இருக்கும் இறைவன் உலகம் முழுவதும் தாமாயும் அவற்றின் வேறாயும் நிற்பன்.

சிவபெருமான் உயிர்ப் பொருள், உயிரல்லாத பொருள் ஆகிய அனைத்திலும் நிறைந்திருக்கிறான் என்பதனை உணரக் கூடியவருக்கு இருள் வெளிபோல் வேறாகவும், பொன்னும் ஆபரணம் போல் வேறின்னையும், குண குணிபோல் பேதாபேதம் உடைய நிலைமையும் உடையவர் அல்லர். அம்மூன்றற்கும் பொதுமையான நிலையில் கண்ணொளியும் ஆன்ம அறிவும் போல் அத்துவித நிலையில் கலந்திருப்பான். பசுவின் உடம்பெங்கும் காணப்படாத பால் கன்றை நினைத்தவுடன் காம்பின் வழியே விம்மி ஒழுகும். அதுபோல எப்போதும் வெளிப்பட்டு அருள்வதாகிய திருக்கோயில் உள்ளிருக்கும் அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கத்திற்குச் செய்யும் வழிபாடே சிறந்த ஞானத்தைத் தோற்றுவிக்கும்.

சிவனடியார்களை வழிபடுவதால் தீய எண்ணங்கள் நீங்கி மெய்யுணர்வு தோன்றும். நுகர்வினையின் பயன் அடியார்களுடன் சேர்ந்திருக்கும்போது அதிகத் தொல்லை தாராது. ஆதலால், சிவஞானிகளாகிய அடியார்களுடன் சேர்வதனாலும், அவர்களை வழிபடுவதனாலும் வினை நீங்கப் பெற்று ஞானத்தை அடையலாம்.

உயிராகிய தன்னுடைய இயல்பை இத்தகையது என்று உணர்த்தி உயிராகிய தன்னைச் சிவமாகும்படி செய்தவர் ஞான குரு

ஆவார். உயிர்க்குத் தீமை நீங்கி நன்மை பெருகி ஞானம் வளரக் காரணமாக இருந்த குருவை மறப்பது நன்றிமறப்பது ஆகும், பெரிய பாவம் ஆகும். சிவபெருமானே உயிராகிய தன்னைச் சிவமாகச் செய்தாலும், சிவபெருமானுக்கு என்றும் அடிமையாகிய உயிர் பெத்தம், முத்தி இரண்டிலும் அடிமையே. 'மீளா அடிமை உமக்கே ஆளாய்' என்று சுந்தரமூர்த்தி நாயனார் பாடியதையும் ஒப்பு நோக்க வேண்டும்

சிவபெருமான் உயிரைத் தானாகச் செய்தமையால் சிவன் என்ற தன்மை நீங்கிச் சிவம் என்று கூறப்படும் தன்மையைப் பெற்ற வேதாந்தத்தின் தெளிவாகிய சித்தாந்தத்தையுடைய மாணாக்கனே! சிவபெருமான் விஞ்ஞானகலர்க்கு அவருடைய அறிவில் நின்று உணர்த்துவான். பிரளயாகலர்க்கு நான்கு தோள் நீலகண்டம் முதலிய வடிவம் உடையவனாகத் தோன்றி அருள் புரிவான். அவ்விருவருக்கும் வேறான மும்மலம் உடைய சகலர்க்கு இந்த உலகத்தில் சிறந்த ஞான குருவால் சிவஞானபோதமாகிய இந்நூல் போதிக்கப்படும்.

மெய்கண்டார் திருவடிகள் வாழ்க!



## பின்னிணைப்பு

# சிவஞான போதம்

### சூத்திரங்கள் பதவுரையுடன்

### சிறப்புப் பாயிரம்

மலர்தலை யுலகின் மாயிருள் துமியப்
பலர்புகழ் ஞாயிறு படரின் அல்லதைக்
காண்டல் செல்லாக் கண்போல், ஈண்டிய
பெரும்பெயர்க் கடவுளிற் கண்டுகண் இருள் தீர்ந்து
அருந்துயர்க் குரம்பையின் ஆன்மா நாடி,
மயர்வுஅற நந்தி முனிகணத்து அளித்த
உயர்சிவ ஞான போதம் உரைத்தோன் -
பெண்ணைப் புனல்சூழ் வெண்ணைச் சுவேதவனன்
பொய்கண்டு அகன்ற மெய்கண்ட தேவன்
பவநனி வன்பகை கடந்த
தவர் அடி புனைந்த தலைமை யோனே.

**பதவுரை**

மலர் தலை உலகில் - விரிந்த இடத்தை உடைய உலகத்தில்
மாஇருள் துமிய - பெரிய புற இருள் அழியும்படி
பலர்புகழ் ஞாயிறு - பல சமயத்தாராலும் புகழப்படுகின்ற சூரியன்
படரின் அல்லதை - தோன்றினால் அல்லாமல்
காண்டல் செல்லா - காணும்தன்மை எய்தாத
கண்போல் - கண்ணொளியைப் போல,
அருந்துயர் - பொறுத்தற்கரிய துயரங்களைக் கொண்ட
குரம்பையின் - உடம்பினால்,
ஆன்மா - சீவான்மாவையும், பரமான்மாவையும்

நாடி. - கருதல் அளவையால் ஆராய்ந்து,

கண் இருள் - கருதி உணரப்படும் அகஇருள் ஆகிய ஆணவமலம்

தீர்ந்து - நீங்கி விடுபட்டு,

ஈண்டிய - எல்லா நூல்களும் தன் பொருளாகத் திரண்டு கூடிய

பெரும்பெயர் - மகாவாக்கியம் புகழ்கின்ற

கடவுளில் - முதற்கடவுளின் திருவருளால்

கண்டு - பொருள்களின் சிறப்பியல்புகளை உணர்ந்து,

மயர்வுஅற - மல மயக்கம் அழிய

நந்தி - திருநந்திதேவர்

முனிகணத்து - சனகர் சனந்தனர் சனாதனர் சனற்குமாரர் என்னும் முனிவர் கணங்களுக்கு

அளித்த - அறிவுறுத்தியருளிய

உயர்சிவஞானபோதம் - உயர்ந்த சிவஞானபோதம் என்னும் நூலை

உரைத்தோன் - இயற்றியருளியவர் -

பெண்ணைப் புனல்சூழ் - பெண்ணயாற்றின் நீராலே சூழப்பட்ட

வெண்ணை - திருவெண்ணெய் நல்லூரில் தோன்றியருளிய

சுவேதவனன் - சுவேதவனப்பெருமாள் என்னும் பிள்ளைத் திருப் பெயர் கொண்டவரும்;

பொய்கண்டு - பொய்ச் சமயங்களின் பொருள் இது என்று உணர்ந்து

அகன்ற - அவற்றை அகற்றிய

மெய்கண்ட தேவன் - மெய்கண்ட தேவர் என்னும் சிறப்புத் திருப் பெயர் கொண்டவரும்:

பவநனி வன்பகை - பிறவியாகிய மிக்க வலிய பகையினை,

கடந்த-வென்ற

தவர் அடி புனைந்த - சிறந்த தவமுனிவர்கள் தனது திருவடியைப் புனைந்துகொள்ளுவதற்கு ஏதுவாகிய

தலைமையோன் - தலைமைப்பாட்டை உடையவரும் ஆவர்.

*******

## மங்கல வாழ்த்து

கல் ஆல் நிழல்மலை
வில்லார் அருளிய
பொல்லார் இணைமலர்
நல்லார் புனைவரே

### பதவுரை

கல்ஆல் - கல் ஆலமரத்தின் நிழலில் அமர்ந்து

மலைவு இல்லார் - நந்தி தேவருக்கு ஐயப்பாடு இல்லையாகச் செய்தருளியவர் ஆகிய சிவபெருமான்,

அருளிய - அருள் செய்தற்பொருட்டு

பொல்லார் - பொல்லாப் பிள்ளையாருடைய

இணைமலர் - இரண்டு திருவடித் தாமரைகளை

நல்லார் - கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த மெய்யன்பர்

புனைவர் - தமது தலைமேல் சூடிக்கொண்டு வணங்குவர்.

✦✦✦✦✦✦✦

## முதற் சூத்திரம் : பதியுண்மை

அவன் அவள் அதுஎனும் அவை, மூ வினைமையில்
தோற்றிய திதியே; ஒடுங்கிமலத்து உளதாம்;
அந்தம் ஆதி என்மனார் புலவர்

### பதவுரை

அவன் அவள் அது எனும் - அவன் அவள் அது (ஆண் பெண் அலி) என்று சுட்டிக் கூறப்படுகின்ற

அவை - தொகுதியாகிய உலகம்

மூவினைமையில் - தோன்றுதல், இருத்தல், மறைதல் என்னும் மூன்று தொழில்களை உடைமையினால்,

தோற்றிய - ஒருவனால் தோற்றுவிக்கப்பட்ட

திதியே - உள்பொருளேயாகும்;

மலத்து (ஆல்) - (அவ்வுலகம்) கன்ம மலத்தினால்

ஒடுங்கி (யின்) - தான் ஒடுங்குதற்கு இடமாகிய கடவுள் இடத்தினின்று

உளதுஆம் - (ஆணவமலத்தினால்) மீண்டும் தோன்றுவது ஆகும்; (இங்ஙனம் ஆதலின்),

அந்தம் - அந்தம் ஆகிய அழித்தற்றொழிலைச் செய்யும் கடவுளே,

ஆதி - முதற்கடவுள்,

என்மனார் புலவர் - என்று கூறுவர் அளவைநூல் அறிவுடையோர்

\+\+\+\+\+\+\+

## இரண்டாம் சூத்திரம் : பாச உண்மை

அவையே தானே யாய், இரு வினையிற்
போக்கு வரவு புரிய, ஆணையின்
நீக்கம் இன்றி நிற்கும் அன்றே.

பதவுரை

அவையேயாய் - (முதல்வன்) உயிர்களோடு உயிரேயாய்க் கலப்பினால் ஒன்றாகியும்.

தானேயாய் - (பொருட்டன்மையால்) உயிர்களின்று தான் வேறேயாகியும்,

அவையே தானேயாய் - (உயிர்க்கு உயிராதற்றன்மையால்) அவ்வுயிர்களே தானேயாக உடனாகியும்,

ஆணையின் - தனது சிற்சித்தியால்,

இருவினையின் - நல்வினை தீவினை என்னும் இரண்டு வினைகளால்,

போக்கு வரவு புரிய - (உயிர்கள்) இறத்தல் பிறத்தல்களைப் புரியும்படி,

நீக்கம் இன்றி - (ஆணையாகிய சிற்சக்தியினின்று) பிரிப்பு இல்லாமல்,

அன்றே - தொன்று தொட்டே

நிற்கும் - (சமவேதம் ஆக) நிற்பன்.

\+\+\+\+\+\+\+

## மூன்றாம் சூத்திரம் : பசுவுண்மை

உளதுஇலது என்றலின், எனதுடல் என்றலின்,
ஐம்புலன் - ஒடுக்கம் அறிதலின், கண்படில்
உண்டிவினை யின்மையின், உணர்த்த உணர்தலின்,
மாயா இயந்திர தனுவினுள் ஆன்மா.

(இச்சூத்திரம் ஆன்மப் பிரகாசம் உணர்த்துதல் நுதலிற்று)

### பதவுரை

ஆன்மா-உயிரானது.

**(1)** இலது என்றலின் உளது - சூனிய ஆன்மாவாதி ஆன்மா என ஒன்று இல்லை என்பன், இல்லை என்று அறியும் அறிவு ஒன்று உண்டு அல்லவா? அதுவே ஆன்மாவாம். ஆதலின் இல்லை என்பதனாலேயே ஆன்மா உண்டு.

**(2)** எனது உடல் என்றலின் உளது - உலகத்தார் தம்மின் வேறாகிய பொருள்களை "என்பதி என்மனை" என்று கூறுவதுபோல், என் கை என் கால் என் உடம்பு என்றும் வேறாகவே கூறுவதால், தேகத்திற்கு வேறாக ஆன்மா ஒன்று உண்டு.

**(3)** ஐம்புலன் அறிதலின் உளது - ஐம்பொறிகள், ஐம்புலனாகிய சத்த, பரிச, ரூப, ரச, கந்தங்களை அறிவது உண்மையேனும், ஒவ்வொரு பொறியும் ஒவ்வொரு புலனையறிவது கூடுமே அன்றி, ஒரு பொறியே எல்லாவற்றையும் அறிவ தில்லை. இவ்வைம் பொறிகளைக் கொண்டு, புலன்களால் வரும் ஐந்து பயன்களையும் அறிகின்ற ஆன்மா, அவற்றைத் தனித்தனியே அறியும் ஐம்பொறிகளுக்கு வேறாக உள்ளது.

**(4)** ஒடுக்கம் அறிதலின் உளது - ஐம்பொறிகளும் ஒடுங்கி நின்றபோது நிகழும் கனவு நிலையில், நிகழ்ந்த காரியங்களை அறிகின்ற தொன்று உளதாதலின், கனவில் இயங்கும் சூக்கும தேகத்திற்கு வேறாக ஆன்மா ஒன்று உண்டு.

**(5)** கண்படில் உண்டிவினை யின்மையின் உளது - (உறக்கம் விழிப்பு என்னும் இரு நிலையிலும் பிராணவாயு ஒரு

தன்மையாக இயங்கிக்கொண்டு இருப்பினும்,) உறக்கத்தின்கண் இன்ப துன்ப நுகர்ச்சியும், தொழிற்பாடும் உடம்புக்கு இல்லாமையினால், (விழிப்புநிலையில் உண்டியும் வினையும் உண்மைக்கும், உறக்க நிலையில் அவை இன்மைக்கும் காரணமாகப் பிராண வாயுவின் வேறாக) ஆன்மா என்பது ஒன்று உண்டு.

(6) உணர்த்த உணர்தலின் உளது - கருவிகளோடு கூடிய விடத்தும், தன் தன்மை இது என்று உணராமல் உணர்த்த உணருகின்ற சிற்றறிவுடைய ஆன்மாவைப் போல், மறந்து மறந்து அறிதலில்லாமல், பிரமம் எனப்படும் முதல்வன் அறிந்தவாறே முழுவதும் அறிந்து நிற்கும் பேரறிவுடையவனாதலால், பேரறிவுடைய பிரமமாகிய முதல்வனுக்கு வேறாகச் சிற்றறிவே உடையதாய், உணர்த்த உணரும் தன்மையுடைய ஆன்மா தனியே உண்டு.

(7) மாய இயந்திர தனுவினுள் உளது - மாயையின் காரியங்களால் கட்டப்பட்டு, அசைகின்ற சூத்திரப் பாவைபோலும் உடம்பினிடத்தே அதனின்று வேறாகத் தனியே ஆன்மா என்பதொரு பொருள் உண்டு. (உடம்பில் உள்ள கருவிகளின் சேர்க்கையே ஆன்மா என்னும் கொள்கை தவறானதாகும். ஏனெனில், அக்கருவிகள் ஒன்றன் காரியங் களாய்த் தோற்றக் கேடுகளையுடைய அழியும் பொருள்களாகும்; ஆன்மாவோ என்றும் அழிவில்லாதது).

✦✦✦✦✦✦✦

## பொது அதிகாரம் : இலக்கண இயல்

## நான்காம் சூத்திரம் : பசு இலக்கணம்

அந்தக் கரணம் அவற்றின் ஒன்றன்று, அவை
சந்தித்தது; ஆன்மாச் சகசமலத்து உணராது;
அமைச்சரசு ஏய்ப்பநின்று அஞ்சவத் தைத்தே

### பதவுரை

ஆன்மா - உயிரானது

அந்தக்கரணம் அவற்றின் - மனம் புத்தி அகங்காரம் சித்தம் என்னும் நான்கு அகக்கருவிகளுள்.

ஒன்று அன்று - ஒன்று ஆகாது, (ஆயினும்),

சகச மலத்து - ஆணவ மலத்தினால்

உணராது - (தனக்கு) உணர்வு இல்லாமையினால்,

அமைச்சு அரசு ஏய்ப்ப - அமைச்சரோடு கூடிய அரசன்போல்,

அவை - அவ்வந்தக் கரணங்களோடு,

சந்தித்தது நின்று - கூடியதாக நிற்றலான்

அஞ்சு அவத்தைத்து - நனவு கனவு உறக்கம், பேருறக்கம் உயிர்ப் படக்கம் என்னும் ஐந்து அவத்தைகளையுடையதாகும்.

+++++++

## ஐந்தாம் சூத்திரம்
## (பாச இலக்கணம்)

விளம்பிய உள்ளத்து மெய்வாய் கண்மூக்கு
அளந்தறிந் தறியா; ஆங்கவை போலத்
தாம்தம் உணர்வின் தமிஅருள்;
காந்தம் கண்ட பசாசத் தவையே.

பதவுரை

விளம்பிய - முற்கூறிய

உள்ளத்து - உயிரால்

மெய், வாய், கண், மூக்கு - மெய், வாய், கண், மூக்கு (செவி) என்பன,

அளந்து அறிந்தும் - தத்தம் புலன்களை இது இன்னது என்று அளவிட்டு அறிந்தும்,

அறியா - அங்ஙனம் அறியும் தம்மையும், தம்மைச் செலுத்தும் உயிரையும் அறியமாட்டா.

ஆங்கு அவைபோல - அங்கே அந்த ஐம்பொறிகளைப் போல,

தாம் - உயிர்கள்,

தம் உணர்வின் தமி-தமது உணர்விற்கு முதல் ஆகிய இறைவனின்,

அருள் - திரோதான சத்தியால்,

அளந்து அறிந்தும் - தத்தம் வினைப் பயன்களை அறிந்து நுகர்ந்தும்,

அறியா - தம்மையும், தம்மைச் செலுத்தி நிற்கும் திருவருளையும் அறிய மாட்டா;

காந்தம் கண்ட பசாசத்தவை - காந்தத்தைக் கண்டு எதிர்ப்பட்ட இரும்புபோல, இறைவனின் முன்னிலையில் அவ்வுயிர்கள் தொழிற்படும்.

+++++++

## ஆறாம் சூத்திரம்
## (பதி இலக்கணம்)

உணர்உரு அசத்துஎனின், உணராது இன்மையின்,
இருதிறன் அல்லது சிவசத்து ஆம்என;
இரண்டு வகையின் இசைக்கும் மன்னுலகே

பதவுரை

உணர்உரு எனின் - (கடவுள் ஆகிய முதற்பொருள், நம் கருவி கரணங்களால்) உணரப்படும் பொருள் என்றால்,

அசத்து - அழிபொருள் ஆகிய அசத்து ஆகும்:

உணராது எனின் - (எல்லாவற்றினும்) உணரப்படாத பொருள் என்றால்,

இன்மையின் - (என்றும் எங்கும்) இல்லாத சூனியப் பொருள் ஆகிவிடும்; ஆதலின்,

இருதிறன் அல்லது - இவ்விரண்டு கூறுபாடும் அன்றி,

இரண்டு வகையின் - (பாச ஞான பசு ஞானங்களான்) ஒரு வகையில் அறியப்படாமையும், (சிவ ஞானம் ஒன்றானே) ஒரு வகையில் அறியப்படுதலும் ஆகிய இரண்டு வகைகளாலும்,

சிவசத்து ஆம் என - சித்துச்சத்து ஆகிய பொருள் ஆகும் என்று,

மன்உலகு - மெய்யுணர்வில் நிலைபெற்றுயர்ந்த பெரியவர்கள்,

இசைக்கும் - கூறுவார்கள்.

+++++++

## ஏழாம் சூத்திரம்

## ஆன்மாவின் சிறப்பிலக்கணம்
## (சாதகன் இயல்பு)

**யாவையும் சூனியம், சத்துஎதிர் ஆகலின்,**
**சத்தே யறியாது: அசத்து இலது அறியாது;**
**இருதிறன் அறிவுளது, இரண்டலா ஆன்மா.**

**பதவுரை**

சத்துஎதிர் - சத்தாகிய சிவத்தின்முன்,

யாவையும் - (அசத்தாகிய உலகப் பொருள்கள்) எல்லாம்,

சூனியம் - (விளங்கித் தோன்றாத) பாழேயாகும்;

ஆகலின் - ஆதலினால்,

சத்து அறியாது - சத்தாகிய சிவம் உலகத்தை அறிந்து அனுபவியாது;

அசத்து - அசத்தாகிய உலகப் பொருள்கள்,

இலது ஆகலின் - அறிவில்லாதவை ஆதலால்,

அறியா - சிவத்தை யறிந்து அனுபவிக்கமாட்டா,

இரண்டுஅலா ஆன்மா - சத்தும் அசத்தும் ஆகிய இரண்டும் அல்லாமல் 'சதசத்து' என உள்ள உயிரானது.

இருதிறன் - சத்தாகிய சிவம், அசத்தாகிய உலகம் ஆகிய இரண்டையும்,

அறிவு உளது - அறியுந்தன்மை உடையது.

✦✦✦✦✦✦✦

## எட்டாம் சூத்திரம்
## (ஞானத்தினை உணரும் முறை)

**ஐம்புல வேடரின் அயர்ந்தனை வளர்ந்தெனத்,**
**தம்முதல் குருவுமாய்த் தவத்தினில் உணர்த்த, விட்டு**
**அன்னியம் இன்மையின், அரன்கழல் செலுமே!**

**பதவுரை**

தம்முதல் - (உயிரானது, தனக்குள் நின்று இதுவரையும் அறிவித்து வந்த) பரம்பொருள்.

தவத்தினில் - (தான் முன்னே செய்துவைத்த) புண்ணியத்தின் மிகுதியினால்,

குருவுமாய் - குருவடிவாகவும் எழுந்தருளி வந்து (சிவதீக்கை செய்து),

ஐம்புல வேடரின் வளர்ந்து - (அரசகுமாரன் ஆகிய நீ), ஐம்பொறிகள் ஆகிய வேடர்களுடன் சேர்ந்து பழகி வளர்ந்ததனால்,

அயர்ந்தனை - (அரசனின் மகன் என்னும் நின் பெருந்தகைமையை அறியாமல்) மயங்கித் துன்புற்றாய்,

என உணர்த்த - என்று அறிவிக்க (அவ்வளவிலேயே) ஐம்பொறிகள் ஆகிய

வேடர்களை விட்டு - விட்டு நீங்கி,

அன்னியம் இன்மையின் - முதல்வனுக்கு வேறாகிய பொருளாக இல்லாமையினால் (பிரிப்பின்றி நிற்கும் தன்மையில் நிலைபெற்று),

அரன்கழல் செலும் - அம்முதல்வனது திருவடிகளை அணைத்து நிற்கும்.

+++++++

## ஒன்பதாம் சூத்திரம்
## ஆன்மசுத்தி (சாதிக்கும் முறைமை)

ஊனக்கண் பாசம் உணராப் பதியை
ஞானக் கண்ணினிற் சிந்தை நாடி;
உராத்துனைத் தேர்த்தெனப் பாசம் ஒருவத்
தண்நிழல்ஆம் பதி:விதி எண்ணும் அஞ்செழுத்தே

பதவுரை

ஊனக்கண் - குறைந்த அறிவாகிய பசு அறிவினாலும்,

பாசம் - பாச அறிவினாலும்,

உணராப் பதியை - உணரப்படாத முதல்வனை

ஞானக்கண்ணினில் - அவனது திருவடி ஞானம் என்னும் அறிவினால்,

சிந்தை - உன் உள்ளத்தினிடத்தே,

நாடி - ஆராய்ந்து அறிவாயாக,

உராத்துனைத் தேர்த்துஎன - பரந்து திரிதற்கண்மிக்க வேகம் உடைய பேய்த்தேர் என்னும் கானல்நீர் போன்று, விரைந்து கழியும் இயல்பிற்று என்று அறிந்து,

பாசம் - நிலம் முதல் நாதம் முடிவாகச் சொல்லப் பெறும். பாசக்கூட்டத்தை,

ஒருவ - நீங்குதலால்,

பதி - பதிஞானமானது,

தண்நிழல்ஆம் - (பிறவித் துன்பமாகிய வெப்பத்துக்குக்) குளிர்ந்த நிழலாய் வெளிப்பட்டு விளங்கும். (அப்பதிஞானக்காட்சி இடையறாது நிகழ்ந்து வருதற் பொருட்டு),

அஞ்செழுத்து - திருவைந்தெழுந்து மந்திரமானது.

விதி எண்ணும் - விதிப்படி அறிந்து கணிக்கப்படும்,

+++++++

## பயனியல்

## பத்தாம் சூத்திரம்

### (பாசநீக்கம் பண்ணுமாறு உணர்த்துதல் நுதலிற்று)

மேலே சாதன இயலில் ஏழாம் சூத்திரத்தால் சாதிக்கும் பொருள் ஆகிய சாதகனின் இயல்பும், எட்டாம் சூத்திரத்தால் சாதித்துப் பெறப்படும் பொருள் ஆகிய ஞானத்தை உணரும் முறைமையின் இயல்பும், ஒன்பதாம் சூத்திரத்தால் சாதிக்குமாறு ஆகிய ஆன்ம சுத்தியின் இயல்பும் உணர்த்தினார். இனி அச்சாதனத்தால் ஆகிய பயன் இயல்பு வகுத்துக் கூறுவான் எடுத்துக்கொண்டார்.

அப்பயனாவது பாசநீக்கம், சிவப்பேறு என இருவகைப்படும். அவ்விரண்டனுள், பாசநீக்கம் என்பது, இப்பத்தாம் சூத்திரத்தால் விளக்கப் பெறுகின்றது.

அவனே தானே ஆகிய அந்நெறி,
ஏகன் ஆகி இறைபணி நிற்க,
மலமாயை தன்னொடு வல்வினை இன்றே

பதவுரை

அவன் - (ஞானக்கண்ணில் சிந்தை நாடப்பெற்ற) அவ்விறைவன், (பொருட்டன்மையால் வேறேயாயினும், வேறு காணப் படாமல் யானே கண்டேன் என்னும்படி)

தானே ஆகிய - உயிரே ஆகி நின்ற

அந்நெறி - அந்தப் பெத்தநிலை போல,

ஏகன் ஆகி - (உயிரானது தான் என வேறு காணப்படாமல், அவ்இறைவனேயாகும்படி) ஒற்றுமைப்பட்டு அடங்கி,

இறைபணி நிற்க - இறைவனுக்குரிய தொண்டுகளைச் செய்து, அவற்றில் வழுவாது ஒழுகின்,

மலம் மாயை தன்னொடு - (பாசங்கள் நீங்கிய நிலையிலும், வாசனையாக வந்து தாக்குகின்ற) ஆணவம் மாயை ஆகியவற்றுடன்,

வல்வினை - வலிய கன்ம மலமும்,

இன்று - இல்லையாகிப் பற்றறக் கழியும்.

+++++++

## பதினொன்றாம் சூத்திரம்
## சிவப்பேறு

காணும் கண்ணுக்குக் காட்டும் உளம்போற்,
காண உள்ளத்தைக் கண்டு காட்டலின்,
அயரா அன்பின் அரன்கழல் செலுமே

பதவுரை

காணும் கண்ணுக்கு - உயிர்காட்டக் காண்பதாகிய கண்ணுக்கு,

காணக் காட்டி - (பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று) உருவத்தைக் காணும்படி காட்டி,

காணும் உளம் போல் - தான் காண்கின்ற உயிரைப் போல,

(காணும்) உள்ளத்தை - அறிவிக்க அறிவதாகிய உயிருக்கு,

காணக் காட்டி - (பிரிப்பின்றி உடங்கியைந்து நின்று) நுகர் பொருள்களை அறிவித்து,

அரன் காண்டலின் - முதல்வன் தான் அறிந்து வருவதனால்,

அயரா அன்பின் - (அவ்வாறு முதல்வன் செய்து வரும் பேருதவியினை) மறவாது கடைப்பிடித்துச் செய்யும் அன்பினால்,

அரன்கழல் செலும் - (உயிர்கள்) அம் முதல்வனின் திருவடியாகிய சிவானந்த அனுபூதியைத் தலைப்படும்.

+++++++

## பன்னிரண்டாம் சூத்திரம்
## (அணைந்தோர் தன்மை)

'செம்மலர் நோன்தாள் சேரல் ஒட்டா
அம்மலம் கழீஇ, அன்பரொடு மரீஇ,
மால் அறநேயம் மலிந்தவர் வேடமும்,
ஆலயம் தானும், அரன் எனத் தொழுமே,

"அசிந்திதனாய் நின்ற பதியைச் சிந்திதனாகக் கண்டு வழிபடு மாறு உணர்த்துதல் நுதலிற்று,"

**பதவுரை**

செம்மலர் - சிவந்த தாமரை மலர் போன்ற,
நோன்தாள் - (அன்பரைத்) தாங்குகின்ற திருவடிகளை,
சேரல் ஒட்டா - சேரவிடாமல் தடுக்கின்ற,
அ - அத்தகைய (கொடிய) இயல்பினையுடைய,
மலம் - (ஆணவம் மாயை கன்மம் என்னும்) மலங்களின் அழுக்கினை,
கழீஇ - ஞான நீரால் கழுவி,
அன்பரொடு - மெய்ஞ்ஞானிகள் ஆகிய அடியார்களுடன்,
மரீஇ - கலந்து கூடி,
மால்அற - (மலங்களின்) மயக்கம் நீங்க,
நேயம் மலிந்தவர் வேடமும் - அன்புமிக்கவர்கள் ஆகிய அடியார்களின் சிவ வேடத்தையும்,
ஆலயம் தானும் - சிவாலயத்தையும்,
அரன்என - முதல்வன் என்றே கண்டு,
தொழும் - (சீவன் முத்தன்) வழிபாடுவான்.

பதவுரை : அறிஞர் ந. ரா. முருகவேள்

✦✦✦✦✦✦✦

நாற்ப தடியால் இருநூற்றுப்
பதினா றெளிய நற்சொல்லால்
ஏற்ற அறுநூற் றிருபான் நான்கு
எழுத்தால், சமயக் கொள்கையெலாம்
தேற்றித் தெருட்டும் சிவஞான
போதச் செழுநூல்போல், எங்கும்
வேற்றோர் நூல்இன் றெனவுரைப்பின்
மிக்க அதன்சீர் விளம்புவர் யார்?

- ந. ரா. முருகவேள்



**காரிய அவத்தையில் செயல்படும் கருவிகள் :**

1. நனவு (சாக்கிரம்). உயிர் புருவ நடுவில் இருந்து செயல்படும்.

(1) அறிகருவி (ஞானேந்திரியங்கள்) :
மெய், வாய், கண், மூக்கு, செவி - 5

(2) தொழிற்கருவி (கன்மேந்திரியங்கள்) :
வாக்கு, கை, கால், எருவாய், கருவாய் - 5

(3) புலன்கள் (தன்மாத்திரைகள்) :
சுவை, ஒளி, ஊறு, ஓசை, நாற்றம் - 5

(4) தொழிற்கருவிகளின் செயல்கள் :
பேச்சு (வசனம்), நடத்தல் (கமனம்),
கைகளின் செயல்பாடு (தானம்),
மலங்கழித்தல் (விசர்க்கம்)
கருவிடுதல் (ஆனந்தம்) - 5

(5) காற்று (தச வாயு) :
1. உயிர்க்காற்று (பிராண வாயு),
2. மலக்காற்று (அபான வாயு),
3. தொழிற்காற்று (வியானன்),
4. ஒலிக்காற்று (உதானன்),
5. நிரவுக்காற்று (சமானன்),
6. தும்மற்காற்று (நாகன்),
7. விழிக்காற்று (கூர்மன்),
8. கொட்டாவிக்காற்று (கிருகரன்),
9. இமைக்காற்று (தேவதத்தன்),
10. வீங்கற்காற்று (தனஞ்சயன்) - 10

6. அகக்கருவி :
மனம், புத்தி, சித்தம், அகங்காரம் - 4

7. புருடன் - 1

நனவின்கண் 35 கருவிகள் செயல்படும் 35

2. கனவு (சொப்பனம்). உயிர் கழுத்தில் செயல்படும்.
புலன்கள் 5, தொழிற்கருவிகளின்
செயல்கள் 5, அகக்கருவி 4, காற்று 10,
புருடன் 1 ஆக 25 கருவிகள் செயல்படும்.

3. உறக்கம் (சுழுத்தி). நெஞ்சினிடத்தில் செயல்படும்.
உயிர்க்காற்று, சித்தம், புருடன் ஆக 3 கருவிகள் செயல்படும்.

4. பேருறக்கம் (துரியம்). உந்தியில் - கொப்பூழ் இடத்தில் செயல்படும்.
உயிர்க்காற்று, புருடன் ஆக 2 கருவிகள் செயல்படும்.

5. உயிர்ப்படங்கல் (துரியாதீதம்). உடம்பின் மூலத்தானத்தில் செயல்படும். புருடன்மட்டும் செயல்படும்.

**தத்துவங்கள் 36**

| | | |
|---|---|---|
| 1. சிவதத்துவங்கள் | | |
| 1. சிவம், 2. சத்தி, 3. சதாசிவம், 4. ஈசுரம், 5. சுத்தவித்தை | - | 5 |
| 2. வித்தியா தத்துவங்கள் | | |
| 1. காலம், 2. நியதி, 3. கலை, 4. வித்தை, 5. அராகம், 6. புருடன், 7. மாயை | - | 7 |
| 3. ஆன்ம தத்துவங்கள் | | |
| 1. சித்தம், 2. புத்தி, 3. அகங்காரம், 4. மனம் | - | 4 |
| அறி கருவிகள் (ஞானேந்திரியங்கள்) | - | 5 |
| புலன்கள் (தன்மாத்திரைகள்) | - | 5 |
| தொழிற்கருவிகள் (கன்மேந்திரியங்கள்) | - | 5 |
| பூதங்கள் | - | 5 |
| ஆக | - | 36 |



# தாயுமானவர்

## பொருளடக்கம்

# தாயுமானவர்

## 1. வரலாறு

காலம்தோறும் தமிழகத்தில் வாழையடி வாழையாகச் சான்றோர் பலர் தோன்றித் தங்கள் அருள் வளத்தால் மக்களுக்கு நல்வழி காட்டியுள்ளனர். அவர்களுள் சமயத்துறையில் மிகுந்த ஈடுபாடு கொண்டு எளிய, உணர்ச்சி மிகுந்த பாடல்களால் தமிழ்மக்களின் உள்ளத்தைக் கவர்ந்தவர் தாயுமானார். பதினெட்டாம் நூற்றாண்டில் வேதாரணியம் என்று வழங்கப்பெறும் திருமறைக்காட்டில் தோன்றியவர் தாயுமானார். தந்தையார் பெயர் கேடிலியப்ப பிள்ளை. தாயார் பெயர் கஜவல்லி அம்மையார். கல்விச் சிறப்பும் குடிப்பெருமையும் பெற்ற கேடிலியப்ப பிள்ளை தம்முடைய ஊரில் மிகுந்த செல்வாக்குடனும் புகழுடனும் விளங்கியவர். அவ்வூரிலுள்ள கோயில் நிருவாகத்தையும் திறம்படச் செய்துவந்தவர்.

திருச்சி ஆண்ட விஜயரங்க சொக்கநாதர் இவர்தம் பெருமையையும் ஒழுக்கத்தையும் கேள்வியுற்றுத் திருச்சிராப்பள்ளியில் தமது அரசில் தகுந்த நிர்வாகப் பதவியையும் தந்து பெருமைப்படுத்தினார். பெருங்கணக்கர் (சம்பிரதி) என்னும் அரசுப்பணியில் தம் கடமைய்யையும் அவர் செவ்வனே ஆற்றினார். தாயுமானார் இளமையிலேயே அறிவுத்திறம் வாய்க்கப்பெற்றவராக விளங்கினார். திருச்சிராப்பள்ளியில் சிற்றம்பல தேசிகரிடம் கல்வி பயின்றார். இளமையிலேயே கலை பல கற்றார். தமிழிலும் வடமொழியிலும் மிகுந்த புலமை பெற்றார்.

தந்தைக்குப் பின்னர் இவர் அரசுப் பணியை ஏற்க வேண்டியிருந்தாலும் இவருடைய உள்ளம் முழுவதும் இறைச் சிந்தனையிலேயே மூழ்கிக் கிடந்தது. எந்நாளும் இறையையே நினைந்த இவர், தகுந்த ஞான குருவைத் தேடிக்கொண் டிருந்தார். திருமூலர் மரபில் வந்த மௌனகுரு தேசிகரைக் கண்டார். அவருக்கு ஆட்பட்டார். அவருடைய சீடராகி மெய்யறிவு பெற்றார். யோக நிலையும் பெற்று ஞானியாக உயர்ந்தார். தம் குருவைப் பிரியும் நிலையில் துன்பமுற்று அவரை நினைந்து வருந்த, குரு அவருக்குச் 'சும்மா இரு' என்னும் உபதேச மொழியை அருளினார்.

'எனக்கு ஐய நீ சொன்ன ஒரு வார்த்தையினை மலைஇலக்கு என நம்பினேன்' என்று மௌனகுரு வணக்கத்தில் சுட்டுவது எண்ணத்தக்கது. 'சிந்தையறச் சும்மா இரு' என்னும் சொல் தாயுமானாருக்குப் பக்குவ நெறியைத் தந்தது. 'ஆண்ட குரு மௌனிதன்னால் யான் எனது அற்று அவனருள் நான் ஆவேன்' என்றும் கூறுவார். 'மந்திர குருவே, யோக தந்திர குருவே, மூலன் மரபில் வரும் மௌன குருவே' என்று தம் குருவைப் போற்றுவார்.

'தட்சிணாமூர்த்தி வாழ்க; வாழ அருளிய நந்திமரபு வாழ்க; என்னுடைய குருநாதன் மௌன குரு வாழ்க' என்று தம்முடைய குருவை வாழ்த்துவார்.

அரசுப் பணியை விட்டுத் தம் சீடருடன் இராமநாதபுரம் வந்து சேர்ந்தார். மண வாழ்வில் விருப்பம் இல்லையேனும் தம் தமையனார் விருப்பப்படி மட்டுவார் குழலி என்னும் மங்கையை மணந்து, இல்லற வாழ்வில் ஈடுபட்டார். மனைவி மறைந்த பின்னர்த் துறவறத்தை மேற்கொண்டார். இவருக்குக் கனகசபாபதி என்னும் மகனும் உண்டு. பின்னர் திருச்சிராப்பள்ளிக்கு வந்து மௌனகுரு மடத்தைச் சார்ந்திருந்தார். குருவிற்குப் பின் மடத்தின் தலைவராக அமைந்து இறைவனுக்குத் தொண்டாற்றினார். தமிழ்நாடு முழுவதும் ஞானநெறியைத் தாயுமானார் பரப்பினார். இறுதியில் இராமநாதபுரத்தில் இறைநிலை அடைந்தார். இவருடைய மறைவின் காலம் குறித்து உறுதியாகச் சொல்ல இயலவில்லை. சிலர் கி.பி. 1662ஆம் ஆண்டு தைத் திங்கள் 28ஆம் நாள் என்றும், சிலர் 1783ஆம் ஆண்டில் இறைநிலையுற்றார் என்றும் கூறுகின்றனர். விஜயரங்க சொக்கநாதர் திருச்சிராப்பள்ளியை ஆண்ட காலம் கி.பி. 1704 முதல் 1731 வரை என்று கூறுவர்.

தாயுமானார் பாடல்கள் சைவ சமயத்தின் அடிப்படையில் அமையினும் சமரச நோக்கு உள்ளவையாக விளங்குகின்றன. வேதாந்த சித்தாந்தக் கருத்துகளும் இவர்தம் பாடல்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன.

'அங்கிங்கெனாதபடி' என்று தொடங்கும் பாடல் இவருடைய பாடல் சமரச உணர்விற்கு எடுத்துக்காட்டாக அமைவதாகும். தாயுமானார் காலத்தில் நிலவிய சமயப்பூசல்கள், மத ஒருமையின்மை ஆகியனவற்றை நினைந்து இவர் வருந்தியிருக்கக் கூடும். மக்கள் ஒற்றுமையின்றி இருப்பதை நினைத்து வருந்தி, 'கடவுள் ஒன்று; மதங்கள், தத்துவங்கள் அனைத்தும் ஒன்றே' என்பதை உணர்த்த விரும்பினார். மக்கள் ஒருமையுணர்வோடும் சமயப் பொதுமையோடும் வாழ வேண்டும் என நினைந்தார். தாயுமானார் பாடல் தொகுப்பில் அமைந்த முதல் பாடலே அவர்தம் சமரச நெறியைக் காட்டும்.

அங்கு இங்கு என்று கூறாதபடி எல்லா இடத்திலும் நிறைந்திருப்பது எது? அருளோடு விளங்குவது எது? உயிர்க்கு உயிராய்த் தழைப்பது எது? என்றைக்கும் உள்ளது எது? எல்லையற்று இருப்பது எது? யாவர்க்கும் இசைந்தது எது?- என்று எல்லோருக்கும் விளங்குமாறு வினவி, அது மோன உருவெளியான இறை; அதனை அஞ்சலி செய்வோம் எனப் பொதுமை நெறியில் நின்று ஞான விடை கூறி உணர்த்துவர்.

'அங்கு இங்கு எனாதபடி எங்கும் ப்ரகாசமாய்
    ஆனந்தபூர்த்தி ஆகி
அருளொடு நிறைந்தது எது? தன் அருள் வெளிக்குளே
    அகிலாண்ட கோடி எல்லாம்
தங்கும்படிக்கு இச்சைவைத்து, உயிர்க்கு உயிராய்த்
    தழைத்தது எது? மனவாக்கினிலே
தட்டாமல் நின்றது எது? சமயகோடிகள் எல்லாம்
    தம் தெய்வம் எம் தெய்வம் என்று
எங்கும் தொடர்ந்து எதிர்வழக்கு இடவும் நின்றது எது?
    எங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்ல ஒருசித்து ஆகி, இன்பமாய்
    என்றைக்கும் உள்ளது எது? மேல்

கங்குல்பகல் அறநின்ற எல்லை உளது எது?
கருத்திற்கு இசைந்தது அதுவே
கண்டன எல்லாம் மோன உருவெளியது ஆகவும்
கருதி அஞ்சலி செய்குவாம்'

(திருவருள்விலாசப் பரசிவ வணக்கம்)

தாயுமானார் இப்பாடல்வழி இறைப் பொதுத் தத்துவத்தையும் திருவருள் நிறைந்த இறைநிலையின் பேராற்றலையும் புலப்படுத்துவார். மக்கள் இறைநிலை ஒன்றையே வணங்கும் நுட்பத்தையும் சமரசநெறி நின்று வெளிப்படுத்துவார். இறையின் ஆற்றல் எது? பண்பு எது? இறை எது! - என மாந்தரிடை வினா எழுப்பி, 'இறை ஒன்றுதான் அது மோன உருவெளியது' எனப் பொதுப்பட அரிய தத்துவத்தை உணர்த்துவார். 'பார்க்குமிடமெங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற பரிபூரண ஆனந்தம்' என்பார். 'அண்ட பகிரண்டமும் அடங்க ஒருநிறைவாகி நிறைகின்ற பொருள்' என இறைக்கு வரையறை செய்வார். 'எங்கும் நிறைகின்ற பொருள்' என உலகிற்கு உணர்த்துவார். இறையை வாக்காலும் மனத்தாலும் எண்ணிக் கூற முடியுமா? 'வாக்கும் மனமும் அணுகாத பூரணப் பொருள்' என்பார். தாயுமானாரின் சிந்தனைகள் அனைத்து மக்களும் புரிந்துகொள்ளுமாறு அமைந்த ஞான நெறியாகும். சமய நெறியைத் தாயுமானார் சமரசநெறியாக்கிய சான்றோர் ஆவர்.

சுந்தரரின் வாழ்வியல் குறிப்புகளையும் அவர் அருளிய பாடற் குறிப்புகளையும் தம் படைப்பில் பொன்னே போல் பதிந்து வைத்துத் தம் ஏக்கத்தைப் புலப்படுத்துவார்.

'என்னுடைய தோழனுமாய்' என்ற திருப்பாட்டின்
நன்னெறியைக் கண்டு உரிமை நாம் செய்வது எந்நாளோ

எனவும்,

'தான் என்னை முன் படைத்தான்' என்ற தகவுரையை
நான் என்னா உண்மைபெற்று நாம் உணர்வது எந்நாளோ

எனவும் சுந்தரர்தம் பாடல் வரிகளையே குறிப்பிட்டு உருகுகின்றார் தாயுமானார்.

சுந்தரர் இறைவனின் 'தம்பிரான் தோழராக' விளங்கியவர். வன்றொண்டர் எனவும் புகழப்படுபவர். இறைவனையே

தூதுவிட்ட தோழமை உணர்வுடையவர். தாயுமானார் இந்நிகழ்வுகளைப் பின்வருமாறு குறிப்பார்.

' பித்தர் இறை என்றறிந்து பேதைபால் தூதனுப்பு
வித்த தமிழ்ச் சமர்த்தர் மெய்புகழ்வது எந்நாளோ'

என்று சுந்தரரைத் 'தமிழ்ச் சமர்த்தர்' எனப் புகழாரம் சூட்டி மகிழ்வார்.

இறைவன் சுந்தரருக்காகத் தூது சென்றது சுந்தரரின் தமிழால் தான் என்று சுந்தரத் தமிழைப் போற்றுகின்றார். பழமையான செந்தமிழின் அருமையை உணர்ந்து திருவாரூரில் பரவை நாச்சியாரின் வாயில்வரை தம் திருப்பாதத்தால் நடந்து சென்று எம்பெருமானின் அடி இது முடி இது எனத் தெளிவு காட்டினார் எம்பெருமான். எம்பெருமான் இவ்வாறு நடந்து செல்லுமாறு செய்த சுந்தரரைத் 'தமிழ்ச் சமர்த்தர்' எனப் போற்றியுரைப்பது எண்ணி எண்ணி இன்புறத்தக்கது.

' அடிஇட்ட செந்தமிழின் அருமை இட்டு ஆரூரில்
அரிவை ஓர் பரவை வாயில்
அம்மட்டும் அடிஇட்டு நடைநடந்து அருள் அடிகள்
அடிஈது முடிஈது என
வடி இட்ட மறைபேசு பச்சிளங்கிள்ளையே'

என மலைவளர் காதலிப்பெண் உமையைப் போற்றுவார்.

### மணிவாசகர்

மணிவாசகரின் மாண்பைப் போற்றியுரைக்கும் தாயுமானார் 'புத்தர்தமை வாதில் வென்ற வாதவூர் ஐயன்' எனப் புகழ்மாலை சூட்டுவார்.

' போதவூர் நாடு அறியப் புத்தர்தமை வாதில்வென்ற
வாதவூர் ஐயன் அன்பை வாஞ்சிப்பது எந்நாளோ'

என ஏங்குகின்றார்.

திருவாதவூரினின்றும் போந்த மணிவாசகரை மிகுந்த கருணையினால் இறைவன் தன்னோடு இரண்டறக் கலந்து கொள்ளுமாறு இனிய இன்பப் பேற்றினை நல்கினன். அவ்விறைவனின் திருவடிப் பேற்றினைக் காணும் நாள் எந்நாளோ என்பார்.

' வாதவூராளி தனை வான்கருணையினால் விழுங்கும்
போதவூர் ஏறேநின் பொன்னடியும் காண்பேனோ?'

'சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒன்றாகி நின்றுவிடும்' என்று மணிவாசகப் பெருமான் சொல்லிய வழியில் யான் நிற்கும் நாள் எந்நாளோ! என ஏக்கமுறுவார்.

' ஆதி அந்தமில்லா அரிய பரஞ் சோதி என்ற
நீதிமொழி கண்டு அதுவாய் நிற்குநாள் எந்நாளோ'

என்று மணிவாசகரின் அருள்மொழியான திருவெம்பாவையை ஓதி உணர்ந்த நெறியைச் சுட்டுவார்.

தாயுமானார் தமக்குமுன் இருந்த அருளாளர்களையும் சான்றோர்களையும் நினைந்து நினைந்து உருகி, அவர்கள் வழிச் சென்று அவர்கள் அடைந்த பேரின்பத்தை அடையும் நாளை நினைந்து நினைந்து ஏங்குவார்.

தில்லையில் வாழ்ந்த ஞான வடிவினரான கொற்றங்குடி மறைஞான தேசிகரை வணங்கித் துதிக்க வேண்டும் என்பார்

' சிற்றம்பலம் எனும் சின்மயர்ஆம் தில்லைநகர்க்
கொற்றங்குடி முதலைக் கூறுநாள் எந்நாளோ'

என்று கூறுவார்.

மெய்கண்ட பரம்பரையில் வந்த திருக்கோலங்களுக்கு அன்பு வைப்பது எந்நாள் என்று வினவுவார். வைதிக நெறியான சைவ நெறியில் நின்றொழுகிய மௌனகுரு உணர்த்திய உண்மைப் பொருளை நன்கு விளங்கிக்கொண்டால் அந்த நாள் எனக்கு விடிவு நாள் என்றுரைப்பார்.

பட்டினத்தாரையும் பத்திரகிரியாரையும் போற்றி வணங்கி, அவர்களுடைய பண்பு நலன்களையும் அறியும் நாள் எந்நாளோ என்பார்.

' ஓட்டுடன் பற்றுஇன்றி உலகைத் துறந்த செல்வப்
பட்டினத்தார் பத்திரகிரி பண்பு உணர்வது எந்நாளோ'

என்று கூறுவது எந்நாள் கண்ணியாகும்.

' கண்டதுபொய் என்று அகண்டாகார சிவம் மெய் எனவே
விண்ட சிவவாக்கியர்,

சக்கரவர்த்தி தவராஜ யோகி எனும் மிக்க திருமூலன்,

கந்தர் அநுபூதி பெற்றுக் கந்தர்அநுபூதி சொன்ன
எந்தை அருணகிரிநாதர்

எண்ணரிய சித்தர்'

என்று தமக்குமுன் வாழ்ந்த பேரருளாளர்களின் அருள் திறத்தை உணர்ந்தவர் தாயுமானார். அவர்களுடைய பாடல்களிலும் வழிபாட்டு நெறிகளிலும் அவர்தம் சிந்தனைகளிலும் தோய்ந்து தோய்ந்து அவர்கள்வழி ஒழுகினால் பேரருளின்பம் கிட்டும் என்பதை உணர்ந்தவர் தாயுமானார். மெய்ஞ்ஞான மெய்விளக்கின் பின்னே போய் மெய்ப்பொருளை உணர்ந்தவர் தாயுமானார். 'அறிவை அறிவதுவே ஆகும் பொருள்' என்று உறுதி சொன்ன அருணகிரிநாதரின் உண்மைப் பொருளை உணர்ந்தவர் தாயுமானார்.

தாயுமானார் தமக்கு முன்னிருந்த அருளாளர்களின் படைப்புகளில் மனந்தோய்ந்தவர். முன்னையோர் போற்றிய அருள் நிறைந்த பாடல்களையும் பாடற் குறிப்புகளையும் தம்முடைய பாடல்களில் சுட்டிச் செல்வது நினைந்து இன்புறத்தக்கது.

' மொழிக்கு மொழி தித்திப்பாக
மூவர் சொலும் தமிழ்கேட்கும் திருச் செவிக்கே
மூடனேன் புலம்பிய சொல் முற்றுமோதான்'

என்று மூவர் மொழிக்கு ஈடாகத் தம் பாடல் விளங்குமோ என்பார்.

திருஞான சம்பந்தரோடு கலந்து இன்பமுறும் நாள் எந்நாளோ என வினவுவார்.

' வெம்பந்தம் தீர்ந்து உலகாள் வேந்தன் திருஞான
சம்பந்தனை அருளால் சாருநாள் எந்நாளோ?'

என்று ஞானசம்பந்தரை உலகாள் வேந்தன் எனக் குறிப்பார்.

திருநாவுக்கரசரின் திருப்பாடல்களில் தாயுமானார் மனம் தோய்ந்தவர் என்பதைப் பின்வரும் குறிப்புகள் தெளிவாக்கும். உழவாரப் பணியை முதன்மைப் பணியாகக் கொண்ட திருநாவுக்கரசரைப் பின்வருமாறு நினைவுகூர்வார் :

' ஏரின் சிவபோகம் இங்கு இவற்கே என்னஉழ
வாரம் கொள் செங்கையர்தாள் வாரம் வைப்பது எந்நாளோ?'

அவ்வாறே நாவுக்கரசரின் பாடலடியைச் சுட்டி அந்தப் பாட்டின் பொருளுணர்ந்து பேரின்பம் காண்பதும் பேச்சற்று நிற்பதும் எந்நாளோ என ஏங்குவார்.

'இருநிலனாய்த் தீயாகி' என்ற திருப்பாட்டின்
பெருநிலையைக் கண்டு அணைந்து பேச்சு அறுவது எந்நாளோ

என்று அப்பரின் அமுதமொழிகளை நினைந்து இன்புறுவார்.

' அற்றவர்கட்கு அற்ற சிவம்ஆம் என்ற அத்வைத
முற்றுமொழி கண்டு அருளில் மூழ்குநாள் எந்நாளோ'

என அத்வைதக் கருத்திலும் மனம் பறிகொடுத்து நிற்பார் தாயுமானார்.



*தாயுமான்வர் கோவில் உள்ள*
*திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை*



# 2. மனம்

தாயுமானார் பெரிதும் வேண்டுவது மனஒருமைதான். 'சித்தம் அறியாதபடி சித்தத்தில் நின்று இலகும்' இறைநிலையை விரும்புவார். 'பாதரசமாய் மனது சஞ்சலப்படும் அலால் பரமசுக நிஷ்டைபெறுமோ?' என உருகுவார். 'பாழான என் மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவது உனக்கு அருமையோ?' என்று வினவுவார். எனக்கு 'மனதற்றபரிசுத்த நிலையை அருளுவாய்' என வேண்டுவார். தாயுமானவரின் பாடல்களில் 'மனதற்ற நிலை வேண்டும்' என்ற அவர்தம் விழைவை இன்னும் பல இடங்களில் காணலாம். அருணகிரிநாதருக்கு இறைவன் அருளிய நிட்டைகளுள் 'சும்மா இரு' என்பதுதான் முதன்மையானது. அருளியல் வாழ்வு நெறிகளுள் இந்நிலையைப் பெறுவது எளிதன்று

தாயுமானவரின் ' மனதற்ற பரிசுத்தநிலையும்' அத்தகையதே. இந்நிலை எல்லா அருளாளர்களும் தத்தம் சமயங்களின்வழி மக்களுக்கு அறிவுறுத்தும் நிலையேயாகும். உள்ளத்தைப் பக்குவப் படுத்தற்கு ஞானமும் யோகமும் துணைசெய்யும். மனம் எதை விரும்பும், எதை விரும்பாது என்று எளிதில் வரையறைசெய்ய இயலுவதில்லை. அடையமுடியாத பொருளைத்தான் மனம் இடைவிடாது சிந்தித்துக்கொண்டே யிருக்கும். நாடிய பொருள் கிடைத்த பின்னரும் இந்த மனம் அடங்குவதில்லை. அந்தப் பொருளால் இன்பம் பெற்ற பின்னருங்கூட மனம் அமைதி அடைவதில்லை. வேறு ஒருபொருளின்மீது அதன் நாட்டம் செல்லும். 'உள்ளது போதும், அவாவினை இல்லாமற் செய்துவிடு' என்பது தாயுமானாரின் உள்ளக்கிடக்கையாகும். அவாவறுத்தல் என்பதும் நம் முன்னையோர் கண்ட நெறிமுறைதானே! பரிபூரண ஆனந்தத்தை விரும்பும் தாயுமானார் அளவில்லாத ஆசையை அறுக்க வேண்டும் என்ற நிலைப்பாட்டினைக் கொண்டவர்.

'சும்மா இரு' என்பதும் ' மனதற்ற பரிசுத்தநிலை' என்பதும் நெருங்கிய தொடர்புடையன. மனதற்ற பரிசுத்தநிலை பெறுவதற்குச் செயலற்ற நிலையும் சொல்லற்ற நிலையும் வேண்டுவனவாகும். அல்லும் பகலும் இறைவனையே நினைந்து நினைந்து அறிவானந்தப் பேரின்பம் பெறுவோர்க்கும் சொல்லும் அதன் பொருளும் ஒரு சுமையாகவே இருக்கும் என்கிறார் தாயுமானார்.

அல்லும் பகலும் அறிவு ஆகி நின்றவர்க்கே
சொல்லும் பொருளும் சுமை காண் பராபரமே

என்பது தாயுமானாரின் பராபரக் கண்ணி.

சும்மா இருக்கும் நிலை மோனநிலையைப் போன்றது. உயர்ந்த யோகநிலையும் அதுவே. 'வாயினால் பேசா மவுனம்' என இதனைக் குறிக்கின்றார். இம்மவுனத்தைத்தான் அவர் எப்பொழுதும் விரும்புகின்றார்.

'சொல்லும் பொருளும் அற்றுச் சும்மா இருப்பதற்கே'
அல்லும் பகலும் எனக்கு ஆசை பராபரமே

என இறைவனை வேண்டுகின்றார்.

சும்மா இருப்பது என்பது பொறிகளுக்கு எட்டாத பெருநிலையாகும். அதனை உலகியலில் உழல்பவர்கள் அறிந்து இன்புற முடியாது. அத்தகைய பெருநிலையை அடையவேண்டும் என விரும்பிய தாயுமானார்.

சும்மா இருப்பதுவே சுட்டு அற்ற பூரணம் என்று
எம்மால் அறிதற்கு எளிதோ பராபரமே

என வருந்துவார். இறைவனின் இடையறாத பேரின்பப் பேறுபெற்ற நிலையில் அதனை எப்படி வருணிப்பது? எச்சொற்களால் அப்பெருநிலையை விவரிப்பது? இறைவனின் பேருருத் திறத்தை விளக்க வந்த அருளாளப் பெருமக்கள் சொல்லால் விளக்க முடியாத நிலையைச் சொல்லவில்லையா?

கீதம் இனியகுயிலே கேட்டியேல் எங்கள் பெருமான்
பாதம் இரண்டும் வினவின் பாதாளம் ஏழினுக்கு அப்பால்
சோதி மணி முடி சொல்லின் சொல்லிறந்துநின்ற தன்மை
ஆதிகுணம் ஒன்றுமிலான் அந்தமிலான் வரக் கூவாய்

என்று குயில்பத்துக் கூறும். சொல்லிறந்து நின்ற தன்மையான் என்று கூறுவதைப் போலத் தாயுமானார் தாம் பெற்ற அம்மோன இன்பநிலையைச் ' சொல்லில் அடங்காச் சுகக்கடல்' என்பார்.

சொல்லால் அடங்காச் சுகக் கடலில் வாய்மடுக்கின்
அல்லால் என் தாகம் அறுமோ பராபரமே

என்று வேண்டிய தாயுமானாரின் ஆன்ம தாகத்தை இறைவன் தணித்த செய்தியை அழகாகக் கூறுவார்.

சூது ஒன்றும் இன்றி என்னைச் சும்மா இருக்கவைத்தாய்
ஈது ஒன்றும் போதாதோ இன்பம் பராபரமே

வாய்ஒன்றும் பேசாமவுனியாய் வந்து ஆண்ட
தே ஒன்றும் போதாதோ இன்பம் பராபரமே

மன ஒருமைப்பாடுதான் இன்றியமையாதது. 'மனமது செம்மையானால் மந்திரம் செபிக்க வேண்டாம்' என்னும் மொழியும் பொருள் பொதிந்த மொழியாகும்.

எல்லாவிதமான நினைவுகளுக்கும் மனமே இடமாகின்றது. நாள்தோறும் நடைபெறும் பல்வேறு நிகழ்வுகளையும் மனம் பதிவு செய்கின்றது. மீண்டும் மீண்டும் அவற்றையே நினைந்துருகும் வண்ணம் நம்மை மனம் செலுத்தும். எனவே, மனத்தை ஒடுக்காது அதன் இயல்பிலே செல்லவிட்டால் அது குரங்காட்டம் ஆடும். மனம் ஒன்றை விட்டுத் தாவிச் செல்லும் இயல்புடையதல்லவா? இம்மனம் பேய்க் குரங்காய்த் துள்ளி வருத்துகின்றதே என வருந்தியுரைப்பார்.

கொள்ளித் தேள் கொட்டிக் குதிக்கின்ற பேய்க் குரங்காய்க்
கள்ளமனம் துள்ளுதென் கண்டோ பராபரமே

என்றும்

குணமிலா மனமெனும் பேய்க் குரங்கின் பின்னே
மாறாத கவலையுடன் சுழல என்னை வைத்தனையே

என்றும் மனத்தைப் பேய்க் குரங்கு என்பார். இயல்பாகவே ஆடுகின்ற பேய்க் குரங்கினைக் கொடுமையான விஷம் நிறைந்த தேளும் கொட்டிவிட்டால் அது என்னவாய்த் துள்ளும்? அதுபோல் என் கள்ள மனமும் துள்ளுகின்றதே என வருந்துகின்றார். தேஜோ மயானந்தம் என்னும் பகுதியில் 'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கின்ற திறம் அரிது' எனக் கூறுவதையும் காணலாம். யானை, சிங்கம், கரடி, புலி, நச்சுப்பாம்பு அனைத்தையும் கட்டியாளலாம். நெருப்பில் ஐந்து உலோகங்களையும் போட்டுப் பொன்னாக்கி ரசவித்தை காட்டலாம். தேவர்களை ஏவல்கொள்ளலாம். நீர்மேல் நடக்கலாம். நெருப்பின்மேல் இருக்கலாம்; எண்வகைச்

சித்திகளையும் பெறலாம். ஆனால், ஒன்றே ஒன்றைமட்டும் செய்யமுடியாது. ஆம்; உள்ளத்தை அடக்கிச் சும்மா இருப்பதுதான் இயலாதது என்கின்றார்.

எவ்வளவோ பேறுகளையும் பெறலாம்; சித்திகளைப் பெறலாம். ஆனால், மனத்தை அடக்காதவர்க்கு வெறும் வாய்ப் பேச்சினால் என்ன பயன் என்று கேட்பார்.

சினம் இறக்கக் கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்
மனமிறக்கக் கல்லார்க்கு வாய் ஏன் பராபரமே

என்றுரைப்பார்.

ஆசைப் பெருங்காற்றில் மனம் அலைபாயும். 'காற்றில் அகப்பட்ட இலவம்பஞ்சு போலப் பறந்து திரிந்து மோசம் வருவிக்கும்' என்பார். அப்படிப் பறக்கின்ற நெஞ்சம்உடைய பாவியாகிய என்னை அருளோடு கூவி அழைத்து, அஞ்சாதே என்று சொல்லமாட்டாயா என இறைவனைப் பார்த்து ஏங்குகின்றார்.

பஞ்சாய்ப் பறக்கு நெஞ்சம் பாவியை நீ, கூவிஐயா
அஞ்சாதே என்று இன்னருள் செயவுங் காண்பேனா

என இறைவனை வேண்டுவார்.

மனத்தைக் காற்றாடிக்கு உவமையாக்கிக் காற்றில் பறக்கும் பட்டம்போல் மனம் சஞ்சரிக்கின்றதே என்பார். வாலற்ற காற்றாடி கீழே விழுந்து சும்மாகிடப்பது போல் என் மனமும் உன் அருளால் வலுவற்றுச் சும்மா இராதா எனப் புலம்புகின்றார்.

'ஆடுகறங்காகி அலமந்து உழன்று மனம்
வாடுமென ஐயா நீ வாவெனவும் காண்பேனோ?'

'வாலற்ற பட்டமென மாயா மனப்படலம்
காலற்று வீழவும் முக்கண்ணுடையாய் காண்பேனோ'

என்று இப்படியெல்லாம் மனம் அலைக்கழிப்பதை மக்கட்கு எளிய பாடலால் புலப்படுத்துகின்றார். இப்பாடல்களைப் படிப்போர் மனத்திற்கு இவை மருந்தாக விளங்குகின்றன.

'மனம் எதை வேண்டுமானாலும் எண்ணும்; எங்கு வேண்டுமானாலும் செல்லும். இதனை அடக்க முடியாதா' என ஏங்குகின்றார். செய்தற்கரியவற்றைப் படைத்த இறைவனைப் பார்த்து வேண்டுகின்றார். 'இறைவனே உன்னுடைய படைப்பில் எத்தனை வியப்பானவை? அவற்றை யெல்லாம் படைத்த உனக்கு இது

ஒன்றுமட்டும் முடியாதா? பரந்து விரிந்து நிற்கின்றது கடல். இந்தப் பெரிய கடல் எல்லை மீறாது கரையின்றி அடங்கி நிற்கவில்லையா? கொடிய நஞ்சு அமுதாகவில்லையா? நீர்நிறைந்த அப்பெருங்கடலின் நடுவே வடவைத் தீ அணைந்து போகாமல் நிற்க வில்லையா? வானத்திலே எண்ணற்ற அண்டங்கள் கவிழாமல் நிற்க வில்லையா? மேருமேலையும் வில்லாக வளைந்து நிற்க வில்லையா? மேகங்கள் இந்திரனின் ஆணைக்குக் கட்டுப்படவில்லையா? இராமனின் கால்பட்டுக் கல் அகலிகையாக மாறவில்லையா? இவ்வளவெல்லாம்செய்கின்ற உனக்கு என் மனத்தை அடக்கச் செய்யும் உபாயம் ஒன்றினைக் கற்றுத் தருவதுமட்டும் எளிமை இல்லையோ' என்று உருகி உருகி வேண்டுகின்றார்.

ஆழ் ஆழி கரையின்றி நிற்க இலையோ கொடிய
        ஆலம் அமுது ஆக இலையோ?
அக்கடலின் மீது வட அனல் நிற்க இல்லையோ?
        அந்தரத்து அகிலகோடி
தாழாமல் நிலைநிற்க இல்லையோ? மேருவும்
        தனுவாக வளைய இலையோ?
சப்த மேகங்களும் வஜ்ரதரன் ஆணையில்
        சஞ்சரித்திட இல்லையோ?
வாழாது வாழவே இராமன் அடியால் சிலையும்
        மடமங்கை ஆக இலையோ?
மணிமந்த்ரம் ஆதியால் வேண்டு சித்திகள் உலக
        மார்க்கத்தில் வைக்க விலையோ?
பாழான என்மனம் குவிய ஒரு தந்திரம்
        பண்ணுவது உனக்கு அருமையோ?
பார்க்கும் இடம்எங்கும் ஒரு நீக்கமற நிறைகின்ற
        பரிபூர ணானந்தமே

என்று 'பாழான மனம் குவிய ஒரு தந்திரம் பண்ணுவது' இறைவனே உனக்கு அருமையா என்ன - என்று படிப்போர் மனத்தை உருகச்செய்கிறார் தாயுமானார்.

கல்லும்கூட ஒருகாலத்தில் உருகும். என் கல் நெஞ்சம் உருக வில்லையே என்று வருந்திய தாயுமானார் உருகாத தம் நெஞ்சத்தினை 'வன்நெஞ்சோ, இரங்காத மரநெஞ்சோ, இருப்பு நெஞ்சோ வைரமான கல்நெஞ்சோ அல்லது மண்ணாங்கட்டி

நெஞ்சோ' எனக் கடிந்துரைப்பார். தன்னுள்ளே இருந்து போராட்டம் செய்கின்ற அந்த மனத்தை எப்படி. வெல்லுவது? எப்பொழுதும் அடக்க அடக்க அடங்காமல் திரியும் அந்த மனத்தை அடக்கியாள்வது என உறுதிபூண்டார். திருவருள்தான் அதற்குத் துணை என்று முடிவு செய்கின்றார்.

மனத்தை அழைத்துச் சொல்லத் தொடங்கினார்: 'மனமே! வருக. உன் துன்மார்க்கம் அனைத்தையும் ஒருபுறத்தே வைத்துவிடு. சற்று எண்ணி ஆராய்ந்துபார். எந்த நேரமும் உலகம் முழுவதும் சுற்றி வருகின்றாய். உன்னுடைய சபல புத்திக்கு ஓர் ஆயிரம் அறிவுரை கூறினாலும் ஏற்க மாட்டாய்? அவற்றைப் பற்றி நீ நினைத்துப் பார்ப்பதும் இல்லை; பார்க்க நினைப்பதும் இல்லை. உன்னைத் திருவருள் என்னும் ஆயுதம் கொண்டு ஒழிப்பேன், உறுதியாக வெல்லுவேன்' என்று சூளுரைக்கின்றார்.

வாராய் நெஞ்சே! உந்தன் துன்மார்க்கம்
யாவைவும் வைத்துக்கட்டு; இங்கு
ஆராய்; அடிக்கடி சுற்றுகின்றாய்
உன் அவல மதிக்கு
ஓர் ஆயிரம் புத்தி சொன்னாலும்
ஓர்கிலை; ஓ! கெடுவாய்;
பாராய் உனைக் கொல்லுவேன்; வெல்லுவேன்
அருள் பாங்கு கொண்டே

என்று பேயாய் ஆடும் மனத்தை ஒடுக்க முயல்வார் தாயுமானார்.

'மனமே! என்ன காரணத்திற்காக, அலைந்து கொண்டே இருக்கிறாய்? 'மௌனம் ஏற்றுச் சும்மா இரு' என்று பலமுறை சொன்னபின்னரும் அந்த அறிவுரையை எங்கே போகவிட்டாய்? வீண் தர்க்கத்திற்காக வந்தெதிர்த்த மல்லரைப் போல் எதிர்நின்று வாதாடினாயே! உன் சுயபுத்தி என்ன வாயிற்று? உன் அறிவு எங்கே போயிற்று? போ, என்னை விட்டுப் போ!? என்று மனத்தோடு போராடுகின்றார்.

ஏதுக்குச் சும்மா இருமனமே! என்று உனக்குப்
போதித்த உண்மை எங்கே போகவிட்டாய்? - வாதுக்கு
வந்து எதிர்த்த மல்லரைப் போல் வாதாடினையே, உன்
புத்தி என்ன? போதம் என்ன? போ

என்று மனத்தோடு போராடிப் போராடி வருந்துகின்றார்.

'மனமே, கற்பனை சிறிதும் இல்லாத இடத்தில் நான் தனியாயிருக்க வேண்டும். நீ ஒரு நல்ல கவியைக் கற்றுக் கொண்டு என்னைத் தனியாயிருக்க விடு. உலக வாழ்வு அனைத்தும் கனவேயாகும். என்னைச் சும்மாயிருக்க விடு' என்பார்.

அற்ப மனமே! அகில வாழ்வு அத்தனையும்
சொற்பனம் கண்டாய் உண்மை சொன்னேன் நான்- கற்பனை ஒன்று
இல்லா இடத்தே, எனைச் சும்மா வைத்திருக்கக்
கல்லாய் நீதான் ஓர் கவி.

மனத்தைத் தன் வசம் கொண்டுவந்து இறைப் பேரின்பம் துய்க்கத் தாயுமானார் படும் துன்பம் நம்மைப் பெரிதும் உருகவைக்கும்.

இறைவனைப் பார்த்து 'இந்த மனத்தை ஏன்தான் படைத்தாயோ? தெரியவில்லையோ?' என்று மறுகுகிறார். இறுதியில் அம்மனத்தோடேயே உறவு கொண்டு உருகிப் பேசுகின்றார். 'மனமே! நான் எதற்காக வந்தேன் இந்த உலகத்தில்? வீணே அதை மறக்கச் செய்தாய்; கவலையும் படவைக்கின்றாய்; இப்படி எல்லாம் செய்ய மனமே உனக்குக் கற்றுக்கொடுத்தவர் யார்? இந்தப் புத்தி உனக்கு ஏன்? நான் சொல்லுகிறபடி கேள்' என்று மனத்திற்கு அறிவுரைகூறுகின்றார்;

வந்த வரவை மறந்து உலகாய் வாழ்ந்து கன்ம
பந்தம் உற உன்னைப் படிப்பிக்கக் கற்றவர் யார்?
இந்த மதி ஏன் உனக்கு இங்கு? என்மதிகேள் என்னாலே
சந்ததம் நெஞ்சே! பரத்தில் சாரின் இன்பம் உண்டாமே

என்று உரைப்பார்

மனமே இதனை நீ அறியாயோ? எனக்காக உருகமாட்டாயோ? உற்று இருந்து பார்க்க மாட்டாயா? அத்திரு உருவினைப் பார்த்தால் பேரின்பம் வந்து சேருமே என்பார்.

ஓராயோ நெஞ்சே உருகாயோ? உற்றிருந்து
பாராயோ? அவ்வுருவைப் பார்க்க நிறைவாய் விடுமே.

மனத்தை விடவும் முடியாமல் தவிக்கின்றார் தாயுமானார். இன்பவெள்ளம் மனமே உன்வழியாக வந்து பாயாதோ எனக் கேட்கின்றார்.

வாயாதோ இன்பவெள்ளம்? வந்துன் வழியாகப்
பாயாதோ? நானும் பயிராய்ப் பிழையேனோ?
ஓயாமல் உன்னி உருகு! நெஞ்சே! அந்நிலைக்கே
தாய் ஆன மோனன் அருள் தழைக்க வந்திடுமே

'உன்னை விட்டுவிட்டால் நானும் இறைவனிடத்து அன்பு செலுத்த முடியாது. ஆம் இறைவனிடத்திலே பக்தி செலுத்தவதற்கும் உன்னுடைய அருள்வேண்டும். எனவே மனமே என் பேச்சைக் கேள்! என்னுடைய பேச்சைக் கேட்டால் உனக்கும் நன்மை, எனக்கும் நன்மை அன்றோ? உன்னைவிட்டால் எனக்கு இனியவர் யார்? எனக்கு இனி யார் உன்போலும் இல்லை'; இப்படி மனத்தோடு உறவுகொண்டும் பிணங்கியும், கோபித்தும் பலவாறாக வேண்டும் தாயுமானாரின் மொழிகள் நம்மைப் பெரிதும் உருகவைக்கின்றன.

மனமாயையின் துன்பத்தினைப் பொறுக்க முடியாத தாயுமானார், 'மனமே ! உடலை எடுத்தவர்கள் யாராக இருந்தாலும் உன்னைவிட்டு அவர்கள் உயர்வு பெற முடியாது. பிரமனே ஆனாலும் உன்னை நீக்கக் காலங்கழித்தல் என்பது மிகமிக அருமையாகும். இகபர சித்திகளும் உன்னையல்லாது கிடைக்கக் கூடுமோ' என்று கூறி, மனத்தைப் புகழ்வார். 'உன்னை அசத்து என்று கூறமுடியாது. உன்னைச் சத்தென வாழ்த்துவேன். உனக்கு ஒரே ஒரு வேண்டுகோள். நீ எங்கிருந்து வந்தாயோ அங்கேயே திரும்பிப் போய்விடு; என்தாழ்வு நீங்க நீ உன் பிறப்பிடத்துக்குப் போய்விடு' என்று மன்றாடுகின்றார்.

உற உடலை எடுத்தவரில், பிரமாதி
யேனும் உனை ஒழித்துத் தள்ளற்கு
அறவும் அரிது அரிது அன்றோ இகபரமும்
உன்னை அன்றி ஆவது உண்டோ?
வறிதில் உன்னை அசத்து என்னல் வழக்கு அன்று
சத்து எனவும் வாழத்துவேன் என்
சிறுமை கெடப் பெருமையின் நின் சென்மதே
யத்து இனி நீ செல்லல் வேண்டும்

இப்படி மனத்தை எப்படியாவது அகற்ற வேண்டும் என்று எண்ணிய தாயுமானார் பழகிய அந்த மனம் பிரிந்து விட்டால் எப்படி இருக்கும் என்பதையும் எண்ணிப்பார்க்கின்றார்.

'மனமே! நீ என்னோடு பல நாட்கள் பழகிவிட்டாய். பிரிவு என்பது துன்பம் தருகின்ற ஒன்றுதான். என்னைப் பிரிந்த துன்பத்தால் நீ எங்காவது சென்று மடிந்துவிட்டாலும் அந்தத் திசை நோக்கி வணங்குவேன். நீ பிரிந்தால் எனக்கு நன்மைதான். என்னை ஆண்ட மௌனகுருவின் திருவருளினால் யான் எனது என்னும் பற்று நீங்கி, அவன் அருள் வடிவாகவே விளங்குவேன். ஆம்! உன்னால் என் கவலை தீர்வேன்' என்றுரைப்பார்.

வேண்டிய நாள் என்னோடும் பழகிய நீ
　　எனைப் பிரிந்த விசாரத் தாலே
மாண்டு கிடக்கிலும் அந்த எல்லையையும்
　　பூரணமாய் வணக்கம் செய்வேன்
ஆண்ட குரு மௌனி தன்னால் யான் எனது அற்று
　　அவன் அருள் நான் ஆவேன்; ழவில்
காண்தக எண் சித்தி முத்தி எனக்குண்டு ஆம்
　　உன்னால் என் கவலை தீர்வேன்

என்று மனம் தம்மை விட்டுப் பிரிந்தால் கவலைதீர்ந்து மகிழ்வேன் என்பார்.



# 3. இறைவன்

நம்முடைய அருளாளர்கள் இறைவனின் திருவுருவத் திறத்தைக் காண முயன்று பல்வேறு நிலைகளில் அதனை வெளிப்படுத்தியுள்ளார்கள். வானாகி, மண்ணாகி, வளியாகி, ஒளியாகி, ஊனாகி, உயிராகி உண்மையுமாய், இன்மையுமாய், கோனாகி யான் எனது என்றவரைக் கூத்தாட்டுவானாகி விளங்குபவன் இறைவன் என்றனர். 'இன்னதன்மையன் என்று அறிய வொண்ணா எம்மான்' என்று தெளிவுறுத்தினர். அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ அன்புடைய மாமனும் மாமியும் நீ என உறவுப் பெயர்களைச் சுட்டிப் பாராட்டினர். இப்பொன் நீ. இம்மணிநீ, இம்முத்து நீ என விலையுயர்ந்த அணிகலன்களாக நினைத்துப் பார்த்து மகிழ்ந்தனர். சொல்லாலும் பொருளாலும் உணர முடியாத இறைவனைச் 'சொல்லிறந்து நின்ற தன்மையன்' என்றனர். பொன்னும் மெய்ப் பொருளும் தருவான்; போகமும் திருவும் புணர்ப்பான், நம்முடைய பிழையெலாம் தவிர்ப்பான் என்று அவனுடைய பண்பு நலனைப் பாராட்டிப் போற்றினர்.

தாயுமானவர் இறைவனை அகண்ட பெருவெளி என்பார். ஐம்பெரும் பூதங்களின் பிறப்பிற்குக் காரணமாய் இருப்பவன் இறைவன் என்பார். சொல்லுதற்கரிய பெரிதான மௌனத்தின் இடம் என்றும் மனத்திற்கும் சொல்லிற்கும் எட்டாதவன் என்றும் கூறுவர். பேரின்பமாய் விளங்கும் அவனை ஞானாசிரியர் காட்டிட அறியலாம் என்பார். அன்பர்களோடு உறவு கொண்டு அவர் ஜீவபோதம் கெட ஆட்கொண்டு விளங்கும் - அறிதற்கும் அரிதாக விளங்கும் - எந்தப் பொருளோ அந்தப் பொருள்தான் இறைவன்: அவனை வணங்குவோம் என்பார்.

பெருவெளியாய், ஐம்பூதம் பிறப்பு இடமாய்ப்
பேசாத பெரிய மோனம்
வரும் இடமாய், மனம் ஆதிக்கு எட்டாத
பேரின்ப மயமாய், ஞானக்
குரு அருளால் காட்டிடவும் அன்பரைக் கோத்து
அறவிழுங்கிக் கொண்டு அப்பாலும்
தெரிவு அரிதாய்க் கலந்தது எந்தப் பொருள்?அந்தப்
பொருளினையாம் சிந்தனை செய்வாம்

எனப் பொருள் வணக்கத்தில் கூறுவார் தாயுமானவர்,

தோற்றமும் முடிவும் இல்லாத முதற்பொருளாம் இறைவனை ஆதி அந்தம் காட்டாத முதல் என்பார். மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதவன்; என்றும் உள்ளவன் என்றுரைப்பார். ஆணவம், கன்மம் மாயை ஆகிய பொருள்களே அனாதியானவை என்று சமயவாதம் செய்வோர் அறிதற்கு அரிதானவன். ஆனால், மௌனநிலை எய்தியோர்க்கு விளங்குகின்ற சோதிவடிவானவன். அவன் என் உயிர்த்துணை அவனைக் கண்ணீர் சொரிய வழுத்துவோம் என்பார்.

இறைவன் நினைந்து உருகுவோர்க்கு எளிதானவன் என்பதைத் தம் பாடல்கள்மூலம் தெளிவுறுத்துவார் தாயுமானார்.

ஆதி அந்தம் காட்டாத முதலாய், எம்மை
அடிமைக்கா வளர்த்தெடுத்த அன்னைபோல
நீதிபெருகும் குருஆகி, மனம் வாக்கு எட்டா
நிச்சயமாய்ச் சொச்சமதாய் நிமலம் ஆகி
வாதம் இடும் சமயநெறிக்கு அரியதாகி
மௌனத்தோர் பால்வெளியாய் வயங்காநின்ற
ஜோதியை என் உயிர்த் துணையை நாடிக் கண்ணீர்
சொரிய இருகரம் குவித்துத் தொழுதல் செய்வாம்.

இறைவன் குலம் இல்லாதவன்; குணம் இல்லாதவன்; எந்தவித அடையாளமும் இல்லாதவன்; தாழ்வில்லாதவன்; ஐம்புலன் ஆதிக்கத்தில் பற்று இல்லாதவன்; தனக்கு என்று எந்தவிதமான ஆதாரமும் இல்லாதவன்; பொருந்துகின்ற வீடில்லாதவன்; முத்தி தருதற்குரிய அவன்தான் இறைவன் என்பர் தாயுமானவர்.

குலம் இலான் குணம் குறிஇலான்
குறைவு இலான் கொடிது ஆம்

புலம் இலான் தனக்கு என்ன ஓர்
பற்று இலான், பொருந்தும்
இலம் இலான், மைந்தர் மனைவி
இல்லான் எவன் அவன் சஞ்சலம்
இலான், முக்திதரும்பர
சிவன் எனத் தகுமே.

என இறைவனுடைய நிலைகளைப் புலப்படுத்துவார்.

'கண்ட இடமெல்லாம் கடவுள்மயம் என்றறிந்துகொண்ட நெஞ்சர்'தாயுமானவர். 'எங்கெங்குப் பார்த்தாலும் இன்புருவாய் நீக்கமின்றித் தங்கும் தனிப்பொருள்' இறைவன்ப் என்பார். ஒன்றை நாடிச் செல்லுதலும் மீளுதலும் இல்லாமையால் இறைவனைப் போக்குவரவற்ற பொருள் என்பார்.

'போக்குவரவற்ற பொருள் அணைவது எந்நாளோ'

'போக்குவரவில்லாது இன்பமாய் நின்ற பூரணம்'

என்று கூறுவார்.

'போக்கும்வரவுமில்லாப் புண்ணியன்' என்ற மணிவாசகரின் மணிமொழியையும் இங்கு ஒப்புநோக்கலாம்.

இறைவனின் பரிபூரணத்தன்மையை வியந்து வியந்து போற்றிப் பாராட்டியவர் தாயுமானர். 'பரிபூரணானந்தம்' என்னும் பகுதியில்

' பார்க்கும் இடமெங்கும் ஒரு நீக்கமற
நிறைகின்ற பரிவூரணானந்தமே'

என்று பாடுவார். 'சுகபரி பூரணமான நிராலம்ப கோசரம்' எனவும் 'தெரிவரிய பூரணம்' எனவும், 'பரிபூரணச் சுகவாரி' எனவும், 'சர்வபரிபூரண அகண்ட தத்துவம்', 'ஞானபூரணநாதன்' 'வாக்கு மனம் அனுகாத பூரணப் பொருள்' எனவும் இறைவனைப் பரிபூரணனாகப் போற்றி மகிழ்கின்றார். 'எங்கும் நிறைகின்ற பொருள்' என்னும் பகுதியில் இறைவனின் பல்வேறு பண்புநலன்களையும் போற்றுவார். 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்று இறைவனே மூல இயக்கம் என்பார்.

ஐந்து மாபெரும் பூதங்களும் ஒரு கானல்நீர் என்னும்படியாக அனைத்தையும் அடக்குகின்ற பெருவானம் என்றுரைப்பார். முதல், இடை, கடை என ஒன்றும் இல்லாமல் அருள்வடிவாய் நிற்கும்

பேரொளி என்பார். அருவம் உருவம் என இவற்றிற்கெல்லாம் அப்பாலாய்க் கடந்து நின்று வளர்கின்ற பொருள் என்பார். எக்காலமும் நடுஆகி நின்று ஒளிரும் ஆதி என்பார். கருணையோடு வணங்குகின்ற நீதியின் வடிவம் என்பார். தெரிவதற்கு அரிய பிரமம் என்று கூறி, 'உன் அருளைப் பெற்று நான் உய்வேனோ?' என இறைவனைப் பார்த்து உருகுவார்.

ஐந்து பூதம் ஒரு கானல்நீர் என
அடங்க வந்த பெரு வானமே
ஆதி அந்தம் நடு ஏதும் இன்றி
அருளாய் நிறைந்து இலகு ஜோதியே
தொந்த ரூபமுடன் அரூபம் ஆதிகுறி
குணம் இறந்து வளர் வஸ்துவே
துரியமேதுரிய உயிரினுக்கு உணர்வு
தோன்ற நின்றருள் சுபாவமே
எந்த நாளும் நடுஆகி நின்று ஒளிரும்
ஆதியே கருணை நீதியே
எந்தையே என இடைந்து இடைந்து உருகும்
எளியனேன் கவலை தீரவும்
சிந்தையானதை அறிந்து நீ உன் அருள்
செய்ய நானும் இனி உய்வனோ
தெரிவதற்கு அரிய பிரமமே! அமல
சிற்சுகோதய விலாசமே.

என இறைவனை ஞான இன்பமான இருப்பிடம் எனப் போற்றுவார்.

இறைவனைப் போற்றிப் புகழுகின்ற 'பராபரக் கண்ணி' எளிமையும் இனிமையும் வாய்ந்தது. பக்திநெறியில் ஈடுபட்ட அனைவரும் உருகி உருகிப் பாடும் தன்மையன இக்கண்ணிகள். இறைவன் தம்மை எப்படியெல்லாம் ஆட்கொண்டார் என்பதை உருக்கத்தோடு தாயுமானவர் இப்பகுதியில் எடுத்துரைப்பார்.

இறைவனைச் 'சீர் ஆரும் தெய்வத் திருவருள் ஆம் பூமிமுதல் பாராதி ஆண்ட பதியே' என்று கூறுவார்.

' கண்ஆரக் கண்டோர் கருப்பொருள் காணாமல் அருள்
விண்ணூடு இருந்த இன்பவெற்பே'

என்று இறைவனை ஆனந்தமலை என்று போற்றுவார்.

பால்நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்பரிந்து உயிர்கள்பால் அன்பு பாராட்டுபவன், ஊனினை உருக்கி இறைவன் உள்ளொளி பெருக்கும் அற்புத ஆற்றலாளன். ஆனந்தமாய தேனினைச் சொரிந்து இன்பம் தருபவன் என்று முன்னையோர் இறைவனின் அருள் நாட்டத்தைப் போற்றினர்.

தாயுமானவர் முந்தையோர் வழிநின்று இறைவனை உருகிஉருகிப் பாடுகின்றார்.

'அன்பைப் பெருக்கி எனது ஆருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே'

'சிந்தித்த எல்லாம்என் சிந்தை அறிந்தே உதவ
வந்த கருணை மழையே பராபரமே'

'ஆரா அமுதே அரசே ஆனந்த வெள்ளப்
பேராறே மோனப் பெருக்கே பராபரமே'

'எத்திக்கும் தான்ஆகி என் இதயத்தே ஊறித்
தித்திக்கும் ஆனந்தத் தேனே பராபரமே'

'கண்ணே கருத்தே என் கற்பகமே கண்நிறைந்த
விண்ணே ஆனந்த வியப்பே பராபரமே'

இறைவனை இன்பப்பெருக்கு, கருணை மழை, மோனப் பெருக்கு, ஆனந்தத்தேன், ஆனந்த வியப்பு என உருகிப் போற்றிப் பாராட்டுகின்றார்.

உலகில் அனைத்தும் இறைவடிவம்தான் என்பதை உணர்ந்து நெகிழ்ந்து கூறுகின்றார் தாயுமானவர்.

'வடிவெலாம் நின் வடிவென வாழ்த்திடாக்
கடியனேனும் உன் காரணம் காண்பேனோ'

என்பார். திருநாவுக்கரசர் 'கங்கை ஆடிலென்? காவிரி ஆடிலென்? எங்கும் ஈசன் என்று உணராதவர்க்குப் பயன் இல்லை' என்று கூறுவதுபோலத் தாயுமானார் கண்ட கடவுட்காட்சி அனைத்துப் பொருள்களையும் உள்ளடக்கியதாகும். 'பார்ஆதி விண் அனைத்தும் நீ' என்று கூறுவார். தான் காணும் பொருள்கள் அனைத்திலும் இறைவனே காட்சி தருவதாகக் கூறுகின்றார்.

'அங்கிங்கெனாதபடி எங்கும் ஒளிவீசுகின்ற இறைவனே; உன்னை வழிபடத் தொடங்குகின்றேன்! உன்னை ஒருவடிவிலே

எண்ணி, பாவனை செய்து வணங்குகின்றேன். மலர்களைத் தூவி வழிபடலாம் என்று எண்ணினேன். மலர்களைப் பறிக்க எண்ணியபோது அம்மலர்களில் உன்னைக் கண்டேன். எனவே, உள்ளே நீ வீற்றிருக்கும் அம்மலர்களைப் பறிக்க விரும்பவில்லை. இரு கைகளைக் குவித்து வணங்கலாம் என்று எண்ணினேன். ஆனால், என் உள்ளத்தில் நீ இருக்கின்றாய். நான் வணங்கும் போது அது அரைக்கும்பிடாக இருக்கும். எனவே, நான் பூசைசெய்வது எவ்வகையில் முறையாகும்?' எனத் தாயுமானார் எண்ணிப் பார்க்கின்றார்.

பண்ணேன் உனக்கான பூஜை, ஒருவடிவிலே
பாவித்து இறைஞ்ச, ஆங்கே
பார்க்கின்ற மலரூடு நீயே இருத்தி, அப்
பனிமலர் எடுக்க மனமும்
நண்ணேன், அலாமல் இருகைதான் குவிக்க எனின்
நாணும் என் உளம் நிற்றி நீ
நான்கும்பிடும்போது அரைக்கும்பிடு ஆதலால்
நான்பூஜை செய்யல் முறையோ?

ஏன்று இறைவனிடத்தேயே 'நான் செய்வது முறையாகுமா' என்று கேட்கின்றார்.

விண்ணே விண் ஆதியாம் பூதமே நாதமே
வேத வேதாந்தமே
மேதக்க கேள்வியே கேள்வியாம் பூமிக்குள்
வித்தே அவ்வித்தின் முளையே
கண்ணே கருத்தே என் எண்ணே எழுத்தே
கதிக்கு ஆன மோன வடிவே
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே

என்று பாடும்போது விண், நிலம், நீர், தீ, காற்று, நாதம், வேதம், வேதாந்தம், கேள்விஞானம், வித்து, வித்தின்முளை, கண், கருத்து, எண், எழுத்து, மோட்சவடிவு என அனைத்துப் பொருள்களும் நீயாக இருக்கும்போது நான் எதை வணங்குவது? நான் பூஜை செய்யல் முறையோ? என இறைவனிடமே வாதம் புரிகின்றார் தாயுமானார்.

இவ்வளவையும் நீள நினைந்த தாயுமானார் இறுதியில் இத்தகு இறைவனை எப்படி வணங்குவது? எண்ணிப்பார்க்கின்றார்.

பூசைக்குரிய நைவேத்தியப் பொருட்கள் எவை? மணமலர்கள் எவை? திருக்கோயில் எது? எது தியானம்? என்பவற்றையும் எண்ணுகின்றார். ஒரு முடிவுக்கு வந்து இறுதியில் தாயுமானாரே இறைவனிடம் உருகிப் பேசி, 'பூசை கொள்ள வாராய்' என வேண்டுகோள் விடுக்கின்றார்.

' நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம் அன்பே
மஞ்சனநீர் பூசை கொள்ள வாராய் பராபரமே'

' செப்புவதெல்லாம் செபம் நான் சிந்திப்பதெல்லாம் நின்
ஒப்பில் தியானம் என ஓர்ந்தேன் பராபரமே'

என்று தம் நெஞ்சத்தையே கோயிலாக்கி இறைவனுக்கு ஞான முழுக்காட்டி அரிய பூசையினைச் செய்து முடிக்கின்றார். அருளாளர் தாயுமானாரன்றி வேறு யார் இவ்வரிய பூசையை இறைவனுக்குச் செய்ய முடியும்?

நெஞ்சத்திலேயே திருக்கோயில் எழுப்பித் திருக்குட முழுக்குச் செய்த முந்தைய அருளாளர் வழியிலேயே தாயுமானாரும் பூசை செய்விக்கின்றார் எனலாம்.

எங்கு எங்குப் பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்குஅங்கு இருப்பதுநீ அன்றோ பராபரமே

அனைத்துமாய் நின்றாயே யான்வேறோ நின்னை
நினைக்குமாறு எங்கே நிகழ்த்தாய் பராபரமே

என்று எத்துணையும் பேதமுறாது எவ்வுயிரிலும் எப்பொருளிலும் இறைவனைக் காணும் அரிய ஆன்ம ஞானம் பெற்றவர் தாயுமானார்.

வேதம், ஆகமம், இதிகாசம், புராணம், அத்வைதம், துவைதம், ஆன்மா, பரமான்மா, ஊகம், அனுபவம், சுருதி, சரியை, கிரியை, யோகம், ஞானம் முதலான அனைத்தையும் அறிந்தவர்தான் தாயுமானார். 'எங்கும் நிறைகின்ற பொருள்' என்னும் பகுதியில் இவற்றையெல்லாம் விரிவாக எடுத்துரைக்கின்றார். ஆனால், நான் எப்பொருளைப் பாவித்தாலும் நியே அப்பொருள் என்னும் தத்துவ ஞானமும் உணர்ந்த பெருமகனார் அன்றோ, தாயுமானார்.

வேதமுடன் ஆகம புராண இதிகாச முதல்
வேறும் உளகலைகள் எல்லாம்
மிக்காக அத்வைத த்வைத மார்கத்தையே
விரிவாய் எடுத்துரைக்கும்

ஒதரிய த்வைதமே அத்வைத ஞானத்தை
உண்டு பண்ணும் ஞானம் ஆகும்
ஊகம் அனுபவம் வசனம் மூன்றுக்கும் ஒவ்வும் இது
உபயவாதிகள் சம்மதம்
ஆதலின் எனக்கு இனிச் சரியை ஆதிகள் போதும்
யாதுஒன்று பாவிக்க நான்
அதுஆதலால் உன்னை நான் என்று பாவிக்கின்
அத்வைதமார்க்கம் உறலாம்
ஏதுபாவித்திடினும் அதுவாகி வந்தருள் செய்
எந்தைநீ குறையும் உண்டோ
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர் ஆகி
எங்கும் நிறைகின்ற பொருளே

என்ற பாடலில் அனைத்து நெறிகளையும் உணர்ந்த தன்மை புலனாகும். ஆயினும், இறுதியில் 'நெஞ்சகமே கோயில்' என்ற நிலையையும் உணர்ந்து நமக்கும் அவ்வரிய தத்துவத்தை மிக எளிமையாகப் புலப்படுத்தியவர் தாயுமானார்.

எளிய மக்களும் ஆன்ம ஈடேற்றத்தில் உயர்ந்த நிலையை அடையலாம் என்பது தாயுமானாரின் இறைநிலைத் தத்துவமாகும். 'பக்திச் சுவை மிகுந்த தெய்வநலம் கனிந்த பாடல்களையும் படித்துத் தெளியவில்லை; மூவர் தேவாரத்தையும் பண்ணோடு பாடும் இசையறிவும் இல்லை; யோக நெறியில் நிற்பதற்கும் இந்த உடல் இடம் கொடுக்கவில்லை. உணவை வெறுப்பது உயிரை வெறுப்பது போல் உள்ளது. சரியை, கிரியை முதலான நெறிகளைச் செய்ய முடியாமல் மோகம் தடுக்கிறது. மோனநிலை நிற்பதற்கும் தடைகள் பல. எல்லாப் பொருள்களிலும் நிறைந்த இறைவனே நான் உன்னை எப்படி அடைவேன்?' என்று பாமரமக்கள் எண்ணுவது போல எண்ணும் பாங்கு எண்ணத்தக்கது.

பாகத்தினால் கவிதை பாடிப் படிக்கவோ
பக்திநெறி இல்லை; வேத
பாராயணப்பனுவல் மூவர் செய் பனுவலது
பகரவோ இசையும் இல்லை;
யோகத்திலே சிறிது முயல என்றால் தேகம்
ஒவ்வாது; இவ் ஊண் வெறுத்தால்

உயிர் வெறுத்திடல் ஒக்கும்; அல்லது கிரியைகள்
உபாயத்தினால் செய்யவோ
மோகத்திலே சிறிதும் ஒழிய இலை; மெய்ஞ்ஞான
மோனத்தில் நிற்க என்றால்
முற்றாது பரிபாக சக்திகள் அனேகம், நின்
மூதறிவிலே எழுந்த
தாகத்திலே வாய்க்கும் அமிர்தப்ரவாகமே
தன்னந்தனிப் பெருமையே
சர்வபரிபூரண அகண்ட தத்துவம் ஆன
சச்சிதானந்த சிவமே

என்னும் பாடலில் இறைவனை எண்ணுதற்குரிய எந்த வழிமுறைகளையும் செய்ய இயலாத மக்களின் எண்ணக் கருத்தினை அறிய முடிகின்றது. தாயுமானார் உலகியல் நெறியைத் தம் மேலேற்றிக் கூறி அத்தகைய மக்களும் மனத்தகத்தே இறையை வழிபடுவதற்குரிய எளிய முறைகளையும் பிற பாடல்களில் கூறியுள்ள முறையையும் எண்ணி அவர்தம் ஆன்ம எளிமையை உணரலாம்.

தாயுமானாரின் பராபரக்கண்ணியில் இறையின்பத்தை நுகரவேண்டும் என்ற தாகத்தையும் தவிப்பையும் அறிய முடிகின்றது. நினைந்து நினைந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து கண்ணீர் பெருக்கி இறையருள் பெறத் தவிக்கின்றார். தம் கவலையை இறைவன் மட்டுமே தீர்க்க முடியும் என்று எண்ணி,

பாராயோ என்னை முகம் பார்த்து ஒருகால் என்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமே

ஓயாதோ என்கவலை உள்ளே ஆனந்த வெள்ளம்
பாயாதோ ஐயா பகராய் பராபரமே

என்று உருகிப் பாடுவார். 'கவலையைத் தீர்க்கமாட்டாயா' என்று கனிந்துருகிக் கேட்பது அவர்தம் பக்குவநிலையைக் காட்டும்.

தாயுமானார் தாம் பெற்ற கல்வி, அனுபவம், அறிவு அனைத்தையும் கொள்ளை தந்து இறையருளுக்காக ஏங்குகின்றார்.

கூர்த்த அறிவு அத்தனையும் கொள்ளை கொடுத்து உன் அருளைப்
பார்த்தவன் நான் என்னை முகம்பார்நீ பராபரமே

'நான் ஏழை தள்ளிவிடின் மெத்தத் தவிப்பேன்' என்பார்.

'எண்ணாத எண்ணம் எலாம் எண்ணி எண்ணி ஏழை நெஞ்சம் புண் ஆகச் செய்தது போதும் பராபரமே' என்று நெஞ்சுருக இறைவனிடம் முறையிடுவார். என்னுடைய கண்போன்று நெருங்கிய நட்பினராயினும் உன்னைக் கைகுவித்து வணங்காராயின் அவர்களை மதியேன்; அவர்களுடைய மண்ஆவார் நட்பு எனக்கு வேண்டாம் என்பார்.

என்னுடைய ஆசை எல்லாம் கொல்லா விரதம் பெற்றுக் குவலயம் செழிக்க வேண்டும் என்பதுதான்.

கொல்லாவிரதம் குவலயம் எல்லாம் ஓங்க
எல்லார்க்கும் சொல்லுவது என் இச்சை பராபரமே

என்று எளிய சொற்களால் உணர்வுமீறிக் கூறுவார்.

எளிய பொதுமக்களும் புரிந்துகொள்ளும் வண்ணம் தத்துவங்களை எளிமைப்படுத்திப் பாடியது தாயுமானாரின் தனிச்சிறப்பாகும். பக்திச் சுவையும், ஞானநெறியும் கொண்டு விளங்கும் பராபரக்கண்ணி தமிழ்ப் பெருமக்களால் தொடர்ந்து பாடல்பெற்று வருகின்ற பாடல்களாகும். தாயுமானார் அடிச் சுவட்டில் வள்ளலாரும் பாரதியும் தத்துவப் பாடல்களை மிக எளிமையாகத் தந்துள்ளனர்.

தாயுமானாரின் பாடல் தொடர்கள் பலவும் இன்றும் உலகவழக்கில் பெரிதும் பேசப்பெற்றுவருவதே அப்பாடல்களின் தனிச் சிறப்பையும் பெருமையையும் காட்டும்.

' ஆசைக்கோர் அளவில்லை'

' அவனன்றி ஓர் அணுவும் அசையாது'

' கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்'

' அன்பர் பணி செய்ய ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்தெய்தும்'

' எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறு ஒன்றறியேன்'

' மண் உறங்கும் விண் உறங்கும் மற்றும் உள எல்லாம் உறங்கும்
கண் உறங்கேன் எம் இறைவர் காதலால் பைங்கிளியே'

'அஞ்சுமுகம் காட்டாமல் ஆறுமுகம் காட்டவந்த
செஞ்சரணச் சேவடியைச் சிந்தைவைப்பது எந்நாளோ?'

' இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?'

'காகமானதுகூடி நின்றாலும் ஒருகல்லின்முன் எதிர்நிற்குமோ?'

மிகவும் எளிமையான சொற்களில் ஆழ்ந்த கருத்துகளை அமைத்துப் பாடப்பெற்ற தாயுமானாரின் பாடல்கள் அவர்தம் புலமையின் ஆழத்தையும், தத்துவத்தை எளிமையாகச் சொல்லும் திறத்தையும் காட்டும். தமிழ்மக்கள் இப்பாடல்களைப் பாடிப்பாடி மகிழ்ந்தனர். சிற்றூர்களில் நடைபெறும் திருக்கோயில் பஜனைகளில் தாயுமானாரின் பாடல்கள் உணர்வுபூர்வமாக இசையோடு ஒலிப்பதை இன்றும் காணலாம். அந்த அளவிற்கு எளிமையும் இனிமையும் நிறைந்தவை தாயுமானாரின் பாடல்கள். 'சங்கர சங்கர சம்போ' என முடியும் ஆனந்தக் களிப்புப்பாடல்களை இன்றும் பண்டாரங்கள் இசையோடு பாடிச் செல்கின்றனர்.

சங்கர சங்கர சம்பு – சிவ
சங்கர சங்கர சம்பு

ஆதி அநாதியும் ஆகி-எனக்கு
ஆனந்தமாய் அறிவாய் நின்று இலங்கும்
ஜோதி மவுனியாத் தோன்றி அவன்
சொல்லாத வார்த்தையைச் சொன்னாண்டி தோழி
சங்கர சங்கர சம்பு

என்னும் சங்கர சங்கர சம்புப் பாடல்கள் எளிமையும் இனிமையும் நிறைந்தவை. இன்றும் தமிழ் மக்களால் விரும்பிப் பாடப்பெறுபவை.

மானுடப்பிறவி உயரியது; இப்பிறவி பெறுவது என்பது மிகவும் அரிது. மானுடப்பிறவியைப் பெற்றபின் 'புசிப்புக்கு அலைந்திடல், புசித்தபின் உறங்கல்' என வீணே காலத்தைக் கழிப்பது நன்றன்று.

எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவிதான்
யாதினும் அரிது அரிது காண்
இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ?
ஏதுவருமோ அறிகிலேன்

என்று கூறி வருந்துகின்றார். 'ஆணிலே பெண்ணிலே என்போல ஒருபேதை அகிலத்தின் மிசை உள்ளதோ?' ஆடிய கறங்குபோல ஓடி உழல் சிந்தையை அடக்கி ஒரு கணமேனும் நான் திருவருளைக் காணவில்லையே' என்று உருகுகின்றார்.

இறைவனை எப்படியெல்லாம் உருகி உருகி வணங்க வேண்டும் என்பதை நினைந்து பார்க்கின்றார். 'மெய்தான் அரும்பி விதிர்விதிர்த்து உன் விரையார் கழற்கு கைதான் தலைவைத்துக் கண்ணீர் ததும்பி வெதும்பி உள்ளம் பொய்தான் தவிர்த்து உன்னைப் போற்றி செயசெய போற்றி என்னும் கைதான் நெகிழவிடேன் உடையாய் என்னைக்கண்டுகொள்ளே' என்று அருளாளர் நெகிழ்ந்து கூறுவது போலத் தாயுமானவரும் கருணாகரக் கடவுளை உருகி வேண்டுகின்றார்.

'உடல் வாட, எலும்புகள் நெகிழ்ந்து உருக, கண்ணீர் பெருக்கெடுத்துக் கொதித்து ஒழுக, ஊசி காந்தத்தால் இழுக்கப்பட்டு நெருங்குவது போல உன்னிடம் நெருங்க வேண்டும். ஆன்மிக உறவு கொண்டு உன்னை நினைத்து நினைத்து மனம் படபட எனத் துடிக்க வேண்டும். உள்ளம் நடுக்கம் அடைய ஆடிப்பாடித் துதித்து வணங்க வேண்டும். குளிர்ந்த புன்னகை கொண்டு ஆரவாரித்து எழுந்து இரு கைகளையும் கூப்பி உன்னை வாழ்த்த வேண்டும். இறைவனே இந்தக் கல்நெஞ்சனுக்கு எளிமையாய் இருப்பாயோ? என உருகி வேண்டுகின்ரார்.

உடல் குழைய என்புஎலாம் நெக்குஉருக, விழிநீர்கள்
ஊற்று என வெதும்பி ஊற்ற
ஊசிகள் காந்தத்தினைக் கண்டு அணுகல் போலவே
ஓர் உறவும் உன்னி உன்னிப்
படபடஎன நெஞ்சம் பதைத்து உள் நடுக்குறப்
பாடி ஆடிக் குதித்துப்
பனிமதி முகத்திலே நிலவு அனைய புன்னகை
பரப்பி ஆர்த்து ஆர்த்து எழுந்து
மடல் அவிழும் மலர் அனைய கைவிரித்துக் கூப்பி
வானே இவ்வானில் இன்ப
மழையே மழைத்தாரை வெள்ளமே நீடூழி
வாழி எனவாழ்த்தி ஏத்தும்
கடல்மடை திறந்தனைய அன்பர் அன்புக்கு எளியை
கல்நெஞ்சனுக்கு எளியையோ?
கருதரிய சிற்சபையில் ஆனந்த நிர்த்தமிடு
கருணாகரக் கடவுளே.

என்று இறைவழிபடுவோரின் மெய்ப்பாட்டினை உணர்ச்சிமீதூறச் சித்திரித்துக் காட்டுவார்.

தாயுமானார்க்குப் பின்னர்த் தோன்றிய அருளாளரான வள்ளற்பிரானும் இதேவகையில் இறைவனை வழிபடும்போது நெஞ்சுருகக் குழைந்து குழைந்து பாடுவதும் ஒப்பு நோக்கத் தக்கது.

நினைந்து நினைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து அன்பே
நிறைந்து நிறைந்து ஊற்றெழும் கண்ணீரதனால் உடம்பு
நனைந்து நனைந்து அருள் அமுதே! நன்னிதியே! ஞான
நடத்தரசே! என்உரிமை நாயகனே! என்று
வனைந்து வனைந்து ஏத்துதும்யாம் வம்மின் உலகியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாம் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியம் சொல்கின்றேன்
பொற்சபையில் சிற்சபையில் புகுந்தருணம் இதுவே.

நினைந்தும், உணர்ந்தும், அன்புநிறைந்தும், நனைந்தும், நெகிழ்ந்தும் பாடுகின்ற ஆன்மநேய ஒருமையுணர்வை அருளாளர்கள் பெற்று விளங்கினர் என்பது இப்பாடல்களால் நன்கு புலனாகின்றன.

எஞ்ஞான்றும் அழியாதே விளங்கும் மெய்யுடலைப் பெறுவதற்கு அருளாளப் பெருமக்கள் முனைந்திருக்கின்றனர். சித்தர்கள் இவ்வுடலைச் சுவர்ணதேகம் எனவும் பொன்னுடல் எனவும் கூறுவர். அருள் அனுபவச் சாதனை மூலம் இந்த ஞானதேகத்தைப் பெறலாம். மணிவாசகர் 'சிவமாக்கி எனை ஆண்ட' என்னும் தொடரும் இதனையே குறிப்பதாகக் கொள்ளலாம். 'அழிதரும் ஆக்கையினை ஒழியச் செய்து அளிதரும் ஆக்கையை வழங்கினான்' என்று கூறுவதும் காண்க.

அருள் என்னும் குளிகையால் இறைவன் அசுத்த தேகத்தைப் பத்து மாற்றுத் தங்கமாக மாற்றியதைக் கூறுவார்.

' அருளான குளிகை கொடு பரிசித்து வேதி செய்து
பத்துமாற்றுத் தங்கமதாக்கியே பணிகொண்ட
பட்சத்தை என் சொல்லுகேன்'

என்று இறைவன் பொன்னுடலாக்கி ஆட்கொண்ட கருணைத் திறத்தைப் போற்றி மகிழ்கின்றார்.

எடுத்த தேகம், பொருள், ஆவி மூன்றும் நீதான் எனக்குக் கொடுத்தவை. 'மோன நன்னெறியை எனக்குத் தந்தபோது தந்தவைஅன்றோ? பின்னும் நான் என்று குழறிக் கூத்தாட என் மாயையைப் போக்குவித்தாய். என் கண்ணீரையும் என்

கம்பலையையும் விலக்கி அருளினாய்; என் வேட்கைப் பிரவாகத்தைத் தடுத்தருளினாய் என்று இறைவனின் பெருமையைக் கூறிமகிழ்ந்த தாயுமானார் தாம் பெற்ற இன்பத்தை இவ்வையகம் பெறவேண்டும் எனக் கூவி அழைக்கின்றார்.

காகம் உணவைக் கண்டபோது தான்மட்டும் உண்பதில்லை. மற்றக் காகங்களையும் அழைத்து எல்லாம் ஒன்றாக இருந்து உண்பதைக் காணுகின்றோம் அல்லவா? இதோ 'சிவபோகம்' என்னும் சிவானுபவப் பேரின்ப வெள்ளம் எங்கும் பொங்கிவழிந்து நிறைவாக உள்ளதே! நம்முடைய தேகம் அழியுமுன் அந்த இன்ப வெள்ளத்தினை உண்ணுதற்குச் சேரவாரும் செகத்தீரே என வேண்டுவார் தாயுமானார்.

காகம் உறவு கலந்து உண்ணக்
கண்டீர் அகன்டா காரசிவ
போகம் எனும் பேரின்ப வெள்ளம்
பொங்கித் ததும்பிப் பூரணமாய்
ஏகஉருவாய்க் கிடக்குது ஐயோ
இன்புற்றிட நாம் இனிஎடுத்த
தேகம் விழுமுன் புசிப்பதற்குச்
சேரவாரும் சகத்தீரே

என உலகினரை அழைக்கும் தாயுமானாரின் அருள் உள்ளம் எண்ணி மகிழத்தக்கதாய் இலங்குகின்றது.

'உடையாய்! என்னைக் கண்டுகொள்ளே' என்று இறைவனிடம் கெஞ்சுவதுபோல இறைவனுக்குத் தொண்டு செய்யும் குழுவில் தம்மையும் சேர்த்துக்கொள்ளுமாறு கெஞ்சுகின்றேன். உன்னைப் பலவாறு துதித்துப் போற்றிப் பாடினேன்; நாடிநாடி விரும்பியே கூவினேன்; மெய்சிலிர்த்து இருகை கூப்பி, கண்கள் நீர்சொரிய வேண்டினேன். நான் இரும்புக்கு ஒப்பான கல்மனக் கள்வன் ஆனாலும் உன்னை மறந்தது உண்டோ? நான் உன் அடிமையல்லவா? என்னைக் கைவிடுதல் நியாயமாகுமா? உன் அடியார்களுடன் ஒருவனாக என்னைச் சேர்த்துவிடு' என வேண்டி வேண்டிப் பாடுவார்.

அரும்பொனே மணியே என்அன்பே என்அன்பான
அறிவே என் அறிவில் ஊறும்
ஆனந்த வெள்ளமே என்றுஎன்று பாடினேன்
ஆடினேன் நாடிநாடி

விரும்பியே கூவினேன், உலறினேன், அலறினேன்
மெய்சிலிர்த்து இருகை கூப்பி
விண்மாரி எனஎன் இருகண்மாரி பெய்யவே
வேசற்று அயர்ந்தேன் யான்
இரும்புநேர் நெஞ்சகக் கள்வன் ஆனாலும் உனை
இடைவிட்டு நின்றது உண்டோ?
என்றுநீ அன்று நான் உன் அடிமை அல்லவோ?
யாதேனும் அறியாவெறும்
துரும்பனேன் என்னினும் கைவிடுதல் நீதியோ
தொண்டரொடு கூட்டு கண்டாய்
சுத்த நிர்க்குணமான பரதெய்வமே பரஞ்
சோதியே சுகவாரியே

என்று தாயுமானார் இறைவனை நெக்குருகியும் நெகிழ்ந்தும் வேண்டுவது படிப்போரை உணர்ச்சி வயப்படுத்தும்.

சைவசமயம் ஒன்றே உண்மையான சமயம்; அச்சமயம் ஆதிமுதல்வனாகிய பழம்பொருளை வெளிப்படையாகக் காட்டி நிற்கும். இவ்வுண்மையைக் கைவிட்டுப் புறச்சமய நெறியினிலே ஒழுகவேண்டா. முக்தி தரும் அத்தெய்வசபையைக் காண்பதற்குச் 'சேரவாரும் செகத்தீரே' என்று வேண்டுகோளும் விடுப்பார்.

சைவ சமயமே சமயம்
சமயாதீதப் பழம் பொருளைக்
கைவந்திடவே மன்றுள் வெளி
காட்டும் இந்தக் கருத்தைவிட்டுப்
பொய்வந்து உழலும் சமயநெறி
புகுத வேண்டாம்; முக்திதரும்
தெய்வ சபையைக் காண்பதற்குச்
சேரவாரும் சகத்தீரே

எனத் தாயுமானார் உண்மையான நெறி எது எனவும் இப்பாடலில் புலப்படுத்துவார்.

தாயுமானாரைப் போற்றி மகிழ்ந்தவர் மகாகவி பாரதியார். 'ஒன்று பொருள் அஃது இன்பம் என உயர்ந்தாய் தாயுமானவனே' எனப் பாராட்டுவார். தாயுமானார் பாடிய பாடல்கள் அனைத்தும் பேரின்பம் தருவன என்பதை அவர்தம் வாக்குகளால் அறியலாம். அவரே பேரின்பத்தை நன்கு உணர்ந்தவர்.

எங்கெங்குப் பார்த்தாலும் இன்புருவாய் நீக்கமின்றித்
தங்கும் தனிப்பொருளைச் சாருநாள் எந்நாளோ?

என்று இறைவன் எங்கும் இன்பம் தரும் பேருருவாய் விளங்குவதைச் சுட்டுவார்.

காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி உருகிஉருகிப் பாடிய அருளாளர்களைப் போல 'ஆனந்த இன்பக் கண்ணீர் வருவது' எந்நாள் என ஏங்குவார். எங்கும் நிறைகின்ற பொருளை - இறையை - எப்பொழுதும் எண்ணிக்கொண்டி ருக்கும் இறையனுபவத்தைத் தம்பாடல்கள் மூலம் உணர்ச்சி மீதூரக் காட்டுபவர் தாயுமானார். இறையருளிற்காக ஏங்கித் தவிக்கும் அவர் உள்ளத்தேதான் எத்தனை வினாக்கள்!

'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' என்னும் கூற்றின் நுட்பத்தை ஆராய்ந்தால் - அறிவு என்பது எது, அறியாமை என்பது தான் எது, இவற்றை அறிந்தவர்கள் யார், அறியாதவர்கள் யார், இவற்றை யெல்லாம் உணர்ந்து மௌனமாய் இருந்தவர் யார்? என்னைப் போல் உடம்பெல்லாம் வாயாகக் கொண்டு பிதற்றுபவர் யார்? மனம் என்னும் மாயை எங்கிருந்து உண்டாகின்றது? கொடுமையுடன் இரக்கம் என்பதும் எங்கே? உலகத்தைப் படைத்தவர் யார்? பூதவேறுபாடுகள் எப்படி உண்டாகின்றன? நன்மை தீமையோடு பொறுமையும் பொறாமையும் எவ்விடத்தில் உள்ளன? எவர் சிறியர்? எவர் பெரியர்? உறவானவர் யார்? பகைவர் யார்? இவையெல்லாம் உன்னையன்றி வேறு யார்? எங்கும் நிறைகின்ற பொருளே!' என உள்ளத்தே அலைமோதிக் கொண்டிருக்கின்ற பல்வேறு வினாக்களுக்கும் விடைதேடுகின்றார் தாயுமானார். ஆன்ம ஈடேற்றத்திற்கு அவர் தவித்த தவிப்பை அவருடைய மொழிகள் நமக்குக் காட்டும்.

அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது எனும் பெரிய
    ஆப்தர்மொழி ஒன்று கண்டால்
அறிவு ஆவது எது? சில அறியாமை ஏது? இவை
    அறிந்தார்கள் அறியார்கள் ஆர்?
மௌனமொடு இருந்தது ஆர்? என்போல் உடம்புஎலாம்
    வாயாய்ப் பிதற்றுமவர் ஆர்?
மனது எனும் ஒருமாயை எங்கே இருந்து வரும்!
    வன்மையோடு இரக்கம் எங்கே?
புவனம் படைப்பது என்? கர்த்தவியம் எவ்விடம்?
    பூதபேதங்கள் எவ்விடம்?

பொய் மெய், ஹிதம் அஹிதமே, வருநன்மை தீமையோடு
பொறை பொறாமையும் எவ்விடம்?
எவர் சிறியர்? எவர் பெரியர்? எவர் உறவர்? எவர் பகைஞர்
யாதும் உனை அன்றி உண்டோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர் ஆகி
எங்கும் நிறைகின்ற பொருளே?

இப்பாடலில்தான் தாயுமானார் எத்தனை வினாக்களை - ஐயங்களை எழுப்புகின்றார்? ஆன்மத்தேடலில் பரிபக்குவத்தை அடைவதற்கான முன்னோட்டமாக இவ்வினாக்கள் விளங்குகின்றன. இவ்வினாக்கள் அனைத்திற்கும் ஒரே விடைதான். தாயுமானார் உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்து நெகிழ்ந்து இறுதியில் உரைப்பது இதுதான்: 'யாதும் உனைஅன்றி உண்டா?' என முடிபுரைப்பார். ஆம் 'அவன் அன்றி ஓர் அணுவும் அசையாது' என்பதனை உணர்த்தத்தான் இத்துணை வினாக்களும் விளக்கங்களும். எங்கும் நிறைகின்ற பொருளாக இறைவனைக் கண்டு அனைத்தும் இறையே எனத் தெளிவுறுத்துகின்றார்.

சமயங்கள் இறைவனை எப்படிக் காண்கின்றன? சமரச ஞானியாக விளங்கிய தாயுமானார் அனைத்துச் சமயங்களும் கருதுவது ஒன்றே என்பதைச் சுட்டுகின்றார். சில சமயங்கள் இறையை அன்னையே அன்னையே என்று கூறும். சில தந்தையே தந்தையே என்று கூறும். சில சமயங்கள் பேய் போல அலறிச் சிறிதும் பயனற்றனவாய், பின் விளைவு ஏதொன்றையும் உணராமல் ஒன்றைவிட்டு வேறொன்றைப் பிதற்றும். சில சமயங்களோ சொல்லுதற்கரிய ஒளி என்றும் வெளி என்றும் கூவும். நாதம் முதலிய பிறவற்றையே நிலைகள் என்றும், தனக்கு ஓர் ஒப்புமையில்லாத ஓர் அணு என்றும், முக்காலம் என்றும் கூறும். இறையோ இவற்றின் வேறாக எப்பொழுதும் ஞான இன்பமாகத் திகழும். இறைவனுடைய திருவிளையாடலை என்னென்று கூறுவது? அவருடைய கருணைத் திறம்தான் என்னே! எளிவந்த பிரானின் தன்மையை நம்மைப் போன்றவர்கள் எளிதாக உரைக்க முடியுமோ? ஆம், அந்தப் பரம்பொருள்தான் இம்மை, மறுமை என இரண்டிலும் உயிர்க்கு உயிராக எங்கும் நிறைகின்ற பொருள் என்பார்.

உயர்ந்து விளங்கும் பரம்பொருளை அடைய மனஒருமை வேண்டும், ஆனால், மனம் இடையூறு செய்கிறது. மனம் நம்மை

என்ன செய்யும்? மனம் நம்மைப் பல்வேறு வகைகளில் ஆட்டுவிக்கும். தாய் சொல்லினால் இணங்கி வாராத குழந்தையைத் தொட்டிலிட்டு ஆட்டி அது தூங்கிவிடாத வண்ணம் அதனுடைய தொடையைக் கிள்ளுதல் போல் மனம் ஒன்றில் இச்சையோடு கூடிய நிலையை உருவாக்கும். உண்டாக்கி அழிக்கும். பொல்லாத வாசனை எனப்படும் ஏழுவகையான ஞான சூனிய பூமிக்குள் வந்து தலை சுழன்று ஆடும். கணவனிடம் அடங்காத பெண்போல் தானே வெளிவந்து திரிந்து அலையும். கல்லுக்கும் இரும்புக்கும் வலிமையைக் கூட்டுவிக்கும். காணாமல் கேட்டவற்றைத் தான் கண்டதாகக் காட்டுவிக்கும் வஞ்சம் நிறைந்தது இந்த மனம். இந்த மனத்தை வலிமையற்ற எளியவனால் அடக்கமுடியுமோ? - என்று மனம் கண்டவாறு திரிவதைப் புலப்படுத்தி இறையருள் கூட்டுவிக்க வேண்டும் என்பார்.

சொல்லானதில் சற்றும் வாராத பிள்ளையைத்
தொட்டில் வைத்து ஆட்டி ஆட்டித்
தொடையினைக் கிள்ளல் போல் சங்கற்பம் ஒன்றில்
தொடுக்கும்; தொடுத்து அழிக்கும்
பொல்லாத வாதனை எனும் சப்த பூமியிடை
போந்து தலை சுற்றி ஆடும்;
புருஷனில் அடங்காத பூவைபோல் தானே
புறம்போந்து சஞ்சரிக்கும்;
கல்லோடு இரும்புக்கும் மிகவன்மை காட்டிடும்;
காணாது கேட்ட எல்லாம்
கண்டதாக் காட்டியே அணுவாச் சுருக்கிடும்;
கபடநாடக சாலமோ?
எல்லாமும் வலது இந்த மனமாயை ஏழையாம்
என்னால் அடக்க வசமோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்கு உயிர்ஆகி
எங்கும் நிறைகின்ற பொருளே

என்று மனத்தின் வலிமையையும் அதன் இயல்பையும் சுட்டி அதனை 'மனமாயை' எனச் சுட்டுவது காண்க.

'கண்ணார நீர்மல்கி உள்ளம் நெக்கு உருகாத கள்ளனேன்' என்று கூறி இறைவழிபாட்டில் ஈடுபடாத என்னை அருள்புரிந்து ஆட்கொள்க என வேண்டுகின்றார்.

சாசுவத முக்திநிலை ஈதுஎன்று உணர்த்தியே
சகஜநிலை தந்து வேறு ஒன்று
எண்ணாமல் உள்ளபடி சுகமாய் இருக்கவே
ஏழையேற்கு அருள்செய் கண்டாய்

என்று இறைவனிடம் வேறுஎதனையும் எண்ணாமல் இறையை எண்ணிச் சுகமாய் இருக்க அருள்புரிய இறைஞ்சுவார்.

'சகஜ நிஷ்டைக்கும் என் சிந்தைக்கும் வெகுதூரம்'
நான் ஏகமாய் நின்னோடு இருக்கும் நாள் எந்த நாள்?

என்று ஏங்குவார்.



# 4. சித்தர் கணம்

இந்திய அருளாளர்களில் மரபில் சித்தர்மரபு தனிச் சிறப்புப் பெற்றதாகும். 'சித்தர்' என்பதற்குப் பொருள் கூறும் போது சித்தத்தை - மனத்தைப் புறம்போக விடாது தம் வசப்படுத்தியவர்கள் என்பர். இடைவிடாத யோகப்பயிற்சியால் சித்தர்நிலையை ஞானியர் அடைவர். அப்பயிற்சியால் சிறந்த ஆற்றலையும் வலிமையினையும் பெற்று விளங்குவர். மரபுசார்ந்த பலகலைகளில் அவர்கள் வல்லவர்களாகவும் திகழ்ந்தனர். மருத்துவக்கலையிலும், இரசவாதப் பயிற்சியிலும் சிறந்து விளங்கினர். சம்பிரதாயங்களைக் கண்டித்தனர். சாதிபேதங்களை மறுத்து மனிதநேயம் மிக்க மாண்புடையவர்களாக விளங்கினார்கள். சித்தாந்தம், வேதாந்தம் ஆகியவற்றில் புலமை பெற்றிருந்த அவர்கள் சமரசத்தையும் சன்மார்க்கத்தையும் மக்களுக்கு உணர்த்தியவர்கள். வைதிக நெறியை மறுத்துப் புதிய சிந்தனையை மக்களுக்கு ஊட்டியவர்கள். சீர்திருத்த எண்ணம் கொண்ட அவர்களின் சிந்தனைகள் பக்திநெறியில் புதியமறுமலர்ச்சியை உண்டாக்கின. பண்பாட்டுப் புரட்சியை உண்டாக்கிய அறிஞர்களாகவும் அவர்கள் விளங்கினார்கள்.

இந்தியத் தத்துவமரபில் சித்தர்மரபு காலந்தோறும் இருந்து வருவதை வரலாறு நமக்குக் காட்டும். சமண, பௌத்த மரபுகளிலும் சித்தர்கணம் விளங்குவதைக் காணலாம். தமிழ்நாட்டில் திருமூலர் மரபில் சித்தர்களை உள்ளடக்கி வழிபாடு செய்யும் முறை உண்டு.

சித்தர் சிவலோகம் இங்கே தெரிசித்தோர்
சத்தமும் சத்தமுடிவும்தம் முள்கொண்டோர்
நித்தர் நிமலர் நிராமயர் நீள்பர
முத்தர்தம் முத்தி முதல்முப் பத்தாறே

என்று திருமூலர் சித்தரின் சிறப்பியல்புகளைக் கூறுவர் தம்யோகப் பயிற்சியின் பயனாகச் சிவலோகத்தை இங்கிருந்தே காணும் ஆற்றல் பெற்றவர்கள். நாதத்தையும் நாதாந்தத்தையும் கண்டவர்கள். அழிவில்லாதவர்கள்; குற்றமற்றவர்கள், பிணியற்றவர்கள், மேலான முத்தியை அடைந்தவர்கள். 'யோகச் சமாதி உகந்தவர் சித்தர்' என்று மேலும் திருமூலர் தெளிவுறுத்துவார்.

சித்தர் மரபின் பெருமையை உணர்ந்தவர் தாயுமானார். 'சித்தர் கணம்' என்னும் பகுதியில் சித்தர்களின் பல்வேறு ஆற்றல்களையும் எடுத்துரைப்பார். பல்வேறு நெறிகளையும் ஒன்றுபடுத்திச் சமரசம் கண்ட சித்தர்களின் பண்புநலன்களாகப் பின்வருவனவற்றைக் குறிப்பிடுவார்.

சித்தர்கள் திசைகளைக் கடந்து செல்லும் மனவேகம் போல் ஓடி ஆடி வருபவர்கள். திருமாலைப் போலத் திகழ்பவர்கள்; எழுகடலையும் பருகும் ஆற்றல் பெற்றவர்கள்; இந்திர போகத்தையும், ஐராவத யானையையும் கையில் எடுத்து விளையாடும் திறமை பெற்றவர்கள். ஆகாயத்தையும் கடுகில் துளைத்துக் காட்டும் வல்லமை பெற்றவர்கள். இத்தகைய ஆற்றல் மிகுந்த சித்திகளையெல்லாம் பெற்ற நீங்கள் அடிமையாகிய என் முன் வந்து பலரும் காணும்படி செய்யலாமே! வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலைபெற்ற வித்தகச் சித்தர் கணமே என்று ஒவ்வொரு பாடலிலும் சித்தர்கள் பெற்ற சமரசமன நிலையைத் தெளிவுறுத்துவார்.

' மிக்க சித்திகள் எலாம் வல்லநீர் அடிமைமுன்
விளங்கவரு சித்தி இலீரோ' (சி.க.1)

என வினவுவார்.

சித்தர்களின் ஆற்றலையும் பெருமையையும் உணர்ந்த தாயுமானார் அவர்தம் மேன்மையை எடுத்துக் கூறி இவ்வளவு வல்லமை பெற்ற நீங்கள் அடியேனுக்கு உதவக் கூடாதா எனத் தம்மை முன்னிலைப் படுத்தி மக்களுக்காக வேண்டுவார்.

நிலத்தொடு நீர் ஒடுங்குகின்ற காலத்தில் நீங்கள் ஆகாயத்தில் பொருந்தியிருப்பீர்கள். காலங்களின் முடிவில் செயற்படும் மகாப் பிரளய வெள்ளநீர் பெருக்கெடுக்கும் காலத்தில் மேலே சிவயோக நிலையில் நிற்பீர்கள். மேகங்கள் அனைத்தும் திரண்டுநின்று மழைபொழிந்தால் சந்திரமண்டலத்தில் சஞ்சரிப்பீர்கள்; உலகம்

அழியுமாறு பெருங்காற்று வீசினால் யோகசத்தியால் மேருமலை போல் அசையாது நிற்பீர்கள், உங்களுடைய இத்தகைய ஆற்றலைச் சொல்லவும் எளிதோ என்று வினவுவார். இத்தகைய ஆற்றல் பெற்ற நீங்கள்,

'என் மனக்கல்லை அனல் மெழுகு ஆக்கிவைப்பது அரிதோ?'

என உருகிநிற்பார் தாயுமானார்.

பொய்யே மிகுந்து விளங்குகின்ற உலகநடப்பை எண்ணி வருந்துகின்றார். இவ்வுலகில் என் பொழுதுபோக்குத்தான் என்ன? இந்தப் பொய் உடம்பினைப் பாதுக்காப்பதற்காக உணவினைத் தேடி அலையும் நிலை, உண்டபின் உறங்கும் நிலை. இது பொய் ஒழுக்கம் அல்லவா? இதுவா செய்தற்குரிய தவம் என மனம் வெதும்புவார். ஆனால், வேதாந்த சித்தாந்த சமரச நன்னிலை பெற்ற வித்தகச் சித்தர் கணம் மேகக் கூட்டங்கள் குடைபோன்று நிழலைத் தர, எட்டு மலைகளோடு செம்பொன் மேருவாகிய பெரிய மலையிடத்து யோக தண்டமாகிய கோலை எழுதி வெற்றிக் கொடி நாட்டி அஷ்டாங்க யோகங்கள் உடைய யோக பூமியில் உலவிவரும் ஆற்றலைப் பெற்றவர்களாவர். இத்தகைய ஆற்றல் பெற்ற இவர்கள் வெளிப்படத் தோன்றி அருள்பாலிக்க வேண்டும் என்பார்.

இற்றைநாள் கற்றதும் கேட்டதும்
போக்கிலே போகவிட்டுப்
பொய்உலகன் ஆயினேன் நாயினும் கடைஆன
புன்மையேன் இன்னம் இன்னம்
வீணிலே அலையாமல் மலை இலக்கு ஆக நீர்
வெளிப்படத் தோற்றல் வேண்டும்

என வருந்தி உருகி நிற்பார்.

'எண்ணரிய பிறவிகளுள் மானுடப்பிறவிதான் யாதினும் அரிது அரிதுகாண். இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ? ஏதுவருமோ அறிகிலேன்' என்று இப்பிறவியிலேயே சித்தர் கணம் வழிகாட்டப் பேரின்பம் பெற விரும்புவார் தாயுமானார்.

தாயுமானார் தமக்குமுன்னே தோன்றிய அருளாளர்களின் பாடல்களில் மனந்தோய்ந்தவர். தமிழ் வடமொழி ஆகியவற்றில் பெரும்புலமை பெற்றவர். தத்துவ ஞானம் கைவரப் பெற்றவர். இத்தகைய புலமைமிக்க அருளாளர் தாயுமானார், இவ்வறிவு

நாட்டத்தைவிட உண்மை நாட்டத்தை - மெய்யுணர்வு நாட்டத்தை விரும்பியவர்.

கற்றும் என்பலன் கற்றிடும் நூல்முறை
சொற்ற சொற்கள் சுக ஆரம்பமோ?

எனக் கற்ற நூல்களும், சொன்ன சொற்களும் சுகத்தைக் தருமா என உருகிநிற்பார். கற்ற நெறியிலே நின்று நிருவிகற்பச் சுகத்தைப் பெற வேண்டுமே என உயர்ந்த எண்ணத்தோடு வாழ்ந்தவர் தாயுமானவர்.

திருமுறையில் மனம் தோய்ந்தவர். மூவர் தேவாரத்தை மனம் உருகிக் கற்றவர். மூவர் தேவாரத்தை ஏற்று மகிழ்ந்த இறைவன் என்னுடைய எளிய பாடல்களையும் திருச்செவியில் ஏற்று மகிழ்வாரா என்று ஏங்குகின்றார்.

தேவரெலாம் தொழச் சிவந்த செந்தாள்முக்கண்
செங்கரும்பே மொழிக்கு மொழி தித்திப்பு ஆக
மூவர் சொலும் தமிழ்கேட்கும் திருச் செவிக்கே
மூடனேன் புலம்பிய சொல் முற்றுமோ தான்

என்று தித்திக்கத் தித்திக்கத் தமிழ் தந்த மூவரின் மொழிக்கு என் மொழி இணையாகுமோ எனக் கேட்கும் தாயுமானாரின் மனநிலையை என்னென்பது!

இறைவனுடைய அருளால் பாடப்பெற்ற பாடல்கள் மூவர் பாடிய இன் சுவைப் பாடல்கள். கருப்பஞ் சாற்றின் சுவைபோல முக்கனிகளின் இன்சுவைபோல, நா ஊறும் கற்கண்டவை போன்றவை அப்பாடல்கள். ஆனால், என்னுடைய பாடல்களோ இருளுக்கும் ஒளிக்கும் இடம் ஒன்றாயிருத்தல்போல அறியாமைக்கும் அறிவுக்கும் இடம்ஒன்றாக வாய்க்கப் பெற்றதாகும் என்பார்.

கன்னல் அமுது எனவும் முக்கனி எனவும், வாய் ஊறு
கண்டு எனவும் அடி எடுத்துக்
கடவுளர்கள் தந்தது அல; அமுது அமுதுபேய்போலக்
கருத்தில் எழுகின்ற எல்லாம்
என்னது அறியாமை அறிவு என்னும்இருபகுதியால்
ஈட்டு தமிழ்

எனச் சுட்டுவார்.

ஆனாலும் உலகத்தார் என்னுடைய இத்தமிழ்மாலையைப் படிக்குந்தோறும் பேரன்புகாட்டிக் குற்றம் கூறார். சித்த கணங்களே

அழுதழுது கூறிய அடியேனுடைய தமிழ்ப்பாடலின் அருமையினை அறிந்த உலகினர் 'இங்ஙனம் பாடியவன் யாவன்?' என உங்களை வினவ, நீங்கள் 'அவன் சிறிது சாந்த குணம் உடையவன் என்று சொல்லக் கேட்டு அவர்கள் மகிழ, அச்சொல்லினை நான் கேட்டு மகிழ்வது எந்த நாளோ' என மனம் உருக வேண்டுவார்.

' என் தமிழினுக்கு
இன்னல் பகராது உலகம் ஆராமை மேலிட்டுப்
இருத்தலால் இத்தமிழையே சொன்னவன்யாவன் அவன்
முக்திசித்திகள் எலாம்
தோய்ந்த நெறியே படித்தீர்
சொல்லும் என அவர்; நீங்கள் சொன்ன அவையில் சிறிது
தோய்ந்த் குண சாந்தன் எனவே
மின்னல் பெறவே சொல்ல அச்சொல்கேட்டு அடிமை மனம்
விகசிப்பது எந்நாளோ'

என்பது தாயுமானாரின் விருப்பமாகும்.

மனம் சுழன்று சுழன்று ஆடுகின்ற காற்றாடி போல உலக இச்சைகளின் பின்னே சுழன்றுகொண்டே யிருக்கின்றது. அவற்றினின்றும் மீள முடியாமல் தவிக்கின்றது. அவ்வாறு ஓடும் மனத்தைத் தடுத்துத் திருவருளில் திளைக்க முடியவில்லையே எனவருந்துகின்றார் தாயுமானார்.

ஆணிலே பெண்ணிலே என்போல ஒருபேதை
அகிலத்தின் மிசை உள்ளதோ

என்று தம்மைத் தாமே நொந்துகொண்டு வருந்துவார். மானுடப் பிறப்பின் நோக்கம் திருவருளை அனுபவித்தலாகும். அத்திருவருளை அடைதற்கு மனவடக்கமும் யோகப்பயிற்சியும் வேண்டும்.

ஆடிய கறங்கு போல் ஓடி உழல் சிந்தையை
அடக்கியொரு கணமேனும் யான்
காணிலேன்

என்று மன அடக்கத்தை வலியுறுத்தவார்.

திருவருளை அல்லாது மௌனியாய்க் கண்மூடி, பிராணவாயுவைத் தடுத்து, கலைகள் நிறைந்த சந்திரனைத் தொடுமாறு மூலவெங்கனலை எழுப்பும் பயிற்சியையும் பூணாது

இருக்கின்றேனே என்று வருந்துவார். இத்தனை நாளும் கற்ற கல்வியையும் கேட்டுப் பெற்ற கேள்வியறிவையும் அவை செல்லும் வழியிலேயே விட்டுவிட்டுப் பொய்யுலக வாழ்க்கையில் வாழ்ந்து துன்புறுகின்றேன் என்று கலங்குவார்.

வீணிலே அலையாமல் மலை இலக்காக நீர்
வெளிப்படத் தோற்றல் வேண்டும்

எனச் சித்தர்கூட்டத்தை விரும்பி அழைக்கின்றார் தாயுமானார்.

மறைந்து வாழும் சித்தர்கள் தோற்றத்தில் எவ்வாறு இருப்பார்கள்? அளவுகடந்த ஆற்றல் பெற்ற அவர்கள் ஞானப்பயிற்சியும் யோகப்பயிற்சியும் பெற்றவர்கள். தாயுமானார் அவர்தம் தோற்றத்தை நம்முன் நிறுத்த அவர்களைத் 'தவராச சிங்கம்' என உருவகப்படுத்திக் காட்டுவார். விலங்குகளில் மேம்பட்டு விளங்குவது சிங்கம். மாந்தருள் மேம்பட்டு விளங்குபவர் சித்தர். தோற்றத்தின் அமைப்பில் இருவரும் எவ்வாறு பொருந்தி விளங்குகின்றனர்? தாயுமானார். இதோ தம் பாடலில் பின்வருமாறு அழகுறக் கூறுவார்:

பொற்பினொடு கைகாலில் வள் உகிர் படைத்தலால்
போந்து இடை ஒடுக்கம் உறலால்
பொலிவான வெண்ணீறு பூசியே அருள் கொண்டு
பூரித்த எண்ணீர்மையால்
எற்பட விளங்கு ககனத்தில் இமையா விழி
இசைந்து மேல் நோக்கம் உறலால்
இரவுபகல் இருள்ஆன கனதந்திபடநூறி
இதயம் களித்திடுதலால்
பற்பல விதம் கொண்ட புலிகலையின் உரியது
படைத்து ப்ரதாபம் உறலால்
பனிவெயில்கள் புகுதாமல் ரெடிய வான்தொடர்நெடிய
பருமரவனங்கள் ஆறும்
வெற்பினிடை உறைதலால் தவராஜ சிங்கம் என
மிக்கோர் உமைப் புகழ்வர் காண்

என்று சித்தர்களைத் 'தவராஜ சிங்கம்' எனப் போற்றுவார்.

தவராசனாகிய சித்தருக்கும் வனராசனாகிய சிங்கத்திற்கும் இடையே உள்ள ஒற்றுமைகளைத் தாயுமானார் அழகுறப் புலப்படுத்துகின்றார்

சித்தர்களுடைய ஒடுங்கிய இடை, நீண்ட சடைமுடி, நீண்ட தாடி ஆகியவற்றிற்கு இணையாகச் சிங்கத்தின் இடையும், பிடரியும் அழகுடன் விளங்குகின்றன.

சிங்கம் தன் கூர்மையான நகங்களால் காரிருளிலும் வலிய யானையைக் கொல்வதுபோலத் தவராசனாகிய சித்தரும் அஞ்ஞான இருளாகிய யானையை அழிக்கின்றனர்.

நடுஇரவிலும் சிங்கத்திற்குக் கண் தெரிவதுபோலத் தவராஜரும் ஞானக்கண் கொண்டு பார்க்கும் வல்லமை பெற்றவர்

சித்தர்களும், சிங்கங்களும் பனிவெயில் புகாத நெடிய வனங்களிடையேயும் குகைகளினிடையேயும் வாழ்கின்றனர்

சித்தர்களைத் 'தவராச சிங்கம்' என அரிய தொடரால் சுட்டி அவர்தம் ஆற்றலையும் மேன்மையையும் தாயுமானார் அழகுறப் புலப்படுத்தியுள்ளார்.

கற்றதனாலாய பயன் வாலறிவனைத் தொழுதல் என்றார் வள்ளுவப் பெருந்தகை. கலைகளைக் கற்றுத் தேர்ந்தும் மன அமைதிபெறாத நிலையில் தாம் கற்ற கல்வியையும் நொந்து கொள்கின்றார் தாயுமானார். தாயுமானார் நூலறிவைப் பெரிதாக மதிக்கவே இல்லை போலும். உயர்ந்த தத்துவ அறிவை வடமொழி, மூலம் பெற்ற நிலையிலும் அதனை எண்ணிப் பார்க்கின்றார் தாயுமானார். இந்த அறிவினால் இறைவனை அடைய முடியவில்லை யெனில், அந்த அறிவால் என்ன பயன் என்று எண்ணிப் பார்த்தவருக்கு அரிய உவமை நினைவிற்கு வருகின்றது.

நூல் ஏணி விண் ஏற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவிநன்னூல் போதம் பராபரமே

என்று கூறுவார். விண்ணில் ஏறுவதற்கு நூலால் ஆகிய ஏணியைப் பயன் படுத்தவேண்டும் என்று எண்ணி, ஒருவன் நூலுக்காக பருத்தியைப் பயிரிட்டுக் கொண்டுள்ளான். நூல் ஏணியால் விண்ணேற முடியுமா? அது போன்றதுதான் கல்வியும் என்கின்றார்.

கலை ஞானங்கள் அனைத்தும் சிறுவர்கள் மண்ணால் சோறு அமைத்து விளையாடுகிறார்களே, அதுபோன்றது தான் என்பார். மண்ணால் சோறு அமைத்து மகிழ்ச்சி கொள்வது உண்மையான பயனுடைய மகிழ்ச்சியாகுமா என்று வினவுகின்றார்.

சின்னஞ் சிறியார்கள் செய்த மணற் சோற்றை ஒக்கும்
மன்னுங் கலை ஞான மார்க்கம் பராபரமே

என்று பராபரக் கண்ணியில் குறிப்பிடுவார். வாசக ஞானத்தால் வருமோ சுகம் என்பார். வாசகஞானம் வெறும் பூசல்களையே விளைவிக்கும் என்று தெளிவுறுத்துவார்.

கல்வி பெற்றவர்களையும் கல்விபெறாதவர்களையும் எண்ணிப் பார்த்த தாயுமானார் 'கல்லாதபேர்களே நல்லவர்கள், நல்லவர்கள்' என்கின்றார், தாயுமானார் ஏன் இப்படிச் சிந்தித்தார்! புலமைச் செருக்கு ஒருவரை எந்த அளவிற்கு மாற்றும் என்பதை அவர் அழகுற விளக்குவார்.

கல்வி கற்காதவர்கள் வீணான வாக்குவாதங்களில் ஈடுபட மாட்டார்கள், கற்றும் ஞானம் பெறாத என் கர்மத்தை என் சொல்வேன் என வருந்துவார்.

கைவல்ய பதவியைத் தரும் ஞானநீதியை நல்லவர்கள் கூறினால், கருமம்தான் மூக்கியம் என்று வாதம் செய்து நிலை நாட்டுவேன். கருமத்தை நிலைநிறுத்திக் கூறினால்இல்லை இல்லை ஞானம்தான் முதன்மையானது என்று கூறி முடிவுகாட்டுவேன்.

வடமொழியில் ஒருவர் வந்து கருத்துக்களைக் கூறினால் தமிழிலிருந்து வந்ததாய் விவகாரம் செய்வேன். தமிழில் வல்லவன் வந்தால் வடமொழியிலிருந்து மேற்கோள் காட்டுவேன். எல்லோரையும் மருளும்படி வித்தைசெய்வதில் தேர்ந்தேனே அல்லாமல் இந்த வித்தைகள் எனக்கு முத்தியைத் தந்தனவா என்று சித்தகணத்திடம் வினவிக் கல்லாதவர்களே நல்லவர்கள், நல்லவர்கள் என விளக்கம் காட்டுவார் தாயுமானார். அப்பாடல் வருமாறு:

கல்லாத பேர்களே நல்லவர்கள் நல்லவர்கள்
கற்றும் அறிவு இல்லாத என்
கர்மத்தை என் சொல்கேன் மதியை என் சொல்லுகேன்
கைவல்ய ஞான நீதி
நல்லோர் உரைக்கிலோ கர்மம் முக்கியம் என்று
நாட்டுவேன் கர்மம் ஒருவன்
நாட்டினாலோ பழைய ஞானம் முக்கியம் என்று
நவிலுவேன் வடமொழியில்

வல்லான் ஒருத்தன் வரவும் த்ராவிடத்திலே
வந்ததா விவகரிப்பேன்
வல்ல தமிழ் அறிஞர்வரின் அங்ஙனே வடமொழியின்
வசனங்கள் சிறிது புகல்வேன்
வெல்லாமல் எவரையும் மருட்டி விட வகைதந்த
வித்தைஎன் முக்தி தருமோ!
வேதாந்த சித்தாந்த சமரசநன் னிலைபெற்ற
வித்தகச் சித்தர் கணமே.

தாயுமானாரின் வாழ்க்கை அனுபவப் பிழிவு இப்பாடலால் புலனாவதைக் காணலாம். கற்ற கல்வி அறிவுக் குழப்பத்தை உண்டுபண்ணக் கூடாது என்பதும் உண்மையான கல்வியின் பயன் என்ன என்பதும் இதனால் நன்கு புலனாகின்றன.





# 5. சித்தாந்தம்

மனிதப் பண்பை மானுடத்தை உயிராகக் கொண்டு விளங்கும் பெருஞ் சமயங்களுள் ஒன்று சைவசித்தாந்தம். சமயங்கள் மனிதவாழ்க்கையை மானுடப் பண்பை மேம்படுத்துவதற்காகவே தோன்றின. 'மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம்' எனும் வாழ்விற்கு கோட்பாட்டை உருவாக்கியவர்கள் நம் அருளாளப் பெருமக்கள்.

வையத்துள் வாழ்வாங்கு வாழ்ந்து தெய்வப் பண்பை அடையும் நெறியைச் சுட்டுவது சமயத்தின் நோக்கமாகும். வாழ்வை உயர்த்தி மனிதனை மனிதனாக வாழ்வதற்குரிய வாழ் நெறிகளைச் சுட்டி வழிப்படுத்தும் நெறி சைவநெறியாகும்.

சைவசித்தாந்த தத்துவமும் சமயமும் ஒன்றோடொன்று இணைந்து சமுதாயத்தை மேம்படுத்தும் சாதனங்களாகத் திகழ்கின்றன. மனிதவாழ்வின் விழுமிய நிலையைச் சித்தாந்தம் எடுத்துரைக்கும். 'தானமும் தவமும் செய்வாராயின் வானவர் நாடும் வழி திறந்திடுமே' என்னும் வாக்கு எண்ணத்தக்கது. இந்தியத் தத்துவ அறிஞர் டாக்டர் இராதாகிருஷ்ணன் 'சமயம் என்பது ஒருவாழ்க்கை வழி' என்று கூறுவது குறிப்பிடற்குரியது.

சைவசித்தாந்தம் மனிதமனத்தைப் புனிதமாக்க நல்ல மனப்பாங்கை அமைத்துக் கொடுப்பதில் முதன்மை இடத்தை வகிக்கின்றது. இறைவழிபாடு, தியானம், விரதம், நோன்பு போன்ற சமயாசாரச்செயல்கள் ஒவ்வொருவரது உளத்தையும் பக்குவப்படுத்தும்,

ஒழுக்கம் அன்பு அருள் ஆசாரம் உறவு மூலம்
வழுக்கிலாத் தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை

அழுக்கிலாத் துறவு அடக்கம் அறிவோடு அருச்சித்தர் ஆதி
இழுக்கிலா அறங்களானால் இரங்குவான் பணியறங்கள்

என அருள் நந்தி சிவாச்சாரியார் கூறுவதும் காண்க.

வாழ்வின் நெறிகளுக்கு ஏற்ப அனைவரும் உயர்நிலையை அடையலாம் எனச் சிந்தாந்தம் கூறும். இவ்வகையில் சரியை, கிரியை, யோகம், ஞானம் எனும் நான்கு பாதங்கள் சுட்டப்படுகின்றன. மேலும் உறவுநிலையை அடிப்படையாகக் கொண்டு தாசமார்க்கம், சற்புத்திரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனும் நான்கு மார்க்கங்களும் கூறப்படுகின்றன.

சன்மார்க்ம் சகமார்க்கம் சற்புத்திர மார்க்கம்
தாதமார்க்கம் என்றும் சங்கரனை அடையும்
நன்மார்க்கம் நால்அவைதாம் ஞானம் யோகம்
நற்கிரியா சரியையென நவிற்றுவதும் செய்வர்

என்று சிவஞான சித்தியார் கூறும்.

தாயுமானார் 'நல் சரியை, கிரியை யோகம் எனும் மூன்றதாய் மேவுகின்ற சௌவுபான நெறி' என்பார் (சௌவுபானம் - படிகள்) 'எங்கும் நிறைகின்ற பொருள்' என்னும் பகுதியில் 'எனக்கு இனிச் சரியை ஆதிகள் போதும்' என்றும் கூறுவார்.

தாசமார்க்கம் இறைவனைத் தலைவனாகவும் தன்னை அடிமையாகவும் எண்ணி வழிபடுதலாம். உடலை வருத்திக் திருத்தொண்டில் ஈடுபடுவர். திருவலகிடுதல், திருமெழுகிடுதல், திருவிளக்குகேற்றல் நந்தவனம் அமைத்தல், பூமாலை மூதலியன கட்டிச் சாத்துதல், பூசனைபுரிதல் என்னும் செயல் நெறிகளைக் கொண்டதாகும். இதனைச் சரியை என்பர்.

எளியநல் தீபமிடல் மலர் கொய்தல்
அளிதின் மெழுகல் அது தூர்த்தல் வாழ்த்தல்
பணி மணி பற்றல் பன்மஞ்சனமாதி
தனித் தொழில் செய்வதுதான் தாசமார்க்கமே

என்று கூறுவர். சரியா பாதத்தில் ஆற்றும்வினை மிகஎளிமையானதாகும். திருநாவுக்கரசரின் பதிகத்தில் இதனைக் காண்கிறோம்.

நிலைபெறு மாறெண்ணுதியேல் நெஞ்சே நீவா
நித்தலும் எம்பிரானுடைய கோயில் புக்குப்

புலர்வதன் முன் அலகிட்டு மெழுக்குமிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்தும் ஆடி

எனவும்,

பெரும்புலர் காலை மூழ்கிப் பித்தர்க்குப் பித்தாகி
அரும்பொடு மலர்கள் கொண்டு ஆங்கன்வத்தை உள்ளேவைத்து
விரும்பு நல்விளக்குத் தூபம் விதியினாலிட

எனவும் பரவும் நிலையைப் பார்க்கின்றோம். இந்நிலைக்குரியேன் சாலோகம் என்னும் முத்திநிலையைப் பெறுவர் என்பர்.

இறைவனைத் தந்தையாக நினைந்து வழிபடும் நெறி சற்புத்திரமார்க்கம்.

பூசித்தல் வாசித்தல் போற்றல் செபித்திடல்
ஆசற்ற நற்றவம் வாய்மை அழுக்கின்மை
நேசித் திட்டன்ன மும்நீசுத்தி செய்தல் மற்று
ஆசற்ற சற்புத்திர மார்க்கமாகுமே

இதனைக் கிரியை என்பர். உள்ளன்போடு இறைவனை நினைந்து அர்ச்சித்துப் பூசனைகள் ஆற்றி அன்னமளித்து அன்புடன் தொழுது துதித்தலாகும். இந்நெறிநிற்போர் சாருபப்பதவி எய்துவர் என்பர்.

சகமார்க்கம் என்பது இறைவனைத் தோழனாகப் பாவிப்பது இயமம், நியமம், ஆசனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணம், தியானம், சமாதி என்னும் அட்டாங்க நிலைகளை யோக நெறி என்பர். யோகம் என்பது ஐம்பொறிவழியே மனத்தைச் செல்லவிடாது ஒருமுகப்படுத்துவது அல்லது தியானிப்பது எனலாம்.

எல்லாம் உதவும் உனை, ஒன்றில்
பாவனை யேனும் செய்து
புல்ஆயினும் ஒருபச்சிலை
ஆயினும் போட்டு இறைஞ்சி நில்லேன்
நல் யோகநெறியும் செய்வேன்
அருள்நீதி ஒன்றும் கல்லேன்

என்று தன் இயலாமையைக் கூறி 'எவ்வாறு பரமே பரகதிகாண்பதுவே'என உருகுவார். இந்நெறி நிற்போர் சாருபப் பதவியை அடைவர்.

சன்மார்க்கம் இறைவனைக் குருவாகவும் தன்னைச் சீடனாகவும் நினைந்து வழிப்படும் நெறி. ஞானம் என்பது குருவினுடைய அருளால் அஞ்ஞானம் அகன்று பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள் உண்மையை அறிதலாகும். இந்நெறிநிற்போர் சிவசாயுச்சியம் பெறுவர்.

சந்தானகற்பகம் போல் அருளைக் காட்டத்
தக்கநெறியேதான் சன்மார்க்கம்

என்பார் தாயுமானார்.

சன்மார்க்க ஞானமதின் பொருளும் வீறு
சமய சங்கேதப் பொருளும் தான்ஒன்று ஆகப்
பன்மார்க்க நெறியினிலும் கண்டது இல்லை
பகர்வு அரிய தில்லை மன்றுள் பார்த்தபோது அங்கு
என்மார்க்கம் இருக்குது எல்லாம் வெளியே என்ன
எச் சமயத்தவர்களும்வந்து இறைஞ்சா நிற்பர்
கல்மார்க்க நெஞ்சம் உள எனக்கும் தானே
கண்டவுடன் ஆனந்தம் காண்டல் ஆகும்

என்று தாயுமானார் இப்பாடலில் கொள்கை வேறுபாடு உடைய சமயவாதிகள் மேலான நிலையில் ஒன்றுபடுகின்றனர் என்பார்.

தாயுமானார் வேதங்களையும் ஆகமங்களையும் நன்கு பயின்றவர். திருமுறைகளையும் ஓதி உணர்ந்தவர்; சைவசித்தாந்த சமயாச்சாரியர்களையும் ஆன்றோர்களையும் தம்பாடல்களில் போற்றிப் புகழ்ந்தவர்.

'சீகாழித் துரையே' எனத் திருஞான சம்பந்தரையும் 'தூது சென்றிடவே பொருளை வைத்த நாவலோய்' என்று சுந்தரரையும், 'நம்சிவன் அப்பா என்று அருள் செல்வத் தேவே' என்று திருநாவுக்கரசரையும் தம் பாடல்களில் பாடி மகிழ்கின்றவர் தாயுமானார்.

தேவர் தொழும் வாதவூர்த்தேவே என்பேன்
திருமூலத்தேவே, இச்சகத்தோர் முக்திக்கு
ஆவல் உறச் சிவ என் வாக்குடனே வந்த
அரசே, சும்மா இருந்து உன் அருளை சாரப்
பூவுலகில் வளர் அருணகிரியே, மற்றைப்
புண்ணியர்காள்

என்று மாணிக்கவாசகரையும், திருமூலரையும், சிவவாக்கியரையும், அருணகிரியாரையும் நினைந்து உருகுபவர் தாயுமானார்.

தாயுமானார் தமக்கு முன்னிருந்த தோத்திரங்களையும், சாத்திரங்களையும் நன்கு பயின்றவராதலால் அவ்வருளாளரின் கருத்துப் பிழிவாக தாயுமானாரின் பாடல்கள் விளங்குகின்றன.

முன்னையோரின் கருத்துகளை ஒதி உணர்ந்த தாயுமானார் சரியை, கிரியை, யோகம் ஆகிய நான்கையும் நன்மார்க்கத்தின் வளர்ச்சிநிலையாக விவரிப்பார்.

விரும்பும் சரியை முதல் மெய்ஞ்ஞான நான்கும்
அரும்புமலர் காய்கனி போலன்றோ பராபரமே

என உரைப்பார். மானுடவாழ்வு நல் வாழ்வாய் அமைதற்கு இந்தப் படிநிலைவளர்ச்சி இன்றியமையாதது என்பது தெளிவாகும்.

வேதங்களையும் ஆகமங்களையும் சாத்திரங்களையும் நன்கு பயின்ற தாயுமானார் இவற்றைக் கடந்த நிலையிலும் இறையருளைச் சிந்திக்கின்றார்.

சொல்லும் சமயநெறிச் சுற்றுக்குளே சுழலும்
அல்லல் ஒழிவது என்றைக்கு ஐயா பராபரமே

எனச் சிந்திப்பார்.

பன்முத்திரைச் சமயம் பாழ்படக் கல்லால் அடிவாழ்
சின்முத்திரை அரசைச் சேர்வேனோ பைங்கிளியே

என்று யுக்திக்கு ஒவ்வாத அடையாளங்களையுடைய பலமார்க்கங்களையும் கடந்து சிந்திப்பார்.

கன்மநெறி தப்பில் கடுநர கென் றெந்நாளும்
நன்மைதரு ஞானநெறி நான் அணைவது எந்நாளோ?

என்னதுயான் என்பது அற எவ்இடமும் என் ஆசான்
சந்நிதியாக் கண்டு நிஷ்டை சாதிப்பது எந்நாளோ?

அஞ்சு எழுத்தின் உண்மை அது ஆன அப்பொருளை
நெஞ்சு அழுத்தி ஒன்றுஆகி நிற்குநாள் எந்நாளோ?

குருலிங்க ஜங்கமாக் கொண்ட திருமேனி
அருள்மயம் என்று அன்புற்று அருள் பெறுவது எந்நாளோ?

என்று சிவசாதன ஞானவழியையும், நிஷ்டைவழியையும், ஒன்றாகிநிற்கும் நிலையையும், ஆச்சாரியன், சீவவர்க்கம்,

சிவனடியார்களாகக் கொண்ட திருமேனிகள் அருள்வடிவு என நினைந்து வழிபடும் நெறியையும் உணர்ந்தவர் தாயுமானார்.

ஆன்மதத்துவங்களுடனே கூடிக் காரியப்பட்டுப் பின்னிக் கொண்டு சிக்கலடைந்து கிடக்கிற சகலாவத்தை என்னும் குப்பையில் மூல காரணமாகின்ற சிவபெருமான் ஞானக்கனலை மூட்டுவிப்பது எந்நாளோ என ஏங்குவார்.

**சன்னல் பின்னல் ஆன சகலம் எனும் குப்பையிடை**
**முன்னவன் ஞானக் கனலை மூட்டுநாள் எந்நாளோ?**

என்பார். சன்னல் பின்னல் என்பது நினைப்பும் மறப்பும் ஆகும். நினைப்பும் மறப்பும் அற்ற நிஷ்டை கூட வேண்டும் என்பர். மனம் ஏகாக்கிரம் அடைதல் என்று இதனைச் சுட்டுவர்.

நெற்பயிர் வெயிலில் காய்ந்து பதராவது போல் என்னுடைய பழவினை இறைவன் என்னும் அருள் வெயிலில் காய்ந்து அழிந்துபட்டுப் போகட்டும் என்பார்.

நெருப்பில் வறுத்த விதை மீண்டும் முளைக்காது. அதுபோல் இறைவன் திருவருளில் என்னுடைய வினைகள் யாவும் வெந்து அழிந்து போகட்டும் என்பார்.

சேறு வெயிலில் உலர்ந்து போவதுபோல் சஞ்சிதம், ஆகாமியம், பிராரப்தம் ஆகிய மூன்று வினைகளும் இறைவன் திருவருளில் வெந்து சாம்பாலாகட்டும் என்பார்.

**பைங்கூழ் வினைதான் படுசாவி ஆக எமக்கு**
**எம்கோன் கிரண வெயில் எய்துநாள் எந்நாளோ!**

**குறித்தவிதம் ஆதியால் கூடும்வினை எல்லாம்**
**வறுத்தவித்தாம் வண்ணம் அருள் வந்திடுநாள் எந்நாளோ?**

**சஞ்சிதமே ஆதி சரக்கு ஆன முச்சேறும்**
**வெந்தபொரி ஆக மேவுநாள் எந்நாளோ?**

என்று தத்துவ முறைமை அறிந்த தாயுமானார் எந்நாள்கண்ணியில் உருகி வேண்டுவது குறிப்பிடுதற்குரியது.

நிலத்தைத் திருத்தி நல்லபயிரை விளைவித்தற்கு என்ன செய்யவேண்டும்? காடுபோல் வளர்ந்திருக்கின்ற மரம், கொடிகளை வேருடன் அழித்தல் வேண்டும். நல்லவிதைகளை ஊன்றி நீரைப்பாய்ச்சி விளைந்தபின் பறவைகளின்றும் அவற்றைக் காத்தால் நல்ல விளைச்சலை நாம் அனுபவிக்கமுடியும்.

சிவானுபோகத்தை அனுபவிப்பதற்கும் நிலத்தைப் பண்படுத்துவது போலவே உள்ளத்தையும் பண்படுத்த வேண்டும். தாயுமானார் அழகிய உருவகநடையில் இதனைப் புலப்படுத்துவார்.

இருள் நிறைந்த ஆணவக் காட்டினை வேருடன் அழித்துத் தூய்மையாக்க வேண்டும். அகங்காரம் என்னும் கல்லைப் பிளந்து சுத்தப் படுத்தல் வேண்டும். மோனநிலை என்னும் நல் விதையை ஊன்றி அன்பாகிய நீரைப் பாய்ச்சுதல் வேண்டும். நல்ல விளைச்சலைப் பறவை போன்றவை பறந்துவந்து அழித்து விடலாம். மாயையாகிய அப்பறவை பயிரை அழிக்காத வண்ணம் பாதுகாத்தால் சிவானுபோகம் என்னும் உயர்ந்த விளைச்சலைப் பெறலாம். அவ்வாறு வாழ்ந்து சிவானுபோகத்தைத் துய்த்துவரும் அடியார்கள் கூட்டத்தில் என்னையும் சேர்த்துவிடு என்று தாயுமானார் பரம்பொருளிடம் வேண்டுகின்றார்.

கார் ஆரும் ஆணவக்காட்டைக் களைந்து: அறக்
　　கண்டு அகங்காரம் என்னும்
கல்லைப் பிளந்து, நெஞ்சு அகமான பூமிவெளி
　　காணத் திருத்தி, மேன்மேல்
பார்ஆதி அறியாத மோனம் ஆம் வித்தைப்
　　பதித்து, அன்புநீர் ஆகவே
பாய்ச்சி, அதுபயிர் ஆகும் மட்டும் மாமாயைவன்
　　பறவை அணுகாத வண்ணம்
நேராகநின்று விளைபோகம் புசித்து உய்ந்த
　　நின் அன்பர் கூட்டம் எய்த
நினைவின் படிக்கு நீ முன் நின்று காப்பதே
　　நின் அருள் பாரம் என்றும்
ஆர்ஆரும் அறியாத சூதான வெளியில் வெளி
　　ஆகின்ற துரியமயமே
அண்ட பகி ரண்டமும் அடங்க ஒருநிறைவு ஆகி
　　ஆனந்தம் ஆன பரமே

என்னும் பாடலில் இறைவனை அடைதற்குத் தடையாக இருக்கும் ஆணவம், அகங்காரம் ஆகிய களைகளை நீக்கி மனம் என்னும் நிலத்தைப் பண்படுத்தும் நெறி உருவகமாக்கி அழகுறக் கூறுவார்.

திருநாவுக்கரசர் சிவகதி விளைச்சல்பற்றி அருளிய பாடலும் இங்கு ஒப்புநோக்கத்தக்கது.

மெய்ம்மையாம் உழவைச் செய்து
விருப்பெனும் வித்தை வித்திப்
பொய்ம்மையாம் களையை வாங்கிப்
பொறையெனும் நீரைப் பாய்ச்சி
தம்மையுள் நோக்கிக் கண்டு
தகவெனும் வேலியிட்டுச்
செம்மையுள் நிற்ப ராகில்
சிவகதி விளையு மன்றே

என்னும் தேவாரப் பாடல் உழவு, வித்து, களை, நீர், வேலி, விளைச்சல் என ஆன்மவிளைச்சலை வேளாண்விளைச்சலோடு ஒப்பிடுவதைக் காண்க.

ஆன்மாவின் இயல்பு ஒன்றைப் பற்றுக்கோடாகக் கொண்டு நிற்பதாகும். அது சார்ந்ததன் வண்ணமாக நிற்கும். தீமையின் குறியீடான ஆணவத்தோடு ஆன்மா சார்ந்து நின்றால் தீயவிளைவுகள் ஏற்பட்டுத் துன்புற நேரும். ஆன்மா நன்மையின் குறியீடான இறைவனைச் சார்ந்து சிக்கெனப் பிடித்து நின்றால் பேரின்பப்பேறு கிட்டும். இதனைத் தாயுமானார்,

ஆணவத்தோடு அத்துவித மானபடி மெய்ஞ்ஞானத்
தாணுவினோடு அத்துவிதம் சாரும் நாள் எந்நாளோ?

என இறையின்பப் பேறுபெறும் நாளினை எண்ணி ஏங்குவார்.

ஆணவமலம் செம்பினில் களிம்புபோல் படிந்து உயிர்களின் அறிவை மறைத்துவிடும். இருள் உலகை மறைப்பதுபோல் ஆணவமும் அறிவினை மறைத்துநிற்கும்.

ஒன்றதாய் அநேக சத்தி
உடையதாய் உடனாய் ஆதி
அன்றதாய் ஆன்மா வின்தன்
அறிவோடு தொழிலை ஆர்த்து
நின்றபோத் திருத்துவத்தை
நிகழ்த்திச் செம்பினிற் களிம்பேய்ந்து
என்றும் அஞ்ஞானம் காட்டும்
ஆணவம் இயைந்து நின்றே

என்று சித்தியார் கூறும். இத்தகைய ஆணவத்தினைக் களைந்து இறையோடு சேரும் நாள் எந்நாள் என ஏங்குகின்றார் தாயுமானார்.

உள்ளம் தூய்மையில்லாமல் பொறாமையுடன் உள்ளது. நான் என்கின்ற ஆணவமும், அருளில்லாமையும் என்னுள் உள்ளது. ஆசைஎன்னும் பேய் குடிகொண்டுள்ளது. கொடிய குணங்கள் என்னோடு தங்கியிருக்கின்ற அறிவினோடு இறைவனே! நீயும் வீற்றிருக்கின்றாய். விதி இல்லை என்று சொல்வாயாயில் பூரணன் என்றும், உன் பெயரை விரிக்கில் வேறு உளதோ என்று என்று வினவுவார்.

அவ்வியம் இருக்க, நான் என்கின்ற ஆணவம்
அடைந்திட்டு இருக்க, லோபம்
அருள் இன்மைகூடக் கலந்து உள் இருக்க, மேல்
ஆசா பிசாசமுதலாம்
வெவ்விய குணம் பல இருக்க, என் அறிவூடு
மெய்யன் வீற்றிருக்கு
விதி இல்லை என்னிலோ பூரணன் எனும்பெயர்
விரிக்கில் உரை வேறும் உளதோ?

என்பார்.

அவ்வியம் முதலான தீக்குணங்களின் தொகுதியோடு மெய்யனாகிய இறைவனே நீ வீற்றிருப்பது தகுதியன் றாயினும் பூரணநாமப் பொருள் விரிக்குமிடத்து நீ வீற்றிருந்தே தீர வேண்டும்.

ஆன்மாக்கள் ஆணவம் முதலாய மும்மலத்தினால் கட்டுண்டு இருக்கும்போது அவற்றை நீக்க வேண்டிய ஞான சஞ்சீவி நீதானே என்று இறைவனை உரிமையுடன் சுட்டுவர்.

'க்வ்வுமலம் ஆகின்ற நாகபாசத்தினால் கட்டுண்ட உயிர்கள் மூர்ச்சை கடிது அகல வலிய வரும் ஞான சஞ்சீவி' என இறைவனைப் போற்றுவார். ஆணவம் முதலிய நாக பாசத்தால் கட்டுண்ட உயிர்களை இறைவன்தான் அப்பாசங்களினின்றும் விடுவிக்கும் 'ஞான சஞ்சீவி' என உரைப்பது உளங் கொளத்தக்கது.

உயிர்களைப் பிணைத்து மூடியிருக்கும் தீக்குணங்கள் அகன்றால்தான் இறைப்பேறு கிடைக்கும். இறைவனேதான் அம்மலங்களை நீக்க அருள்புரியவேண்டும் என்றும் சைவநெறியின்படித் தன்னுள் இருக்கும் குணங்களைப் பட்டியலிட்டு இறைவனிடம் உருகி இவற்றை நீக்க வேண்டும் என்று வேண்டுகின்றார்.

கொல்லாமை எத்தனை குணக் கேட்டை நீக்கும் அக்
குணம் ஒன்றும் ஒன்றிலேன் பால்
கோரம் எத்தனை பக்ஷபாதம் எத்தனை, வன்
குணங்கள்எத்தனை, கொடிய பாழ்ங்
கல்லாமை எத்தனை அகந்தை எத்தனை மனக்
கள்ளம் எத்தனை உள்ள சற்
காரியம் சொல்லிடினும் அறியாமை எத்தனை
கதிக்கு என்று அமைத்த அருளில்
செல்லாமை எத்தனை, விர்தா கோஷ்டி என்னிலோ
செல்வது எத்தனை, முயற்சி
சிந்தனை எத்தனை, சலனம் இந்த்ரஜாலம் போன்ற
தேகத்தில் வாஞ்சை முதலாய்
அல்லாமை எத்தனை அமைத்தனை உனக்கு அடிமை
ஆனேன் இவைக்கும் ஆளோ?
அண்ட பகி ரண்டமும் அடங்கஒரு
நிறைவு ஆகி ஆனந்தமான பரமே

என்னும் பாடலில் அகந்தை முதலாய பல தீக்குணங்களையும் நான் கொண்டுள்ளேன் என்பார். ஆனால் உன்னைச் சேர வேண்டிய நான் இத்தீக் குணங்களுடன் சேர்ந்திருக்கலாமோ என்று வினவுவார். 'உனக்கு அடிமை ஆனேன்; இவைக்கும் ஆளோ?' என வேண்டி இத்தளைகளினின்றும் விடுபட வேண்டும் என ஏங்குகின்றார்.

கொல்லாமையாகிய குணம் எத்தனை கெட்ட குணங்களைப் போக்கும். அக்குணம் பொருந்தாத என்னிடத்தில்தான் தீக்குணங்கள்? கொடுமையான நடத்தைகள். கல்லாமைக் குணங்கள். கெட்டகுணங்கள், பயனற்ற கூட்டத்தின் சேர்க்கைகள், இந்திரஜாலமான (நிலையற்றமாயை) உடலில் எத்தனை தகாத குணங்கள். இவற்றையெல்லாம் இறைவனே நீக்கிவிட வேண்டாமா? இம்மாயைகளிலிருந்து என்னை முற்றிலும் விடுவித்து உன்னுடைய ஆளாக ஆக்கிக்கொள்ள மாட்டாயோ? என்று உருகிக் கேட்கும் தாயுமானாரின் வினாக்கள் நம்முள்ளும் பொருள் பொதிந்துள்ள வினாக்கள்தாமே;

தன்னைத் தான் ஆத்மபரிசோதனை செய்துபார்ப்பது ஞானியர் மரபு. அதுபோல் ஒவ்வொரு மனிதரும் தங்களிடத்துள்ள குறைகளை நினைந்து பார்த்தால் நல்ல சமுதாயம் உருவாகும்

என்பதில் ஐயமில்லை. தாயுமானார் இத்தகைய சிந்தனைகளைத் தான் உலகியல் நெறிநின்று உரைக்கின்றார்

எத்தனை விதங்கள்தான் கற்கினும் கேட்கினும்தன்
இதயமும் ஒடுங்கவில்லை,
யான் எனும் அகந்தைதான் எள் அளவும் மாற இலை

என்று வருந்துகின்றார். எதைப்பார்த்தாலும் விரும்பும் நிலை என் சித்தமிசை குடிகொண்டது என்பார். பொய்த்த மொழி அல்லால் மருந்துக்கும் கூட மெய்ம்மொழி புகன்றிடேன். ஈகையொடுபொருந்திய இரக்கம் என் ஜென்மத்தும் நான் அறிகிலேன். இத்தகைய குணக்கேடனை அவனியில் எங்காவது கண்டது உண்டா? என்று கேட்கும் தாயுமானாரின் மனநிலை உலகினரின் மனநிலைதானே!

அத்தனை குணக்கேடர் கண்டதாக் கேட்டதா
அவனிமிசை உண்டோ சொலாய்

என்னும் மொழிகளில்தான் எத்தனை ஏக்கம்? உலகினர் நல்லுள்ளத்தைப் பெற்று நல்வாழ்வு வாழவேண்டும் என்பதைத்தான் இவருடைய உருக்கமான பாடல்கள் நமக்குக் காட்டுவன.

ஆனாலும் என் கொடுமை அநியாயம் அநியாயம்
ஆர்பால் எடுத்து மொழிவேன்

என்று நேருக்குநேர் பேசும் உரையாடலின் உருக்கம் நம்மைப்பெரிதும் ஈர்க்கிறது.

என்னுடைய இழிவான குணங்களை எண்ணி அலுத்து என்னை விட்டுவிடலாம் என்று நீ எண்ணலாமா இறைவனே என்று கேட்பார்.

பொய்யினேன், புலையினேன், கொலையினேன், நின் அருள்
புலப்பட அறிந்து நிலையாப்
புன்மையேன், கல்லாததன்மையேன், நன்மைபோல்
பொருள் அலாப் பொருளை நாடும்
வெய்யனேன், வெகுளியேன், வெறியனேன், சிறியனேன்,
வினையினேன் என்று என்னை நீ
விட்டுவிட நினைவையேல் தட்டு அழிவது அல்லாது
வேறுகதி ஏது புகலாய்

என்று எனக்கு உன்னைவிட்டால் யாருமில்லை எனக்கு ஏதுகதி? என்று இறைவனிடம் நெஞ்சுருக வேண்டுவாம்.

நான் நான் இங்கு எனும் அகந்தை எனக்கு ஏன் வைத்தாய்?
நல்வினை தீவினை எனவே நடுவே நாட்டி
ஊன் ஆரும் உடல்சுமை என்மீது ஏன்வைத்தாய்
உயிர்எனவும் என்னை ஒன்றா உள்ஏன் வைத்தாய்

என்று அகந்தையும், உடல் சுமையையும் வெறுத்தொதுக்கின்றார். பக்குவமடைந்த ஞானிகளுக்கு உடலே சுமையாக இறுதியில் மாறிவிடுகின்றதுபோலும்!

'ஐவர் என்று சொல்லப்படுகின்ற புலன்களை வேடர்கள் என்பார். இந்த வேடர்களின் கொட்டமடங்க நான் தவம் செய்திருக்க வேண்டும். காட்டில்தங்கி, மலையில் வசித்து சருகு முதலானவற்றை உண்டு பனிவெயில்களால் உடல்வருந்தித் தவமிருந்திருக்க வேண்டும். சரியை, கிரியை, யோகம் ஆகிய நன்னெறிகளையாவது பின்பற்றி நடந்திருந்தல் வேண்டும். உலகில் பொய்த் தொழிலுக்கு உதவிசெய்யும் புத்தி, யுக்தி, மூகம் (அஞ்ஞானம்) ஆகியவற்றை மெய்ப்பொருள் என மயங்கிநிற்பவன் நான். நல்லருள் பெற்ற உன் அன்பரோடு சேர்ந்து வாழக் கருணை புரிவையோ? என இறைவனிடம் தன் இருளை நீக்குமாறு வேண்டுகிறார்.

ஐவர் என்ற பல வேடர் கொட்டமது
அடங்க மர்க்கடவன் முட்டியாய்
அடவி நின்று, மலை அருகில் நின்று, சருகு
ஆதி தின்று பனி வெயிலினால்

மெய்வருந்து தவம் இல்லை; நல் சரியை
கிரியை யோகம் எனும் மூன்றதாய்
மேவுகின்ற சவுபான நன்னெறி
விரும்பவில்லை; உலகத்திலே

பொய் முடங்கு தொழில் யாது அதற்குநல
சாரதித் தொழில் நடத்திடும்
புத்தி, யூகம், அறிவுஅற்ற மூகம் இவை
பொருள் எனக் கருதும் மருளன் யான்

தெய்வ நல் அருள் படைத்த அன்பரொடு
சேரவும் கருணை கூர்வையோ?
தெரிவதற்கு அரிய பிரமமே அமல
சிற்சு கோதய விலாசமே

'ஐவர் என்ற புலவேடர்', 'பொய் முடங்கு தொழில்', 'சாரதித்தொழில்' என்னும் பொருட் செறிவு மிகுந்த சொற்கள் இங்குப் பெரிதும் கருதத்தக்கன.

இறைவன் ஐம்புலவேடர்களால் துன்புற்றுவருந்தும் உயிர்களைக் குருவடிவாக எழுந்தருளி இறைப் பேறு நல்குவான் அருணந்தி சிவனார் அரிய உவமையால் இதனைத் தெளிவுறுத்துவார். வேடர்குழுவில் தான் இன்னார் என்றறியாத நிலையில் அரசகுமாரன் வாழ்ந்து வருகின்றான். அப்பொழுது அரசன் அவனைமீட்டு அழைத்துப்போய் இராசபோகத்தை அனுபவிக்கச் செய்கின்றான். அதுபோல் ஐம்புலன்களால் துன்புறும் உயிரை மீட்டுப்பேரின்பம் நல்குவான் இறைவன் என்பார்.

மன்னவன்தன் மகன் வேடர் இடத்தே தங்கி
வளர்ந்தவனை அறியாது மயங்கி நிற்பப்
பின்னவனும் என் மகன்நீ என்றவரிற் பிரித்துப்
பெருமையோடும் தானாக்கிப் பேணுமா போல்
துன்னிய ஐம்புலவேடர் சுழலிற் பட்டுத்
துணைவனையும் அறியாது துயருறுந் தொல்லுயிரை
மன்னும் அருட் குருவாகி வந்து அவரின் நீக்கி
மலம் அகற்றித் தானாக்கி மலரடிக் கீழ்வைப்பன்

என்பர் அருள் நந்தி சிவனார்.

மலங்களில் சிக்குண்டு துன்புறும் உயிரினை மீட்பது இறைவனின் திருவருட்டிறமாகும். 'களிம்புதோய் செம்பனைய நான் காண்டக இருக்க நீ ஞான அனல் மூட்டி' என்னைமீட்டாய் என்று தாயுமானாரும் உருகிப் பாடுவதைக் காணலாம்.

கரு மருவு குகையனைய காயத்தின் நடுவுட்
களிம்புதோய் செம்பனைய யான்
காண்டக இருக்க நீ ஞான அனல் மூட்டியே
கனிவுபெற உள்ளுருக்கிப்
பருவம தறிந்துநின் அருளான குளிகைகொடு
பரிசித்து வேதி செய்து

பத்துமாற்றுத் தங்கம் ஆக்கியே பணிகொண்ட
பக்ஷத்தை என் சொல்லுவேன்

என்று குருவருளின் திருவருளால் மலம் நீங்கிப்பெற்ற மாண்பை விவரிப்பார்.

'கொடிய ஆணவ அறை'க்குள்ளே 'பெரிய மாயை'யில் அழுந்தியிருக்கும் சிறியேனான நான் உன்னை அணைந்து சுகமாய் இருப்பது இனிஎன்று காண்? என உளமுருகிக் கேட்கின்றார்.

இரும்பு நெருப்பினால் எரிந்து உருகும்போது இரும்பு தெரிவதில்லை: தீமயமாகவே ஆகிவிடுகின்றது. அதுபோல என்னையும் உன்மயமாக ஆக்கு அருள்புரிய மாட்டாயா? என இறைவனிடம் உருகுவார்

குறிகளோடு குணம் ஏதும் இன்றி அனல்
ஒழுக நின்றிடும் இரும்பு அனல்
கூடல் இன்றி அதுவாய் இருந்தபடி
கொடிய ஆனவ அறைக்குள்ளே
அறிவதும் ஏதும்அற, அறிவுஇலாமை மய
மாய் இருக்கும் என்ன

உன் அருளால் ஆண்டுகொள்க என வேண்டுவார்.

நிலையாமை குறித்துப் பழந்தமிழ்ச் சமயவாதிகள் விரிவாக எடுத்துரைத்துள்ளனர். அறநெறி நிற்கும் அருளாளர்களும், அறிஞர்களும் யாக்கை நிலையாமை குறித்து விரிவாகப் பேசியுள்ளனர். தாயுமானார் உடல் நிலையாமைபற்றி அழகுறப் பின்வருமாறு கூறுவர்.

கழுகுகளும் நாய் நரிகளும் சுற்றிவரும் தோல்பையே உடல் என்பார். இரண்டு கால்களும் ஒன்பது வாசல்களும் பெற்ற மன்மதனின் நடனசாலை என்பார். மோகம், ஆசை என்னும் முறிச்சீட்டைச் சேமித்து வைக்கும் பெட்டி ; ஆணவம், கன்மம், மாயை ஆகியன நிறைந்து ஒழுகும் கிணறு; புழுக்கள் நெளியும் வயிறாகிய நரகம்; எமன் இறுதியில் வந்து உடைக்கின்ற ஒரு மண்கலம் இந்த உடல் என்பார். எனவே, இந்த உடலாகிய பொய்ப் பொருளை மெய்ப்பொருள் என்று வாடிநிற்கவோ?

காகமோடு கழுகு அலகை நாய்நரிகள்
சுற்று சோறிடு துருத்தியைக்
கால் இரண்டு நவவாசல் பெற்றுவளர்
காம வேள் நடன சாலையை
மோக ஆசைமுறி இட்ட பெட்டியை; மும்
மலம் மிகுந்து ஒழுகுகேணியை
மொய்த்து வெம் கிருமி தத்துகும்பியை
முடங்கலார் கிடை சரக்கினை

தடிகாரனாகிய எமன் அடித்துடைக்கும் மண்கலம் என்று உருவகத்தால் உளமுருக நிலையாமையை எடுத்துரைப்பார்.

இறைவன் உலகம் இயங்குவதற்கான மூலமுதற் பொருளாவான் எனவே இறைவனை ஆதாரம் என்றும் அந்த ஆதாரத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் அண்டங்கள் அனைத்தையும் ஆநேயம் என்றும் கூறுவர். இந்த ஆதாரம்தான் மூல ஆதாரம். இறைவன் தனக்கு ஓர் ஆதாரமுமின்றித் தான் எல்லாவற்றிற்கும் ஆதாரமாக விளங்குவான். எந்தப் பொருளும் இந்த ஆதாரத்தின் மேல் நிற்கும் உலகம், அண்டம் அனைத்தையும் இயக்கும் மூலகாரணன் இறைவன் என்பது தத்துவம். உயிர்ப்பொருள், உயிரில் பொருள் அனைத்தும் இயங்கக் காரணம் இறைவன் தான். திருமூலர் திருமந்திரத்தில் ‘ஆதாரஆதேயம்’ பகுதியில் இதனை விரிவாக விளக்குகின்றார்.

தாயுமானார் ‘சச்சிதானந்த சிவம்’ என்னும் பகுதியில் ஆதாரஆதேயத்தைப் பற்றிக் கூறுவார். பிரமனை நோக்கி இவ்வகையில் விதித்தது எக்காரணத்துக்காக என்று வினவினால் இது உன் வினையின் கூறுபாடு என்பான். வினை பேச அறியாது. மனத்தை நாடினால் அங்கு அறிவு நிற்கும். அந்த அறிவும் உன்னால் விளக்கப்படுவது. இது பொய் அன்று. தெய்வமறை யாவுமே நீ என்று கூறும். இடம், இடத்தில் நிகழ்கின்ற பொருள் அனைத்தும் ஆதார ஆதேயமான நீதான்; எனவே என்னையும் உலகில் ஆடுமாறு செய்தவன் நீ; ஆடுகின்றவனும் நீ; மௌன ஞானக் கொடையாளனும் நீ ; பெற்றதாய் தந்தை நீ ; எல்லாப் பொருள்களும் நீயே’ என்று இறைவனை ஆதார ஆதேயமாகக் காட்டுவார்.

வேதாவை இவ்வணம் விதித்தது ஏது என்னின், உன்
வினைப் பகுதி என்பன், அந்த
வினை பேச அறியாது. நிற்க இவை மனதால்
விளைந்தால் மனதை நாடில்
போதமே நிற்கும்; அப்போதத்தை நாடிலோ
போதமும் நின்னால் விளக்கம்
பொய் அன்று; தெய்வமறை யாவுமே நீ என்று
போக்குவரவு அற நிகழ்த்தும்
ஆதாரஆதேயம் முழுவதும் நீ ஆதலால்
அகிலமீது என்னை ஆட்டி
ஆடல் கண்டவனும் நீ! ஆடுகின்றவனும் நீ
அருளும் நீ! மௌன ஞான
தாதாவும் நீ ! பெற்றதாய் தந்தை தாமும் நீ
தமரும் நீ! யாவும் நீ காண்
சர்வ பரிபூரண அகண்ட தத்துவமான
சச்சிதானந்த சிவமே

எனத் தத்துவவாதிகள் கூறும் இறைத்தத்துவத்தைத் தாயுமானார் கூறுவார். 'அவனன்றி ஓர் அணுவும் அசையாது' என்னும் தாயுமானாரின் தொடர் இக்கருத்துகளின் பிழிவாக நின்று நம்மை ஈர்க்கிறது.

குமரகுருபரர் பண்டார மும்மணிக் கோவையில் வேதாந்த சித்தாந்த வளர் நிலையைப் பின்வருமாறு குறிப்பிடுவார்.

குடிலை என்னும் தடவியல் நாப்பண்
அருள் வித்திட்டுக் கருணை நீர் பாய்ச்சி
வேதமென்னும் பாதபம் வளர்த்தனை
பாதபமதனில் படுபயன் பலவே
அவற்றுள்
இலைகொண்டு வந்தனர் பலரே இலையொரீஇத்
தளிர்கொண்டு வந்தனர் பலரே தளிரொரீ
அரும்பொடு மலர் பிஞ்சு அருங்காய் என்றவை
விரும்பினர் கொண்டு கொண்டு வந்தனர் பலரே
அவ்வாறுறுப்பும் இவ்வாறு பயப்ப
ஒரும் வேதாந்த மென்றுச்சியிற் பழுத்த

ஆரா இன்பம் அருங்கனி பிழிந்து
சாரங் கொண்ட சைவசித்தாந்தத்
தேன முதத்தருந்தினர் சிலரே

என்று சைவசித்தாந்தத்தை 'வேதாந்தம் என்ற உச்சியிற் பழுத்த ஆரா அருங்கனி சைவசித்தாந்தம்' எனப்போற்றுவர். சிவஞான சித்தியார் 'வேதாந்தத் தீதில் பொருள் கொண்டுரைக்கும் நூல் சைவம்' எனக் கூறும். 'குற்றமிலா வைதிக சைவம்' எனத் துகளறுபோதம் உரைக்கும். வேதாந்தத் தெளிவாம் சைவசித்தாந்த தம் எனச் சிவப்பிரகாசர் கூறுவதும் எண்ணுதற்குரியது.

தாயுமானப் பெருந்தகை 'வேதாந்தச் சித்தாந்த வேறு என்னார்' எனக் கூறுவார். மேலும்

முத்தாந்த வித்தே முளைக்கு நிலமாய் எழுந்த
சித்தாந்த மார்க்கச் சிறப்பே பராபரமே

எனவும் போற்றியுரைப்பார்.

தாயுமானவரின் பாடல்கள் வேதாந்தப் பொருள்பற்றியதா அல்லது சித்தாந்தப் பொருள் பற்றியதா என்பது குறித்த ஆராய்ச்சி தொடர்ந்து. நடைபெற்று வருகின்றது. தாயுமானார் வேதங்களையும், ஆகமங்களையும் சைவச் சான்றோர்களின் படைப்புகளையும் நன்கு பயின்றவர் என்பதனை அவர்தம் பாடல்களில் காண முடிகின்றது.

'சமயம்கடந்த மோன சமரசம்'கண்ட பெருந்தகையாகத் தாயுமானார் காட்சியளிக்கின்றார்.

நல்தெய்வமும் அனந்தம் – பேதம்
திகழ்கின்ற சமயமும் அனந்தம்

எனப் பரிபூரணானந்தத்தில் குறிப்பிடுவார்.

ஆறு சமயங்கள் தோறும் வேறுவேறு ஆகிவிளை
யாடும் உனையாவர் அறிவார்?

என்று ஆனந்தமானபரத்தில் பேசுவார்.

மலைமலையாம் காட்சிகண் காணாமை ஆதி
மறப்பு என்றும் நினைப்பு என்றும் மாயாவாரி
அலைஅலையாய் அடிக்கும் இன்பதுன்பம் என்றும்
அதைவிளக்கும் வினைகள் என்றும் அதனைத்தீர்க்கத்
தலைபல ஆம் சமயம் என்றும

பல்வகைச் சமயங்களைக் குறிப்பிடுவார். 'பன்முகச் சமய நெறி படைத்தவர்' என்று சிற்சாகோதய விலாசத்தில் சுட்டுவர்.

எனவே, சமய நெறிகள் பலவற்றையும் அறிந்தவர் தாயுமானார் என்பது அவர்தம் பாடல்களால் புலனாகின்றன.

கடவுளின் மாட்சியைத் தாயுமானார் 'சின்மயானந்த குரு'வில் பின்வருமாறு போற்றுவார்:

ஐவகை எனும் பூதமாதியை வகுத்து அதனுள்
அசரசர பேதம் ஆன
யாவையும் வகுத்துநல் அறிவையும் வகுத்துமறை
ஆதிநூலையும் வகுத்துச்
சைவமுதல் ஆம் அளவில் சமயமும்வகுத்து மேல்
சமயம் கடந்த மோன
சமரசம் வகுத்த நீ

என இறைவனை சமயம் கடந்த மோன சமரசம் வகுத்தவராகக் காட்டுவார். சமரச சன்மார்க்கத்திற்கு வழிகாட்டிய தத்துவ அறிஞராகத் தாயுமானார் திகழ்கின்றார்.



# 6. குரு வணக்கம்

பாசநீக்கத்திற்குக் குருவருள் துணை இன்றியமையாதது. ஆன்மாக்கள் மெய்ப்பொருளை அறிவதற்கும் நன்னெறி காட்டுதற்கும் ஞானகுரவராகிய குரு வேண்டும். சரியை, கிரியை, யோகம், ஆகியவற்றில் பயிற்சி கொள்ளக் குருவருளின் துணை தேவையாகும். பரம்பொருளே குருவடிவம் கொண்டு தீக்கை செய்வித்து உய்வதற்குத் துணைநிற்பான் என்பது மரபாகும்.

மூலை இருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியர் என்று உந்தீபற
தவத்தில் தலைவர் என்று உந்தீபற

எனத் திருவுந்தியார் குருவினைச் 'சாலப் பெரியர்' என்று கூறுவது காண்க.

ஆன்மாவின் அறியாமையினை நீக்கிச் சிவப்பேரின்பம் என்னும் பெருமுற்றத்தில் கொண்டுவந்து நிறுத்துவர்தாம் ஞான குரவர் எனப்படும் குரு ஆவார். மூலையில் இருந்தார் என்பது ஆன்மாக்களைக் குறிக்கும். ஆன்மாவின் உய்விற்கு வழிகாட்டியவர் 'முற்றத்தே விட்ட சாலப்பெரியரான' குருவினைக் குறிக்கும்.

தாயுமானார் தம் குருவை ' மூலன் மரபில் வந்த மௌன குரு' எனப் போற்றியுரைக்கின்றார். மௌன குருவும் மாணாக்கராக விளங்கிய தாயுமானாரும் பிரிந்திருக்க வேண்டிய நிலை ஏற்பட்டபோது, குரு தாயுமானாருக்கு அருளிய உபதேசமொழி 'சும்மா இரு' என்பதாகும். இம்மந்திர மொழியைப் பல்வேறு பாடல்களில் தாயுமானார் சுட்டுவார். 'வாய்ஒன்றும் பேசா மவுனியாய் வந்து ஆண்ட' நிலையைத் தாயுமானார் குறிப்பிடுவார்.

ஐந்துவகை ஆகின்ற பூதம்முதல் நாதமும்
அடங்க வெளியாக வெளிசெய்து
அறியாமை அறிவுஆதி பிரிவாக அறிவார்கள்
அறிவுஆக நின்ற நிலையில்,
'சிந்தை அற நில் என்று சும்மா இருத்தி' மேல்
சின்மயானந்த வெள்ளம்
தேக்கித் திளைத்து நான் அதுவாய் இருக்க நீ
செய்சித்ரம் மிக நன்று காண்

என்று தம்மை ஆட்கொண்ட குருவினை நினைத்து உருகுகின்றார். 'எந்தை வட ஆல் பரம குருவாழ்க! வாழ அருளிய நந்திமரபு வாழ்க!' என்று அடியார்மனம் மகிழ வேத ஆகமத்துணிவு இரண்டு இல்லை ஒன்று என்னவே வந்த குருவே, மந்திரகுருவே, தந்திரகுருவே, மூலன்மரபில் வரும் மௌனகுருவே' என்று தம்குருவினை வாழ்த்தி மகிழ்கின்றார்.

'மௌன குரு வணக்கம்' என்னும் பகுதி தாயுமானாருக்குக் குரு அளித்த உபதேசமொழிகளையும் ஆன்மப் பேற்றினையும் காட்டும்.

என்னை ஒரு ஞான மத்தகஜம் என வளர்த்தாய்

என்று குருவைப் போற்றிமகிழ்வார்.

'ஒரு கணம் தோன்றிமறையும் மின்னலை யொத்த பொய்யான இந்தஉடம்பை மெய்யென்றும் நிலையான தென்றும், காம மயக்கமாகிய ஆசைகளை ஊட்டும் மாதர்கள் சுகமே சுகம் என்றும், உயர்ந்த மாளிகையில் வசிப்பதே சுகம் என்னும் போற்றி ஞான முதலான நற்குணங்களை அவை போகும் வழியிலே போகவிட்டு, உலோபம் முதலான பிசாச குணங்கள் பற்றிக்கொள்ளச் சமய ஒழுக்கத்தினைச் சாராமல் இருந்த நிலையை ஒரே சொல்லால் ஆட்கொண்ட குரு'எனப் போற்றுவதிலிருந்து குருவின் மேன்மை நமக்கு நன்கு புலனாகும்.

மின் அனைய பொய் உடலை நிலை என்றும், மை இலகு
விழிகொண்டு மையல் பூட்டும்
மின்னார்கள் இன்பமே மெய் என்றும், வளர் மாடம்
மேல் வீடு சொர்க்கம் என்றும்,
பொன்னை அழியாது வளர் பொருள் என்று, போற்றிஇப்
பொய்வேடம் மிகுதிகாட்டிப்

பொறை அறிவு துறவு ஈதல் ஆதி நல்குணம் எலாம்
போக்கிலே போகவிட்டுத்
தன் நிகரில் லோபாதி பாழ்ம்பேய் பிடித்திடத்
தரணிமிசை லோகாயதன்
சமயநடை சாராமல், வேதாந்த சித்தாந்த
சமரச சிவானுபூதி
மன்ன ஒரு சொல் கொண்டு எனைத் தடுத்து ஆண்டு, அன்பின்
வாழ்வித்த ஞானகுருவே
மந்திர குருவே! யோகதந்திர குருவே! மூலன்
மரபில்வரு மௌனகுருவே

என்னும் தாயுமானாரின் பாடலால் ஆன்மாவின் அறியாமையை அகற்றும் ஞானகுருவின் மேன்மை நன்கு தெளிவாகும்.

ஞானாசிரியனது ஒருசொல் கொண்டு நாம் உய்தியடையலாம் என்பார். 'நினைவு ஒன்று நினையாமல் நின்றால் அந்த அழிவற்ற நிலையே வீடுபேறு என்பர். மனமற்றுநிற்கும் நிலை திருவருள்நிலை யாகும். இவ்வாறு சில காலம் தன்னைத் தானே மறந்துநின்றால் திருவருளே ஒருவடிவம் கொண்டு அவ்வாறு நிற்பவனை முதுகில் தட்டிக்கொடுத்து ஊக்குவித்து நிற்கும். இவ்வாறு தன்மயமாக நிற்பின் பரமானந்தம் வந்து எய்தும். அந்தப் பேரின்ப நிலையே பிறவாமை யாகிய பெருஞ்செல்வ நிலையாகும். எனவே, இந்தப் பேரின்பத்தை உருவாக்கித் தரும் ஞானாசிரியாகிய குருவின் ஒரே ஒரு சொல்லினால் மக்கள், வீடு உறவினர் என்ற அசுத்த வாசனையாகிய ஆசையை ஒழிப்பாயாக! ஞானாசிரியரின் ஒரு சொல்லைப் பற்றி நில்! என்று உரைப்பார்.

நினைவு ஒன்று நினையாமல் நிற்கின் அகம் என்பார்
நிற்கும் இடமே அருளாம்; நிட்டை அருள் ஒட்டும்;
தனை ஒன்று மறந்திருப்ப அருள் வடிவானதுமேல்
தட்டி எழுந்திருக்கும்; இன்பம் தன்மயமே அதுவாம்;
பினைஒன்றும் இலை; அந்த இன்பம் எனும் நிலயம்
பெற்றாரே பிறவாமை பெற்றார்; மற்றும் தான்
மனை என்றும் மகவுஎன்றும் சுற்றம்என்றும் அசுத்த
வாதனையாம் ஆசை ஒழி! மன் ஒரு சொல்கொண்டே

என்று குருவின் ஒருசொல் குறித்து விவரிப்பார்.

குரு கூறிய ஒருமொழிதான் பல மொழிக்கும் இடம் கொடுக்கும்; அந்த ஒருமொழிதான் மலங்களையெல்லாம்

ஒழிக்கும். அந்தக் குருமொழிதான் மலை இலக்கு என்பார். அம்மொழியே மலைபோன்ற பெரிய குறிக்கோள்மொழி என்றுரைப்பார். மொழிக்கு மொழியிருக்கக் காண்பாய் என்று கூறுவார். நினைவு ஒன்று என்னும் அப்பகுதியில் வரும் தாயுமானார்மொழிக்கு மொழி தித்திக்கும் பாடல் இதுதான்:

ஒரு மொழியே பலமொழிக்கும் இடம் கொடுக்கும், அந்த
ஒருமொழியே மலம் ஒழிக்கும் என மொழிந்த
குருமொழியே மலை இலக்கு; மற்றை மொழி எல்லாம்
கோடு இன்றி வட்டுஆடல் கொள்வது ஒக்கும் கண்டாய்
கருமொழி இங்கு உனக்கு இல்லை; மொழிக்குமொழி ருசிக்கக்
கரும்பனைய சொல்கொடு உனைக்காட்டவும்கண்டனைமேல்
தருமொழி இங்கு உனக்கு இல்லை; உன்னைவிட்டு நீங்காத்
தற்பரமாய் ஆனந்தப் பொற்பொதுவாய் நில்லே

என்று குருவின் மொழியின் சிறப்பை அழகிய கவிதை மொழிநடையில் தாயுமானார் புலப்படுத்துவார். குருமொழி தவிர ஏனைய மொழிகள் எல்லாம் கோடு போடாமல் வட்டு ஆடும் விளையாட்டுப் போன்றது என்று எளிய உவமையாலும் குருவின் மாண்பை எடுத்துரைப்பார்.

சின்மயானந்த குரு என்னும் பகுதியில் கல்லாலமரத்தின்கீழ் எழுந்தருளியுள்ள தட்சிணாமூர்த்தியை வழிபாடுசெய்து போற்றுகின்றார். ‘கையினால் மலர்தூவி உடல் சிலிர்க்க அன்பினால் உருகி விழிநீர்பெருக்கி மோட்சக் கடலுள் மூழ்கி, சங்கரனே சுயம்புவே சம்புவே என்று தழுதழுத்து வணங்கும் சன்மார்க்கநெறியில் செல்லாத என்னையும் ஆண்டு அருள்வாயோ. பக்குவநெறிநின்ற சனகன் முதலாய நால்வரும் வணங்கி அருகே வீற்றிருப்ப ஞானமார்க்கத்தை ஒரு சொல்லால் அறிவுறுத்திச் செங்கமல பீடம்மேல் கல்லால மரத்தின்கீழ் எழுந்தருளியிருக்கும் தட்சிணா மூர்த்தியே’ என்று வேண்டுகின்றார்.

அங்கை கொடு மலர்தூவி அங்கமது புளகிப்ப
அன்பினால் உருகி, விழிநீர்
ஆறாக, ஆராத முக்தியினது ஆவேச
ஆசைக் கடற்குள் மூழ்கிச்
சங்கர! சுயம்புவே! சம்புவே! எனவும் மொழி
தழுதழுத்திட் வணங்கும்

சன்மார்க்க நெறியிலாத் துன்மார்க்க னேனையும்
தண்ணருள் கொடுத்து ஆள்வையோ?
துங்கமிகு பக்குவச் சனகன்முதல் முனிவோர்கள்
தொழுது அருகில் வீற்றிருப்பச்
சொல்லரிய நெறியை ஒரு சொல்லால் உணர்த்தியே
சொரூப அநுபூதி காட்டிச்
செங்கமல பீடம்மேல் கல்ஆல் அடிக்குள் வளர்
சித்தாந்த முக்தி முதலே
சிரகிரி விளங்கவரு தக்ஷிணா மூர்த்தியே
சின்மயானந்த குருவே

என்று குருமுகமாக நின்று 'சொல்லரிய நெறியை' ஒரு சொல்லால் உணர்த்தியதைத் தாயுமானார் உருகி உரைப்பார்.

தாயுமானார் குருமரபின் வணக்கத்தில் குருமரபினரைச் சார்ந்து நிற்கும் நாள் எந்நாள் என ஏங்கிநிற்பார்

துய்ய கரமலரால் சொல்லாமல் சொன்ன உண்மை
ஐயனைக் கல்ஆல் அரசை யாம் அணைவது எந்நாளோ?

என்று கல்லால மரத்தின்கீழ் இருந்தருளிய தட்சிணாமூர்த்தியிடம் சேர்வது எந்நாள் எனக் கேட்பார்.

'சிந்தையினுக்கு எட்டாத சிற்சுகத்தைக் காட்டவல்ல நந்தி' எந்தை சனற் குமரன், பொய்கண்டார் காணாப் புனிதம் எனும் அத்வைத மெய்கண்டநாதன், சிற்றம்பலம் மன்னும் சின்மயர்ஆம் தில்லைநகர்க் கொற்றங்குடியார் ஆகிய குருமரபினரையெல்லாம் போற்றி அவர்களோடு சேர்ந்து பேரின்பம் பெறுநாள் எந்நாளோ என ஏங்குவார்

என் அறிவை உள் அடக்கி என்போல்வரும் மவுனி
தன் அறிவுக்கு உள்ளேநான் சாருநாள் எந்நாளோ

நில்லாமல் நின்று அருளை நேரேபார் என்ற ஒரு
சொல்லால்மவுனி அருள் தோற்றுநாள் எந்நாளோ

வைதிகம் ஆம் சைவ மவுனி மவுனத்து அளித்த
மெய்திகழ்ந்து என் அல்லல் விடியுநாள் எந்நாளோ

வாக்குமனம் அற்ற மவுனி மனத்து அருளே
தாக்கவும் என் அல்லல் எல்லாம்தட்டு அழிவது எந்நாளோ?

என்று எந்நாள் கண்ணியில் குருநாதரான மௌன குருவின் பேரன்பை நினைந்து நெகிழ்கின்றார்.

மௌன குரு மௌன நிலையினின்று அருளிய திருவருள் தன்னிடம் பதிந்ததும் தன்னை அணுகிய துன்பங்கள் எல்லாம் நிலைகுலைந்து போகும். அந்த நாள் எந்நாளோ என ஏங்கி நெஞ்சுருகுகின்றார்.

சக்கரவர்த்தி தவராஜ யோகி எனும்
மிக்க திருமூலன் அருள் மேவுநாள் எந்நாளோ?

என்று திருமூலரின் அருளையும் வேண்டுவார்.

ஓட்டுடன் பற்றின்றி உலகைத் துறந்த செல்வப் பட்டினத்தார், பத்திரகிரி, கண்டது பொய் என்று அகண்டாகார சிவம் மெய் எனவே விண்ட சிவவாக்கியர், கந்தர் அநுபூதி பெற்றுக் கந்தர் அநுபூதி சொன்ன எந்தை அருணகிரிநாதர், எண்ணரிய சித்தர், தேவர்கள், பக்தர்கள் முதலானோர் அருள்பாலிப்பது எந்நாள் என ஏங்குகின்றார் தாயுமானார்.

இறைப் பேரின்பம் பெறுதற்குக் குருமரபினர், அடியார், சித்தர், அருளாளர் ஆகிய அனைவரின் அருளும் தேவை என்பதைத் தாயுமானாரின் தத்துவமும் இறைநலமும் சார்ந்த பாடல்கள் எடுத்துரைக்கின்றன.



# 7. கண்ணிகள்

தாயுமானார் பாடல்கள் அவர் ஆன்ம வாழ்க்கையில் உயர்ந்துநின்ற எல்லையைக் காட்டுவன. அவருடைய பாடல்களில் காணப்பெறும் உவமைகள் முதலாயின இன்றும் மக்கள் பாடும் நினைவிலிருத்திப் பாடும் நயமிகுந்த பாடல்களாக விளங்குகின்றன. பழம் புலவர்கள் போற்றுகின்ற யாப்புவழிப்பட்ட பாடல்களிலும் சிறந்து விளங்கிய அவர் நாட்டுப் பாடல் வடிவங்களிலும் தம்முடைய ஆழ்ந்த கருத்துக்களை எளியநடையில் அமைந்துள்ளார்.

பராபரக் கண்ணி தாயுமானார் பாடல்களில் பெரும்புகழ்பெற்றது. 389 கண்ணிகள் கொண்ட இப்பாடல் தொகுதி படிப்போரையும் பக்கநின்று கேட்போரையும் உருகவைக்கும்.

சீர் ஆரும் தெய்வத் திரு அருள்ஆம் பூமி முதல்
பார் ஆதி ஆண்ட பதியே பராபரமே

என்று தொடங்கும் பராபரக் கண்ணி,

பொய் உணர்வாய் இந்தப் புழுக் கூட்டைக் காத்திருந்தேன்
உய்யும் வகையும் உளதோ பராபரமே

என்றும் கண்ணியோடு முடிகின்றது.

பராபரக் கண்ணியில் அழகு செறிந்த தத்துவத் தொடர்களும் படித்தாலே நெஞ்சில் பதிந்துவிடும் தொடர்களும் நம்மை உருகவைக்கின்றன. இறைவன் நம்முடைய அன்பைப் பெருக்கி நம் ஆருயிரைக் காப்பவன் என்பார். எங்கும் நிறைந்த அவன் நம்முடைய இதயத்தில் ஊறிநிற்கும் ஆனந்தத் தேன் என்பார்.

எத்திக்கும் தான் ஆகி என் இதயத்தே ஊறித்
தித்திக்கும் ஆனந்தத் தேனே பராபரமே

அன்பைப் பெருக்கி எனது ஆருயிரைக் காக்கவந்த
இன்பப் பெருக்கே இறையே பராபரமே

சிந்தித்த எல்லாம் என் சிந்தை அறிந்தே உதவ
வந்த கருணை மழையே பராபரமே

கண்ணே கருத்தே என் கற்பகமே கண்நிறைந்த
விண்ணே ஆனந்த வியப்பே பராபரமே

என்னும் கண்ணிகளில் இறைவன் தமக்கு அருள்பாலித்ததை எண்ணி நெகிழ்ந்து ஆனந்தத் தேன், இன்பப் பெருக்கு, கருணை மழை, ஆனந்த வியப்பு என உருகிஉருகிப் பாடுவார். பார்த்த இடம் எல்லாம் இறைவன் இவருக்குத் தென்படுகின்றான். இதை எப்படி அவர் உருகிச் சொல்கின்றார் ?

பார்த்த இடம் எல்லாம் பரவெளியாய்த் தோன்ற ஒரு
வார்த்தை சொல்ல வந்த மனுவே பராபரமே

எல்லாத் தத்துவங்களும் அடங்கிய செய்தியை எவ்வளவு எளிமையாகச் சொல்லிவிடுகின்றார் தாயுமானார் !

காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி முன்னைய அருளாளர்கள் வேண்டிநின்றதுபோல இறையின்பப் பேறு பெறத் தவித்த பான்மையைப் பராபரக் கண்ணியில் காணலாம்.

என்பு உருகி நெஞ்சம் இளகிக் கரைந்து கரைந்து
அன்பு உருவாய் நிற்க அலந்தேன் பராபரமே

என்று ஊனுருகக் குழைந்து வேண்டுவார்

சுத்தம் அறிவாய்ச் சுகம் பொருந்தின் அல்லால் என்
சித்தம் தெளியாது என் செய்வேன் பராபரமே

என்பார். 'மாறா அனுபூதி வாய்க்கின் அல்லால் என் மயக்கம் தேறாது என் செய்வேன்' என்று நெகிழ்வார். தாகம் அறிந்து நீர் தரவேண்டும் அல்லவா - அப்போதுதான் ஆன்ம மனம் மகிழும் என்பார்.

தாயுமானார் ஆன்மதாகத்தைத் தணிக்க வேண்டும் என இறைவனிடம் வேண்டுகிறார்.

தாகம் அறிந்து இன்பநிஷ்டை தாராயேல் ஆகெடுவேன்
தேகம் விழுந்திடின் என் செய்வேன் பராபரமே

என்பார். சொல்லில் அடங்காத இன்பம் நான் அடையவேண்டும். அந்தச் சுகக் கடல்தான் என் தாகத்தைத் தணிக்கும். அருள் புரிக ஆண்டவனே என்று வேண்டுவார்.

சொல்லால் அடங்காச் சுகக்கடலில் வாய்மடுக்கின்
அல்லால் என் தாகம் அறுமோ பராபரமே

என்று 'சொல்லால் அடங்காச் சுகக்கடல்' எனக் கூறுவார்.

கூர்த்தஅறிவு அத்தனையும் கொள்ளை கொடுத்து உன் அருளை எதிர்பார்க்கின்றேன். என்னை முகம்பாராய் என்பார். எண்ணக் கூடாத எண்ணங்களை யெல்லாம் எண்ணி எண்ணி இந்த ஏழையின் மனம் புண்ணாகிவிட்டது. போதும் பராபரமே! எனக்கு அருள் செய்வாய் என்பார். இறைவனின் அருளுக்காக ஏங்கிநின்று அவர் பாடும் கண்ணிகள் உருக்கம் மிகுந்தன.

பாராயோ என்னை முகம் பார்த்து ஒருகால் என்கவலை
தீராயோ வாய் திறந்து செப்பாய் பராபரமே

ஓயாதோ என் கவலை உள்ளே ஆனந்தவெள்ளம்
பாயாதோ ஐயா பகராய் பராபரமே

எண்ணாத எண்ணம் எலாம் எண்ணி எண்ணி ஏழைநெஞ்சம்
புண் ஆகச் செய்ததுஇனிப் போதும் பராபரமே

என் கவலையைத் தீர்க்கமாட்டாயா? என் உள்ளே ஆனந்த வெள்ளம் பாயாதா என்று அவர் உள்ளம் உருகிப் பாடும் பராபரக் கண்ணிப் பாடல்களை இன்றும் மனம் நெகிழ்ந்து மக்கள் பாடுவதைக் காணலாம்.

'பாசம் மிகுந்து பாராட்டுபவரிடம் மோசம் போவது முறையோ? எத்தனைதான் ஜன்மம் எடுத்து எத்தனை நான் பட்ட துயர் அத்தனையும் நீ அறிந்தது அன்றோ பராபரமே' இந்த நாள் நீ காக்க வரவில்லையெனில் காலன்வரும் அந்த நாளில் காக்கவல்லார் ஆர் காண்?' என்று உரிமையோடு பரம்பொருளிடம் கேட்கின்றார் தாயுமானார்.

'இறைவனை மதியாரை நானும் மதிக்க மாட்டேன். அவர்கள் கண்ணுக்கு நிகராக உயர்ந்த நிலையில் இருந்தாலும் அவர்களை மதிக்க மாட்டேன்' என்பார்.

கண் ஆவாரேனும் உனைக் கைகுவியார் ஆயின் அந்த
மண் ஆவார் நட்பை மதியேன் பராபரமே

என்று நெருங்கிய நேயமுடையாராயினும் உன்னை வணங்காத அவருடைய நட்பு மதிக்கத்தக்கது அன்று என்பார்.

இறைவனிடம் ஒரு வேண்டுகோள் வைக்கின்றார் தாயுமானார். எல்லா உயிர்களையும் தன்னுயிர்போல் எண்ணும் ஆன்மநேயத்தை விரும்புகின்றார்.

எவ்வுயிரும் என்உயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருள் கருணைசெய்யாய் பராபரமே

என்னும் பாடற்கருத்து வள்ளல் இராமலிங்க அடிகளில் அருட்பாவில் விளக்கமுறுவதைக் காணலாம்.

'எத்துணையும் பேத முறாது எவ்வுயிரும் தம்முயிர்போல் எண்ணி உள்ளே ஒத்துரிமை உடையவராய்' விளங்குபவரின் மனமே தெய்வம் நடம் புரியும் இடம் என்பது பராபரக்கண்ணிப் பாடலின் முழுவிளக்கம் அன்றோ?

எங்கு எங்கே பார்த்தாலும் எவ்வுயிர்க்கும் அவ்வுயிராய்
அங்கு அங்கு இருப்பது நீ அன்றோ பராபரமே

அனைத்துமாய் நின்றாயே யான்வேறோ நின்னை
நினைக்குமாறு எங்கே இயம்பாய் பராபரமே

என்று இறைவனிடம் எல்லா இடத்தும் இருக்கின்ற உன்னுள் நானும் இருக்கும்போது நினைக்குமாறு எங்கே இயம்பாய் பராபரமே என்று நயமுடன் கேட்பார்.

செப்புவது எல்லாம் ஜெபம்நான் சிந்திப்பது எல்லாம் நின்
ஒப்புஇல் தியானம் என ஓர்ந்தேன் பராபரமே

என்று இறைவனையே எப்பொழுதுமே எண்ணிக் கொண்டிருக்கும் தம் இயல்பைப் புலப்படுத்துவார்.

மக்களுக்குத் தொண்டு செய்யும் பணிக்கு ஆளாக்கிவிட்டுவிட்டால் இன்பநிலை தானே வந்தெய்தும் என்பார். பொய்எல்லாம் ஒன்றாய்ப் பொருத்திவைத்தது இவ்வுடல். இதனை மெய் என்று கூறினால் மெய்யாய்விடுமா என்று நயமுடன் கேட்பார்.

அன்பர்பணி செய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்து எய்தும் பராபரமே

பொய் எல்லாம் ஒன்றாய்ப் பொருத்தி வைத்த பொய்உடலை
மெய் என்றால் மெய்யாய் விடுமோ பராபரமே

என்பன போன்ற கண்ணிகள் படிக்கப் படிக்கத் தெவிட்டாத தன்மையுடையன.

இறைவனை உள்ளன்புடன் நினைந்து வழிபடல் வேண்டும். வெறும் இலக்கண நூல் கல்வியும் சாத்திரக் கல்வியும் முக்தியைத் தருமா எனில், அவை தரா என்பதனை அழகிய உவமையால் எடுத்துரைப்பார்.

வானத்தில் ஏறுவதற்கு நூலேணி பயன்படுமா? அந்நூலேணி செய்வதற்குப் பருத்திச் செடியை விளைவித்தல் பயன்தருமா? அதுபோல் முக்தி அடைவதற்குக் கற்கும் நூல்கள் பயன்படுமா என வினைவுவார்.

நூல் ஏணி விண் ஏற நூற்குப் பருத்திவைப்பார்
போலே கருவி நன்னூல் போதம் பராபரமே

என்பார்.

உலக நல்வாழ்விற்காகப் பெற்றுள்ள சாத்திர ஞானநெறிகள் சிறியகுழந்தைகள் விளையாட்டாகச் செய்யும் மணற்சோறு போன்றது. இந்த மணற்சோற்றால் பசி தீருமா என நயமுடன் கேட்கின்றார். மணற்சோறு பசியைத் தீர்க்காததுபோலவே பரஞானத்தைச் சிந்திக்காமல் வெறும் நூல் ஞானத்தையே போற்றுவதால் என்ன பயன் என்பார்.

சின்னஞ் சிறியார்கள் செய்த மணல் சோற்றை ஒக்கும்
மன்னும் கலைஞான மார்க்கம் பராபரமே

என்று உவமைநயம் மிளிரக் கூறுவதைக் காண்க.

கல்வி ஞானமட்டுமல்ல, உடலை வருத்தும் ஹடயோகங்களும் பயன்படா என்பார். சோற்றை அடைத்து வைத்திருக்கும் தோற்பையாகிய சுமையினை நெடுநாள் வைத்திருக்க ஹடயோகம் செய்து கண்கள் பிதுங்கப் பிராணவாயுவை வெளியிடாதபடி அலைந்து திரிந்தேன். என்ன பயன்?

சோற்றுத் துருத்திச் சுமை சுமப்பக் கண்பிதுங்கக்
காற்றைப் பிடித்து அலைந்தேன் கண்டாய் பராபரமே

என்று சொல்வதால் திருவருள் மட்டுமே இறையின்பத்தை நல்கும் என்பது தெளிவாகும்.

பைங்கிளிக் கண்ணி இறைவன்பால் கொண்ட ஆறாக் காதலை வெளிப்படுத்துவது. நெஞ்சில் நீங்காது நிலைபெற்றிருக்கும் அண்ணலுக்கு என் துன்பமெல்லாம் எடுத்துரைத்து, - சுகம் என்று சொல்லப்படும் கிளியே - தூதுசென்று எனக்குச் சுகம் கொண்டுவர மாட்டாயா என்று அகப்பொருள் மரபில் நயமுடன் வேண்டுகின்றார்

அகம் மேவும் அண்ணலுக்கு என் அல்லல் எல்லாம் சொல்லிச்
சுகம் ஆனநீ போய்ச் சுகம் கொடுவா பைங்கிளியே

என்று 'சுகம் ஆன நீபோய்ச் சுகம் கொடுவா' தமிழ் நயம் துலங்கக் கூறுவார்

கண்ணுள் மணிபோல் இருந்து இன்பம் செய்து என்னை விட்டுப் பிரிந்த என் நாயகர் - வன் மனத்தை உடைய நாயகர் இனிமேலாவது வந்து சேர்வாரா பைங்கிளியே என வினவுவார்

காந்தமானது இரும்பினைத் தன்வயமாகக் கவர்ந்து இழுத்துக்கொள்வது போல என்னையும் வலிய இழுத்து என்னோடு கலந்துகொண்டு இன்பம் தருவாரா பைங்கிளியே என்றுகேட்பார்

கண்ணின் மணிபோல் இன்பம் காட்டி எனைப் பிரிந்த
திண்ணியரும் இன்னம்வந்து சேர்வாரோ? பைங்கிளியே

காந்தம் இரும்பைக் கவர்ந்து இழுத்தால் என்ன அருள்
வேந்தன் எமை இழுத்து மேவுவனோ பைங்கிளியே

என்று தலைவனைத் தேடும் தலைவியாக ஆன்மிக் காதலை வெளிப்படுத்தும் பைங்கிளிக் கண்ணிகள் மிகுந்த சுவையுடையன.

மண் உறங்கும் விண் உறங்கும் மற்றும்உள எலாம் உறங்கும்
கண் உறங்கேன் எம் இறைவர் காதலால் பைங்கிளியே

என்று இறையை நினைந்து உயிர் உறங்காத தன்மையை வெளிப்படுத்துவார்.

நாள்தோறும் தூங்கி விழித்தலினால் என்ன பயன்? தூங்காமல் தூங்கி நிற்கும் பாங்கு - எப்பொழுதும் விழித்திருக்கும் ஆத்மபோதம் - இறைவனால் கிட்டுமா என்று வினவுகின்றார்.

தூங்கி விழித்து என்னபலன் தூங்காமல் தூங்கிநிற்கும்
பாங்கு கண்டால் அன்றோ பலன் காண்பேன் பைங்கிளியே

என்று வரும் பைங்கிளிக் கண்ணிகள் ஆன்மக் காதலினால் தவிக்கும் அருள் நிலையைக் காட்டும்.

'ஆகார புவனம்' என்னும் பகுதியில் காதலன் - காதலியாக நின்று தாயுமானார் பாடும் பாடல்கள் அகச்சுவை நிரம்பியன.

'வடிவெலாம் நின் வடிவம் என இறையை நினைந்து வாழ்ந்தவர்.' 'பாராதிவிண் அனைத்தும் நீ' என்ற இறையின் பேருருத் திறத்தின் சிறப்பை உணர்ந்தவர். இந்தப் பெரிய வடிவத்தை எழுதிப்பார்க்க விரும்புகின்றார். இப்பேருருவை எப்படி எழுதுவது? எழுதுவதற்கு ஒரு பெரிய மடல் வேண்டுமே, என் செய்வது என எண்ணுகின்றார். இவ்வளவு பெரிய உருவத்தை எண்ணிக்கொண்டிருக்கும் என் மனம்தான் அவ்வுருவத்தைப் போலவே பெரியது. எனவே, அந்த மனமாகிய மடலில் நான் உன் பெரிய உருவத்தை எழுதிவிடுகின் றேன் என்கிறார். அந்தப் பெரிய விரிந்த மனத்திற்கும் ஒருபெயரையும் சூட்டுகின்றார். 'சிந்தைபரிய மடல்' என்பார்.

பாராதி விண்ணனைத்தும் நீயாச் சிந்தை
பரியமடலா எழுதிப் பார்த்து பார்த்து

மகிழ்வேன் என்கின்றார் தாயுமானார்.

இறைவனின் பேருருவத்தைத் தாம் தம் சிந்தை மடலில் எழுதிப் பார்த்த தாயுமானார், காதற்சுவை மிக இறைவனை அழைக்கின்றார்.

வாராயோ என்ப்ராண நாதா என்பேன்
வளைத்து வளைத்து எனை நீயா வைத்துக் கொண்டு
பூராயமா மேல் ஒன்று அறியா வண்ணம்
புண்ணாளர் போல் நெஞ்சம் புலம்பி உள்ளே
நீராளமாய் உருகிக் கண்ணீர் சோர
நெட்டுயிர்த்து மெய்ம்மறந்து ஓர் நிலையாய் நிற்பேன்

என்று காதலியாக நின்று தம் மனநிலையைப் புலப்படுத்தும் பாடல்கள். சங்கப் பாடல்களின் அகப்பொருள் மரபினைத் தழுவி விளங்குகின்றன.

கானத்தில் வாழும் பைங்கிளிகளைப் பார்க்கின்றார், அவற்றைப் பார்த்துக் தமக்காகத் தூது செல்லுமாறு வேண்டுகின்றார்.

கானகத்தின் பைங்கிளிகாள் கமலம் மேவும்
வரிசிறைவண்டு இனங்காள்! ஓதிமங்காள்! தூது
மார்க்கம் அன்றோ நீங்கள் இதுவரையிலேயும்
பெரியபரிபூரணம் ஆம்பொருளைக்கண்டு
பேசியது உண்டோ? 'ஒருகால் பேசும்' என்பேன்

என்பார். வாயில்லாத குடம் போல் நிற்கின்றேன் என்பார். சூரியனைப் பார்த்தும் சந்திரனைப் பார்த்தும் 'உம்மைப் படைத்தவன்

எங்கே இருக்கின்றான், சொல்லுங்கள்' என்பேன் 'காற்றே! நீ யாராலேதான் பேராதே சுழல்கின்றாய்! வானமே! நீ எங்கே தொடங்கி எங்கே முடிகின்றாய்? - மண்ணே உன்னை யார் தாங்குகின்றார்கள்?' என்று பல்வேறுவகையாகப் புலம்புவார். காணாமல் போன யானையைக் குடத்தினுள் கைவிட்டுத் தேடுவது போன்ற நிலை எனக்கு ஆகிவிட்டதே என வருந்துவார்.

ஆயும் அறிவு ஆகி உன்னைப் பிரியா வண்ணம்
அணைந்து சுகம் பெற்ற அன்பர் ஐயோ என்னத்
தீயகொலைச் சமயத்தும் செல்லச் சிந்தை
தெளிந்திடவும் சமாதானம் செய்வேன் வாழ்வான்
காய்இலைபுன் சருகுஆதி அருந்தக் கானம்
கடல் மலை எங்கே எனவும் கவலை ஆவேன்
வாய் இல் கும்பம் போல் கிடந்து புரள்வேன் வானில்
மதிகதிரை முன்னிலையா வைத்து நேரே

நேரேதான் இரவுபகல் கோடா வண்ணம்
நித்தம்வர உங்களை இந்நிலைக்கு வைத்தார்
ஆரே? அங்கு அவர் பெருமை என்னே என்பன்
அடிக்கின்ற காற்றேநீ யாராலேதான்
பேராதே சுழல்கின்றாய் என்பேன்: வந்து
பெய்கின்ற முகில்காள் எம்பெருமான் நும்போல்
தாராள மாக்கருணை பொழியச் செய்யும்
சாதகம் என்னே கருதிச் சாற்றும் என்பேன்

என்னும் பாடல்களில் இயற்கையின் இயக்கங்கள் அனைத்திற்கும் யார் காரணம் என்பதைச் சுட்டிக் கடல், மலை, இரவு, பகல், காற்று, மழை ஆகியவற்றோடு நேரே பேசும் வண்ணம் அமைந்துள்ள பாங்கு எண்ணி மகிழத்தக்கது.

கருணை மழையைப் பெய்விக்கும் இறைவன் அங்கிங்கு எனாதபடி எங்கும், அனைத்துப் பொருள்களையும் இயக்கும் ஆற்றல் முதல்வனாக விளங்குவதை மிக நுட்பமாகச் சொல்வார். இத்தனை இறை ஆற்றல்களையும் அறியாத எளியவனாக இருந்துவிட்டேனே எனத் தம்மையே நொந்துகொள்கின்றார். இரவுபகல் மாறாது வரும் இயல்பிற்கு யார் காரணம் என வியக்கின்றார். இயற்கை அமைப்பைக் கூர்ந்து ஆராய்ந்து இறையோடு பொருத்திப் பார்ப்பது பெரிதும் எண்ணுதற்குரியது.

ஒருவன் அவன் யானைகெடக் குடத்துள் செங்கை
ஓட்டுதல் போல் நான்பேதை உப்பொடுஅப்பை
மருவவிட்டும், கர்ப்பூரம் அதனில் தீபம்
வயங்கவிட்டும் ஐக்யம் உன்னி வருந்தி நிற்பேன்
அருளுடைய பரம் என்றோ அன்று தானே
யான் உளன் என்றும் எனக்கே ஆணவாதி
பெருகு வினைக் கட்டு என்றும் என்னால் கட்டிப்
பேசியது அன்றே அருள்நூல் பேசிற்று அன்றே

என்று ஆகாரபுவனம் சிதம்பர ரகசியத்தில் த்வைத, அத்வைதக் கோட்பாடுகளை விளக்குவதும் எண்ணத் தக்கது.

வேடன் ஒருவன் முன் எதிர்நின்ற யானை மறைந்து விடுகின்றது. யானையைத் தேடி அவன் அலைகின்றான். எங்கெங்கோ தேடி மருள்கின்றான். எங்காவது யானை மறைந்து இருக்காதா என்று ஒவ்வொரு பொருளிலும் தேடத் தொடங்குகின்றான். எதிரே ஒரு குடம். அந்தக் குடத்தினுள்ளும் இருக்குமோ என்று தன் கையைக் குடத்தினுள் விட்டுத் தேடுகின்றான் என்று தாம் தேடிய விதத்தை நினைந்து இந்த அரிய உவமையைக் கூறுகின்றார்.

அறிவற்ற நான் உப்புடன் நீரைக் கலக்க விட்டும், கற்பூரத்தில் விளக்கினை ஒளிரச்செய்தும் துன்புற்று நிற்பேன். அவ்விரண்டும் இணைந்த நிலையைக் கருத்தூன்றிப் பார்த்து வருந்தி நிற்பேன். திருவருளைத் தனக்குத் துணைக் காரணமாக உடைய பரம்பொருள் என்று உண்டானதோ அன்றிலிருந்தே நானும் உளேன் எனவும், எனக்கு ஆணவம் முதலிய மலங்கள் பெருகுவதற்குக் காரணமான வினைக்கட்டு உண்டு என்றும் கூறினேன். இஃது கட்டுக்கதை யன்று: இவையெல்லாம் சுருதி நூல்களில் சொல்லப்பட்டன என்பார்.

'பரமாத்மா இருக்கும் பரியந்தம் ஜீவாத்மாவும் இருக்கிறது என்பது த்வைதக் கோட்பாடு; நீரில் உப்புக் கலந்திருப்பது பேத அபேதத்தை விளக்குகிற விசிஷ்டாத்வைதக் கோட்பாடு. கற்பூர தீபம் போல் ஜீவபோதம் ஒழிந்துபட்டுப் போவது அத்வைதக் கோட்பாடு. இந்த மூன்று சம்பிரதாயங்களுக்கும் பிரமாணம் உபநிடதங்களில் காணலாம்' என்பர் (ஸ்ரீராமகிருஷ்ண தபோவன வெளியீடு)

தோத்திரப் பாடல்களில் தாயுமானார் அரிய தத்துவக் கோட்பாடுகளை விளக்குவது இக்குறிப்பால் நன்கு புலனாகும். ❀

# 8. பொது

தாயுமானார் பாடல்களின் தொகை 1454. தொகை மாலை 587, கண்ணிகள் 865, அகவல்1, வண்ணம் 1 ஆகப் பாடல்கள் 1454 எனத் தனிப்பாடல் கூறும்

விண்ணுறுந் தேவர்கள் முனிவர் கணங்கள் சித்தர்
புகழ் மௌனி வியப்பால் நானத்
தண்ணுறு தண்டமிழ் மாலை ஐந்நூற்றெண்
பத்தேழும் தாயு மானோன்
எண்ணுறுங் கண் ணிகள்எண்ணூற் றறுபத் தைந்து
அகவல் வண்ணம் இரண்டுபாடி
மண்ணுறுநால் வகை மாந்தர் தமக்காகப்
பக்குவர்பால் வைத்தான் அன்றே

என்பது தனிப்பாடல்.

தாயுமானார் பாடல்களைப் பொதுவாகப் பாமாலைகள், கண்ணிகள் என இருவகையாகப் பகுக்கலாம். சில பாமாலைகள் அந்தாதியாக அமைந்துள்ளன. நூலில் மொத்தம் 56 பகுதிகள் உள. இவற்றுள் 28 பாமாலைகள் தொடக்கத்தில் உள்ள தொடர்களைக் கொண்டு தலைப்புகள் அமைக்கப் பெற்றுள்ளன. சில பொதுவான தலைப்புகளையும், சில இறுதிப் பகுதியில் அமைந்த தொடர்களில் உள்ள தலைப்புகளையும் பெற்றுள்ளன.

தாயுமானாரின் பாடல்கள் மிகமிக எளிமையானவை. தத்துவ நெறிசார்ந்தும் பத்திச்சுவை கொண்டனவாகவும் விளங்குகின்றன. தமிழ்ப் பக்தி இலக்கிய வரலாற்றிலும் தத்துவ வரலாற்றிலும் தாயுமானார் பாடல்கள் சிறப்பிடம் பெற்றவை. உள்ளத்தை உருகவைக்கும் அற்புதப் பாடல்களாகத் தாயுமானாரின் பாடல்கள்

திகழ்கின்றன. தாயுமானார் பாடல்கள் அழகும் அருளும் அறிவுப் பொருளும் பொலியும் மந்திரமணிகள் என்பர்.

பன்மாலைத் திரளிருக்க தமையுணர்ந்தோர்
பாமாலைக்கே நீதான் பட்சமென்று
நன்மாலை யாலெடுத்துச் சொன்னார் நல்லோர்
நலமறிந்து கல்லாத நானுஞ்சொன்னேன்
சொன்மாலை மாலையாக் கண்ணீர் சோரத்
தொண்டனேன் எந்நாளும் துதித்து நிற்பேன்

என்று கண்ணீர் மல்கப் பாடியதாகத் தாயுமானார் கூறுவார்,

தாயுமானாரின் மாணவர் அருளையர் பாடிய அருள்வாக்கிய அகவல் அவர்தம் பண்பு நலனையும் புலமையாற்றலையும் எடுத்துரைக்கும்.

சித்த மவுனி திடசித்தம் ஆக
வைத்த நிலையில் வளர்ந்தனன் எனவும்
மூலன் மரபில் முளைத்த மவுனிதன்
பாலன்யான் எனவும் பரிவொடும் பகர்ந்தோன்
வடமொழி இயற்கையின் மகிமையை உணர்ந்து
திடம்உற முப்பொருள் திறத்தையும் தெளிந்து
கண்டு அமுது என்னக் கனிரசம் என்னத்
தண் தமிழ் மாரி தன்னைப் பொழிந்து

என்று அருளையர் அவர்தம் புலமையாற்றலைப் போற்றுவார்.

திருமூலன் மரபில் எழுங் குருமவுனி திருவருளைத் திரட்டிவாரி
அருளூறும் ஆனந்த அநுபூதிச் சாரமெலாம் அருந்தி நாளும்
மருளோடும் இருளோட மறைக்காட்டி னெழுந்தாயு மானோன்: ஞானப்
பொருளாகுஞ் சித்தாந்தத் தமிழ்மறையை உலகமுயப் பொழிந்தான்மாதோ

என்று தாயுமானவர் பாடல்களைச் சித்தாந்தத் தமிழ்மறை எனப் போற்றுவது மரபு. தோத்திரப் பாடல்களால் சாத்திரங்கள் விளக்கியவர் தாயுமானார் என அறிஞர் எம்.எஸ். பூரணலிங்கம் அவர்கள் போற்றுவர்.

இன்பத் தமிழுக்கு இலக்கியமாய் விளங்கியவர் தாயுமானார் என்று போற்றிய மகாகவி பாரதியார் தாயுமானாரின் பாடலைத் தம் கட்டுரைகளில் பல்வேறிடங்களில் எடுத்துக்காட்டுவார்.

'நவசக்தி மார்க்கம்' என்னும் கட்டுரையில் தாயுமானாரின் 'மலைவளர் காதலி' என்னும் பகுதியில் வரும் பாடலை மேற்கோள் காட்டிப் பாரதியார் பின்வருமாறு எழுதுவார்.

"...நவசக்தி என்பது புதியதெய்வமன்று. அதனைப் பொருள் தெரிந்து போற்றும் முறையே நவசக்திமார்க்கம், இந்து தர்மத்தின் பலன்களைத் தாயுமானார் பின்வருமாறு சொல்லுகிறார்.

'பதியுண்டு நிதியுண்டு புத்திரர்கள் மித்திரர்கள்
பக்கமுண் டெக்காலமும்
பவிசுண்டு, தவிசுண்டு, திட்டாந்தமாக யம
படர்எனும் திமிரம் அணுகாக்
கதியுண்டு, ஞானமாங் கதிருண்டு, சதிருண்டு
காய சித்திகளுமுண்டு'

இந்துமதம் ஸந்நியாசத்தை ஆதரிப்பதன்று. இகலோகத்திலிருந்து தேவ வாழ்க்கை வாழவேண்டும் என்ற நோக்கமுடையது".

பாரதியார் தாயுமானவர் பாடல்களில் பெரிதும் ஈடுபாடு கொண்டு மேற்கோள் காட்டுவதை இன்னும் பல கட்டுரைகளில் காணலாம்.

'வாசக ஞானத்தினால் வருமோ சுகம்' என்று பராபரக்கண்ணியில் குறிப்பிடுவார். பாரதியார் 'வாசக ஞானம்' என்னும் தலைப்பில் ஒருகட்டுரை வரைந்துள்ளார்.

'...மனித ஜாதியார் அறிவு சம்பந்தப்பட்டமட்டில் மகாசூட்சுமமான பரமசத்யங்களை யெல்லாம் கண்டுபிடித்து முடித்துவிட்டனர். ஆனால் அறிவுக்குத் தெரிந்ததை மனம் மறவாதே பயிற்சிசெய்ய வலிமையற்றதாய் நிற்கிறது. அறிவு சுத்தமான பின்னரும் சித்திசுத்தி ஏற்பட வழி இல்லாமல் இருக்கிறது. எனவே அறிவினால் எட்டிய உண்மையான மனிதர் ஒழுக்கத்திலே நடத்திக் காட்டுதல் பெருங்கஷ்டமாக முடிந்திருக்கிறது. ஆத்ம ஞானத்தின் சம்பந்தமாகக் கவனிக்குமிடத்தே இந்த உண்மையைத் தாயுமானவர்,

வாசக ஞானத்தால் வருமோ சுகம் பாழ்த்த
பூசலென்று போமோ புகலாய் பராபரமே

என்ற கண்ணியில் வெளியிட்டிருக்கிறார்.

> இதன் பொருள், வெறுமே வாக்களவாக ஏற்பட்டிருக்கும் ஞானத்தினால் ஆனந்தமெய்த முடியவில்லையே? என்செய்வோம்? பாழ்பட்ட மனம் ஓயாமல் பூசலிட்டுக்கொண் டிருக்கிறதே இந்தப் பூசல் எப்போது தீரும்? கடவுளே நீ அதனைத் தெரிவிப்பாய் என்பதாம்'

என்று கூறும் இந்தக் கட்டுரைக்குத் தாயுமானார் கூறிய 'வாசக ஞானம்' என்ற தொடரையே தலைப்பாகத் தந்திருப்பது குறிப்பிடத்தக்கது.

'ஜனவகுப்பு' என்னும் கட்டுரையில் 'இன்றைக்கு இருப்பாரை நாளைக் கிருப்பார் என்று எண்ணவோ திடமில்லையே' என்று தாயுமானார் சொன்னார் என்று கூறிவிட்டு மக்கள் வாழ்க்கை நிலையற்றதால் 'ஒருவருக்கொருவர் மனத்தாலும் தீங்கு நினைப்பதில்லை' என ஒரு புதுக் கட்டுப்பாடு ஏற்படுத்திக் கொள்வோம் என்பார். தாயுமானாரின் அரிய இத்தொடரைச் சமூக அரசியல் விழிப்புணர்வுக் கட்டுரைகளிலும் பாரதியார் பயன்படுத்துவது பெரிதும் எண்ணத்தக்கது.

'இஸ்லாம் மார்க்கத்தின் மகிமை' என்னும் தலைப்பில் 20.6.1920 அன்று பாரதியார் பேசினார். அப்போது முகம்மது நபியைப் பற்றிக் குறிப்பிடும்போது பின்வருமாறு கூறுவார்:

> 'இடையிடையே நான் என் மனத்திற்குள் முகம்மது அவர்களைப் பற்றிச் சித்திரம் போட்டுப் பார்ப்பது வழக்கம். நடுப் பாலைவனத்தில் நள்ளிரவில் தனிமணல்வெளியிலே, ஒட்டகையின்மீது தனியாக ஏறிக்கொண்டு போகிறார்'. அல்லது அங்கொரு குன்றின்மேல் ஏறிநிற்கிறார். கேள்வியாலும் நெடுங்காலத்து பக்தியாலும் நிகரற்ற அன்பினாலும், ஞானத்தாலும் பக்குவப்பட்ட இவருடைய இருதயம் அப்படிப்பட்ட இடத்தில் அல்லாவை நாடுகிறது. வேறு நினைப்புக்கு இடம் இல்லை. அப்போது அங்கு ஞானஒளி வீசிற்று; நபி அல்லாவைக் கண்டார். சுகப் பிரம்ம ரிஷிக்கு நேர்ந்த அனுபவமும் முகம்மது நபிக்கு எய்திற்று-
>
> அங்கமே நின் வடிவமான சுகர் கூப்பிட நீ
> எங்கும் ஏன் ஏன் என்றதென்ன - பராபரமே
>
> என்று தாயுமானார் பாடியிருக்கிறார்.'

என்று சமரச நிலையைப் பாரதி தாயுமானாரின் மேற்கோளாடு காட்டுகின்றார். இன்னொரு கட்டுரையில் (இந்துக்களின் சிறப்பு)

இராமகிருஷ்ண பரமஹம்சரையும் தாயுமானாரையும் இணைத்துக்காட்டுவார்.

'இந்துமதம் ஒன்று. சைவம் வைஷ்ணவம் முதலிய ஆறு சமயங்களும் அதன் உட்பிரிவுகள். இதைத் தேசத்து ஜனங்களில் பெரும்பாலோர் நன்றாக ஞாபகத்தில் வைத்துக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் குருக்கள், மடாதிகாரிகள் முதலிய சிலர் மறந்துபோயிருப்பதாகத் தெரிகிறது.

திரமென்று தத்தம் மதத்தையே தாமதச்
செய்கை கொடுமுளற அறிவார்?
ஆறுசமயங்கள்தொறும் வேறுவேறாகி
விளையாடும் உனை யாவரறிவார்?

என்று தாயுமானார் சொல்லியது பாரததேசத்து மகாஜனங்களுக் கன்று. மகாஜனங்கள் இவ்வுண்மையை நன்றாகத் தெரிந்து நடக்கிறார்கள். பிரம்ம சத்தியை வைசிய, சூத்திர - என்ற நான்கு பிரிவிலும் பெரும்பகுதியோர் எல்லாத் தெய்வங்களையும் ஒன்று போலவே வணங்குகின்றார்கள் வேதரிஷிகளைப் போல' என்று அனைத்து மதங்களின் பொதுநெறியைத் தாயுமானார் பாடல் கொண்டு பாரதியார் விளக்குவது கருதத்தக்கது.

'மிருகங்களைச் சீர்திருத்தல்' என்றும் கட்டுரையில், 'தன்னைத் தான் திருத்திக் கொள்ளாதவன் பிற ஜந்துக்களைத் திருத்த அதிகாரம் பெறமாட்டான். தன்னைத் தானே திருத்திக்கொள்வதே பிரதானம். தன்னைத் திருத்தி அமரனாகச் செய்துகொள்க. அதுவே ஒருவன் செய்ய வேண்டிய தலைமைத் தொழில்' என்று அமைப்பார்:

கொல்லா விரதம் குவலயமெல் லாமோங்க
எல்லார்க்கும் சொல்லுவதென் இச்சைபராபரமே

மகாகவி பாரதியாரின் உள்ளத்தைப் பெரிதும் தொட்டவர் தாயுமானார். பல கட்டுரைகளில் பல்வேறு பொருள்களில் எழுதும்போதும் அவருக்குத் தாயுமானாரின் கருத்து முன்னே வந்து நிற்கிறது. தக்க இடங்களில் அவருடைய கருத்துகளையும் பாடல்களையும் பயன்படுத்திக்கொள்கின்றார். சமய, சமுதாய, அரசியல் கட்டுரைகளிலும் தாயுமானாரை மேற்கோள் காட்டி எழுதுவது பாரதியின் தாயுமான ஈடுபாட்டைக் காட்டும்.

கவிஞரின் மொழி ஆளுமைத் திறத்திற்கு உவமையை எடுத்துக்காட்டாகக் கூறுவர். உவமை கவிஞரின் நுண்ணுணர்

திறனைக் காட்டும் என்பர். தாயுமானவர் பாடல்களில் அமைந்துள்ள உவமைகள் மிகச் சிறப்பாக அமைந்து, படிப்போரைத் தம்வயப்படுத்துவன. இலக்கியத்தை அழகுறச் செய்வது உவமைதான்.

காணுகின்ற எல்லாப் பொருள்களையும் ஒப்பிட்டுப்பார்க்கின்ற இயல்பு அனைவருக்கும் இயல்பாகவே உண்டு. கவிஞன் தன் உள்ளத்தெழுந்த எழுச்சிகள் நிறைந்த உணர்வுகளை உள்ளவாறே உரைப்பதற்கு உவமைகள் உதவுகின்றன. ஒரு கருத்தைப் புலப்படுத்தப் பயன்படுத்தும் இந்நெறியை முன்னையோர் அளவைநெறி என்றே குறித்தனர். தத்துவக் கருத்துகளை விளக்க இந்நெறி பெரிதும் பயன்படுத்தப்பட்டது.

மனம் இங்கும் அங்கும் அலைபாய்ந்து நிலையாக நிற்பதில்லை. இங்ஙனம் மனம் அலைபாய்வதால் இறைநாட்டத்தில் முழுக் கருத்தினையும் செலுத்த இயலாமல் துன்பப்படுகின்றோம். இதனைப் புலப்படுத்தத் தாயுமானார்.

பாதரசமாய் மனது சஞ்சலப்படும் அலால்
பரமசுக நிஷ்டை பெறுமோ

என அலைபாயும் மனத்திற்குப் பாதரசத்தை உவமையாக்குகின்றார்.

தாய்போல் நின்ற கருணைப் பெருக்கைப் பொழிந்து நம்மை ஆட்கொள்பவன் இறைவன். 'தாயினும் சாலப் பரிந்து' என்றும் 'பெற்ற தாயினும் ஆயின செய்யும்' என்றும் முன்னையோர் இறையன்பைப் புலப்படுத்துவர்.

ஆதி அந்தம் காட்டாத முதலாய் எம்மை
அடிமைக்கா வளர்த்தெடுத்த அன்னைபோல

இறைவன் எங்களைத் திருத்தொண்டுக்கு ஆளாக்கினான் என முன்னையோர் வழிநின்று தாயுமானார் உவமைவழிப்புலப் படுத்துவர்.

வெள்ளத்தால் அரித்துச் செல்லப்பெற்ற ஆற்றோரக் கரை போன்று நொய்ந்து போன இந்தப் பொய் உடலை மெய் என்று நம்பியிருக்கின்ற பாவியாகிய நான் அத்துவிதப் பொருள்மீது ஆசை வைத்திருக்கின்றேன். இது உயரத்தே உள்ள அரிய கொம்பில் உள்ள தேனை முடவன் விரும்புவது போன்றது அல்லவா என நயமுடன் உவமையாக்குவர்.

ஆக்கை எனும் இடிகரையை மெய் என்ற பாவிநான்
அத்வைத வாஞ்சை யாதல்
அரிய கொம்பில் தேனை முடவன் இச்சித்தபடி ஆகும்

என்பார். ஐந்துவகைப் பூதங்களின் சேர்க்கையால் உண்டாகின்ற இந்த உடம்பு நீர்மேல் அமைந்த குமிழ் என எண்ணவில்லையே என்று ஏங்குவார்

'ஐந்து வகை ஆகின்ற பூத பேதத்தினால்
ஆகின்ற ஆக்கை நீர்மேல் அமர்கின்ற குமிழி'

என்பார்.

'காரிட்ட ஆணவக் கருவறையில் அறிவு அற்ற கண் இலாக் குழவியைப் போல் கட்டுண்டு இருந்தேன்' என்பார்.

'கருமருவு குகை அனைய காயத்தின் நடுவுள் களிம்புதோய் செம்பனைய' மறைந்திருந்தேன் என்பார்.

'கடல் மடை திறந்தனைய அன்பர் அன்புக்கு எளியை; கல்நெஞ்சனுக்கு எளியையோ' எனப் பெருகிவரும் அன்பின் திறத்தை கடல் மடை திறந்த வெள்ளத்தை உவமையாக்குவார்.

சிந்தை என் வயப்படாது சுழன்று சுழன்று ஆடும் காற்றாடிபோல உள்ளது. எனவே, சிந்தையை அடக்கி ஒருகணமேனும் திருவருளைக் காண இயலவில்லையென வருந்துவார்.

'ஆடிய கறங்குபோல் ஓடி உழல் சிந்தையை
அடக்கி ஒருகணமேனும் யான்
காணிலேன் திருஅருளை'

என மனத்தை அடக்க இயலாத் திறத்தை எண்ணி வருந்துகிறார்.

'கோடிக் காகங்கள் ஒன்றுகூடித் திரண்டு நிற்கின்றன. ஆனால் அவை அனைத்தும் வீசப்படும் ஒரு கல்லின் முன் எதிர்நிற்குமோ? அதுபோல முற்பிறவிகளில் கோடிக் கணக்கான தீவினைகள் செய்திருந்தாலும் உன்னுடைய தனிப்பெருங்கருணைமுன் அவை வருத்தம் செய்யுமோ என்பதை உவமைவழி இறையருள் முன் எதுவும் துன்புறுத்தாது என உரைப்பார்

காகமானவை கோடி கூடிநின்றாலும் ஒரு
கல்லின்முன் எதிர் நிற்குமோ?
கர்மம் ஆனவை கோடி முன்னே செய்தாலும் நின்
கருணைப்ரவாக அருளைத்
தாகமாய் நாடினரை வாதிக்க வல்லதோ

என இனிய உவமை நயத்தோடு குறிப்பிடுவார்.

'ஆடாமல் ஓய்ந்திட்ட பம்பரம் போல் விசை அடங்கி மனம் வீழ வேண்டும்' என்பார். இறைமுன் 'ஓவியம் போல் அசைவு அறவும் தானே நிற்பேன்' என்று கூறுவார்.

கன்று மனத்துடன் ஆடுதழை நின்றால்போல்
கல்வியும் கேள்வியும் ஆகிக் கலக்குற்றேன்

என்பார். ஆத்மசாதனம் இல்லாத வெறும் ஏட்டுக்கல்வி பயன்தராது என்பதனை வருந்துகின்ற மனத்துடன் ஆடுதழை தின்றால் போல் எந்தவித ஈடுபாடுமின்றி இருந்தேனே என்பார்.

இறைவன் திரை 'இல்லாக் கடல் போலச் சலனம்' இல்லாதவன் என்றும், 'தெளிந்து உருகும் பொன் போல ஜெகத்தை எல்லாம் கரையவே கனிந்து உருக்குபவன்' என்றும் எளிய உவமைகள்வழி இறையின் பேராற்றலை உணர்த்துவார்.

சாட்டைஇல் பம்பர ஜாலம் போல் எலாம்
ஆட்டுவோன் இறை என அறிந்து நெஞ்சமே
தேட்டம்ஒன்றுஅற அருள் செயலில் நிற்றியேல்
வீட்டறம் துறவறம் இரண்டும் மேன்மையே

என்னும் பாடலில் சாட்டைஇல்லாப் பம்பரம் போல் ஆட்டுவிக்கும் இறைவனை உவமைவழி விளக்குவார். இறைவனைச் சரண் அடைபவர்க்கும் வீட்டறம், துறவறம் ஆகிய இரண்டும் மேலானவைகள் என்பார் தாயுமானவர்.

நாய் இடத்தைக் காத்திருப்பது போல் நான் இந்தப் புன்புலால் இறைச்சி ஜடத்தைக் (உடலை) காக்கின்றேன். இறைவனே நின்னருள் வேண்டும் என உவமை விளங்க உரைப்பார்.

இடத்தைக் காத்திட்ட சுவா எனப்
புன்புலால் இறைச்சி
ஜடத்தைக் காத்திட்ட நாயினேன்
உன் அன்பர் தயங்கும்
மடத்தைக் காத்திட்ட சேடத்தால்
விசேடமாய் வாழ
விடத்தைக் காத்திட்ட கண்டத்தோய்
நின் அருள் வேண்டும்.

என்பார்.

'கன்றினுக்குச் சேதா கனிந்து இரங்கல் போல'

'எத்தன்மைக் குற்றம் இயற்றிடினும் தாய்பொறுக்கும் அத்தன்மை'

என இறைவனின் தாய்மைப் பண்பை உவமைவழி விளக்குவதும் காண்க.

குளத்தில் நிறைந்திருக்கும் பாசியின்மீது கல்லெறிந்தால் அது விலகி நன்னீர் தெரியும். அதுபோல் இருள் நிறைந்த உள்ளத்தில் நல்லோரின் சொல் படுமாயின் ஞானம் தோன்றும் என்று கூறுவார்

கல்எறியப் பாசிகலைந்து நன்னீர்.காணும் நல்லோர்
சொல் உணரின் ஞானம் வந்து தோன்றும் பராபரமே

என்று பராபரக் கண்ணியில் கல்லையும் சொல்லையும் உவமைவழி விளக்குவார்.

சொல்லில் பதர்களைந்து சொல்முடிவு காணாதார்
நெல்லில் பதர்போல நிற்பார் பராபரமே

என்று சொல்லுக்கும் நெல்லுக்கும் உவமைநயம் காட்டுவார்.

உனக்கு உவமையாக் கருணை உள்ளவரும் வன்மைக்கு
எனக்கு உவமைஆனவரும் இல்லை பராபரமே

என இறைவனையும் தம்மையும் உவமையாக்கி இரங்குவார்.

தாயுமானவர் பாடல்களில் தொட்ட இடமெல்லாம் உவமைநயம் மிளிர்ந்திருப்பதை உணர்ந்து மகிழலாம். பாமர மக்களிடம் தாயுமானவர் பாடல்கள் சென்று சேர்வதற்கு அரிய தொடர்களும், உவமை நயங்களும் காரணமாக விளங்குகின்றன எனலாம்.

தாயுமானவரின் பல்வேறு சிறப்புகளையும் தாயுமானவர் பாடல் தொகுதி நமக்கு நன்கு எடுத்துரைக்கின்றது. பேராசிரியர் மு.வரதராசனார் தாயுமானவர் பாடல் குறித்து எழுதும்போது பின்வருமாறு குறிப்பது உளங்கொளத்தக்கது.

> "தாயுமானவர் என்ற ஒரு நூலை இன்று பார்க்கும் போது அவருடைய வாழ்க்கையைப் பற்றிய பல குறிப்புகள் நமக்குக் கிடைக்கின்றன. அவர் வளர்ந்த வளர்ச்சியும் நமக்குப் புலனாகின்றது. அவர் உயர்ந்துநின்ற அந்த எல்லையும் ஓரளவு தெளிவாக விளங்குகின்றது. அவருடைய பாடல்களிலே வருகின்ற உருவகங்கள், மிகநீண்ட உருவகங்கள், உவமைகள், தொடர்ச்சியான அடுக்கடுக்கான உவமைகள் - இவற்றை எல்லாம் பார்க்கும்போது அவருடைய பெரும் புலமை தெளிவாகின்றது."

என்று தாயுமானாரின் உவமை நலச் சிறப்பைப் புலப்படுத்துவார்.

தாயுமானாரின் உவமைகள் போலவே நூல் முழுவதும் கருத்துச் செறிவுள்ள பல தொடர்களைக் காண முடிகின்றது. அழகும் ஆழமும் உடைய அத்தொடர்கள் இன்று பெருவழக்காகத் திகழ்கின்றன.

'அவனன்றி ஓர் அணுவும் அசையாது'

'எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே
அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே'

'ஆசைக்கோர் அளவில்லை'

'அங்கு இங்கு எனாதபடி எங்கும் பிரகாசம்'

'கல்லாதபேர்களே நல்லவர்கள், நல்லவர்கள்'

'அன்பர்பணி செய்ய எனை ஆளாக்கிவிட்டுவிட்டால்
இன்பநிலை தானே வந்து எய்தும்'

'ஆறு சமயங்கள் தொறும் வேறு வேறாகி விளையாடும்
உனையாவர் அறிவார்'

'வல்லான் வகுத்ததே வாய்க்கால்'

'இப்பிறவி தப்பினால் எப்பிறவி வாய்க்குமோ'

'எண்ணரிய பிறவிதனில் மானிடப்பிறவிதான் யாதினும்
அரிதுகாண்'

'இன்றைக்கு இருந்தாரை நாளைக்கிருப்பார் என்று எண்ணவோ
திடமில்லையே'

'சிந்தையை அடக்கியே சும்மா இருக்கும் திறம் அரிது'

'நெஞ்சகமே கோயில் நினைவே சுகந்தம்'

இவ்வாறு தாயுமானார் தமிழுக்கும் தமிழ் மக்களுக்கும் வழங்கிய தொடர்கள் பலவாகும். 'என்றைக்கும் இருக்கும் இன்றமிழ் இலக்கியமாய் விளங்கும்' தாயுமானாரின் பாடல்கள் வழையடிவாழையென வரும் ஞானக் களஞ்சியங்களின் தொகுப்பாகும். ஞானக் களஞ்சியங்கள் தமிழர்தம் ஞானத்தை வலிவும் பொலிவும் உடையதாக்கட்டும்.



**பின்னிணைப்பு**



# தாயுமானவர் பற்றி அருளையரின் அருள்வாக்கியர் அகவல்

திருவருள் கருணைச் சிவானந்த பூரணம்
ஒருவரும் அறியா ஒருதனிச் சித்து
நவம்தரு பேதமாய் நாடகம் நடித்துப்
பவம்தனை நீக்கிப் பரிந்துஅருள் பராபரம்
கண்ணும் கருத்தும் கதிர்ஒளி போல

நண்ணிட எனக்கு நல்கிய நன்மை
ஒன்றாய்ப் பலவாய் ஒப்புஇலா மோனக்
குன்றாய் நிறைந்த குணப்பெருங் குன்றம்
மண்ணையும் புனலையும் வளியையும் கனலையும்
விண்ணையும் படைத்த வித்துஇலா வித்துப்

பந்தம் அன்னைத்தும் பாழ்பட நூறிஎன்
சிந்தையுள் புகுந்த செழுஞ்சுடர் ஜோதி
வின்ஓணா ஞானம் விளங்கிய மேலோர்
கொள்ளை கொண்டு உண்ணக் குறைவுஇலா நிறைவு
தாள்தா மரைமலர்த் தாள்நினைப் பவர்க்குக்

காட்டா இன்பம் காட்டிய கதிநிலை
வாக்கால் மனத்தால் மதித்திட அரிதுஎன
நோக்காது இருக்க நோக்கிய நோக்கம்
ஆதியாய் அறிவாய் அகண்டமாய் அகண்ட
ஜோதியாய் விரிந்து துலங்கிய தோற்றம்

பரவெளி தன்னில் பதிந்த என் உளத்தில்
விரவிவிரவி மேற்கொளும் வெள்ளம்
கட்டுக்கு அடங்கா ஜோதி அடியார்
மட்டுக்கு அடங்கும் வான்பெருங் கருணை
எல்லைக்கு அடங்கா ஏகப் பெருவெளி

தில்லைப் பொதுவில் திருநடத் தெய்வம்
வாதவூர் எந்தையை வரிசையாய் விழுங்கும்
போதவூர் மேவுகர்ப் பூர விளக்குச்
சுகரை அகண்டத் தூவெளி எல்லாம்
திகழவே காட்டும் சின்மய சாட்சி

செழுந்தமிழ் அப்பரைச் சிவலிங்கம் ஆகி
விழுங்கிய ஞான வித்தக வேழம்
எழில்தரு பட்டினத்து இறைவரை என்றும்
அழிவுஇலா இலிங்கம் ஆக்கிய அநாதி
சாந்த பூமி தண்அருள் வெள்ளம்

ஆர்ந்த நீழல் அசையாக் ககனம்
பரவுவார் நெஞ்சில் பரவிய மாட்சி
இரவுபகல் அற்ற ஏகாந்தக் காட்சி
ஆட்சிபோல் இருக்கும் அகிலம் தனக்குச்
சாட்சியாய் இருக்கும் தாரகத் தனிமுதல்

ஆணும் பெண்ணும் அலியும்அல் லாததுஓர்
தாணுவாய் நின்ற சத்துஆம் தனிச்சுடர்
எள்ளும் எண்ணெயும் எப்படி அப்படி
உள்ளும் புறம்பும் உலாவிய ஒருபொருள்
அளவுஇலா மதம்தொறும் அவர்அவர் பொருள் என

உளம் நிறைந்து இருக்கும் ஒருபொன் பணிதி
துள்ளும் மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளும் மோனவாள் கொடுத்திடும் அரசு
பெரிய பேறு பேசாப் பெருமை
அரிய உரிமை அளவுஇலா அளவு

துரிய நிறைவு தோன்றா அதீதம்
விரியும்நல் அன்பு விளைந்திடும் விளைவு
தீராப் பிணிஆம் ஜெனனம் அறுக்க
வாரா வரவாய் வந்த சஞ்சீவி
ஆலைக் கரும்புபாகு அமுதக்கட்டி நீள்

சோலைக் கனிபலாச் சுளைகதலிக் கனி
பாங்குறு மாங்கனி பால்தேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த்து ஒன்றாய்க் கூட்டி
அருந்திய ரசம்என அறிஞர் சமாதியில்
பொருந்திய இன்பம் பொழிசத் சுகோதயம்

எங்கணும் நிறைந்த இயல்பினை எனக்குச்
செங்கைமால் விளங்கத் தெரிந்தமெய்த் தேசிகன்
தன்னைஅறி வித்துத் தத்பரம் ஆகி
என்உளத்து இருந்துஅருள் ஏக நாயகன்
அடிமுடி இல்லா அரும்பொருள் தனக்கு

முடிஅடி இதுஎன மொழிந்திடும் முதல்வன்
மெய்அலால் மற்றவை மெய்அல எல்லாம்
பொய்என அறிஎனப் புன்னகை புரிந்தோன்
அருளும் பொருளும் அபேதமாய் இருந்தும்
இருதிறன் என்னும் இயலும் உண்டு என்றோன்

அருள்உனக்கு உண்டேல் அருளும் வெளிப்படும்
பொருள்மயம் தானே பொருந்தும் என்று உரைத்தோன்
சத்துஅசத்து இரண்டு தன்மையும் தானே
ஒத்தலால் சதசத்து உனக்குஎன உரைத்தோன்
ஆணவம் அறாவிடின் அருள்உறாது என்னக்

காணரு நேர்மையால் காணவே உரைத்தோன்
ஜென்மம் உள்அளவும் தீராது இழுக்கும்
கன்மம் விடாதுஎனக் காட்டிய வள்ளல்
உளதுஇலது எனவும் உறுதலால் மாயை
வளம் இலது எனவும் வகுத்து இனிது உரைத்தோன்

பரவெளி தன்னில் பதிந்த என் உளத்தில்
விரவிவிரவி மேற்கொளும் வெள்ளம்
கட்டுக்கு அடங்கா ஜோதி அடியார்
மட்டுக்கு அடங்கும் வான்பெருங் கருணை
எல்லைக்கு அடங்கா ஏகப் பெருவெளி

தில்லைப் பொதுவில் திருநடத் தெய்வம்
வாதவூர் எந்தையை வரிசையாய் விழுங்கும்
போதவூர் மேவுகர்ப் பூர விளக்குச்
சுகரை அகண்டத் தூவெளி எல்லாம்
திகழவே காட்டும் சின்மய சாட்சி

செழுந்தமிழ் அப்பரைச் சிவலிங்கம் ஆகி
விழுங்கிய ஞான வித்தக வேழம்
எழில்தரு பட்டினத்து இறைவரை என்றும்
அழிவுஇலா இலிங்கம் ஆக்கிய அநாதி
சாந்த பூமி தண்அருள் வெள்ளம்

ஆர்ந்த நீழல் அசையாக் ககனம்
பரவுவார் நெஞ்சில் பரவிய மாட்சி
இரவுபகல் அற்ற ஏகாந்தக் காட்சி
ஆட்சிபோல் இருக்கும் அகிலம் தனக்குச்
சாட்சியாய் இருக்கும் தாரகத் தனிமுதல்

ஆணும் பெண்ணும் அலியும்அல் லாததுஓர்
தாணுவாய் நின்ற சத்துஆம் தனிச்சுடர்
எள்ளும் எண்ணெயும் எப்படி அப்படி
உள்ளும் புறம்பும் உலாவிய ஒருபொருள்
அளவுஇலா மதம்தொறும் அவர்அவர் பொருள் என

உளம் நிறைந்து இருக்கும் ஒருபொன் பணிதி
துள்ளும் மனப்பேய் துடிக்கத் தறிக்கக்
கொள்ளும் மோனவாள் கொடுத்திடும் அரசு
பெரிய பேறு பேசாப் பெருமை
அரிய உரிமை அளவுஇலா அளவு

துரிய நிறைவு தோன்றா அதீதம்
விரியும்நல் அன்பு விளைந்திடும் விளைவு
தீராப் பிணிஆம் ஜெனனம் அறுக்க
வாரா வரவாய் வந்த சஞ்சீவி
ஆலைக் கரும்புபாகு அமுதக்கட்டி நீள்

சோலைக் கனிபலாச் சுளைகதலிக் கனி
பாங்குறு மாங்கனி பால்தேன் சருக்கரை
ஓங்குகற் கண்டுசேர்த்து ஒன்றாய்க் கூட்டி
அருந்திய ரசம்என அறிஞர் சமாதியில்
பொருந்திய இன்பம் பொழிசத் சுகோதயம்

எங்கணும் நிறைந்த இயல்பினை எனக்குச்
செங்கைமால் விளங்கத் தெரிந்தமெய்த் தேசிகன்
தன்னைஅறி வித்துத் தத்பரம் ஆகி
என்உளத்து இருந்துஅருள் ஏக நாயகன்
அடிமுடி இல்லா அரும்பொருள் தனக்கு

முடிஅடி இதுஎன மொழிந்திடும் முதல்வன்
மெய்அலால் மற்றவை மெய்அல எல்லாம்
பொய்என அறிஎனப் புன்னகை புரிந்தோன்
அருளும் பொருளும் அபேதமாய் இருந்தும்
இருதிறன் என்னும் இயலும் உண்டு என்றோன்

அருள்உனக்கு உண்டேல் அருளும் வெளிப்படும்
பொருள்மயம் தானே பொருந்தும் என்று உரைத்தோன்
சத்துஅசத்து இரண்டு தன்மையும் தானே
ஒத்தலால் சதசத்து உனக்குஎன உரைத்தோன்
ஆணவம் அறாவிடின் அருள்உறாது என்னக்

காணரு நேர்மையால் காணவே உரைத்தோன்
ஜென்மம் உள்அளவும் தீராது இழுக்கும்
கன்மம் விடாதுஎனக் காட்டிய வள்ளல்
உளதுஇலது எனவும் உறுதலால் மாயை
வளம் இலது எனவும் வகுத்து இனிது உரைத்தோன்

இல்லறத்து இருந்தும் இதயம் அடக்கிய
வல்லவன் தானே மகாயோகி என்றான்
துறவறத்து இருந்தும் சூழ்மனக் குரங்குஎன்று
அறவகை அறியான் அஞ்ஞானி என்றோன்
இறவா மனம்தான் இறக்க உணர்த்திப்

பிறவா வரம்தரும் பேரறி வாளன்
அத்தனது அருளால் அனைத்தையும் இயக்கும்
சுத்த மாயையின் தோற்றம் என்று உரைத்தோன்
இருள்மலம் அகல இசைந்துஅதில் அழுந்தும்
பொருள்அருள் திரோதைப் பொற்புஎனப் புகன்றோன்

வீறு சிவம்முதல் விளம்பிய படியே
ஆறும் அநாதி என்று அறிஞருக்கு உரைப்போன்
கொல்லா விரதம் குவலயத் தோர்கள்
எல்லாம் பெறுமின் என்று இயம்பிய தயாநிதி
தருமமும் தானமும் தவமும் புரிபவர்க்கு

உரிமையாய் அவரோடு உறவு கலப்பவன்
தன்உயிர் போலத் தரணியில் மருவிய
மன்உயிர் அனைத்தையும் வளர்த்திடும் வேந்தன்
களவுவஞ் சனைகள் செய் கருமிகள் தமக்கும்
தெளிவுவந்து உறஅருள் செய்திடும் திறத்தோன்

தான்பெறும் பேறு ஜகம்எலாம் பெறவே
வான்பெருங் கருணை வழங்கிய மாரி
தஞ்சம்என்று அடைந்த தாபதர் தம்மை
அஞ்சல் என்று ஆளும் அறிஞர்சிகாமணி
ஜீவ கோடிகளும் சித்தர் கோடிகளும்

யாவரும் புகழ யாவையும் உணர்ந்தோன்
யான்எனது என்னா இறைவர்எம் பெருமான்
தான்அவன் ஆகிய தலைவன்எம் கோமான்
அருண கிரியார்க்கு ஆறு முகன்சொலும்
பொருள்நலம் அல்லது பொருள் எனமதியான்

பூதம் முதலாப் பொலிந்திடும் நாத
பேதமும் கடந்த பெருந்தகை மூர்த்தி
மூலா தார முதலாய் உள்ள
மேல்ஆ தாரமும் வெறு வெளி கண்டவன்
மண்டலம் மூன்றிலும் மன்னிய உருவதும்

கண்டவை யத்திலும் கடவுளாய் நின்றோன்
பகர்சம யம்தொறும் பரமே இருந்து
சுகநடம் புரியும் தொழில்எனச் சொன்னோன்
பேத அபேத பேதா பேத
போதம் இதுஎனப் புகன்றிடும் புண்ணியன்

அதுநான் எனவே ஆற்றிடும் அனுபவம்
சதுர்வே தாந்தத் தன்மைஎன்று உரைத்தோன்
அல்லும் பகலும் அறிவுஆ னோர்க்குச்
சொல்லும் பொருளும் சுமை எனச் சொன்னோன்
சுதனே குருஆம் சுவாமிநா யகற்குஎனின்

அதிகமெய்ஞ் ஞானம் அல்லவோ என்றோன்
நேசயோ கத்துறு நிருபர்எல் லாம்தொழும்
இராஜயோ கத்துஇறை இராஜ யோகத்தான்
பொறுமை தெளிவு புனித ஆசாரம்
மறுஇலா வண்மை வாரம் இயற்கை

தண்அமர் சாந்தம் தயங்கிய கீர்த்தி
எண்ணெண் கலைபயில் இணையிலாக் கல்வி
நல்ல இரக்கம் நடுநிலை சத்தியம்
இல்லை என்னாமல் எவர்க்கும் தரும்கொடை
நற்குணன் எல்லாம் நண்ணிய பெருந்தகை

சிற்குண வாதி திருஅருள் செல்வன்
கரம்மேல் எடுத்துக் கருத்துஉற வணங்கிப்
பரமே உனக்குப் பரம்எனப் பகர்ந்தோன்
ஆல்அடி மேவும் அரசினை அடுத்தே
சீலமெய்ஞ் ஞானம் தெளிந்தனன் எனவும்

சித்த மவுனி திடசித்தம் ஆக
வைத்த நிலையில் வளர்ந்தனன் எனவும்
மூலன் மரபில் முளைத்த மவுனிதன்
பாலன்யான் எனவும் பரிவொடும் பகர்ந்தோன்
வடமொழி இயற்கையின் மகிமையை உணர்ந்து

திடம்உற முப்பொருள் திறத்தையும் தெளிந்து
கண்டுஅமுத என்னக் கனிரசம் என்னத்
தண்தமிழ் மாரி தன்னைப் பொழிந்து
சித்தியும் முத்தியும் சிறந்து அருள் கொழிக்கும்
நித்திய நிரஞ்சன நிராலம்ப நிறைவைப்

பாடியும் நாடியும் பணிந்துஎழுந்து அன்பால்
ஆடியும் அரற்றியும் அகம்குழைவு எய்தியும்
உடலம் குழைய உரோமம் சிலிர்ப்பப்
படபடென்று உள்ளம் பதைத்துப் பதைத்துப்
பாங்குஉறு நெட்டுயிர்ப்பு ஆகிப் பரதவித்து

ஏங்கி ஏங்கி இரங்கி இரங்கி
ஓய்ந்த பம்பரம்போல் ஒடுங்கியே சிறிதும்
ஏய்ந்த விழிகள் இமைப்பதும் இன்றிச்
சோர்ந்து சோர்ந்து துவண்டு துவண்டுமெய்
ஆர்ந்த அன்பொடு அவசம்உற்று அடிக்கடி

உள்நடுக்கு உறவே உருகியே சற்றுத்
தண்அமர் மொழியும் தழுதழுத் திடவே
உள்ளும் புறம்பும் ஒருமித்து உருகி
வெள்ள நீர்போல் விழிநீர் பெருகிக்
கன்று பசுவைக் கருதிக் கதறிச்

சென்றுசென்று ஓடித் திகைப்பது போல
என்புநெக்கு உடைய இருகரம் குவித்துப்
புன்புலால் யாக்கை பொருந்தாது இனிஎன
உணர்ந்து உணர்ந்து அன்பாய் உவகைமேற்கொண்டு இனிக்
கணம்பிரியேன் எனக்கருதியே குறித்துத்

திருஉரு எல்லாம் திருநீறு இலங்க
இருகர நளினம் இயல்முடி குவித்துப்
பூரண சந்திரன் போல்ஒளி காட்டும்
காரண வதனம் கவின்குறு வெயர்வுஉற
இளநிலா எனவே இலங்கிய சிறுநகை

தளதள என்னத் தயங்கி எழில்பெற
இத்தன்மை எல்லாம் இசைந்து இவன் அருளச்
சித்துஎனச் சிவகதி தேர்ந்தவர் உரைப்பப்
பாத்திரம் ஆடப் பரிவுடன் ஆடிச்
சாத்திரம் காட்டித் தயவுசெய்து அருளும்

வல்லவன் எனவே மன்னுயிர்க்கு ஆக
எல்லைஇல் அன்பன் இவன்என விளங்கி
ஈன உலகத்து இயற்கைபொய் என்றே
ஞானநூல் மெய்என நவின்று இனிது இரங்கிக்
கேவலம் சகலம் கீழ்ப்பட மேலாய்

மேவரும் சுத்த மெய்யினை நல்க
அருளே உருவுகொண்டு அவனியில் வந்த
பொருளே இவன்எனப் பொலிந்திடும் புனிதன்
சைவம் சிவனுடன் சம்பந்தம் என்பது
மெய்வளர் ஞானம் விளக்கும்என்று இசைத்தோன்

கதிர்விழி ஒளிஉறக் கலத்தல் சித்தாந்த
விதிமுறை ஆம்என விளம்பிய மேலோன்
முடிவினில் ஆகம முறைமையின் உண்மையை
அடியரைக் குறித்து உரைத்து அருளியஅண்ணல்
சிதம்பர நேர்மை திறமா உரைத்துஇறை

பதம்பரவு எனப்பகர் பரமமெய்ஞ் ஞானி
முக்திபஞ் சாட்சர முறைமையில் அயிக்கியம்
சத்தியம் இதுஎனச் சார்நதவர்க்கு உரைத்தோன்
அஞ்சு எழுத்து உள்ளே அனைத்தையும் காட்டிஎன்
நெஞ்சுஅழுத் தியகுரு நீதிமாதவன்

எல்லாம் நிறைந்த இறைவன் செயல்எனக்
கல்லா எனக்கும் கருணைசெய் கடவுள்
குரு அருளாலே கூடுவது அல்லால்
திருஅருள் உறாதுஎனத் தெரிந்திட உரைத்தோன்
குருஉரு அருள்எனக் கொண்டபின் குறையாப்

பொருள்மயம் ஆம்எனப் புகன்றிடு போதன்
எந்தமூர்த் திகளையும் எழில்குரு வடிவுஎனச்
சிந்தையில் தியக்குஅறந் தேர்ந்தவர்க்கு உரைத்தோன்
சதாசிவம் என்றபேர் தான் படைத் ததுதான்
எதுஆவதே பொருள் என்று எடுத்துஎடுத்து உரைத்தோன்

கல்ஆனை கன்னல் கவர்ந்திடச் செய்தவன்
எல்லாம் வல்லசித்து எம்இறை என்றோன்
எவ்உயிர் தோறும் இறைமே வியதிறம்
செவ்விய பிரம்புஅடி செப்பிடும் என்றோன்
எவ்வணம் எவர்எவர் இசைத்தனர் அவர்அவர்க்கு

அவ்வணம் ஆவன்எம் மான்என அறைந்தோன்
ஒருபாண னுக்கே ஒருசிவன் ஆட்படின்
வரும்அடி யார்திறம் வழுத்தொணாது என்றோன்
சிவன்அடி யாரைச் சிவன்எனக் காண்பவன்
எவன்அவன் சிவனே என்றுஎடுத்து உரைத்தோன்

விருப்புவெறுப்பினை வேர் அறப் பறித்துக்
கருப்புகாது என்னைக் காத்துஅருள் செய்தோன்
இருசொல் உரையாது யான்இன்பம் எய்த
ஒருசொல் உரைத்த உயர்குண பூதரன்
அத்துவா மார்க்கம் ஆறையும் அகற்றித்

தத்துவா தீதத் தன்மையைத் தந்தோன்
திருமகள் மருவிய திகழ்வள மறைசையில்
வரும்உணர் வாளன் மருள்இலா மனத்தான்
எண்ணிய எண்ணம் எல்லாம்தெளிந்து எனக்குத்
தண்அருள் செய்தவன் தாயுமானவன்

ஒருமொழி பகர்ந்த உதவியால் அவன்தன்
இருபதம் முப்போது இறைஞ்சி வாழ்த்துவனே



